# JĪVANMUKTIVIVEKA

(Jīvanmuktiprakaraṇārthaprakāśikai)

EDITED BY

Pandit K. RAMACHANDRA SARMA



CENTENARY YEAR
1986

THE ADYAR LIBRARY AND
RESEARCH CENTRE
MADRAS

THE ADYAR LIBRARY GENERAL SERIES

VOLUME TEN

GENERAL EDITOR

K. KUNJUNNI RAJA

*Hon. Director*

# ஜீவந்முக்திவிவேகம்

# JĪVANMUKTIVIVEKA

(Jīvanmuktiprakaraṇārthaprakāśikai)

உ
ஸ்ரீ ஶிவாப்யாம் நம:
மார்கழி 14உ
விஜய வரு
சென்னை
29.12.13

EDITED BY

Pandit K. RAMACHANDRA SARMA



CENTENARY YEAR
1986

THE ADYAR LIBRARY AND
RESEARCH CENTRE
MADRAS

1986

1986 The Adyar Library and Research Centre
Adyar, Madras 600 020, India

ISBN 0 - 8356 - 7527 - 0

**Agents for publication of**
**The Adyar Library and Research Centre**

America And Japan
The Theosophical Publishing House,
P.O. Box 270, Wheaton,
Illinois 60189-0270, U.S.A.

Australia, New Zealand, Indonesia And Fiji
Quest Book Agency,
The Theosophical Society in Australia,
121 Walker Street,
North Sydney, New South Wales 2060,
Australia.

Europe And The United Kingdom
The Theosophical Publishing House Ltd.,
68 Great Russell Street,
London, W.C. IB 3 BU, England.

India And Other Countries
The Theosophical Publishing House,
The Theosophical Society,
Adyar, Madras 600 020, India

Printed in India by
Rajan & Co., Printers,
No. 1, Goomes Street, Madras-1.

# FOREWORD

The *Jīvanmuktiviveka* of Vidyāraṇya is a classical work on *jivanmukti* or 'liberation while living'. It is one of the basic tenets of 'Advaita that one can attain liberation even when one is living. Bondage is due to *avidyā* which produces Karmic residues which, in turn, produce *vāsanā-s* and experiences. When *aviḍyā* is removed through real knowledge, one no longer acts with a purpose. Actually there is no liberation, but only the realization that there has been no bondage at all, and that the self is always free. But from the lower standpoint (*vyāvahārika*) he is a saṃnyāsin continuing to act—to eat, to sleep and to move around. *Jīvanmukti* is a state in which the sense organs, mind and the vital breaths operate only formally; this is established by the experience of saints and mystics throughout the ages. The *Bhagavadgītā* refers to the *jīvanmukta* as *sthitaprajña*.

There is no backsliding from liberation. When once the realization about one's identity with *Brahman* is experienced, there is no possibility of losing that realization. Śaṃkara considered the highest stage of Saṃnyāsa as identical with *jīvanmukti*.

The author of the *Jīvanmuktiviveka* was a saṁnyāsin, a realized *jīvanmukta*. He divides *saṃnyāsa* into two, that of the seeker and that of the knower; the former is a preliminary stage for the latter. Acquisition of occult powers does not help in liberation or complete freedom and bliss.

The text is in five chapters. The first explains the two types of renunciation and the nature of *jīvanmukti*, as distinct from *videhamukti* (liberation through the release of the body.) The second chapter deals with the means for *jīvanmukti*, the removal of latent desire (*vāsanā*). The next path to liberation is the dissolution of the mind, which is discussed in the third chapter. The next chapter deals with the aim of *jīvanmukti*. The last chapter deals with the true path of renunciation and explains the *Paramahaṃsopaniṣad*.

The Sanskrit text with an English translation by Pandit S. Subrahmanya Sastri had been published as No. 6 in the Adyar Library General Series. A Tamil version about 200 years old is now being issued. This edition by Pandit K. Ramachandra Sarma is based on a unique manuscript in the Adyar Library. Some of the quotations which could not be traced in the earlier Sanskrit edition have now been traced. We are thankful to the Tamilnadu Government for financial assistance towards this publication.

K. KUNJUNNI RAJA

# முகவுரை

ஸ்ரீமதாதிசங்கரபகவத்பாதர்களைத் தலையாகக் கொண்டு வளர்ச்சியடைந்தது அத்வைதஸித்தாந்தம் என்பதை யாவரு முணர்வர். இதை கி.பி. 10வது நூற்றூண்டு வரை முதற் பகுதி யாகவும், கி.பி. 15வது நூற்றூண்டுவரை இரண்டாவது பகுதி யாகவும், அதற்குப் பிறகு மூன்றுவது பகுதியாகவும் கூறலாம்.

இவ்வாறுள்ள பகுதிகளில் இரண்டாவது பகுதியில் பல ஸித்தாந்தங்களும், வேதாந்தங்களும் தோன்றின. அச் சமயம் பல்வேறு மதங்களைச் சார்ந்தவர்களுடைய அரசாக்ஷியினுலும், பலருடைய வாழ்க்கையில் நிம்மதி யுண்டாகவில்லை.

அரசர்களோ, தங்களது வலிமை குன்றி மதங்களுடைய பெருமையைக் காப்பாற்றுவதற்கும் முன்வரவில்லை. மேலும் பல காரணங்களால் நாட்டில் அரசியல் நிலைமையிலும் தார்மிகநிலையிலும், அமைதியின்மையும், கலக்கமும் தோன்றியது,

வைதிகதர்மமும், கலாசாரமும் குறைந்தது. இக் குறையை நீக்கி மதத்தை நிலை நிறுத்துவதற்காக அவதரித்த ஆசார்ய புருஷர்களும், வித்வான்களும் பலராவர். அவ் வரிசையில் மிகச் சிறந்து பரந்த புகழ் கொண்டவர் ஸ்ரீவித்யாரண்யர் என்பவர்.

இவர், வேதங்கள் முழுவதற்கும் உரை கண்டவர். பழம் பெறும் ஸநாதந தர்மத்தையும் நிலைநாட்டியவருமாவர். அரசியி லில் மட்டும் சிறந்தவரல்ல. பற்பல சாஸ்த்ரங்களிலும் பரந்த புலமை பெற்று விளங்கியவர். இவரது தந்தை இவருக்குச் சூட்டிய பெயர் மாதவர் என்பது.

ஆனுல் தனது புலமையின் வலிமையின் காரணமாக உலக அறிவு, ஆன்மீக அறிவு, பற்பல சாஸ்த்ரங்களிலும் தெளிந்த புலமை, அரசியல் அறிவு, இவ்வுலக வழக்கு, மேலுலக அறிவு போன்ற ஒன்றுக்கொன்று முரண்பட்ட அறிவுகளின் (வித்யை) இருப்பிடமாக இவர் விளங்கிய காரணத்தாலும், இவருக்கு வித்யா ரண்யர் என்ற பெயர் தோன்றியது போலும். வித்யா - வித்யை

களுக்கெல்லாம்-அரண்யம்-கானகம் போல் இருப்பவர் என்பது அச் சொல்லுக்குப் பொருள் காணலாம்.

ஸர்வதர்ஶநஸங்க்ரஹத்தில் 'ஸாயணதுக்தாப்திகௌஸ்துபம்'[1] என்ற அடைமொழி இவரது தந்தையைக் குறிப்பது. எனவே வித்யாரண்யர் ஸாயணவம்ஶத்தில் பிறந்தவர்.

மற்றும் 'பராஶரமாதவீயம்' என்ற நூலில்[2] இவர் பரத்வாஜ கோத்ரத்தைச் சார்ந்தவர் எனவும், போதாயநஸூத்ரம் இவருடையது எனவும் தெரிய வருகின்றது. எனவே யஜு:சாகையைச் சார்ந்தவருமாவர்.

பராஶ்ரமாதவீயத்திலிருந்தும்[3] தாதுவிருத்தி என்ற நூலிலிருந்தும்[4] மாதவவித்யாரண்யருடைய தந்தை மாயணர் எனவும், தாய் ஶ்ரீமதீ எனவும், ஸாயணர், போகநாதர் என்ற இவ்விருவரும் ஸஹோதரர்கள் எனவும் தெரிந்து கொள்ள முடிகின்றது.

இவர்களில், மாதவவித்யாரண்யருடைய ஸஹோதரரான ஸாயணரே வேதபாஷ்யங்களைப் புனைந்தவர் எனவும் தெரிய வருகின்றது. இதைத் தைத்திரீயஸம்ஹிதா பாஷ்யத்தில் காணலாம். மாதவருடைய கட்டளையையநுஸரித்து ஸாயணரே வேத பாஷ்யங்களை இயற்றினர் எனவும் தெரிய வருகின்றது.[5]

வேதபாஷ்யங்களை இயற்றியவரும், மாதவவித்யாரண்யரின் ஸஹோதரருமான ஸாயணருக்கு மூன்று பிள்ளைகள் இருந்தனர் எனவும், அவர்கள் முறையே கம்பணர், மாயணர், சிங்கணர் எனவும் அழைக்கப்பெற்றனர். என அலங்காரஸுதாநிதி என்ற நூலிலிருந்து தெரியவருகின்றது.[6]

மாதவவித்யாரண்யருடைய மற்றொரு ஸஹோதரரான போகநாதர் என்பவர் இரண்டாவது ஸங்கம அரசரவையில் அமைச்சராக இருந்தார்.[7] இவர்......விட்குண்டப்ரஶஸ்தி, ராமோல்லாஸம், த்ரிபுரவிஜயம், ஶ்ருங்காரமஞ்ஜரி, உதாஹரணமாலா, மஹாகணபதிஸ்தவம், கௌரிநாதாஷ்டகம் முதலிய நூல்களைப் புனைந்தவர். என்று அலங்காரஸுதாநிதி என்ற நூலிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

மற்றும், மாதவவித்யாரண்யர், ஸாயணர், போகநாதர் இம் மூவருக்கும் ஸிங்களா என்ற ஸஹோதரி ஒருவள் இருந்தாள். அவர் கணவர் நரஸிம்மர் ஆவார். அந்த அம்மையின் பிள்ளையே

லக்ஷ்மீதரர் என்பவராவர், இவர் அத்வைதமகரந்தம், பகவந்நாம கௌமுதீ என்ற நூற்களைப் புனைந்தவர். பிறகு ஸந்ந்யாஸாஶ்ர மத்தைத் தழுவியதும் இவருக்கு க்ருஷ்ணேந்த்ரஸரஸ்வதீ என்ற ஆஶ்ரமப் பெயரும் தோன்றியது.[9]

அவர்களுடைய வம்ஶவரலாறு—




அநுபூதிப்ரகாஶம் என்ற நூலிலும்,[10] ஶ்வேதாஶ்வதரோபநிஷத்தின் உரையிலும்,[11] மாதவவித்யாரண்யர் வித்யாதீர்த்தரைத் தனது முக்கிய குருவாகக் குறிப்பிடுகிறார்,[11] இதே போல ஜீவந்முக்திவிவேகம்,[12] ஜைமிநீயந்யாயமாலாவிஸ்தரம்[13], ஶதபத ப்ராஹ்மணபாஷ்யத்தின் இறுதியிலும்,[14] காணப்பெறுவதால், ஸாயணருக்கும், மாதவ வித்யாரண்யருக்கும் வித்யாதீர்த்தர் குரு எனத் தெரியவருகிறது.

மற்றும், காலநிர்ணயத்திலும், ஜைமிநீயந்யாயமாலாவிஸ்தரத்திலும் பாரதீதீர்த்தரையும் வணங்குவதால், வித்யாதீர்த்தர், பாரதீதீர்த்தர் இவ்விருவருமே மாதவவித்யாரண்யருக்கு குருமார்கள் எனவும் கருதமுடியும்.

பாரதீதீர்த்தர், வையாஸிகந்யாயமாலா, த்ருக்த்ருஶ்யவிவேகம், வாக்யஸுதா முதலிய நூல்களைப் புனைந்தவர், இவர் வித்யாதீர்த்தருடைய சிஷ்யருமாவர், [15]+[16] எனவே வித்யாதீர்த்தரும், பாரதீதீர்தரும் வித்யாரண்யருக்கு வித்யாகுருக்கள் எனவும் கிடைக்கப் பெறும்.

பஞ்சதஶியிலும்,[17] விவரணப்ரமேயஸம்க்ரஹத்திலும்[18] சங்கரானந்தரை வணங்குவதால், இவர் இவருக்கு ஸந்ந்யாஸதீக்ஷையைச்

செய்வித்த குருவாவார். காலமாதவம் என்ற நூலில்[19] ஸ்ரீகண்டரையும் வணங்குவதால் ஸ்ரீகண்டர் என்பவர், அக் காலத்தில் ஶைவஸித்தாந்தத்தில் புகழ் பெற்றவராக விளங்கியவர் என போகநாதர் புனைந்த மஹாகணபதி ஸ்த்வத்திலிருந்து தெரிய வருகிறது.[20] எனவே போகநாதருக்கும், மாதவவித்யாரண்யருக்கும் ஸ்ரீகண்டர் ஶைவஸித்தாந்தத்தைப் போதித்த குருவுமாவார்.

இவர்களுடைய பரம்பரை—




மாதவவித்யாரண்யர் ஸந்ந்யாஸாஶ்ரமஸ்வீகாரத்திற்கு முன்பு மிகவும் வறுமையில் கஷ்டப்பட்டவர் எனவும், தனது வறுமையைப் போக்குவதற்கு ஸ்ரீ லக்ஷ்மீ தேவியைக் குறித்துத் தவம் செய்தார் எனவும், இவருடைய தவத்தைக் கண்ட தேவீ அவருக்கு முன்னே தோன்றி, 'உனது முன் பிறவியின் கர்மவினையால், உனக்கு இப் பிறவியில் ஸம்பத்தையளிக்க என்னால் இயலாது. ஆனால் மறுபிறவியில் நீ ஸம்பத்தைப் பெற முடியும்' எனச் சொல்ல, அதைக் கேட்ட மாதவவித்யாரண்யர் சிறிது ஆலோசித்து, துறவறத்தைத் தழுவி, மீண்டும் அன்னையை நோக்கி இப்பொழுது நான் மறுபிறவி யெய்தி விட்டேன் எனச் சொல்ல, ஸ்ரீதேவியும் பெருகிய ஸம்பத்தை வழங்கினாள் எனவும் ஒரு வதந்தி உலவி வருகின்றது.

---

*ஸ்ரீ சங்கரானந்தர் ஆத்மானந்தருடைய சிஷ்யராவர் இவர் ஆத்ம புராணம், உபநிஷத்துக்களுக்கு தீபிகை என்ற உரையையும், ப்ரஹ்மஸூத்ரவிருத்தி, ச்ருதிகீதை, சிவகீதை இவைகளுக்கு உரையையும் எழுதியுள்ளார். எல்லோரும் உணர்ந்து கொள்ளும் வகையில் எளியநடையில் அமைந்துள்ளன இவை என்பது தனிச்சிறப்பாகும்.

ஆனால் இவர் தான் துறவியாதலால் எனக்கு இந்த ஸம்பத்துத் தேவையில்லையென்று, அவைகளை விஜயநகரத்தின் வளர்ச்சிக்குக் கொடுத்து விட்டார். அக் காரணத்தான் விஜயநகருக்கு வித்யாநகர், வித்யாரண்யநகர் எனவும் பெயர் தோன்றியது என்று கர்ணபரம்பரையாகக் கூறப் பெறுகின்ற கதையும் கேட்கப் பெறுகின்றது. இதிலிருந்து இவர் ஒரு தைவஸம்பத்து நிறைந்த மஹாபுருஷன் எனவும் தெரிய வருகின்றது.

மற்றும், பராஶரமாதவீயம் என்ற நூலில்[21] மாதவவித்யாரண்யர் புக்கன் என்ற அரசனுக்கு அமைச்சராகவும், குலகுருவாகவும் இருந்து, தனது தவவலிமையின் திறனாலும், ஒப்புயர்வற்ற வித்வத்தினாலும் அரச கார்யங்களை நன்கு நிர்வாகம் செய்து வந்தார் எனவும் தெரிய வருகிறது. இவர் தேவ்யபராதக்ஷமாபணம் என்ற துதியில்:—"மயா பஞ்சாஶீதேரதிகமுபநீதே து வயஸி"[22] ("என்னால் எண்பத்தைந்து வயதைக் கழித்ததும்) எனக் காணப் பெறுவதால் இவர் எண்பத்தைந்து வயது வரையில் ஜீவித்திருந்தார் எனவும் காணப் பெறுகின்றது.

நரஸிம்ஹபண்டிதர் என்பவர் தமது ப்ரயோகபாரிஜாதத்திலும்[2] ந்ருஸிமஹஸூரி என்பவர் தமது திதிப்ரதீபிகா[23] என்ற நூலிலும் வித்யாரண்யரால் காலநிர்ணயம் எழுதப் பெற்றது என மாதவாசாரியர் புனைந்த காலமாதவம் என்ற நூலைக் குறிப்பிடுகிறார்.

மேலும் வீரமித்ரோதயம் என்ற நூலில் வித்யாரண்யர் பராஶரஸம்ருதி உரையை வரைந்தவர் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. ரங்கநாதர் என்பவர் தமது ப்ரஹ்மஸூத்ரத்தின் உரையில்[24] மாதவவித்யாரண்யரால் எழுதப் பெற்றதும், பாரதீதீர்த்தருடைய பெயரில் வெளியிடப் பெற்றதுமான வையாஸிகந்யாயமாலாவைக் குறிப்பிடுகிறார்.

அஹோபலபண்டிதர் என்றவர் தன்னால் ஸம்ஸ்க்ருதத்தில் புனைந்த ஆந்த்ரபாஷாவ்யாகரணம் என்ற நூலில் தாதுவ்ருத்தி முதலிய நூல்களைப் புனைந்தவர் வித்யாரண்யர் எனக் குறிப்பிடுகிறார்.[25] பஞ்சதஶியின் உரையைப் புனைந்தவரும், வித்யாரண்யருடைய சிஷ்யருமான ராமகிருஷ்ணர் என்பவர் வித்யாரண்யரைப் பஞ்சதஶியைப் புனைந்தவர் எனவே குறிப்பிடுகிறார்.[26]

மற்றும் ஆபஸ்தம்பாத்வரதந்த்ரத்தின் உரையாகிய ப்ரயோகமாலா என்ற நூலில் சௌண்டபாசார்யர் என்பவர் மாதவரும் வித்யாரண்யரும் ஒருவரே தான் எனக் குறிப்பிடுகிறார்.[27] இதே போல ஜீவந்

முக்திவிவேகத்தின் உரையின் பூர்ணுநந்தேந்துகௌமுதியிலும்[28] இவர் பூர்வாஶ்ரமத்தில் மாதவர் எனவும், இவரே தான் பின்னுல் வித்யாரண்யர் எனவும் குறிப்பிடப் பெற்றுள்ளது. எனவே மாதாவாசார்யர் என்பது பூர்வாஶ்ரமப் பெயர். வித்யாரண்யர் என்பதும் ஸந்யாஸாஶ்ரமப் பெயர் என்பதும் தெளிவு.

Dr. Aufercht என்பவர் தமது Catalogus Catalogorum என்ற நூலில் வேதபாஷ்யங்களைத் தவிர ஸுமார் ஐம்பது நூல்களை மாதவவித்யாரண்யர் புனைந்துள்ளதாகத் தெரிவித்துள்ளார். ஆனுல் பண்டிதர்கள் பலர் வித்யாரண்யர் மீதுள்ள ஆதரவினுல் பல நூல்களைப் புனைந்து அதை அவர் பெயரில் ப்ரசாரம் செய்திருக்கலாம் எனவும் கருத இடமுண்டு

அவ்வரிசையில்—ஸாயணீயகர்மவிபாகம், ஸுபாஷிதஸுதாநிதி, ப்ராயஶ்சித்தஸுதாநிதி, ஆயுர்வேதஸுதாநிதி, அலங்காரஸுதாநிதி, புருஷார்த்தஸுதாநிதி போன்ற நூல்கள் வித்யாரண்யரால் இயற்றப் பெற்றதாகச் சொல்ல முடியவில்லை.[29]

அடியில் குறிப்பிடப் பெற்றுள்ள நூல்கள் இவரால் இயற்றப் பெற்றவை—

| | | |
|---|---|---|
| 1) | (மாதவீய) தாதுவிருத்தி | (வ்யாகரணம்) |
| 2) | பராஶரமாதவீயம் | (தர்மஶாஸ்த்ரங்கள்) |
| 3) | காலநிர்ணயம் | (தர்மஶாஸ்த்ரங்கள்) |
| 4) | ஜைமிநீயந்யாயமாலாவிஸ்தரம் | (பூர்வமீமாம்ஸா) |
| 5) | அநுபூதிப்ரகாஶம் | வேதாந்தம் |
| 6) | அபரோக்ஷாநுபூதியினுடைய உரை தீபிகை | ,, |
| 7) | ஐதரேயோபநிஷத்தீபிகை | உபநிஷத் |
| 8) | தைத்திரீயோபநிஷத்தீபிகை | ,, ,, |
| 9) | விவரணப்ரமேயஸங்க்ரஹம் | வேதாந்தம் |
| 10) | ப்ருஹதாரண்யகவார்த்திகஸாரம் | ,, |
| 11) | பஞ்சதஶீ | வேதாந்தம் |
| 12) | ப்ரஹ்மவிதாஶீர்வாதபத்ததி: | ,, |

13) ராமாயணஸாரஸங்க்ரஹம் இதிஹாஸம்

14) ஸர்வதர்ஶநஸங்க்ரஹம்
15) ஶங்கரதிக்விஜயம் }

14, 15 என்ற இவ்விரண்டும் வித்யாரண்யர் இயற்றியதாகச் சொல்லப் பெறுகின்றது. ஆயினும் ஶங்கர திக் விஜயமென்பது அபிநவகாளிதாஸன் என்பவரால் இயற்றப் பெற்றது என்பது பல ஆராய்ச்சியாளரின் முடிவு.

ஸர்வதர்ஶநஸங்க்ரஹம் மாதவவித்யாரண்யரால் இயற்றப் பெற்றதாயினும் இவ்விஷயத்தில் சிற்சில ஐயப்பாடுகள் தோன்றுகின்றன. "மற்ற விஷயங்களை பூர்ணப்ரஜ்ஞருடைய ஆநந்ததீர்த்தரின் பாஷ்யத்தினுடைய உரையிலிருந்து தெரிந்து கொள்ள வேண்டுவதாகும்."[30] என்று ஸர்வதர்சநஸங்கிரஹத்தில் காணப்படுகிறது.

ஆநந்ததீர்த்தருடைய பாஷ்யத்திற்கு முதலில் உரையெழுதிய ஜயதீர்த்தர் வித்யாரண்யருக்குப் பின்பு வந்தவர். பின்னுல் வருபவருடைய உரையை முன்னே யிருப்பவர் குறிப்பிடுவதற்கு இயலாது. இது ஒரு காரணம்.

மற்றொரு காரணம்—அத்வைத வேதாந்தியான வித்யாரண்யருக்கும், த்வைத வேதாந்தியான அக்ஷோப்ய முநிவருக்கும் வாக்யார்த்தம்—பட்டிமன்றம்—உண்டாகியது. அதற்கு மத்யஸ்தராக வேதாந்த தேசிகர் நியமநம் செய்யப் பெற்றூர். வாக்யார்த்தத்தினுடைய இறுதியில்—

"அஸிநா தத்வமஸிநா பரஜீவப்ரபேதிநா.
வித்யாரணயமஹாரண்யமக்ஷோப்யோ முநிரச்சிநத்"

—தத்வமஸி என்ற வாக்யார்த்தமாகிற கத்தியினுல் வித்யாரண்யர் என்ற கானகத்தை, அக்ஷோப்யமுநி என்பவர் அழித்தார். என்று வேதாந்த தேசிகர் முடிவு கூறினுர் என்பது ஒரு கர்ணபரம்பரையான வதந்தி. உலவுகின்றது.

இதற்கு எதிரிடையாக—

"அஸிநா தத்வமஸிநா ப்ரஜீவப்ரபேதிநா.
அக்ஷோப்யம் க்ஷோபயாமாஸ வித்யாரண்யமஹாமதி;"

எனவும், வித்யாரண்யர் தத்வமஸி வாக்யார்த்த விசாரத்தில் அக்ஷோப்யரைக் கலக்கமடையச் செய்தார் என்ற வதந்தியுமுண்டு.

வேதாந்ததேஸிகர் மத்யஸ்தராக இருந்ததைக் கூறுகின்ற வதந்தி உண்மையானால், ஸர்வதர்ஶந ஸங்க்ரஹத்தில் வேதாந்த தேஸிகருடைய தத்வமுக்தாகலாபம்[31] என்ற நூலை மேற்கோளாகக் குறிப்பிட்டுள்ளது உண்மையாகும்.

இக் கதை உண்மைக்குப் புறம்பானது என்றால் ஸர்வதர்ஶந ஸம்க்ரஹம் ஓர் தொகுப்பு நூல் என்றோ, அல்லது மேலே சொன்ன இரண்டு தர்ஶநங்களும், பின்னால் சேர்க்கப்பெற்றன எனக் கருதுவதே ந்யாயமாகும் எனத் தோன்றுகின்றது.

14. ஸங்கீதஸாரம் என்ற நூல் வித்யாரண்யர் இயற்றியதாக கோவிந்ததீக்ஷிதருடைய ஸங்கீதஸுதா என்ற நூலில் இரண்டாவது அத்யாயத்திலும், சதுர்தண்டிப்ரகாஶிகா என்ற நூலில் வீணாப்ரகரணத்திலும் குறிக்கப் பெற்றுள்ளது[32]. ஆயினும் நூல் எங்கேயுள்ளது எனத் தெரியவில்லை.

உபநிஷத், கீதா, ப்ரஹ்மஸூத்ரம் என்ற இம் மூன்றும் ப்ரஸ்தாநத்ரயம் எனச் சொல்லப் பெறும். இவைகளில் சொல்லப் பெற்றுள்ள அத்வைத ஸித்தாந்தம் சிலருக்குப் புரிந்து கொள்வது சிரமமாயிருக்கும் என நினைத்து, ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்துடைய கருத்துக்களைச் சுருக்கமாகவும், தெளிவாகவும் விளக்குவதற்காகத் தோன்றியதே வையாஸிகந்யாயமாலா என்ற நூலாகும். மற்றும் உபநிஷத்துக்களுடைய பொருட்களை எளிதில் உணர்ந்துகொள்ளும் வகையான் செய்யுள் நடையில் அநுபூதி ப்ரகாஶம் தோன்றியது. ப்ருஹதாரண்யபாஷ்யவார்த்திகத்தினுடைய கருத்துக்களை எளிய முறையில் விளக்குவதற்காகவே ப்ருஹதாரண்யவார்த்திகஸாரம் தோன்றியது. இதே போல பஞ்சபாதிகா விவரணமென்ற பெரிய நூலை எளிதில் உணர்ந்து கொள்ளும் வகையான் விவரணப்ரமேயஸங்க்ரஹம் தோன்றியது. பஞ்சதஶீ இளமதியெய்திய மந்தாதிகாரிகளுக்கு எளிதில் புரிந்து கொள்ளும் வகையான் தோன்றியது. இது மிகவும் ஸரளமான நடையில் அமையப் பெற்றது. இந்த எளிய நடையைப் பயன் படுத்திக் கொண்டு, சிலர் தங்களுக்கு அநுகூலமாயுள்ள கருத்துக்களை ஏற்றுக் கொண்டு மக்களை ஏமாற்றிவருவதோடல்லாமல், தங்களையே ஜீவன்முக்தர்கள் என்பதைப் பறை சாற்றியும் வருகின்றனர்.

இக் காரணத்தால் உண்மையான ஜீவன்முக்தர்களுக்குக் களங்கம் தோன்றுவதோடல்லாமல், ஜீவன்முக்தர்களுக்குரிய இலக்கணமும் குறைவாக மதிக்கப் பெறுவதோடு, மக்களிடையே தத்வத்தினுடைய உண்மை நிலையினை யுணரமுடியாமல் பலவகையான அநாகரிகங்களும், ஐயப்பாடுகளும் தோன்றுவதற்குக் காரணமாயிருப்பதுமன்றோ!

இத்தகைய குறையைக் களைந்து உண்மை நிலையினைத் தழுவிய ஜீவன்முக்தியினுடைய இலக்கணங்களையும், அதற்குரிய உபாயங்களையும் தெள்ளிய முறையிலே எடுத்துக்கூற வந்ததே இந்த **ஜீவந்முக்திவிவேகமென்பது.**

சுருங்கச் சொன்னால் பஞ்சதசியினுடைய த்ருப்திதீபப்ரகரணம் முதலிய நான்கு ப்ரகரணங்களும், யோகாநந்தம் முதலிய ப்ரகரணங்களுக்கு முரியதான கருத்துக்களுக்கநுகூலமானதும் ஶாஸ்த்ரீயமானதுமான யுக்திகளை எடுத்துச் சொல்லுவதற்கு வந்தததுதான் இந்நூல். எனவே பஞ்சதசிக்கும், ஜீவன்முக்தி விவேகத்திற்கும் ஶேஷ—ஶேஷிபாவமுமுண்டு எனக் கூறுவதும் மிகையாகாது. பஞ்சதசியையும், இந் நூலையும் இணைத்து ஷோடஶ ப்ரகரணம் என்றும் ஸம்ப்ரதாயமுணர்ந்த சான்றோர் கூறுவர்.

ஸங்ந்யாஸம் என்பது, விவிதிஷாஸங்ந்யாஸம், வித்வத்ஸங்ந்யாஸம் என இருவகையாகும். பரம்பொருளையுணர்ந்து கொள்ள வேண்டுமென்ற விழைவினால் எல்லாக் கர்மாக்களையும் துறப்பது விவிதிஷாஸங்ந்யாஸமென்பது, இதன் பயனாக ஶ்ரவணம், மநநம் முதலிய பயிற்சிகள் வளர்ச்சியடைந்து மனது ஒரு நிலையில் நிற்பதற்குக் காரணமாயமையும். உபநிஷத்துக்களிலிருந்து பரம் பொருளை நன்கு உணர்ந்து கொள்ளுவதற்கும் வழியுண்டாகும்.

வித்வத்ஸங்யாஸமென்பது வேறு. பரம்பொருளை நன்கு உணர்ந்து கொண்டவன் வித்வான் எனப் பெறுவன். அவனுக்கு மனம், வாஸனைகள் என்பது ஒன்றும் கிடையாது. அவன் யோக நிலையில் திளைத்திருப்பவன். அவனுக்கு சரீரப்பற்று போன்ற எவ்விதமான பற்றும் இல்லை. அவன் உயிரோடிருந்தாலும், எத்தகைய கர்மாவிலும் தன்னைப் பிணைத்துக் கொள்ளமாட்டான். எப்பொழுதும் பரமாநந்த நிலையைத் தழுவியவனாக நித்யாநந்தத்தை நுகர்ந்து கொண்டு இருப்பவன். இதுவே ஜீவன்முக்த நிலையென்பதுமாகும். இந்த ஸித்தாந்தத்தையே இந்நூல் விளக்குகின்றது.

இந்நூலில் ஐந்து ப்ரகரணங்கள் இருக்கின்றன.

(1) ஜீவன்முக்திப்ரகரணம்

(2) வாஸநாப்ரகரணம்

(3) மநோநாஶப்ரகரணம்

(4) ஸ்வரூபஸித்திப்ரயோஜநப்ரகரணம்

(5) வித்வத்ஸந்ந்யாஸப்ரகரணம்

என்பன அவை.

மற்றும், ஜீவன்முக்திநிலை ஒன்று உண்டு என்பதற்குப் பல ப்ரமாணங்களும், ஜீவன்முக்தியின் ஸ்வரூபமும், அதைப் பெறுவதற்குரிய உபாயமாயமைந்துள்ள மனதையும், வாஸனைகளையும் களைவது, ஜீவன்முக்தியின் பயனாகிய ஞானத்தைக் காப்பாற்றுவது, தவம், விஸம்வாதம், ஸ்துதிநிந்தா வடிவாயமைந்த வார்த்தைகள் இல்லாமை, துக்கம் மறைவது, நித்யஸுகத்தைப் பெறுவது போன்ற உபாயங்களினால் அடையப் பெறுவது வித்வத்ஸந்யாஸ என்பன போன்ற விஷயங்கள் விஸ்தாரமாகக் கூறப் பெற்றுள்ளன.

இந் நூலில், உபநிஷத்துக்கள், பகவத்கீதை, லகுயோக வாஸிஷ்டம், யோகவாஸிஷ்டம், யோகஸூத்ரங்கள், ஸ்ம்ருதிகள் ஸ்ரீசங்கரபகவத்பாதருடைய நூல்கள், பஞ்சபாதிகாசாரியர், ஆநந்தபோதாசார்யார், பஞ்சதஶீ, ஞாநாங்குஶம் முதலியவைகள் போன்ற பல நூல்கள் மேற்கோள்களாகக் கொள்ளப் பெற்றுள்ளன.

மற்றும், வைராக்யம் இருவகையாகும். லோகம் இருவகை. நிக்ரஹம் இருவகை. ஆஸநயோகம், அஶநயோகம் என இருவகை தடஸ்தர்கள் இருவகை. புருஷப்ரயத்நங்கள் இருவகை. காமங்கள் மூவகை. ப்ராணயாமங்கள் நால்வகை. த்வந்த்வங்கள் பலவன, ஶுத்தவாஸனை, தேஹவாஸனை, என வாஸநாபேதங்களும், பெண்களுக்கும் ஸந்ந்யாஸத்தில் தகுதியுண்டு என்ற விஷயம் ஸம்ப்ரதாயத்தைத் தழுவிய விஷயம், சிட்டுக்குருவி கதை, ஜீவன்முக்திநிலை. பரமஹம்ஸனுடைய ஆசரணம் போன்ற பல விஷயங்கள் சொல்லப் பெற்றுள்ளன.

மேலும், இந்நூலில் கூறப் பெற்றுள்ள விவிதிஷாஸந்ந்-யாஸம், வித்வத்ஸந்ந்யாஸம் என்ற இரண்டு ஸந்ந்யாஸங்களும், கீதா பாஷ்யத்தினுடைய தொடக்கத்தில் கூறப் பெற்றுள்ளது[33]. ஆயினும் அது அவ்வளவு தெளிவாக இல்லாதிருப்பதால் சிலருக்குப் புரிந்து கொள்ளுவதற்கு இயலாமலும் இருக்கின்றது. இந் நூல் அதைத் தெள்ளிய முறையிலே எடுத்துக் கூறுவதால் இதுவும் வேதாந்த ப்ரகரணக்ரந்தமாகும்,

இந்நூல் முதலாவதாக அச்சியற்றப் பெற்ற பொழுது இந் நூலில் அதிகமான பாடங்கள் காணப் பெறுவதாகவும் இதை வெளியிட்டவர் குறிப்பிட்டுள்ளார். உதாஹரணமாக A.S.S. 20வது எண்ணுள்ள பதிப்பில் 19வது பக்கத்தில் பெண்களுக்கும் ஸந்ந்யாஸாஶ்ரமத்திற்குரிய தகுதியுண்டு என்ற மூலபாடம் அதிகமென்றும், ஸந்தர்ப்பத்திற்குப் பொருந்தாததாயிருப்பதாகவும் குறிப்பிட்டுள்ளார். ஆனல் இந்தத் தமிழ் மொழிபெயர்ப்பில் அதை மூலபாடமாகவே எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளது.

மற்றும், மணிலால் த்விவேதி என்பவர் இந்நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து 1897ல் வெளியிட்டுள்ளார். ஜீவந்முக்திஸாரம் என்ற பெயரில் V. V. பட் என்பவர் தொகுத்து மஹாராஷ்ட்ர மொழியில் 1909ல் பம்பாயில் வெளியிட்டுள்ளார். பூர்ணநந்தேந்துகௌமுதீ என்ற அச்யுதராயமோடக் இயற்றிய உரையோடு 1916ல் ஆநந்தாஶ்ரமத்தின் (பூனு) நூல் வரிசையில் 20 எண்ணுக வெளியிடப் பெற்றுள்ளது.

துர்காசரணசட்டோபாத்யாயர் என்பவர் 1925ல் வங்க மொழியில் உரையுடன் வெளியிட்டுள்ளார்: இந்நூலுக்கு அர்த்தரத்நதீபிகை என்ற ஸம்ஸ்க்ருத உரையொன்று அச்சியற்றப் பெறுமல் B.O.R.I. நூல் நிலயத்தில் ஒன்றுள்ளது. ஜீவந்முக்தி விவேகஸ்ாரஸங்க்ரஹம் என்ற ஒரு நூல் ஸதேகநாதர் என்பவரால் இயற்றப் பெற்றுள்ளது. அந்நூல் M.G.O.M.L.ல் நூல் நிலையத்திலுள்ளது. அதுவும் அச்சாகவில்லை.

இதைத் தவிர அடையாறு நூல்நிலயத்திலிருந்து வெளியிடப் பெற்ற மற்ருெரு ஆங்கில மொழி பெயர்ப்பும் இருக்கின்றது.




இது வரையில் தமிழில் இதற்கு மூலத்தைத் தழுவிய மொழி பெயர்ப்பு வெளிவரவில்லை. கடவுள் அருளால் அடையாறு நூல் நிலயத்தில் தமிழில் மொழிபெயர்க்கப் பெற்ற ஒரு பழைய ஓலைச் சுவடி அபூர்வமாகக் கிடைத்ததும் நமது பாக்கியமாகும். இம் மொழிபெயர்ப்பு எளிய நடையில் மூலத்தின் கருத்தை அழகாக வும், ஸுலபமாகவும் அமைந்த உரைநடையில் எடுத்து விளக்கி யுள்ளதும் தனிச்சிறப்பாகும்.

இவ்வுரையாசிரியரின் பெயர் இச் சுவடியில் கொடுக்கப் பெறவில்லை. அவருடைய வரலாற்றையும் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆயினும் நூலின் தொடக்கத்தில் ஸ்ரீ நடராஜப் பெருமானைப் போற்றுவதால் இவர் சிதம்பரத்தில் இருந்தவர் என ஒருவாறு கருதலாம்.

இத்தகைய நூல்கள் தமிழ் மொழியில் வெளியிடுவது தமிழ் மொழியின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியாயிருக்குமென்பதில் ஐயமில்லை. பிற மொழியிலுள்ள சிறந்த நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிடுவதால் மேலும் தமிழ் இலக்கியம் வளர்ச்சியடைய நாம் சிறந்த தொண்டு செய்தவர்களாகவும் இருக்கின்ற பெருமையுண்டு.

இவ்வாறு தமிழ் வளர்ச்சியில் அக்கரைகாட்டி இவ்வரிய நூலை வெளியிடுகின்ற அடையார் நூல் நிலையத்தாரும் அதன் அத்யக்ஷர் ஸ்ரீ Dr. .K.K. ராஜா அவர்களும் பாராட்டுதற்குரிய வர்கள்.

15-6-86

R. தங்கஸ்வாமி சர்மா

சாஸ்த்ர சூடாமணி,

பேராசிரியர் K.S.R.I Madras-4

# ABBREVIATIONS

| | | |
|---|---|---|
| A.S.S. | — | Anandasrama Sanskrit Series |
| B.O.R.I | — | Bhandarkar Oriental Research Institute, Poona |
| B.S.S. | — | Benaras Sanskrit Series |
| Edn. | — | Edition |
| E.I. | — | Epigraphia Indica |
| G.O.M.L. | — | Government Oriental Manuscripts Library |
| I.H.Q. | — | Indian Historical Quarterly |
| I.A. | — | Indian Antiquary |
| M.G.O.M.L. | — | Madras Government Oriental Manuscripts Library |
| MS | — | Manuscript |
| N.S. | — | Nirnaya Sagara Press, Bombay |
| A.I.O.C. | — | All India Oriental Conference |
| Q | — | Quoted |
| T.S.M.L. | — | Tanjore Sarasvathi Mahal Library |
| V.N.S.S. | — | Vijaya Nagaram Sanskrit Series |
| V. V. P. | — | Vidya Vilasini Press, Tanjore |
| V.T. | — | Vidyaranya Trust |

# REFERENCES

1) ஸ்ரீமத்ஸாயண துக்தாப்திகௌஸ்துபேந மஹௌஜஸா.

2) யஸ்ய பௌதாயநம் ஸூத்ரம் ஶாகா.

3) தேந மாயணபுத்ரேண ஸாயணேந மநீஷிணா.

4) ஸ்ரீமதீ ஜநநீ யஸ்ய ஸுகீர்த்தேர் மாயண; பிதா
ஸாயணோ போகநாதஶ்ச மநோபுத்தீ ஸஹோதரௌ.

5) ஆதிஶத் மாதவாசார்யம் வேதார்த்தஸ்ய ப்ரகாஶநே.
ஸ ஹ்யாஹ ந்ருபதிம் ராஜந் ஸாயணார்யோ மமாநுஜ:.
ஸர்வம் வேத்யேவ வேதாநாம் வ்யாக்யாத்ருத்வேநியுஜ்யதாம்
இத்யுக்தோ மாதவார்யேண வீரபுக்கமஹீபதி:.
அந்வஶாஸத் ஸாயணார்யம் வேதார்த்தஸ்ய ப்ரகாஶநே.

6) தத் ஸம்வ்யஞ்ஜய கம்பண வ்யஸநிந: ஸங்கீதஶாஸ்த்ரே தவ
ப்ரௌடிம், மாயண கதயபத்யரசநாபாண்டித்யமுந்முத்ரய.
ஶிக்ஷாம் தர்ஶய ஶிங்கண க்ரமஜடாசர்காஸு வேதேஷ்விதி
ஸ்வாந்புத்ராநுபலாலயந் க்ருஹகதோ ஸம்மோததே
ஸாயண:

7) See E. I. IIIrd Part

8) See Mysore Manuscript.

9) See I. H. Q. Vol. XIV of R. No. Ms. 1424

10,11) ஸோऽஸ்மாந் முக்யகுரு: பாது வித்யாதீர்த்தமஹேஶ்வர:

12) யஸ்ய நி:ஶ்வஸிதம் வேதா: யோ வேதேப்யோऽகிலம் ஜகத்.
நிர்மமே தமஹம் வந்தே வித்யாதீர்த்தமஹேஶ்வரம்.

13) ப்ரணம்ய பரமாத்மாநம் ஸ்ரீவித்யாதீர்த்தரூபிணம்.
ஜைமிநீயந்யாயமாலா ஶ்லோகை: ஸங்க்ருஹ்யதே ஸ்புடம்.

14) ஜீவந்முக்திவிவேகேந தமோஹார்தம் நிவாரயந்.
புமர்த்தமகிலம் தேயாத் வித்யாதீர்த்தமஹேஶ்வர:.

15) லப்தாமாகலயந் ஸ்வபாவலஹரீம் ஸ்ரீபாரதீதீர்த்தத:.

16) ஸ பவ்யாத் பாரதீதீர்த்தயதீந்த்ரசதுராநநாத்.
க்ருபாமவ்யாஹதாம் லப்த்வா ப்ரார்த்யப்ரதிமோऽபவத்.

17) நம: ஸ்ரீசங்கராநந்த குருபாதாம்புஜந்மநே.
ஸவிலாஸமஹாமோஹ க்ராஹக்ராஸைக கர்மணே.

18) ஸ்வமாத்ரயாநந்தயதத்ர ஜந்தூந்
ஸர்வாத்மபாவேந ததா பரத்ர.
யத் ஶங்கராநந்தபதம் ஹ்ருதப்ஜே
விப்ராஜதே யத் யதயோ விஶந்தி

19) லப்தாமாகலயந் ப்ரபாவலஹரீம் ஸ்ரீபாரதீதீர்த்த:
வித்யாதீர்த்தமுபாஶ்ரயந் ஹ்ருதி பஜேஸ்ரீகண்டமவ்யாஹதம்.

20) மந்தாரஶ்ச தரு: பரேऽபி தரவ: மேருஶ்ச சைல: பரே
ऽப்யாஶைலா: கமலாக்ருஹஸ்தஶயநம் சாப்தி: பரேऽப்யப்தய:
ஸ்ரீகண்டஶ்ச குரு: பரேऽபி குரவ: லோகத்ரயேऽப்யத்புதம்
பக்தாதீந பாவாம்ஶ்ச தைவதமஹோ ஸர்வேऽப்யமீ தேவதா:

மாஹேஶ்வராணாம் தத்வாநாம் மாந்யே யஸ்மிந் பரதர்ஶகே.
ப்ராசாமதர்ஶி நாதாநாம் ப்ராயேண நவதா புவி.
இத்தம் ஸர்வ குணோபரஞ்ஜககலாமீத்ருக்விதாமேயுஷ:
தஸ்ய க்ஷோணிபதேரபாரயஶஸஸ் தந்வோபதேஶ: க்ரியாம்
கர்தும் காமபி வாஸநாமுபநயந் காருண்யவாராம் நிதி:

ஸ்ரீமாந் ஸந்நிதி மாத்தத் பஶுபதி: ஸ்ரீகண்டநாமாத்மநா.

See E. I. Part III|26

21) இந்த்ரஸ்யாங்கிரஸோநளஸ்ய ஸுமதி: ஶைப்யஸ்ய
மேதாதிதி:
தௌம்யோதர்மஸுதஸ்யவைந்யந்ருபதே: ஸ்வோஜா;
நிமேர் கௌதம:.
ப்ரதயக்த்ருஷ்டிரருந்ததீஸஹசரோ ராமஸ்ய புண்யாத்மந:
யத்வத்தஸ்ய விபோரபூத் குலகுருர் மந்த்ரீ ததா மாதவ:.
(பராஶரமாதவீயே. 414)

22) பரித்யக்தா தேவீ விவிதவிதிஸேவாகுலதயா
மயா பஞ்சாஶீதேரதிகமுபநீதே து வயஸி.

23) ஸ்ரீமத்வித்யாரண்யமுநீந்த்ரை: காலநிர்ணயே ப்ரதிபாதித: ப்ரகார: ப்ரதர்ஸ்யதே. Page No. 411.

24) வித்யாரண்யக்ருதை: ஶ்லோகை: ந்ருஸிம்ஹாஶ்ரமஸூக்திபி: ஸந்த்ருப்தாவ்யாஸஸூத்ராணாம்வருத்திர்பாஷ்யாநுஸாரிணீ.

25) வேதாநாம் பாஷ்யகர்தா விவ்ருதமுனிவசா: தாதுவ்ருத்தேர் விதாதா
ப்ரோத்யத்விதயாநகர்யாம்ஹரிஹரந்ருபதே:ஸார்வபௌமத்வதாயீ.
வாணீ நீலாஹிவேணீ ஸரஸிஜநிலயா கிங்கரீதி ப்ரஸித்தா
வித்யாரண்யோSக்ரகண்யோSபவதகிலகுரு:ஶங்கரோ வீதஶங்க:

26) நத்வா ஸ்ரீபாரதீர்த்தவித்யாரண்ய முநீஶ்வரௌ.
மயா த்வைதவிவேகஸ்ய க்ரியதே பதயோஜநா.

27) பதவாக்யப்ரமாணநாம் பாரத்ருஶ்வா மஹாமுநி:.
ஸாங்க்யயோகரஹஸ்யஜ்ஞ: ப்ரஹ்மவித்யாபராயண:.
வேதார்த்தவிஶதீ கர்தா வேதவேதாங்கபாரக:
வித்யாரண்யயதிர்ஜ்ஞாத்வா.......................

28) வ்யாக்யாதம் சேதம் மூலகாரைரேவ பூர்வாஶ்ரமே மாதவா-சார்யதஶாயாம்—Page 161. ASS 20.

29) See VII O.C Baroda Page No 121 and T. S. M. L MSS. See ரத்நாபண Page No 44 of Triredi Edn; வ்ருத்திவார்த்திக Page No 19 and I A Vol 45 Pages 22-24, Mysore G.O.M.L. Mss.

30) Page No 159. B.O.R. I. Edn.

31) ஸர்வதர்ஶநஸம்க்ரஹம் B.O.R. I. Edn. pp. No 111

32) See V.C.C. Vol I.

33) கீதாபாஷ்யோபக்ரமே—" தச்ச ஸர்வஸந்ந்யாஸபூர்வகாத் ஆத்மஜ்ஞாநநிஷ்டாரூபாத்— தர்மாத் ...............
கீதாபாஷ்யாந்திமஶ்லோகவ்யாக்யாநே—ஸர்வகர்மஸந்ந்யாஸாத்—ஜ்ஞாநநிஷ்டாயாம் ஆத்யந்திக; ஸம்ஸாரோபரம:'

34) ஶாஸ்த்ரைகதேஶஸம்பத்தம் ஶாஸ்த்ரகர்மாந்தரே ஸ்திதம்
ஆஹு: ப்ரகரணம் நாம க்ரந்தபேதம் விபஶ்சித:

பின்னுரை—

ஸநாதநமாயுள்ள வைதிகமதத்தை நிலை நிறுத்தியவரும் பூர்வாஶ்ரமத்தில் மாதவர், மாதவமந்த்ரீ என்ற புகழ் பெற்ற பல பெயர்களையுடையவரும், பிற்காலத்தில் துறவறம் தழுவியவரும், ஸ்ரீவித்யாரண்யர் பெயரையுடையவருமான இந்த மஹான் வேத பாஷ்யங்களை யியற்றுவதற்கும் காரணமாயிருந்தவர் என்பதை யாவருமறிவர்.

இவர் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நால்வகை யான புருஷார்த்தங்களையும் பெற்று, பிறவிப்பயனைக் களைவதற்கு அநுகூலமாயுள்ள பல வேதாந்த நூல்களையும், மக்கள் உயத் துணர்ந்து கொள்ளும் வகையான் இயற்றியுள்ளார். இவர் எல்லா ஶாஸ்த்ரங்களிலும் நிகரற்ற புலமையையும் பெற்று விளங்கியவர். தவவலிமை பெற்றவர். ஆயினும் அரசநீதிகளையும் கசடறக் கற்று, அரசாங்கத்தில் அமைச்சராகவும் பணியாற்றியவர்.

இவர் தனது திறமையினால் அரசனையும் தன் வயப்படுத்திக் கண்டோர் வியக்கத்தக்க வகையில் அரசனைக் கொண்டே ஒரு நகரத்தையே நிர்மாணம் செய்து, பற்பல தர்மங்களைச் செய்யச் சொல்லி, அவ்வரசை நிர்வாஹம் செய்தும் வந்தவர்.

மற்றும், ஆறுதர்சநங்களிலும் பரந்த புலமை பெற்றுள்ள காரணத்தினால் மக்களுடைய ஆன்ம வளர்ச்சியின் நலன் கருதி, சிறியதும் பெரியதுமான வேதாந்த நூல்களையும், தர்மஶாஸ்த்ரங் களையும், இயற்றியுள்ளதையும் நாம் அறியலாம். உதாஹரணமாக ''பராஶரஸ்ம்ருதி'' என்ற தர்மஶாஸ்த்ரத்திற்கு ஒப்புயர்வற்ற ஓர் உரையைக் கண்டோர் வியக்கத்தக்க வகையில் புனைந்துள்ளார்.

அக்காரணத்தால் இன்றளவும் கற்றுணர்ந்த வித்தகர்கள் பலர் தத்தம் நூல்களில் மேற்கோளாகக் கொள்ளும் பொழுது 'ததுக்தம் பராஶரமாதவீயே''(பராஶரமாதவீயத்தில் இது சொல்லப் பெற்றுள்ளது.) என்று மூலநூலோடு உரையையும் இணைத்தே வ்யவாஹாரம் செய்கின்றனர். இத்தகைய பெருமையானது வேறு எந்த உரையாசிரியருக்கும் இல்லையென்பதும் மிகைகாது.

இவ்வரிசையில் இப்பொழுது இவர் இயற்றிய ஜீவந்முக்தி விவேகம் என்ற நூல் மூலத்தோடு உரைநடைப் பகுதியாக 'ஜீவந்முக்திப்ரகரணார்த்தப்ரகாஶிகா' என்ற பெயரோடு மணிப்ர வாள நடையில் வெளி வருகின்றது. இதுவரையில் மூலத்தைத் தழுவிய இது போன்ற தமிழ் மொழிபெயர்ப்பு வெளிவரவில்லை யெனவும் தெரிய வருகிறது.

இந் நூல் மணிப்ரவாள நடையில் எளிய சொற்களை யமைத்து இயற்றப் பெற்றது. அடையார் நூல்நிலையத்தில் அபூர்வமானதும் பழைமையாயுள்ளதுமான ஓலைச் சுவடியொன்று இருந்ததைக் கண்டேன். இச் சுவடி ஸுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன் எழுதியது எனவும் தெரிய வந்தது. (நூலின் நிலை வருமாறு—இது எழுபத்தைந்து ஓலைகள் கொண்டது. ஓலை ஒன்றுக்கு இருபது வரிகள் உள்ளன. அளவு (38×4) (இந் நூல் வேறு நூல்) நிலையங்களில் விசாரித்தும் இருப்பதாகத் தெரியவில்லை.

எனவே இது அபூர்மாயுள்ளதாலும், பெருமையையும், பரந்த புகழையும் பெற்றவரால் இயற்றப் பெற்றதாயிருப்பதை யுமுணர்ந்து, இதை வெளியிட விழைவு கொண்டு முயற்சி செய் தேன். இந்த உரையை யியற்றியவர் பெயர் நூலில் குறிக்கப் பெற வில்லை. ஆயினும் இவர் சிதம்பரத்திலுள்ள ஸ்ரீநடராஜப் பெருமானை நூலின் தொடக்கத்தில் நூல் இடையூறில்லாது நிறை வேறுவதற்கு அவரைப் போற்றி வணங்குவதால், இவர் தில்லை வாழ் அந்தணப் பெருமகனுவர் எனவும் கருதலாமெனத் தோன்று கின்றது.

இந் நூல் ஐந்து பகுதிகளைக் கொண்டது—முதற்பகுதி ப்ரமாணப்ரகரணம், இப் ப்ரகரணத்தில் மற்ற நான்கு ப்ரகரணங் களில் சொல்லப் போகிற விஷயங்களைச் சுருக்கி பல ப்ரமாணங் களின் வாயிலாக நிரூபணம் செய்யப் பெறுகின்றது. எவ்வாறு ஶாரீரகபாஷ்யத்தில் சது:ஸூத்ரியில் மற்ற மூன்று அத்யாயங் களுடைய விஷயங்கள் சுருக்கப் பெற்றுள்ளனவோ அது போலவே அமைந்துள்ளது. மற்றவைகளான நான்கு ப்ரகரணங்களிலும் விஸ்தாரமாக ஜீவன்முக்திநிலையைப் பல கோணங்களில் நிரூபணம் செய்யப் பெறுகின்றது.

தமிழாக்கமானது எளிய சொற்களால் அமையப் பெற்று யாவரும் படித்துணர்ந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளது இந் நூலின் தனிச் சிறப்பாகும். எனவே துறவற நிலையை யெய்த விரும்புகின்ற அதிகாரிகளுக்கும், வேதாந்த விஷயங்களை யறிய விரும்புகின்றவர்களுக்கும், இந் நூல் பல விதத்திலும் துணையாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

எனவே இச்சிறந்த நூலை வெளியிடுவதற்கு விழைந்து, நூல் நிலையத்தின் அத்யக்ஷகரும், எனது ஆப்தநண்பருமான ஸ்ரீயுத K. K. ராஜா அவர்களிடம் தெரிவித்தேன். அவரும் இது அபூர்வமாயுள்ள ஒரே சுவடியாயிருப்பதைக் கண்டு அநுமதி

யளித்ததோடு, இதற்கு வேண்டிய பல உதவிகளையும், செய்து, இப் பணியைத் தொடர்ந்து செய்து வருங்கால் அவ்வப் பொழுது திருத்தம் செய்வதற்கும் ஆவன செய்து வந்தார். அன்னாருக்கு எனது ஹ்ருதயபூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகி றேன்.

மற்றும், ஸ்ரீவித்யாரண்யருடைய வரலாறு, அவருடைய கால நிர்ணயம், அவருடைய நூல்களின் வரலாறு போன்றவைகளை ஆதாரபூர்வமாக எடுத்துக் காட்டி விரிவான முகவுரையை வரைந்து உதவிய எனது நண்பர் ஸ்ரீயுத தங்கஸ்வாமி சர்மா அவர்களுக்கும், எனது ஹ்ருதயபூர்வமான நன்றியைத் தெரிவித் துக் கொள்ளுகிறேன். இவ் வரலாறுகளை நான் எழுதாதற்கு காரணம் அவர் விஸ்தாரமாக எழுதியுள்ளதே யாகும்.

இந் நூல், செய்யுள், உரைநடை இவைகளை மூலத்திலுள்ள வாறே அமைத்து ஆந்த்ரபாஷையில், அன்னவரம் வேம்கடராகவ ஶாஸ்திரிகளால் மொழிபெயர்க்கப் பெற்று நெல்லூர் (ஆந்த்ர மாநிலம்) விக்டோரியா அச்சுக் கூடத்திலிருந்து பார்த்தஸாரதி நாயகரால் 1894வது ஆண்டு வெளியிடப் பெற்றுள்ளது. தவிர மூலத்தோடு ஹிந்தி அநுவாதத்தையும் இணைத்துக் காஶியில் ஒரு பதிப்பு சென்ற சில ஆண்டுகளுக்கு முன்பு வெளியிடப் பெற்றுள்ளது.

முடிவாக இந் நூலைப் பல வேலைகளுக்கிடையே சிரமத்தையும் பாராட்டாது என்னோடு ஒத்துழைத்து இதை நல்ல முறையிலே அச்சிட்டுக் கொடுத்துதவிய எனது நண்பர் ஸ்ரீயுத V. T. ராஜன் அவர்களுக்கும் என்னுடைய ஹ்ருதயபூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந் நூல் ஒரே சுவடியாகக் கிடைத்திருப்பதாலும், வேறு நூல் கிடைக்காத காரணத்தாலும் இது வெளிவருவதால் என்னையுமறியாது இதில் குற்றம் குறைகள் நேர்ந்திருக்குமாத லின் வாசகர்கள், இதை நடுநோக்குடன் பார்த்து, எனது உழைப்பைப் பயனுள்ளதாகச் செய்து வரவேற்பார்கள் என நம்புகிறேன்.

இங்ஙனம்

அடையாறு நூல் நிலையம், பண்டித, K. ராமசந்த்ரசர்மா,

# பொருளடக்கம்





ஸ்ரீகுருப்யோ நம :

# ஜீவந்முக்திப்ரகரணார்த்தப்ரகாசிகா

தோற்றுவாய் :—

ஸத்யஞாநாநந்த பரிபூர்ண பரமாநந்தாத்வைதராயிருக்கிற யாதொரு பரமேச்வரனானவர், சுத்தஸத்வப்ரதாநமாயும், ஸ்வச்சமாயும், ஸூக்ஷ்மமாயும், ஸ்வரூபாநாவரணராயும், ஸ்வாதீநமாயுமிருக்கின்ற தன்னுடைய மாயாசக்தி வசத்தினாலே நாமரூப்பரபஞ்சம் ஸர்வமும் தன்னுடைய சிவசக்த்யாத்மகமென்பதை எல்லோருக்கும் உணர்த்துவதற்காக ஸ்ரீஸாம்பநடேசரூபத்தைத் தரித்துக் கொண்டு தன்னுடைய யதார்த்தரூபம் சிதாகாசம் என்று போதிக்கின்ற சிதம்பரக்ஷேத்திரத்தில் ஸநகர் முதலிய ரிஷீச்வரர்களுக்கும் ஸ்வரூபாநந்தாவிர்பாவத்தை அபிநயம் செய்து காண்பிப்பதின் பொருட்டு ஆவிர்பவித்து, அம்பாளைத் தானே ஸாக்ஷியாக வைத்துக் கொண்டு இப்பொழுதும் கூட ஆநந்தத்தாண்டவம் செய்து கொண்டிருக்கிறார்.

ஸர்வஜ்ஞராயும், ஸர்வசக்திமானாயும், பக்தஜநப்ரியராயும் இருக்கின்ற அப் பெருமை வாய்ந்த ஸ்ரீஸாம்பநடேசமூர்த்தியை மூவகையாயுள்ள அந்தக் கரணத்தினாலும் நமஸ்காரம் செய்து ப்ரார்த்தித்துக் கொண்டு, அவருடைய ப்ரஸாதத்தின் லேசத்தினாலும், ஸத்குருவினுடைய க்ருபையினாலும், ஸகலச்ருதீதிஹாஸபுராணஸாரமாயும், ஜீவன்முக்திக்கு அந்தரங்க ஸாதநமாயும், பரமகாருணிகரான ஸ்ரீவித்யாரண்யஸ்வாமிகளால் செய்யப்பெற்றதாயுமிருக்கிற ஜீவந்முக்திப்ரகரணத்தின் அர்த்தத்தை க்ரந்தம் தெரியாதவர்களாயும், ஸாதனசதுஷ்டயஸம்பந்நர்களாயும் இருக்கிற பண்டித ஜநங்களுக்கு எளிதில் தெரியும் பொருட்டு என்னுடைய புத்திக்குத் தோன்றிய மட்டும் தமிழினாலே ஸங்க்ரஹம் செய்து சொல்லுகிறேன்.

நூல்—

## ப்ரமாணப்ரகரணம்

இனி இந்த ப்ரகரணத்தின் தொடக்கத்திலிருக்கின்ற மங்களச்லோகத்தினுடைய அர்த்தமானது சொல்லப் பெறுகின்றது.—

**யஸ்ய நி:ச்வஸிதம் வேதா யோ வேதேப்யோऽகிலம் ஜகத்.**
**நிர்மமே தமஹம் வந்தே வித்யாதீர்த்தமஹேச்வரம். (1)**

யாதொரு பரமேச்வரன் தனது லீலையினுல் மூச்சுக்காற்று விடுகிறது போல எளிதாக எல்லாவேதங்களையும் தோற்றுவித்து, அதன்வழியாக எல்லாப்ரபஞ்சத்தையும் ஸ்ருஷ்டிசெய்தாரோ, அப் பெருமை வாய்ந்தவரும், ஜகத், ஜன்ம (உலகம், பிறவி) முதலிய காரணத்திற்கு தடஸ்தராயும், ஸச்சிதாநந்தஸ்வரூபலக்ஷணராயு மிருக்கின்ற ஸ்ரீ ஸத்குருவடிவாயுள்ள பரமேச்வரனை மூவகையா யுள்ள கரணத்தினுலும் நமஸ்காரம் செய்கிறேன். (1)

இனி ஜீவந்முகதிப்ரகரணத்தினுடைய அர்த்தத்தை ஸங்க்ரஹமாகச் (சுருக்கம்) சொல்லி, பிறகு விஸ்தாரமாகச் சொல்லுகிறேன்.

**விவிதிஷாஸம்ந்யாஸம் (க)**

**வக்ஷ்யே விவிதிஷாந்யாஸம் வித்வந்ந்யாஸம் ச பேதத;**
**ஹேதூ விதேஹமுக்தேஸ்ச ஜீவன்முக்தேஸ்ச தௌ க்ரமாத். (2)**

விவிதிஷாந்யாஸம், வித்வந்ந்யாஸம் இவ்விரண்டையும் பேதத்தோடு சொல்லுகிறேன். இவையிரண்டும் முறையே விதேஹமுக்திக்கும், ஜீவன்முக்திக்கும் காரணமாயிருப்பவையு மாகும். (2)

**ஸம்ந்யாஸஹேதுர் வைராக்யம் யதஹர்விரஜேத் ததா.**
**ப்ரவ்ரஜேதிதி வேதோக்தேஸ்தத் பேதஸ்து புராணக.: (3)**

இந்த ஸம்ந்யாஸங்களுக்குக் காரணம் யாதெனில் வைராக்யமேயாகும். இந்த வைராக்கியமும் "எந்த தினத்தில் தோன்றுகின்றதோ, அந்த தினத்திலேயே வெளியேற வேண்டும்." ஏனெனில் வேதங்களில் சொல்லியிருப்பதால் என்க. இவை களுடைய பேதமும் புராணங்களில் பிரஸித்தமாயுள்ளது. (3)

**விரக்திர் த்விவிதா ப்ரோக்தா தீவ்ரா தீவரதரேதி ச.**
**ஸத்யாமேவ து தீவ்ராயாம் ந்யஸேத் யோகீ குடீசகே. (4)**

வைராக்யமானது இருவகையாகும் எனச்சொல்லப் பெற்றது. அது தீவ்ரம், தீவ்ரதரம் என்பது. தீவ்ரமான வைராக்யம் உள்ள பொழுது யோகியானவன் குடீசகஸம்ந்யாஸத்தைக் கொள்ளவேண்டும். (4)

சக்தோ பஹூதகே தீவ்ரதராயாம் ஹம்ஸஸம்ஜ்ஞிதே.
முமுக்ஷு : பரமே ஹம்ஸே ஸாக்ஷாத் விஜ்ஞாநஸாதநே. (5)

தீவ்ரதரமான வைராக்யத்தையுடைய யோகியானவன் பஹூதகஸம்ந்யாஸத்தைக் கொள்ளவேண்டும். தீவ்ரதரமான வைராக்யத்தையுடைய ஹம்ஸன் என்ற பெயரையுடைய பரமஹம்ஸன் ஸாக்ஷாத் அபரோக்ஷஞாநஸாதநமாயுள்ள ஸம்ந்யாஸத்தைக் கொள்ளவேண்டும். (5)

புத்ரதாரக்ருஹாதீநாம் நாசே தாத்காலிகீ மதி :.
திக் ஸம்ஸார இதீத்ருக் ஸ்யாத் விரக்தேர் மந்ததா ஹி ஸா. (6)

மக்கள், மனைவி முதலியவர்களுடைய நாசத்தில் இந்த ஸம்ஸாரம் இத்தகையதுதான் என்ற வைராக்யத்தில் தாத்காலிகமாக யாதொரு புத்தி தோன்றுகின்றதோ, அது மந்தவைராக்யம் எனச் சொல்லப்பெறும். (6)

அஸ்மிந் ஜந்மநி மா பூவந் புத்ரதாராதயோ மம.
இதி யா ஸுஸ்திரா புத்தி : ஸா வைராக்யஸ்ய தீவ்ரதா. (7)

இப் பிறவியில், மக்கள், மனைவி முதலிய ஸம்ஸாரம் நமக்கு வேண்டாம் என்று யாதொரு உறுதியாயுள்ள புத்தியுண்டோ, அது வைராக்யத்தினுடைய தீவ்ரதா என்ற நிலையாகும். (7)

புனராவ்ருத்திஸஹிதோ லோகோ மே மாஸ்து கஶ்சந.
இதி தீவ்ரதரத்வம் ஸ்யாத் மந்தே ந்யாஸே ந கோऽபி ஹி. (8)

ப்ரஹ்மலோகம் முதலியவைகள் திரும்பவும் தோற்றத்திற்குக் காரணம் என்ற குற்றத்தையுடையதாகையால், அதுவும் நமக்கு வேண்டாம் என்ற புண்யபரிபாகவசத்தால் உறுதியாயுள்ள யாதொரு புத்தியானது தோன்றுகின்றதோ, அது தீவ்ரதரமான வைராக்யம் எனப் பெறும். இவைகளில் மந்தவைராக்யமுள்ளவனுக்கு ஒரு ஸம்ந்யாஸமும் கிடையாது (8)

யாத்ராத்யசக்தி சக்திப்யாம் தீவ்ரே ந்யாஸத்வயம் பவேத்.
குடீசகோ பஹூதஸ்சேத்யுபாவேதௌ திரிதண்டிநௌ. (9)

யாத்திரை முதலியவைகளின் காரணமாகத் திறமையில்லாமலும், திறமையுள்ளவர்களாயும் இருக்கின்ற தீவ்ர வைராக்யத்தையுடையவர்கள், முறையே குடீசகன், பஹூதகன் என்ற ஸம்ந்யாஸத்தைக் கொள்ளவேண்டும். இவர்களுக்கு த்ரிதண்டீ எனப் பெயர். (9)

த்வயம் தீவ்ரதரே ப்ரஹ்மலோகமோக்ஷவிபேதத:.
தல்லோகே தத்வவித்வாம்ஸோ லோகேஸ்மிந் பரஹம்ஸக.: (10)

தீவ்ரதரவைராக்யமுள்ளவனுக்கு ப்ரஹ்மலோகத்திலுள்ள இச்சையினலே முமுக்ஷுத்வமில்லாவிட்டால் ஹம்ஸம் என்றும், பலபிறவிகளில் செய்யப் பெற்ற புண்ய ஸமூஹங்களுடைய பரிபாகவசத்தினல் வரப்பெற்ற அத்யந்தசித்தசுத்தியினலேயும் முமுக்ஷுத்வமிருந்தால் ஸாக்ஷாத்ஞானஸாதநமாயிருக்கிற பரமஹம்ஸம் என்று சொல்லப் பெற்ற இரண்டு வகையான ஸம்ந்யாஸத்திலும் அதிகாரமுண்டு. (10)

ஏதேஷாம் து ஸதாசாரா: ப்ரோக்தா: பாராசரஸ்ம்ருதௌ.
வ்யாக்யாநேஸ்மாபிரத்ராயம் பரஹம்ஸோ விவிச்யதே. (11)

இந்த நான்கு ஸம்ந்யாஸிகளுக்குரிய ஆச்ரமதர்மங்களும், ஸதாசாரங்களும் பராசரஸ்ம்ருதியினுடைய வியாக்யாநத்தில் எம்மால் விஸ்தாரமாகச் சொல்லப் பெற்றுள்ளன. நாம் இனி இந்த ஜீவன்முக்திப்ரகரணத்தில் பரமஹம்ஸனேயே விசேஷமாக ஆராய்வோம். (11)

ஜிஜ்ஞாஸுர் ஞானவாம்ஶ்சேதி பரஹம்ஸோ த்விதா மத:.
ப்ராஹுர் ஞானாய ஜிஜ்ஞாஸோர்ந்யாஸம் வாஜஸநேயிந:.

அந்தப் பரமஹம்ஸனும் ஜிஜ்ஞாஸு, ஞானவாந் என்று இருவகையாகும். (விவிதிஷு:, வித்வாந்) இவ்வாறு விதேஹமுக்திக்கும், ஜீவன்முக்திக்கும் ஸாதநமாயுள்ள் விவிதிஷா, வித்வத் என்ற ஸம்ந்யாஸமுமுண்டு என்ற விஷயத்தில் ப்ரமாணம் யாதெனில் வாஜஸநேயிகள் (ப்ருஹதாரண்யகத்திலுள்ள உத்தாலகச்ருதி)சொல்லுகின்றனர். (12)

அந்த ச்ருதி என்ன சொல்லுகிறதென்றால்—

ப்ரவ்ரஜிநோ லோகமேதமிச்சந்த : ப்ரவ்ரஜந்தி ஹி.
ஏதஸ்யார்த்தஸ்து கத்யேந வக்ஷ்யதே மந்தபுத்தயே. (13)

ஆத்மாவையே தங்களுடைய உலகமென்று நினைத்து விரும்புகின்றவர்கள், எல்லாக் கர்மங்களையும் துறந்து செல்லுகின்றனர் அன்றோ ! ஆதலால் இதனுடைய பொருள் விளக்கத்தை கத்யத்தினால் (உரைநடை) மந்தபுத்தியுள்ளவர்களின் பொருட்டு சொல்லப் பெறுகின்றது. (13)

—:o:—

உலகமோ வெனில், இருவகையாகும். அது ஆத்மலோகம், அநாத்மலோகம் என்பது. அவ்விடத்தில் ஆத்மலோகத்திற்கு மூவகையாயுள்ள நிலையானது ப்ருஹதாரண்யகத்தில் மூன்றாவது அத்தியாயத்தின் வாயிலாகக் கேட்கப் பெறுகின்றது—

"அத த்ரயோ வாவ லோகா:, மநுஷ்யலோக:, பித்ரு லோக:,
தேவ லோக இதி ஸோऽயம் மனுஷ்யலோக :
புத்ரேணைவ ஜய்ய : நாந்யேந கர்மணா, கர்மணா பித்ரு
லோக, : வித்யயா தேவலோக:" இதி ;

—பிறகு உலகங்கள் மூன்றாயிருக்கின்றன. அவை மநுஷ்யலோகம் பித்ருலோகம், தேவலோகம் என்பன. இந்த மனிதஉலகமானது பிள்ளையினாலேயே அடையத் தக்கது. வேறு கர்மத்தினாலே யாவது, ஞானத்தினாலேயாவது அடையத் தக்கதன்று. பித்ருக்களுடைய உலகமானது அக்நிஹோத்ரம் முதலிய கர்மத்தினாலும், தேவர்களுடைய உலகமானது, வித்யையினாலேயும் முறையே அடையத் தக்கது" என்றவாறு,

ஆத்ம உலகத்தின் இலக்கணமும் அவ்விடத்திலேயே கேட்கப் பெறுகின்றது—

"யோ ஹ வா அஸ்மாத் லோகாத் ஸ்வம் லோகம்.
அத்ருஷ்ட்வா ப்ரைதி ஸ ஏநம் அவிதிதோ ந புநக்தி" இதி ;

—"எவன் தனது ஆத்மாவைக் காணுது லோகாந்தரத்தை அடைகின்ருனே, அறியப் பெருமலிருக்கின்ற இவனை அந்த பரமாத்மாவானவன் காப்பாற்றுவதில்லை" என்றவாறு.

"ஆத்மாநமேவ லோகமுபாஸீத ஸ ய ஆத்மாநமேவ

லோகமுபாஸ்தே, ந ஹாஸ்ய கர்ம க்ஷீயதே" இதி ;

—"எவனெருவன் தன்னைத்தானே பயனுகத் தியானம் செய்கின்ருனே இவனுடைய கர்மாவோ வெனில் நாசமடைவதில்லை" என்றவாறு,

அதாவது—எவன், மாம்ஸம் முதலிய பிண்டலக்ஷணமாகிய லோகத்தினின்றும் தனது பயன் வடிவாயுள்ள பரமாத்மாவை "அஹம் ப்ரஹ்மாஸ்மி"— நான் ப்ரஹ்மமாக இருக்கிறேன் என்று உணர்ந்து கொள்ளாது மரிக்கின்ருனே, அவன் தனது பயனுகிய பரமாத்மாவையுணர்ந்து கொள்ளாது அவித்தையயினுல் ஒதுக்கப் பெற்றவனுக இருக்கின்ருன். உணர்ந்து கொள்ளாது மரித்துள்ள அவனை சோகம், மோஹம் முதலிய குற்றங்கள் அகற்றப் பெருத காரணத்தால் காப்பாற்றமுடிவதில்லை என்பது தாத்பர்யம்.

உபாஸகனுக்கோ வெனில்—உறுதியாயுள்ள கர்மாவானது நாசமடைவதில்லை. விரும்பிய எல்லாப் பயன்களின் வடிவாயமைந்த மோக்ஷத்தையும் கொடுப்பது என்பது பொருள்.

மற்றும் ஆருவது அத்தியாயத்திலும்—

"கிமர்த்தம் வயம் அத்யேஷ்யாமஹே ; கிமர்த்தம் வயம் யக்ஷ்யாமஹே ; கிம் ப்ரஜயா கரிஷ்யாமோ யேஷாம் நோऽயமாத்மா அயம் லோக :" இதி ;

—நாங்கள் எதற்காக அத்யயநம் செய்கிருேம் ; எதற்காக யாகம் செய்கிருேம், மக்களால் என்ன செய்யப்போகிருேம் எவர்களுக்கு இது ஆத்மா, இது உலகம்" என்றவாறு.

மற்றும் ;

"யே ப்ரஜாமீசிரே தே ச்மசாநாநி பேஜிரே ;
யே பரஜா நேசிரே தே அம்ருதத்வம் ஹி பேஜிரே" இதி ;

—"எவர்கள் ப்ரஜைகளை விரும்புகின்றரோ, அவர்கள் ச்மசாநங்களை அடைகின்றனர்; எவர்கள் ப்ரஜைகளை விரும்புகின்றதில்லையோ அவர்கள் அமுதத்தன்மையை யன்றோ அடைகின்றனர்" என்றவாறு.

இவ்வாறுள்ளபொழுது—

"ஏதமேவ ப்ரவ்ரஜிதோ லோகமிச்சந்த : ப்ரவ்ரஜந்தி" இதி ;

—"இந்த ஆத்ம உலகை விரும்புகின்ற துறவிகள் வெளியேறுகின்றனர்" என்றவாறு:

இவ்விடத்திலுள்ள வாக்யத்தில் ஆத்ம உலகம் விவக்ஷிதமாயிருக்கின்றது என்பது அறியப் பெறுகின்றது. "ஸ வா ஏஷ மஹாநஜ ஆத்மா" அவனே மஹான், அஜன் (பிறப்பற்றவன்,) ஆத்மன்" எனத் தொடங்கிய விடத்தில் ஆத்மனுக்கு 'ஏதத்-இது' என்ற சப்தத்தினல் பராமர்சம் செய்யப் பெற்ற காரணத்தாலும், ஆத்மலோகம் விவக்ஷிதமாகும் எனவும் கொள்ளப் பெற்றது. லோகம் என்பது அநுபவிப்பதால் எனச் சொல்லப்பெறும். ஆகவே ஆத்மனுடைய அநுபவத்தை விரும்புகின்றவன், ப்ரவ்ரஜந்தி - வெளியேறுகிறான் என்ற சுருதியினுடைய தாத்பர்யப் பொருளும் கிடைப்பதுமாகும்.

ஸ்ம்ருதியும்:—

"ப்ரஹ்மவிஜ்ஞாநலாபாய பரஹம்ஸஸமாஹ்வய : .
சாந்திதாந்த்யாதிபி: ஸர்வை: ஸாதநை: ஸஹிதோ பவேத்" இதி ;

—"பரமஹம்ஸன் எனச்சொல்லப் பெறுகின்றவன் பரஹ்மத்தை விசேஷமாக உணர்ந்து கொள்ளுவதற்கு, சாந்தி, தாந்தி முதலிய எல்லா ஸாதநங்களோடும் கூடியவனாக இருக்கவேண்டும்" என்றவாறு சொல்லுகின்றது.

மற்றும், இப் பிறவியிலோ, மறுபிறவியிலோ நன்கு அநுஷ்டாநம் செய்யப் பெற்ற வேதாநுவசநம் முதலியவைகளினால் தோன்றிய விவிதிஷையினால், ஸம்பாதிக்கப்பெற்ற காரணத்தால் விவிதிஷாஸம்ந்யாஸம் என்று சொல்லப்பெற்றது.

இந்த வேதநத்திற்கு (உணர்வு) காரணமாயுள்ள ஸம்ந்யாஸம் இருவகையாகும். பிறவியைத் தோற்றுவிக்கின்ற காம்யமான கர்மாக்களுடைய த்யாகத்தின் அளவிலும், ப்ரைஷோச்சாரணத்தை முன்னிட்ட தண்டதாரணம் முதலிய ஆச்ரமவடிவாயுள்ள அளவிலும் என்பது.

''பும்ஜந்ம லபதே மாதா பத்நீ ச ப்ரைஷமாத்ரத:.

ப்ரஹ்மநிஷ்ட: ஸுசீலஸ்ச ஞாநம் சைதத்ப்ரபாவத:.'' இதி ;

—''கேவலமாயுள்ள ப்ரைஷமந்த்ரோச்சாரணத்தினுல் தாயும், மனைவியும் புருஷஜந்மத்தையடைகின்றனர். இந்த மந்த்ரத்தின் மஹிமையினுல் ப்ரஹ்மநிஷடனுயும், நல்ல சீலம் நிறைந்தவனுகவும், ஞாநம் நிரம்பியவனுகவும் அந்த யோகி விளங்குகிருன்'' என்றவாறு.

மற்றும், த்யாகத்தையும் தைத்திரீயம் முதலியவைகளின் வாயிலாகக் கேட்கப்பெறுகின்றது—

''ந கர்மணு ந ப்ரஜயா தநேந த்யாகேநைகே அம்ருதத்வமாநசு:' இதி;

—''கர்மத்தினுலோ, மக்களாலோ, தநத்தினுலோ அந்த மோக்ஷம் கிடைப்பதரிது. பின்னையோவெனில்? தியாகத்தின் ஒன்றினுலேயே அது அடையத்தக்கது'' என்றவாறு.

— ''இந்தத் த்யாகத்திலும் பெண்களும் அதிகாரிகளாகின்றனர். ['பிக்ஷுகீ' என்ற சொல்லால் பெண்களுக்கும் விவாஹத்திற்கு முன்போ, வைதவ்யத்திற்குப் பிறகோ ஸம்ந்யாஸத்தில் அதிகாரமுண்டு என்பதும் காண்பிக்கப் பெற்றுள்ளது. ஆகையினுல் பிக்ஷை எடுப்பது, மோக்ஷசாஸ்தரத்தைக் கேட்பது, தனிமையில் அமர்ந்து கொண்டு ஆத்மசிந்தனை செய்தல் என்றவைகளையும் அவர்களால் செய்யப் பெறவேண்டுவதுமாகும். த்ரிதண்டம் முதலியவைகளையும் தரித்துக்கொள்ள வேண்டும்''] என மோக்ஷ தர்மத்தில் சதுர்தரீ டீகையில்(உரை)ஸுலபைக்கும், ஜநகருக்கும் நடைபெற்ற ஸ்ம்வாதத்தில் காணப் பெறுகின்றது.

மற்றும், சாரீரகபாஷ்யத்தில் வாசக்நவீ முதலியவர்கள் கேட்கப் பெறுகின்றனர். தேவதாதிகரணநியாயத்தினுல் விதுரனுக்கும் அதிகாரம் சொல்லப் பெற்றுள்ளதும், மூன்ருவது அத்யாயம்

நான்காவது பாதத்தில் காணப்பெறுகின்றது. அக் காரணத்தினுலேயே மைத்ரேயி வாக்யமும் சொல்லப் பெறுகின்றது.

"யேநாஹம் நாம்ருதா ஸ்யாம் கிமஹம் தேந குர்யாம்

யதேவ பகவன் வேத ததேவ மே ப்ரூஹி." இதி;

—"அவ்வாருயின் எனக்கு எதனுல் அம்ருதத்வம் கிடைக்க மாட்டாதோ, அதைக் கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன் ஓ பகவந்! நீர் எதை உணர்ந்துள்ளீரோ, அதையே எனக்குச் சொல்லுவீராக" என்றவாறு.

மற்றும், ப்ரஹ்மசாரி, க்ருஹஸ்தன், வாநபரஸ்தன், என்ற இவர்களுக்கு ஏதாவது ஒரு காரணத்தினுல் பிரஸித்தமாயுள்ள பாஹ்ய (வெளி) ஸம்ந்யாஸம் செய்து கொள்ளுவதற்கு இடையூறு தோன்றினுல், அப்பொழுது அவர்கள் தத்தம் வர்ணுச்ரம தர்மத்தை அநுஷ்டித்துக் கொண்டு இருக்கின்றவர்களிடத்திலும் வேதநார்த்தமான (உணர்வுக்குப் பிரயோஜனமான) மாநஸிகமாயுள்ள கர்மங்களின் தியாகமானது விரோதமாகாது.

ச்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸம், புராணம் இவைகளிலும், உலகத்திலும் அத்தகைய தத்வவித்துக்களான (தத்வத்தையுணர்ந்தவர்கள்) பலர் இருப்பதையும் காணமுடிகின்றதால் என்க. யாதொரு தாண்டதாரணம் முதலிய ரூபமான வேதநத்திற்குக் காரணமாயுள்ள பரமஹம்ஸாச்ரமமுண்டோ, அது முன்னுேர்களான ஆசார்யர்களினுல் பலவாருக விஸ்தாரமாகச் சொல்லப் பெற்றுள்ளது என்ற காரணத்தால் எங்களால் இவ்வளவே சொல்லப் பெற்றது.

இவ்வாறு விவிதிஷாஸம்ந்யாஸம்

சொல்லப் பெற்றது. (க)

—o—

## வித்வத்ஸம்ந்யாஸநிரூபணம் (2)

பிறகு, வித்வத்ஸம்ந்யாஸத்தை நிரூபணம் செய்கிருேம். நன்ருக அநுஷ்டாநம் செய்யப் பெற்ற சிரவணம், மநநம், நிதித்யாஸநம் என்ற இவைகளினுல் ப்ரஹ்மத்தையுணர்ந்துள்ள

வித்வான்களினால் ஸம்பாதிக்கப் பெறுகின்ற ஜீவன்முக்தியின் பொருட்டு செய்து கொள்ளப் பெறுகின்ற பரமஹம்ஸஸம்ந்யாஸம் வித்வத்ஸம்ந்யாஸம் எனச் சொல்லப் பெறும்.

இந்த ஸம்ந்யாஸத்தையும் யாஜ்ஞவல்க்யர் ஸம்பாதித்துக் கொண்டார். எவ்வாறென்றால் — வித்வத்சிரோமணியாகிய பகவான் யாஜ்ஞவல்க்யர் வெற்றிகொள்ளுகின்ற வரலாற்றில் பல வாறுயுள்ள தத்வநிரூபணத்தோடு ஆச்வலாயனர் முதலிய அந்தணர் களை வெற்றிகொண்டு, களையப்பெற்ற ஆசை முதலிய விருத்தாந்தங்களில் சுருக்கமாகவும், விஸ்தாரமாகவும் பலவழிகளில் ஜநகனை உணரச்செய்து, மைத்ரேயியையும் உணரச்செய்ய விழைவு கொண்டு, அவளுடைய தீவ்ரமாயுள்ள தத்வத்தை எதிர்நோக்கி யுள்ள நிலையைக்கண்டு தான் செய்துகொள்ள வேண்டிய ஸம்ந்யாஸத்தையும் உறுதி செய்தார்.

பிறகு, அந்த மைத்ரேயியை உணரச்செய்து ஸம்ந்யாஸத்தையும் செய்தார். இந்த இரண்டு வரலாறும் மைத்ரேயிப்ராஹ்மணத்தின் தொடக்கத்திலும், முடிவிலும் சொல்லப் பெற்றுள்ளது. அது எவ்வாறெனில்—

“அத ஹ யாஜ்ஞவல்க்யோ அந்யத் வ்ருத்தமுபாகரிஷ்யந்
மைத்ரேயீதி ஹோவாச யாஜ்ஞவல்க்ய : ப்ரவரஜிஷ்யந் வா
அரே அஹமஸ்மாத் ஸ்தாநாத் அஸ்மி” இதி;
“ஏதாவதரே கலு அம்ருதத்வமிதி ஹோக்த்வா
யாஜ்ஞவல்க்யோ விஜஹார” இதி ச;

—“பிறகு, ஓ மைத்ரேயி! நான் இந்த க்ருஹஸ்தாச்ரமத்தை விட்டு உயர்ந்ததாயுள்ள ஆச்ரமத்திற்குச் செல்ல விரும்புகிறேன்.” என்று சொல்லி, முடிவில் “ஓ மைத்ரேயி! அம்ருதத் தன்மையின் நிலையும் இவ்வளவேதான் எனச் சொல்லி யாஜ்ஞவல்க்யர் ஸம்நியஸித்தார்” என்றவாறு.

மற்றும், கஹோலப்ராஹ்மணத்திலும் வித்வத்ஸம்ந்யாஸமானது சொல்லப் பெற்றுள்ளது—

“ஏதம் வை தமாத்மாநம் விதித்வா ப்ராஹ்மணா :
புத்ரைஷணாயாஶ்ச வித்தைஷணாயாஶ்ச லோகைஷணா யாஶ்ச
வ்யுத்தாய அத பிக்ஷாசர்யம் சரந்தி” இதி ;

—"இத்தகைய சிறப்பான ஆத்மாவையுணர்ந்த அந்தணர்கள் புத்ரேஷணை, வித்தேஷணை, லோகேஷணை என்ற இம் மூன்று ஈஷணைகளிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டு, ஸம்ந்யாஸாச்ரமத்தையடைந்து, சரீரதாரணைக்குப் போதுமான அளவு பிக்ஷையை எடுத்து வாழ்கின்றனர்" என்றவாறு.

இப்பொழுது சொல்லிய வாக்யமானது விவிதிஷாஸம்ந்யாஸத்தைச் சொல்லுவதாக ஐயம் கொள்வது கூடாது. முன் குறிக்கப்பட்ட 'விதித்வா' என்ற சொல்லிலுள்ள 'த்வா' என்ற ப்ரத்யயத்திற்கு பரப்ரஹ்மத்தையுணர்ந்து என்ற ப்ரஹ்ம வித்தையைக் குறிப்பதாலும், ப்ராஹ்மணன் என்ற சொல்லுக்குப் பாதகமுண்டாவதாலும் என்க.

மற்றும், இவ்விடத்தில் 'ப்ராஹ்மணன்' என்ற சொல் ஜாதியைக் குறிக்க மாட்டாது. எஞ்சிய வாக்கியத்திலுள்ள 'பாண்டித்யம்' 'பால்யம்' 'மௌநம்' போன்ற சொற்களினால் சிரவணம், மநநம், நிதித்யாஸநம் என்றவைகளினால் ஸாதிக்கப் பெறுகின்ற ப்ரஹ்மஸாக்ஷாத்காரத்தைக் குறித்து, "அத ப்ராஹ்மண:" பிறகு ப்ராஹ்மணன்—எனச் சொல்லியுள்ளதாலும் என்க

சங்கை— அவ்விடத்தில் விவிதிஷாஸம்ந்யாஸத்தோடு கூடியவன் பாண்டித்யம் முதலியவைகளில் ப்ரவிருத்தித்தாலும் 'ப்ராஹ்மண:', என்ற சொல்லால் பராமர்சம் செய்யப் பெற்றது.

"தஸ்மாத் ப்ராஹ்மண : பாண்டித்யம் நிர்வித்ய பால்யேந

திஷ்டாஸேத்" இதி சேத். மைவம் ;

—" ஆகையினால் ப்ராஹ்மணன் பாண்டித்யத்தை விட்டு, பால்யத்தோடு இருக்க விரும்புவானேயாகில்" எனச் சொல்லியுள்ளதே என்றால், வேண்டாம் (அவ்வாறன்று). வரப்போகிற விருத்தியை ஆச்ரயித்து (தழுவி) அவ்விடத்தில் ப்ரஹ்மசப்தமானது ப்ரயோகம் செய்யப் பெற்றுள்ளதால் என்க. இல்லாவிடில் எவ்வாறு, "அத ப்ராஹ்மண :" — பிறகு ப்ராஹ்மணன்" என்று ஸாதநாநுஷ்டாநத்தினுடைய உத்தரகாலத்தைக் குறிக்கின்ற 'அத' என்ற சொல் ப்ரயோகம் செய்யப் பெறும்?

சாரீரப்ராஹ்மணத்திலும் வித்வத்ஸம்ந்யாஸம், விவிதிஷாஸம்ந்யாஸம் இவ்விரண்டும் தெளிவாக நிர்தேசம் செய்யப் பெற்றுள்ளன—

''ஏதமேவ விதித்வா முனிர் பவதி, ஏதமேவ ப்ரவ்ரஜினோ லோகமிச்சந்த : ப்ரவ்ரஜந்தி'' இதி ;

—''இதையே யுணர்ந்து கொண்டு முநியாக இருக்கின்றான், இதையே யுணர்ந்து கொண்டு ஸம்ந்யாஸ உலகை விரும்பி தவசிகளாகின்றனர்'' என்றவாறு. முநித்வம் - முநியின் தன்மை-என்பது மனனத்தின் சிலத்தன்மையாகும். அதுவும் இப்பொழுது இநி கர்த்தவ்யங்களுக்கு (செயல்கள்) இடையில் தோன்றுவது என்ற காரணத்தால் ஸம்ந்யாஸத்தையே சொல்லுவதுமாகும். இவ் விஷயம் வாக்யசேஷத்தில் தெளிவாக்கப் பெற்றுள்ளது-

''ஏதத்தஸ்ம வை தத்பூர்வே வித்வாம்ஸ : ப்ரஜாம் ந காமயந்தே கிம் ப்ரஜயா கரிஷ்யாம: யேஷாம் நோSயமாத்மா அயம் லோக இதி தே ஹ ஸ்ம புத்ரைஷணாயாஶ்ச வித்தைஷணாயாஶ்ச லோகைஷணாயாஶ்ச வ்யுத்தாய, அத பிக்ஷாசர்யம் சரந்தி'' இதி. ;

—''பண்டு ப்ரஹ்மலோகத்தை மாத்திரம் குறிக்கோளாகக் கொண்ட வித்வான்கள் ப்ரஜைகளை விரும்பமாட்டார்கள். ப்ரஜையினால் என்ன செய்யப் போகிறோம்? இந்த ஆத்மா இந்த உலகம் என்று அவர்கள் புத்திரர்களைக் குறித்து இச்சையிலிருந்தும் பொருளைக் குறித்த இச்சையிலிருந்தும், உலகைக் குறித்த இச்சையிலிருந்தும் விடுதலைபெற்று (எழுந்திருந்து) பிறகு பிக்ஷை எடுத்தலைச் செய்கின்றனர் என்றவாறு. அயம் லோக இந்த உலகம் என்றது அபரோக்ஷமாயுள்ள அநுபவம் என்பது பொருள்.

**சங்கை—**

இவ்விடத்தில் முநியின் தன்மையைப் பல தன்மையோடு காட்டி விவிதிஷாஸம்ந்யாஸத்தை விதித்து வாக்யசேஷத்தில் அதையே விளக்கியுள்ளதே? ஆகையால் வேறு ஸம்ந்யாஸம் கல்பனை செய்ய வேண்டாமே என்றால், அவ்வாறன்று—வேதநத்திற்காகவே விவிதிஷாஸம்ந்யாஸத்தினுடைய பலத்தின் தன்மை இருப்பதால் என்க.

மற்றும், வேதநம், முநித்தன்மை இவைகளுக்கு ஒன்றிய தன்மை உண்டென்று ஐயம் கொள்ள வேண்டாம். "விதித்வா முநிர்பவதி" இதி, "உணர்ந்துகொண்டு முநியாக இருக்கிறான்" என்ற முன்னும் பின்னும் உள்ள காலங்களோடு ஸாத்யம், ஸாதநம் என்ற தன்மையும் காணப்பெறுவதால் என்க.

சங்கை—வேதநத்திற்கே பரிபாகத்தினுடைய வியக்கத்தக்க வடிவாயுள்ள அவஸ்தாந்தரமே (வேறுநிலை) முநியினுடைய தன்மையாகும். ஆகையினால் வேதநத்தின் வாயிலாக முந்திய ஸம்ந்யாஸத்திற்கே இந்த பலனும் என்றால்? ஆம்; ஆகையினாலேயே ஸாதநவடிவாயுள்ள ஸம்ந்யாஸத்தைக் காட்டிலும் வேறு பலத்தினுடைய வடிவாயுள்ளது இந்த ஸம்ந்யாஸம் எனச் சொல்லுவோம்.

எவ்வாறு, விவிதிஷாஸம்ந்யாஸியினால் தத்துவஞானத்தின் பொருட்டு சிரவணம் முதலியவைகள் ஸம்பாதிக்க வேண்டுமோ, அவ்விதமே வித்வத்ஸம்ந்யாஸியினாலும் ஜீவந்முக்தியின் பொருட்டு. மநோநாசம், வாஸநாக்ஷயம் இவ்விரண்டும் ஸம்பாதிக்கத்தக்கவையாகும். இதையும் மேலே விஸ்தாரமாகச் சொல்லப்போகிறோம்.

இருந்தாலும், இந்த ஸம்ந்யாஸங்களுக்கு அவாந்தரமாயுள்ள (இடை) பேதத்தில் ப்ரஹ்மவித் தன்மையின் வடிவோடு ஒருங்கிணைத்து, "சதுர்விதா பிக்ஷவ:"— "பிக்ஷுக்கள் நால்வகையாவர்' என்ற ஸ்ம்ருதிகளில் நான்கு எண்ணிக்கைகள் சொல்லப் பெற்றுள்ளன. முன் பின்னுள்ள இரண்டு ஸம்ந்யாஸங்களுக்கும் ப்ரஹ்மவித்தன்மை ஜாபாலச்ருதியினால் உணரப் பெறுகின்றது.

அவ்விடத்திலோ வெனில் — ஜநகனால் ஸம்ந்யாஸமானது கேட்கப்பெறும் பொழுது, யாஜ்ஞவல்க்யர் அதிகாரத்தினுடைய விசேஷமாயுள்ள கட்டளையினால் உத்தரகாலத்தில் (அடுத்துள்ள) அநுஷ்டாநம் செய்யத்தக்கதோடு கூடிய விவிதிஷாஸம்ந்யாஸத்தைச் சொல்லி, பிறகு அத்ரியினால் யஜ்ஞோபவீதமில்லாத நிலையிலுள்ள ப்ராஹ்மண்யமானது ஆக்ஷேபம் செய்யப் பெற்ற பொழுது, பிறகு "ஆத்மஞாநமே யஜ்ஞோபவீதம்" என ஸமா

தாநம் செய்தார். ஆகையால் வெளிப்படையாயுள்ள யஜ்ஞோபவீதமானது இல்லாமற் போனாலும் பரமஹம்ஸத்தன்மை (ப்ரஹ்மவித்தன்மை) உறுதி செய்யப்பெற்றது.

அவ்வாறே, மற்றொரு கண்டிகையில், "பரமஹம்ஸன் என்றது" எனத் தொடங்கி, ஸம்வர்தகர் முதலியவர்களான ப்ரஹ்மத்தையுணர்ந்த பல ஜீவன்முக்தர்களை உதாஹரணமாகக் கொண்டு, "அவ்யக்தலிங்கா:' அவ்யக்தாசாரா: அநுந்மத்தா: உந்மத்தவதாசாரா:" இதி—உறுப்புரியாத அடையாளங்கள், உறுப் புரியாத ஆசாரங்கள், உந்மாதம் (மதம்) இல்லாவிடினும் உந்மத்த மடைந்தவர்கள் போன்ற ஆசரணையுள்ளவர்கள் (நடத்தை) என்று வித்வத்ஸம்ந்யாஸிகளைக் காண்பித்துள்ளார் என்றவாறு.

அவ்விதமே,

"த்ரிதண்டம், கமண்டலும், சிக்யம், பாத்ரம், ஜலபவித்ரம்
சிகாம் யஜ்ஞோபவீதம் ச இத்யேதத் ஸர்வம் பூ : ஸ்வாஹா
இதி அப்ஸு பரித்யஜ்ய ஆத்மாநம் அந்விச்சேத் "இதி ;

—த்ரிதண்டம், கமண்டலு, பிக்ஷாபாத்ரம் ஜலபவித்ரம், சிகை, யஜ்ஞாபவீதம் என்ற இவை எல்லாவற்றையும், பூ : ஸ்வாஹா என்ற மந்தரத்தைச் சொல்லி ஜலத்தில் தியாகம் செய்ய வேண்டும். பிறகு தனது ஆத்மனைத் தேடவேண்டும்" என்றவாறு த்ரிதண்டிகளுக்கு ஏகதண்டலக்ஷணமான விவிதிஷாஸம்ந்யாஸத்தை விதித்து (கட்டளை) அதனுடைய பலத்தின் வடிவாயுள்ள வித்வத்ஸம்ந்யாஸத்தையெ இவ்வாறு உதாஹரணமாகச் சொல்லப்பெற்றது.

மற்றும் ;

"யதா ஜாதரூபதர; நிர்த்வந்த்வ: நிஷ்பரிகரஹ: தத்ர ப்ரஹ்ம
மார்கே ஸம்யக் ஸம்பந்ந: சுத்தமாநஸ: ப்ராணஸம்தாரணார்த்தம்
யதோக்தகாலே விமுக்த: பைக்ஷம் ஆசரந் உதரபாத்ரேண
லாபாலாபெள ஸமெள க்ருத்வா, சூந்யாகாரே தேவதாக்ருஹ
த்ருணகூட வல்மீக வ்ருக்ஷமூல குலாலசாலா—அக்நிஹோத்ர
நதீபுலிநகிரிகுஹாகந்தரகோடநிர்ஜரஸ்தண்டிலேஷு
அநிகேதவாஸீ அப்ரயத்ந : நிர்மம: சுக்லத்யாநபராயண :
அத்யாத்மநிஷ்ட: சுபாசுபகர்மநிர்மூலநபர: ஸம்ந்யாஸேந
தேஹத்யாகம் கரோதி ஸ ஏவ ஹம்ஸோ நாம" இதி ;

எவ்வாறு சிசுவானது சீதம், உஷ்ணம் இவைகளையும், ஒரு வஸ்துவையும் எடுக்காமலும் இருக்குமோ, அவ்வாறு அந்த ப்ரஹ்மமார்க்கத்தில் ஒன்றியவனாக சுத்தமனதோடு ப்ராணன் நன்கு தரிப்பதற்காக (நிலைத்திருப்பதற்காக) மாத்திரம் குறிப்பிட்ட காலத்தில் பிக்ஷையைச் செய்து கொண்டு உதரபாத்திரத்தோடு லாபம், நஷ்டம் இவைகளில் ஸமமாக இருந்து கொண்டு, ஜனசந்தடியற்ற இடத்திலோ, தேவாலயத்திலோ, புற்பூண்டுகள் நிறைந்த இடத்திலோ, புற்றுள்ள விடத்திலோ, மரத்தினடியிலோ, குலாலசாலையிலோ, அக்நிஹோத்ரசாலையிலோ, நதியைச் சார்ந்த மணற்பிரதேசத்திலோ, மரப்பொந்துகளிலோ, அருவியுள்ள பிரதேசத்திலோ, மலையின் தாழ்வரையிலோ குஹையிலோ, நிலைத்த இருப்பிடமில்லாமல் வஸித்துக் கொண்டு, ஒரு முயற்சியுமில்லாமலும், மமதையகற்றியவனாகவும், ப்ரஹ்மத்யாநத்தையே முக்கியமாகக் கொண்டும், அத்யாத்ம நிலையில் இருந்து கொண்டு, சுபம், அசுபம் (நன்மை, தீமை) என்ற இவைகளிலிருந்து விடுபட்டவனாகவும், இருந்து கொண்டு, ஸம்ந்யாஸத்தோடு தேஹத்யாகத்தைச் செய்ய வேண்டும். இத்தகைய அவன் பரமஹம்ஸன் எனப் பெறுவன்'' என்றவாறு. ஆகையினால் இவ்விருவருக்கும் பரமஹம்ஸத் தன்மையும் ஸித்தமாகியது.

மற்றும், பரமஹம்ஸத்தன்மையின் நிலையானது, ஸமாநமாயிருப்பினும் அது விரோதமாயுள்ள தர்மத்தினால் ஆக்ரமிக்கப் பெற்றுள்ளதால் அவாந்தரமாயுள்ள பேதமும் அங்கீகாரம் செய்யத் தக்கதேயாம் ; இந்த விருத்ததர்மமும் (எதிரிடையானது) ஆருணிகோபநிஷத், பரமஹம்ஸோபநிஷத், இவைகளுடைய பரிசீலனையினாலும் உணரப் பெறுகின்றது.—

''கேந பகவந் கர்மாண்யசேஷதோ விஸ்ருஜாமி'' இதி ;—

'ஓ பகவந் ! எத்தகைய கர்மாவினால் எல்லாவற்றை விடுவேன்'' என்றவாறு சிகை, யஜ்ஞோபவீதம், ஸ்வாத்யாயம், காயத்ரீ ஜபம், முதலிய எல்லாக் கர்மங்களுடைய த்யாக வடிவாயுள்ள விவிதிஷா ஸம்ந்யாஸத்தில் சிஷ்யனாகிய ஆருணியினால் கேட்கப் பெற்ற பொழுது, குருவாகிய ப்ரஜாபதி அவனைப் பார்த்துச் சொன்னார்— ''சிகாம் யஜ்ஞோபவீதம்'' ''சிகையும் யஜ்ஞோபவீதமும்'' என்பது முதலியவைகளினால் எல்லாத் தியாகத்தையும்

சொல்லி, 'தண்டம்' ஆச்சாதநம் கௌபீநம் ச பரிக்ரஹேத்''— ''தண்டம், வஸ்த்ரம், கௌபீநமும் எடுத்துக் கொள்ளவேண்டும்'' என்ற தண்டத்திநுடைய ஸ்வீகாரத்தை (எடுத்துக் கொள்வது) விதித்து ;

''த்ரிஸம்த்யாதௌ ஸ்நாநமா சரேத் ஸர்வேஷு

வேதெஷு ஆரண்யகம் ஆவர்த்யேத்'' இதி;

—''மூன்று ஸம்த்யாகாலங்களிலும் ஸ்நாநம் செய்ய வேண்டும் ஸம்தியை ஸமாதியில் ஆத்மனிடத்தில் ஆசரணம் செய்ய வேண்டும். எல்லா வேதங்களிலுமுள்ள ஆரணயகத்தை ஆவர்த நம் செய்ய வேண்டும். உபநிஷத்தையும் ஆவர்த்தநம் செய்ய வேண்டும்.'' என இவ்வாறு உணர்ந்துகொள்ளக் காரணமா யுள்ள ஆச்ரமதர்மங்களை அநுஷ்டாநம் செய்ய வேண்டிய நிலை யினையும் விதிக்கப் (கட்டளை) பெற்றுள்ளது.

பிறகு, யோகிகளாகிய பரமஹம்ஸர்களுக்குரிய மார்கம் யாது? என வித்வத்ஸமந்யாஸ விஷயத்தைக் குறித்து நாரதரால் கேட்கப் பெற்ற பொழுது, குருவாகிய பகவான் ப்ரஜாபதியானவர்— ''ஸ்வபுத்ரமித்ர—தனது புத்ரன், நண்பன்'' என்பது முதலியவை யினுல் முன்போல் எல்லாத் தியாகத்தையும் சொல்லி;

''கௌபீநம் தண்டமாச்ச்சாதநம் ச ஸ்வசரீரோபபோகார்த்தாய ச

லோகஸ்யோபகாரார்த்தாய ச பரிக்ரஹேத்'' இதி ;

—''கௌபீநம், தண்டம், வஸ்நரம் இவைகளைத் தனது சரீரத்தின் உபயோகத்தின் பொருட்டும், உலகத்தின் உபகாரத்தின் பொருட்டும் எடுத்துக் கொள்ளவேண்டும்'' என்றவாறு தண்டம் முதலியவைகளுடைய ஸ்வீகாரத்திற்கு லௌகிகத் தன்மையைச் சொல்லி;'தச்ச ந முக்யோSஸ்தி - அதுவும் முக்யமன்று' என சாஸ்த்ரத் தன்மையை நிஷேதம் செய்து; எது முக்யம் என்று கேட்டால் இது முக்யமாகும்;

''கோSயம் முக்ய இதி சேத், அயம் முக்ய : ந தண்டம் ந சிகாம்

ந யஜ்ஞோபவீத்ம் ந சாச்சாதநம் சரதி : பரமஹம்ஸ இதி ;

"—எது முக்யமென்று கேட்டால், இது முக்யமாகும். என்று தண்டம், சிகை, யஜ்ஞோபவீதம் வஸ்த்ரம் இவைகள் இல்லாது பரமஹம்ஸன் ஸம்சாரம் செய்வது கூடாது" என தண்டம் முதலியவைகளுடைய இன்மையை சாஸ்த்ரீயத் தன்மையினால் சொல்லி; ந சீதம், ந சோஷ்ணம்" சீதமும் உஷ்ணமும் இல்லை" என்பன போன்ற வாக்யங்களினால், "ஆசாம்பர: நிர்நமஸ்கார:" — 'திசைகளையே வஸ்த்ரமாகவும் நமஸ்காரம் இல்லாமலும்' என்ற வாக்யத்தினாலும்; உலகவ்யவஹாரத்தைக் கடந்துள்ள நிலையினையும் சொல்லி, முடிவில்;

"யத் பூர்ணாநந்தைகபோத: தத் ப்ரஹ்மாஹம் அஸ்மீதி,
க்ருதக்ருதயோ பவதி"

—யாதொரு பூர்ணாநந்தத்தையே முக்கியமாகக்கொண்ட உணர்வுண்டோ, அந்த ப்ரஹ்மமாகவே நான் இருக்கிறேன்" என்றும், தொடங்கி, க்ருக்ருத்யனாக இருக்கிறான்' என்பது வரையிலுள்ள கிரந்தத்தினால் ப்ரஹ்மத்தினுடைய அநுபவமாத்திரமாயுள்ள முடிவையும் சொல்லுகிறார்.

ஆகையால் விரோதமாயுள்ள தர்மத்தோடு கூடியதாயினும், இவையிரண்டுக்கும் பெரியதோர் பேதமும் காணப்பெறுகின்றது. ஸ்ம்ருதிகளிலும், இந்த பேதமானது சொல்லப்பெற்றுள்ளது என்பதும் காணத்தக்கது.

மற்றும்,

"ஸம்ஸாரமேவ நி:ஸாரம் த்ருஷ்ட்வா ஸாரதித்ருக்ஷயா.
ப்ரவ்ரஜந்த்யக்ருதோத்வாஹா: பரம் வைராக்யமாச்ரிதா:"

"—ஸம்ஸாரமே ஸாரமற்றது எனக்கண்டு கொண்டு, ஸாரத்தைக் காண்பதற்கு விழைவு கொண்டு, விவாஹத்தையும் கொள்ளாமல், சிறந்த வைராக்யத்தையும் ஆச்ரயித்து ஸம்ந்யாஸத்தையும் செய்து கொள்ளுகின்றனர்" என்றவாறு.

"ப்ரவ்ருத்திலக்ஷணோ யோகோ ஞாநம் ஸம்ந்யாஸலக்ஷணம்.
தஸ்மாத் ஞாநம் புரஸ்க்ருத்ய ஸ்ம்ந்யஸேதிஹ புத்திமான்."

2

"—யோகமென்பது ப்ரவிருத்திலக்ஷணமாகும். ஞானமென்பது நிவிருத்திலக்ஷணமாகும். ஆகையினுல் ஞாநத்தை முன்னிட்டு இவ்விடத்தில் புத்திசாலியானவன் ஸம்ந்யாஸத்தைச் செய்து கொள்ளவேண்டும்'' என்பன போன்றவைகள் விவிதிஷாஸம்ந் யாஸமாகும்.

''யதாது விதிதம் தத் ஸ்யாத் பரம் பரஹ்ம ஸநாதநம்.
ததைகதண்டம் ஸம்ஹ்க்ருய ஸோபவீதம் ஸிகாம் த்யஜேத்.
ஞாத்வா ஸம்யக் பரம் ப்ரஹ்ம ஸர்வம் த்யக்த்வா பரிவ்ரஜேத்.''

'—எப்பொழுது சிறந்ததும், பழைமையானதுமான அந்த ப்ரஹ்மத்தையுணர்ந்து கொள்ளப் பெற்றுள்ளதோ, அப்பொழுது ஏகதண்டத்தை எடுத்துக்கொண்டு, உபவீதத்தோடு கூடிய சிகையை த்யாகம் செய்ய வேண்டும். சிறந்த ப்ரஹ்மத்தை நன்கு உணர்ந்து கொண்டு எல்லாவற்றையும் த்யாகம் செய்து வெளி யேறவேண்டும்'' என்பன போன்றவை வித்வத்ஸம்ந்யாஸமாகும்.

**சங்கை—**

உலகில் யாராகிலும் கலைஞாநத்தைப்போல, உத்ஸாஹத்தோடு ஒருக்கால் ப்ரஹ்மஞாநத்தை விரும்புவதையும் காண முடியும். அவ்வாறே சிறிது படித்த அளவிலே வித்வத் தன்மை யிருப்பதாக நினைத்து அங்குமிங்கும் ஞாநத்தினைப் பெற்று ஸாதநஸம்பத்தியில்லாத அஹங்காரியாயிருக்கின்றவன் மேமெலெழுந்தவாரியாகத் தன்னை, 'நான் ப்ரஹ்மஞாநி' என்று சொல்லிக் கொள்ளுகிற வ்யஹாரத்தையும் நாம் காணமுடியும். அவர்கள் இருவரிலும் இருவகையாயுள்ள ஸம்ந்யாஸத்தைச் சொல்லக் காணுததால் விதிஷை, வித்வத்தன்மை இவை எவ்வாறு சொல்ல முடியும்? எனச் சொன்னுல் அதற்குப் பதில் சொல்லுகிறேன்.

எவ்வாறு தீவ்ரமாயுள்ள பசியானது தோன்றியவனுக்கு போஜநத்தைத் தவிர, வேறு வியாபாரம் ஒன்றிலும் ருசியிருக் காதோ, அந்தப் போஜநமும் தாமதமானுலும் பொறுப்பதற்கும் முடியாதவனுக இருப்பானே, அவ்வாறு பிறவிக்குக் காரணமா யுள்ள கர்மங்களில் அளவு கடந்த ருசியானது வேதநஸாதநங் களினுலும், சிரவணம் முதலியவைகளினுலும் ஆசையானது பெருமளவில் தோன்றுகின்றது. அத்தகைய விவிதிஷையானது ஸம்ந்யாஸத்திற்குக் காரணமாகவும் அமைவதாகும்.

மற்றும், வித்வத்தன்மையினுடைய எல்லையானது உபதேச ஸாஹஸ்ரியில் சொல்லப் பெற்றுள்ளது.

''தேஹாத்மஞானவஜ்ஞானம் தேஹாத்மஞாதபாதகம்.
ஆத்மந்யேவ பவேத் யஸ்ய ஸ நேச்சந்நபி முச்யதே.''

'—தேஹாத்மஞானம் போல ஆத்மாவினிடத்தில் எவனுக்கு, தேஹாத்ம ஞானபாதகஞானம் தோன்றுமோ, அவன் வேட்கையில்லாதவனாயினும் வீட்டையடைவான்'' என்க. ச்ருதியிலும்—

''பித்யதே ஹ்ருதயக்ரந்தி: ச்சித்யந்தே ஸர்வஸம்சயா:.
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே.''

—அந்த பராபரவஸ்து பார்க்கப் பெற்ற பின், ஹ்ருதயத்திலுள்ள முடிச்சு பிளந்து போகின்றது. ஐயங்கள் அகன்று விடுகின்றன. கர்மாக்களும் நசித்துப் போகின்றன,'' என்றவாறு.

இவ்விடத்தில், 'பராவரே' என்றது பரமும், ஹிரண்யகர்பன் முதலிய பதமானது எதைக் காட்டிலும் அவரமோ (தாழ்வு) அது பராவரமென்பது. ஹ்ருதயம்–புத்தியில் ஸாக்ஷியினுடைய தாதாத்மயத்தின் அத்யாஸமானது அநாதியாயுள்ள அவித்தையினால் நிர்மாணம் செய்யப் பெற்றுள்ளதால் அது முடிச்சுப்போல உறுதியாய் ஒட்டிக்கொண்டுள்ள நிலையில் இருப்பதால் 'க்ரந்தி' எனச் சொல்லியதாகும்.

மற்றும், ஆத்மா ஸாக்ஷியா? கர்த்தாவா? ஸாக்ஷித்தன்மையிலும் அதற்கு ப்ரஹ்மத்தின் தன்மையுள்ளதா இல்லையா? ப்ரஹ்மத்தன்மையாலும் அது புத்தியினால் உணர்ந்து கொள்ள முடியுமா? முடியாதா? முடியுமேயாகில் அந்த உணர்வின் அளவிலே முக்தியானது இருக்கின்றதா? இல்லையா? என்பன போன்ற ஐயங்கள் தோன்றுகின்றன. மேலும் அநாரப்தங்களான (ஆரம்பிக்கப்பெறாத) கர்மாக்கள், ஆகாமியாயுள்ள (வரப்போகின்ற) பிறவிக்குரிய காரணங்கள். அத்தகைய இந்த மூன்றும் அவித்தையினால் தோற்றுவிக்கப் பெற்றதால் அவை ஆத்ம தர்சநததினால் விலகுகின்றன.

ஸ்ம்ருதியிலும் இந்த விஷயம் காணப்பெறுகின்றது—

''யஸ்ய நாஹம்க்ருதோ பாவோ புத்திர் யஸ்ய ந லிப்யதே.
ஹத்வாபி ஸ இமாந் லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே.''

'—எவனுக்குத் தான் கர்த்தா என்ற எண்ணமில்லையோ, எவனுடைய புத்தி விஷயங்களில் பற்றுகின்றதில்லையோ, அவன் இவ்வுலகிலுள்ள பிராணிகளைக் கொன்றவனுயினும் கொன்ற வனுகான்'' என்றவாறு.

எந்த ப்ரஹ்மத்தினுடைய ஸ்வபாவமானது (ஆத்மா) அஹம் காரத்தினுல் — தாதாத்ம்யமான அத்யாஸத்தினுல் (ஒன்றிய நிலையென்பது) மனமானது மறைக்கப் பெறவில்லையோ என்பது தாத்பரியம். புத்திலேப :— ஸம்சய:—அது இல்லாவிடில் மூவுலகுக்குரிய வதத்தினுலும் அவன் பாதிக்கப் பெறுவதில்லை. மற்ற கர்மாக்களால் கேழ்க்கவும் வேண்டுமோ? என்பது தாத்பர்யம்.

**சங்கை—**

இவ்வாறுள்ள பொழுது விவிதிஷாஸம்ந்யாஸத்தின் பயனுகிய தத்துவஞாநத்தினுல் ஆகாமியான (வரப்போகிற) பிறவியின் தடங்கலானது இருக்கும் பொழுது, வர்த்தமான (வரப்போகிற) மாயுள்ள எஞ்சிய பிறவிக்கும் போகமில்லாது விநாசம் செய்ய முடியாதாகையால், இந்த வித்வத்ஸம்ந்யாஸத்தில் முயற்சி செய்வதால் என்ன பயன் உண்டாகப் போகின்றது? என்று சொன்னுல், அவ்வாறு சொல்ல வேண்டாம். வித்வத்ஸம்ந்யா ஸத்திற்கு ஜீவந்முக்தி காரணமாயிருப்பதால் என்க.

ஆகையினுல் வேதநத்தின் பொருட்டு (உணர்வு) எவ்வாறு வித்வத்ஸம்ந்யாஸமோ, அவ்வாறே ஜீவந்முக்தியின் பொருட்டும் வித்வத்ஸம்ந்யாஸமானது ஸம்பாதிக்க வேண்டியதும் அவசிய மாகும்.

இவ்வாறு வித்வத்ஸம்ந்யாஸம் சொல்லப் பெற்றது. (2)



## ஜீவந்முக்தி ஸவரூபம் (3)

பிறகு ஜீவந்முக்தி என்பது யாது? அதற்குரிய ப்ரமாணம் யாது? அது எந்த நிலையில் ஸித்திக்கப் பெறுவது? அதனுல் என்ன பிரயோஜநம்? என்ற இந்த நான்கு கேள்விகளுக்கும் இந்தப் பிரகரணம் முடியுமளவில் முறையாகப் பதில் சொல்லப் பெறுகின்றது.

ஜீவித்திருக்கின்ற புருஷனுக்கு கர்த்ருத்வம் (கர்த்தாவாயுள்ள நிலை) போக்த்ருத்வம் (போக்தாவாயுள்ள நிலை) ஸுகம், துக்கம் முதலிய இலக்கணங்களோடு கூடிய சித்தத்தினுடைய தர்மமாயுள்ளவைகள் கிலேச வடிவாயிருப்பதால் (அது) பந்தமாக இருப்பதாகும். அதனுடைய நிவாரணமே ஜீவன்முக்தி என்பது.

சங்கை—

இந்த பந்தமானது ஸாக்ஷியினிடமிருந்து நிவிருத்தியாகின்றதா? அல்லது சித்தத்திலிருந்து நிவிருத்தியாகின்றதா? முதலாவது இல்லை. ஏனெனில்—தத்வஞானத்தினாலேயே அது தடுக்கப் பெற்றுள்ளதால் என்க. இரண்டாவதுமன்று. ஏனெனில்—அது ஸம்பவியாததால் (தோன்றாதலால்) என்க. எப்பொழுதாவது ஜலத்தினுடைய த்ரவத் தன்மை தடுக்க முடியுமோ? அவ்வாறே அக்நியினுடைய உஷ்ணத் தன்மையையும் தடுக்க முடியுமோ? அப்பொழுது சித்தத்திலிருந்து கர்த்ருத்வத் தன்மையின் நிவாரணமும் தோன்றுமென்றவாறு. ஸ்வபாவத் தன்மையென்பது (இயல்பு) எல்லாவிடத்திலும் ஸமானமேயாகும் என்றால் ;

வேண்டாம்; முழுவதுமாயுள்ள நிவாரணம் உண்டாகாவிடினும் ஸம்சயம் தோன்றுவதேயாகும். எவ்வாறு ஜலத்தையடைந்த த்ரவத்தன்மையானது மண்ணோடு சேர்ந்துள்ளபொழுது பீடிக்கப் பெறுகின்றதோ, அவ்வாறே அக்நியினுடைய உஷ்ணத் தன்மையும் மணி, மந்த்ரம் முதலியவைகளினாலும் பீடிக்கப் பெறுகின்றதோ. (கட்டுப்படுவது) அவ்வாறே எல்லா விருத்திகளும் யோகத்தினுடைய அப்யாஸத்தினால் கட்டுப் படுத்த முடியும்.

சங்கை—

தொடங்கப் பெற்ற கர்மாவானது (ப்ராரப்தம்) முழுவதும் அவித்தை அதனுடைய கார்யம் இவைகளின் நாசத்தில் ப்ரவிருத்தித்துள்ள தத்துவஞானத்திற்கு ப்ரதிபந்தம், தனது பலத்தின் தானத்தின் பொருட்டு தேஹம், இந்திரியம் முதலியவைகளை நிலை நிறுத்துகின்றது. ஸுகம், துக்கம் முதலிய போகமானது சித்தவிருத்தியல்லாது ஸம்பாதிப்பதற்கு முடியாதன்றோ! அப்பொழுது எவ்வாறு கட்டுப்படுத்துவது முடியும்? என்றால் அவ்வாறு சொல்ல வேண்டாம்.

அபிபவத்தினல் ஸாதிக்கப் பெறுகின்ற ஜீவன்முக்திக்கும் ஸுகத்தினுடைய அதிசய வடிவத்தோடு ப்ராரப்தபலமே அடங்கி யுள்ளதால் என்க. அப்பொழுது கர்மாவே ஜீவன்முக்தியை ஸம்பாதிக்கப் போதுமானதுமாகும். புருஷனுடைய முயற்சியும் வேண்டியதில்லை என்று சொல்ல பெறுமேயாகில்; க்ருஷித் (பயிர்) தொழில், வாணிஜ்யம் (வியாபாரம்) முதலியவைகளிலும் இதே கேள்வி தான் தோன்றக் கூடும்.

மற்றும், தானகவே அத்ருஷ்டவடிவாயுள்ள கர்மாவுக்கு த்ருஷ்ட (புலனுகின்ற) ஸாதநங்களின் நிறைவு இல்லாமலேயே பலத்தைத் தோற்றுவிக்கும் திறமையானது இல்லாமையால் அபேக்ஷையானது க்ருஷி முதலியவைகளில் புருஷனுடைய முயற்சி வேண்டியுள்ளது என்ருல், ஜீவன்முக்தியிலும் இந்த ஸமாதாநம் ஸமமாகவே இருப்பதுமாகும்.

மற்றும், புருஷனுடைய முயற்சியிருந்த பொழுதிலும், க்ருஷி முதலியவைகளுடைய பயனுடைய முடிவானது எந்த இடத்தில் காணப் பெறவில்லையோ, அந்த இடத்தில் வலிமையாயுள்ள வேருெரு கர்மத்தினுடைய ப்ரதிபந்தமானது கல்பனை செய்யப் பெறவேண்டும். அந்த வலிமையான கர்மமும் தனது அநுகூல மான வ்ருஷ்டியின் இன்மை போன்ற வடிவாயமைந்த த்ருஷ்ட மான (காணப்பெறுவது) ஸாமக்ரியையை (பொருள்) ஸம்பா தித்தே தடுக்கச் செய்வதாகும். (அதாவது மழை பெய்வதற்கு அநுகூலமாயுள்ள வருணஜபம் முதலியன)

அந்தப் பிரதிபந்தமும் விரோதியாயுள்ள வலிமையான உயர்ந்த ‘காரீரீ’ என்ற இஷ்டி முதலிய கர்மாவினல் அவை விலகும். அந்த கர்மாவும், தனது அநுகூலமாயுள்ள வ்ருஷ்டி லக்ஷணத்திற் குரிய காக்ஷிவடிவான ஸாமக்ரியையை ஸம்பாதித்தே ப்ரதிபந் தத்தை (இடையூறு) தடுக்க வேண்டும். அதிகம் சொல்லு வானேன்? ப்ராரப்த கர்மத்தினலேயே மிகவும் பக்திவாய்ந்த உன்னல் யோகாப்யாஸ வடிவாயுள்ள முயற்சியினுடைய வையர்த்யமானது (வீண்) மனத்தாலும் சிந்தனை செய்வதற்கும் முடியாது.

அல்லது, ப்ராரப்தமாயுள்ள கர்மாவானது எவ்வாறு தத்வ ஞாநத்தைக் காட்டிலும் வலிமை வாய்ந்ததோ, அதைக் காட்டிலும் கர்மாவுக்கு யோகாப்யாஸமானது வலிமையுள்ளதாக இருக்

கட்டும். ஆகவே யோகிகளாகிய உத்தாலகன், வீதஹவ்யன் முதலிய வர்களுக்குத் தன்னிச்சையாகவே தேஹத்யாகமானது கிடைப்ப தாகும்.

இருந்தாலும், அல்பாயுஸையுடைய நமக்கு அத்தகைய யோகமானது உண்டாகாது. ஆயினும், காமனை முதலிய வடிவாயுள்ள சித்த விருத்திகளைத் தடுத்த அளவிலே யோகத் தினால் முயற்சியினுடைய வலிமையானது அங்கீகாரம் செய்ய வில்லையே யாகில், அப்பொழுது சிகித்ஸை தொடங்கி மோக்ஷ சாஸ்த்ரம் வரையிலுமுள்ள எல்லாம் அநர்த்தமாக (வீண்) முடியும். ஒரு பொழுதும் கர்மபலத்தினுடைய விஸம்வாதத்தின் அளவிலே தௌர்பல்யத்தை (துர்பலத்தன்மை) சுமக்கவும் முடியாது. இல்லாவிடில் எப்பொழுதாவது நேரிடுகின்ற பரா ஜயத்தைப் (தோல்வி) பார்த்து எல்லா அரசர்களாலும் யானை, குதிரை முதலியவைகள் உபேக்ஷை செய்ய முடியுமோ? முடியாது என்பது.

ஆகையினாலேயே ஆநந்தபோதாசார்யரும்; சொல்லுகிறார்—

"ந ஹ்யஜீர்ணபயாத் ஆஹாரபரித்யாக: ; பிக்ஷுகபயாத்வா ஸ்தால்யாதிச்ரயணம்; யூகாபயாத்வா ப்ராவரணபரித்யாக:" இதி.

—அஜீர்ணம் உண்டாகும் என்று பயந்துகொண்டு ஆஹாரத்தைப் பரித்யாகம் செய்வதுண்டோ? பிக்ஷுக்களுடைய பயத்தினால் பானையில் சமையல் செய்யாதிருக்க முடியுமோ? யூகா என்ற பூச்சியை கண்டு (யூகா - பேன்) பயந்து ப்ராவரணத்தை (போர்வை) பரித்யாகம் செய்வதுண்டோ? என்றவாறு.

மற்றும், சாஸத்ரீயமான வலிமையின் தன்மையானது வஸிஷ் டருக்கும், ராமனுக்கும் நிகழ்ந்த ஸம்வாதத்தில் தெளிவாக அறியப் பெறுகின்றது; "ஸர்வமேவ ஹி ஸதா",—இவ்விடத்தில் யாவும் எப்பொழுதுமன்றோ! எனத் தொடங்கி; "ததநு ததப்யவமுச்ய ஸாது திஷ்ட"—"அதற்குப் பிறகு அதையும் விட்டு நன்கு நிலைத்திரு" என்பது வரையிலுள்ள க்ரந்தத்தினால் சொல்லியிருக்கிறார்.

வஸிஷ்டர்—

"ஸர்வமேவ ஹி ஸதா ஸம்ஸாரே ரகுநந்தந.
ஸ்ம்யக் ப்ரயத்தாத் ஸர்வேண பௌளருஷாத் ஸமவாப்யதே. (1)

—ஓ ரகுநந்தந! இந்த ஸம்ஸாரத்தில் யாவும் எப்பொழுதுமே நன்கு சேர்ந்துள்ள பௌருஷத்தினுல் எல்லோராலும் நன்கு அடையப் பெறுகின்றது." என்றவாறு.

'ஸர்வம்' என்றது. மக்கள், பொருள், ஸ்வர்கலோகம், ப்ரஹ்ம லோகம் முதலியவைகளுடைய பயனுகும் என்பதைச் சொல்லும் 'பௌருஷம்' என்றது புத்ரகாமேஷ்டி, க்ருஷி, வாணிஜ்யம், ஜ்யோதிஷ்டோமம், ப்ரஹ்மோபாஸனை என்ற இவைகளின் இலக்கணமாயமைந்த புருஷனுடைய முயற்சியைக் குறிப்ப தாகும். (1)

"உச்சாஸ்த்ரம் சாஸ்த்ரிதம் சேதி பௌருஷம் த்விவிதம் ஸ்ம்ருதம்.
தத்ரோச்சாஸத்ரமநர்த்தாய பரமார்த்தாய சாஸ்த்ரிதம்." (2)

—பௌளருஷமானது; உச்சாஸ்த்ரம், சாஸ்த்ரிதம் என இருவகை யாகும். அவைகளில்—உச்சாஸ்த்ரம் அநர்தத்தின் பொருட் டாகும். சாஸ்த்ரிதம் உண்மையின் பொருட்டாகும் என்றவாறு.

அதாவது — உச்சாஸத்ரமாவது — பிறருடைய பொருளைக் கவருதல், பிறருடைய மனைவியை விரும்பிச் செல்வது முதலியன. சாஸ்த்ரிதமாவது—நித்யம், நைமித்திகம் முதலியவைகளுடைய அநுஷ்டானங்களாகும். அநர்த்தம்—நரகமாகும். அர்த்தங்களான ஸ்வர்கம் முதலியவைகளில் சிறந்தது மோக்ஷம். அது பரமார்த்தம் எனப் பெறும். (2)

"ஆ பால்யாதலமப்யஸ்தை: சாஸ்த்ரஸத்ஸங்கமாதிபி:.
குணை: புருஷயத்நேந ஸோ sர்த்த: ஸம்பத்யதே ஹித:" (3)

"—சிறுவயதிலிருந்து பூரணமாக அப்யாஸம் செய்யப்பெற்ற சாஸ்த்ரம், ஸாதுஸங்கமம் முதலியவைகளான குணங்களோடு புருஷனுடைய முயற்சியினுல் தனக்குரியதான ஹிதமானது அடையப்பெறுகின்றது.' என்றவாறு.

இவ்விடத்தில் 'அலம்' என்ற சொல் பூர்ணம் நிறைவு, நல்ல வண்ணம் என்பன போன்ற பொருளைக் குறிப்பதாகும். குணங் களோடு இணைந்தது என்பதையும் வருவித்துக் கொள்ள வேண்டும். 'ஹிதம்' என்றது சிரேயஸின்(புகழ்)வடிவம் என்பது. (3)

ஸ்ரீராமன்—

"ப்ராக்தநம் வாஸநாஜாலம் நியோஜயதி மாம் யதா.
முநே ததைவ திஷ்டாமி க்ருபண: கிம் கரோம்யஹம்." (4)

"—பழைமையான வாஸநாஜாலமானது என்னை எவ்வாறு நியமநம் செய்கிறது. ஓ முநே! அவ்வாறே நான் நிற்கிறேன். க்ருபணனாகிய நான் என்ன செய்வேன்" என்றவாறு. (4)

இவ்விடத்தில் வாஸனையென்பது தர்மம், அதர்மம் என்ற இவைகளின் வடிவாய்மைந்த ஜீவனைச் சார்ந்துள்ள ஸம்ஸ்காரங்களாகும். (4)

வஸிஷ்டர்—

"அத ஏவ ஹி ஹே ராம ச்ரேயு: ப்ராப்நோதி சாஸ்வதம்.
ஸ்வப்ரயத்நோபநீதேந பௌருஷேணைவ நாந்யதா." (5)

—ஆகையினால் ஓராம! நீ நினைத்துள்ள சிரேயஸையும் அடையப்போகிறாய். உனது முயற்சியினால் அழைத்துச் செல்லப்பெற்ற பௌருஷத்தினாலே (அடைய முடியும்) வேறு ஒரு ஸாதநத்தினாலுமன்று என்றவாறு.

எக்காரணத்தால் நீ வாஸனைக்கு அடிமையாயிருந்தாயோ, ஆகையினாலே பாரதந்த்ர்யத்தின் (ஸ்வதந்தரமின்மை) நிவாரணத்தின் பொருட்டு, உன்னுடைய உத்ஸாஹத்தினால் ஸம்பாதிக்கப் பெற்ற மனம், வாக்கு, காயம் இவைகளிலிருந்து தோன்றிய புருஷ வ்யாபாரமான முயற்சியும் வேண்டப் பெற்றது. (5)

"த்விவிதோ வாஸநாவ்யூஹ : சுபஸ்சைவாசுபஸ்ச தே.
ப்ராக்தநோ வித்யுதே ராம த்வயோரேகதரோ ऽதவா." (6)

"—வாஸனையினுடைய தொகுதியானது இருவகையாகும். அவை சுபம், அசுபம் எனவுமாம். ஓராம! பழைமையானது இருக்கிறது. அல்லது இரண்டிலும் ஒன்றாவது இருக்கிறது" என்றவாறு.

தர்மம், அதர்மம் இவை யிரண்டும் உன்னை நியமநம் செய்கின்றதா? அல்லது இவைகளில் எதாவது ஒன்றா? என்பது விகல்பமாகச் சொல்லப் பெற்றுள்ளது. ஒருதலைப்பக்ஷத்திலும் சுபமா? அசுபமா? என்பதும் பொருளின் வகையான் ஸித்தமாகின்றது.(6)

"வாஸனௌகோ சுத்தோ தத்ர சேதபநீயதே.

தத்க்ரமேணுஶு தேனைவ பதம் ப்ராப்ஸ்யஸி சாஶ்வதம்." (7)

"—சுத்தமாயுள்ள வாஸனைக் கூட்டங்களினுல் அவ்விடத்தில் (நீ) அழைத்துச் செல்லப் பெறுவாய். அந்த முறையோடு கூட விரைவில் அந்த வாஸனையினுலேயே நிலைத்த இருப்பிடத்தையும் அடைவாய்." என்றவாறு.

'தத்ர' என்றது அந்த பக்ஷங்களில் என்பது பொருள். 'தர்ஹி' என்றது அப்பொழுது என்பது பொருள். 'தேனைவ க்ரமேண', என்றது சுபவாஸனையினுல் அடைவிக்கப் பெற்ற ஆசரணையினுலேயே வேறு முயற்சி இல்லாமலேயே என்பது. 'சாச்வதம் பதம்' என்றது மோக்ஷமாகும். (7)

"அத சேதசுபோ பாவ : த்வாம் யோஜயதி ஸங்கடே.

ப்ராக்தநஸ்ததஸௌ யத்நாத் ஜேதவ்யோ பவதா ஸ்வயம்." (8)

"—பிறகு அசுபமான தன்மையானது இருக்குமேயாகில் அது உன்னை ஸங்கடத்தில் (துன்பம்) சேர்த்து விடுகின்றது. அதை இந்தப் பழைமையான முயற்சியினுல் உன்னுல் தாஞகவே வெற்றி கொள்ள வேண்டும்" என்றவாறு.

இவ்விடத்தில் 'பாவ' என்ற சொல் வாஸனையைக் குறிப்பது. 'தத்' என்றது அப்பொழுது என்ற பொருளாகும். 'யத்ந:' என்றது அசுபத்திற்கு விரோதியாகவுள்ள சாஸ்த்ரீயமான தர்மாநுஷ்டாநமாகும். ஆகையினுல் தானே வெற்றி கொள்ள வேண்டுமெனச் சொல்லியது. யுத்தத்தில் மரணத்தை முன்னிட்டு வேற்று மனிதன் வாயிலாக வெற்றி கொள்வதுவதைப் போலன்று. (8)

"சுபாசுபாப்யாம் மார்காப்யாம் வஹந்தீ வாஸநாஸரித்.

பௌருஷேண ப்ரயதநேந யோஜநீயா சுபே பதி." (9)

—"சுபம், அசுபம் (நன்மை, தீமை) என்ற இரண்டு வழிகளோடு வாஸநா என்ற ஆருனது பெருகி ஓடிக்கொண்டிருப்பது. அதைப் புருஷனுடைய முயற்சியினுல் நல்வழியில் இணைக்க வேண்டும்" என்றவாறு.

இரண்டு பக்ஷத்திலும் நன்மை, தீமை இவைகளுக்கு முயற்சியினுடைய உதவியில்லாவிடினும், தீமையின் பகுதியானது

சாஸ்த்ரீயமான முயற்சியினுல் தடுக்கப் பெற்று, அவனுக்கு நன்மையே பயக்கக் கூடிய இடத்தில் (அது) நன்கு ஆச்ரயிக்கத் தக்கதாகும். (9)

''அசுபேஷு ஸமாவிஷ்டம் சுபேஷ்வேவாவதாரய.

ஸ்வமந: புருஷார்த்தேந பலேந பலிநாம் வர.'' (10)

—''அசுபவாஸனைகளில் நன்கு ஆவேசித்துள்ளதை சுபவாஸனைகளினுலேயே இறங்கச் செய்ய வேண்டும். வலிமை வாய்ந்துள்ளவர்களில் சிறந்த ஒ ராம! உனது மனதை புருஷார்த்தத்திற்குக் காரணமாயுள்ள முயற்சியின் வலிமையினுல் இறங்கச் செய்ய வேண்டும்.

இவ்விடத்தில் 'அசுபம்' என்றது—பரஸ்த்ரீ, த்ரவியம் முதலியவை. 'சுபங்கள்' என்றது—சாஸ்த்ரவிசாரம், தேவதைகளுடைய சிந்தனை முதலியவைகள். 'புருஷார்த்தம்' என்றது புருஷனுடைய முயற்சி என்பதாகும். 'பலம்' என்றது வலிமை வாய்ந்தது என்பது பொருள். (10)

''அசுபாத் சாலிதம் யாதி சுபம் தஸ்மாதபீதரத்.

ஜந்தோஶ்சிரம் து சிசுவத் தஸ்மாத் தச்சாலயேத் பலாத்.'' (11)

''—அசுபவாஸனையினுல் (மனம்) கலக்கத்தையடைகின்றது. சுபவாஸனையோ அதைக் காட்டிலும் வேறுபட்டது. பிராணியினுடைய சித்தமோ வெனில் குழந்தையைப் போன்றது. ஆகையினுல் அதை வலிமையின் துணை கொண்டு கலக்க வேண்டும்''. என்றவாறு.

எவ்வாறு, சிசுவானது பக்ஷணத்திலிருந்து தடுக்கப் பெற்று பழங்களைப் புசிப்பதற்கு நியமநம் செய்யப் பெறுகின்றதோ, மணி, முத்து முதலியவைகளின் ஆகர்ஷணத்திலிருந்து தடுக்கப் பெற்று, பந்து முதலியவைகளின் ஆகர்ஷணத்தில் நியமநம் செய்யப் பெறுகின்றதோ, அவ்வாறு சித்தமும் ஸாதுக்களுடைய சேர்க்கையினுல் தீயோர்களுடைய சேர்க்கையிலிருந்தும் விபரீதமாயுள்ள விஷயங்களிலிருந்தும் தடுப்பதற்கு முடியும். (11)

''ஸமதாஸாந்த்வநேநாஶு ந த்ராகிதி ஶநை: ஶநை:.

பௌருஷேண ப்ரயத்நேந லாலயேச் சித்த பாலகம்.'' (12)

"—சித்தமென்னும் பாலகனை ஸமதையாயுள்ள ஸ்நேஹபாவத்தினல் மெள்ள மெள்ளவும், விரைவாக வில்லாது புருஷனுடைய முயற்சியினல் லாலநம் (தாலாட்டுதல்) செய்ய வேண்டும்." என்றவாறு.

எவ்வாறு, சபலமுள்ள பசுவைக் கட்டுவதற்குக் கொட்டிலில் அழைத்துப் போக இரண்டு வழிகளுண்டு. அவைகளில் ஒன்று—பசுமையான புற்களைக்காட்டுவது சொறிந்து கொடுப்பது முதலியன. மற்றொன்று—அதட்டுவது, அடிப்பது, அச்சமடையச் செய்வது என்பன. இவைகளில் முதலாவது வழியினல் கொட்டிலில் அப் பசு பிரவேசிக்கும். இரண்டாவது வழியினல் இங்குமங்கும் ஓடிக்கொண்டு மெள்ள மெள்ள பிரவேசிக்கும்.

அவ்வாறே, பகைவர், நண்பர் இவர்களிடம் ஸமத்வத்தைப் போதிப்பது, ப்ராணயாமம், ப்ரத்யாஹாரம் முதலியனவும், புருஷனது முயற்சி என்ற இவ்விரண்டும் சித்தம் சமநம் பெறுவதற்கு உபாயங்களாகும். (உபாயம்-வழி) அவ்விடத்தில் முதலாவதாயுள்ள ம்ருதுயோகத்தினல் விரைவாக லாலநம் செய்ய வேண்டும். இரண்டாவதாயுள்ள ஹடயோகத்தினல் விரைவாக லாலநம் செய்வதும் கூடாது. ஆயினும் மெள்ளமெள்ளச் செய்ய வேண்டும். (12)

"த்ராகப்யாஸவசாத் யாதி யதா தே வாஸநோதயம்.
ததாப்யாஸஸ்ய ஸாபல்யம் வித்தி த்வமரிமர்தந." (13)

—பகைவர்களை அடக்குகின்ற ஓராம! முன் அப்யாஸவசத்தினல் எப்பொழுது உன்னை வாஸனையின் தோற்றமானது அடைகின்றதோ அப்பொழுது நீ அப்யாஸத்தினுடைய நிறைவை (ஸபலத்தன்மை) உணர்வாயாக" என்றவாறு.

ம்ருதுயோகத்தின் அப்யாஸத்தின் காரணமாக விரைவிலேயே நல்லவாஸனையின் தோற்றம் உண்டாகும் பொழுது, அப்யாஸத்தினுடைய ஸபலத்தன்மையை (நிறைவு) நினைக்க வேண்டும். சிறிது காலத்திலேயே தோற்ற முண்டாவதில்லையே என ஐயம் கொள்வதும் கூடாது. (13)

"ஸம்திக்தாயாமபி ப்ருசம் சுபமேவ ஸமாஹர.
சுபாயாம் வாஸநாவ்ருத்தெள தாத தோஷோ ந கஶ்சந".

"—ஐயம் கொள்ளுகின்ற நிலையிலும் மிகவும் சுபமாயுள்ள வாஸனையையே எடுத்துக் கொள்ள வேண்டும். ஓ குழந்தாய்! சுபமாயுள்ள நிலையில் வாஸனையின் வளர்ச்சியானது ஒரு பொழுதும் குற்றமாகாது" என்றவாறு.

சுபவாஸனையானது அப்யாஸம் செய்யப் பெறும் பொழுது நிறைவோடு கூடியதா? இல்லையா? என்று எப்பொழுது ஐயம் தோன்றுகின்றதோ, அப்பொழுது கூட சுபத்தையே அப்யாஸம் செய்யவேண்டும். அது எவ்வாறெனில்—ஆயிரம் ஜபம் செய்வதற்கு முனைந்துள்ளவன், ஒருவனுக்கு பத்தாவது நூறில் எப்பொழுது ஐயம் தோன்றுமோ, அப்பொழுது மறுபடியும் நூறு ஜபம் செய்யவேண்டும். குறைவில் நிறைவானது பயனின் தன்மையைப் பெற்றதாயமையும். நிறைவிலோவெனில், அதனுடைய வளர்ச்சியினுல் ஆயிரம் ஜபம் செய்வது எவ்வாறு குற்றமாகாதோ, அதுபோல என்பது தாத்பர்யம் (14)

"அவ்யுத்பந்நமநா யாவத் பவாநஜ்ஞாததத்பத:.
குருசாஸ்த்ரப்ரமாணைஸ்து நிர்ணீதம் தாவதாசர." (15)

"—எதுவரையில் திறமைவாய்ந்த மனத்தையுடைய நீ அஜ்ஞாநம், அதனுடைய இருப்பிடம் என்ற இவைகளை, குருமார்கள், சாஸ்திரங்கள் இவர்களால் உணர்த்தப்பெற்றப்ரமாணங்களோடு கூட நிர்ணயம் செய்யப் பெற்றுள்ளதை அதுவரையில் அநுஸரித்து நடந்து வரவேண்டும்" என்றவாறு (15)

"தத: பக்வகஷாயேண நூநம் விஜ்ஞாதவஸ்துநா
சுபோப்யஸௌ த்வயா த்யாஜ்யோ வாஸநௌகோ நிரோதிநா."(16)

"—பிறகு சோஷிக்கப் பெற்ற ஆசை முதலியவைகளையுடைய விவேகத்தினுல் உணரப்பெற்ற வஸ்துவோடு கூட, உறுதியாக இந்த சுபத்திலும் (வாஸனை) உன்னுல் நிரோதம் செய்யப் பெற்றதாக (தடுக்கப்பெற்ற) வாஸனையின் தொகுதியானது பரித்யாகம் செய்யப் பெற வேண்டும்" என்றவாறு, (16)

"யததி ஶமோபகமார்யஸேவிதம் தத்
சுபமநுஸ்ருத்ய மநோஜ்ஞபாவபுத்யா.
அதிகமய பதம் ஸதா விசோகம்
ததநு ததப்யவமுச்ய ஸ்ாது திஷ்ட." (17)

—யாதொன்று மங்களம் பயக்கும் பெருமையையுடையதாயும், ஆரியர்களினுல் ஸேவிக்கப் பெற்றதாயும் உள்ளதோ, அந்த மங்களத்தை யநுஸரித்து மனதிற்குகந்த பாவனையோடு கூடிய புத்தியினுல் சோகத்தைக் களைந்து, எப்பொழுதும் அதை அடைவாயாக. அதற்குப் பிறகு அதையும் விட்டு நல்ல நிலையில் நிற்பாயாக" என்றவாறு.

இச் செய்யுளின் பொருள் தெள்ளென விளங்குவது. ஆகையினுல் யோகத்தினுடைய அப்யாஸத்தோடு காமம் முதலியவைகளுடைய இடையூறுகள் தோன்றுமென்று ஜீவன்முக்தியில் விவாதம் செய்வதற்கும் இடமில்லை என்றவாறு உணரத்தக்கதுமாம். (17)

இவ்வாறு ஜீவன்முக்தி ப்ரகரணத்தில்
ஜீவன் முக்தியினுடைய ஸ்வரூபம்
இவண் சொல்லப் பெற்றது. (3)



## ஜீவந்முக்திநிருபணம் (4)

ச்ருதி, ஸ்ம்ருதி இவைகளில் ஜீவன்முக்தியைக் குறித்த பரமாணங்கள் காணப்பெறுகின்றன. அவைகளும் கடவல்லி முதலியவைகளில் படிக்கப் பெற்றுள்ளன. அவ்விடத்தில்—

"விமுக்தஶ்ச விமுச்யுதே"—விமுக்தனும் விடுதலை பெறுகின்றுன்" எனக் கடவல்லியில் காணப் பெறுகின்றது. ஜீவித்திக்கொண்டே காக்ஷிவடிவாகக் காணப் பெறுகின்ற பந்தத்தையுள்ள காமாதிகளிலிருந்து விசேஷத்தோடு விடுதலை பெற்றவனுயிருந்து கொண்டு, சரீரம் நழுவிய பொழுது வரப்போகிற பந்தத்திலிருந்து விசேஷமாகவும் விடுதலை பெறுகின்றுன்.

வேதநத்திற்கு முன்பும் ஶமம், தமம் முதலியவைகளுடைய ஸம்பாதநத்தினுல் காமம் முதலியவைகளிலிருந்து விடுதலை பெறுகின்றுன். ஆயினும் தோன்றியவைகளான காமம் முதலியவைகளுக்கு அவ்விடத்தில் முயற்சியோடு கூடிய நிரோதமும் செய்ய வேண்டும்.

இவ்விடத்திலோ வெனில், புத்தியினுடைய விருத்தியின் (செயல்) இன்மையால் அவைகளுடைய தோற்றமுமில்லை. ஆகை

யால் 'விசேஷேண' எனச் சொல்லியதுமாகும். அவ்வாறே ப்ரளயத்தில் தேஹத்தினுடைய வீழ்ச்சியுண்டாகும் பொழுது, சிறிதுகாலம் வரப்போகின்ற தேஹபந்தத்திலிருந்து விடுதலே பெறுகின்ருன். இவ்விடத்திலும் நிரந்தரமாயுள்ள மோக்ஷம் என்ற அபிப்பிராயத்தில் 'விசேஷேண' என்று சொல்லப்பெற்றது.

மற்றும், ப்ருஹதாரண்யகத்தில் படிக்கப் பெற்றுள்ளது வருமாறு—

''யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யே ऽஸ்ய ஹ்ருதி ச்ரிதா:
அத மர்த்யோ ऽம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஶ்நுதே''

''-எப்பொழுது இவனுடைய ஹ்ருதயத்தை ஆச்ரயித்துள்ள எல்லா ஆசைகளும் வேறுடன் அற்றுப் போகின்றனவோ, அப்பொழுது மனிதன் அமுத நிலேயைப் பெற்று ப்ரஹ்மத்தையடைகின்ருன் என்றவாறு.

வேறு ச்ருதியிலும்—

''ஸசக்ஷுரசக்ஷுரிவ ஸகர்ணோ ऽகர்ண இவ
ஸமநா அமநா இவ ஸப்ராணோ ऽப்ராண இவ'' இதி.

''—கண்ணுள்ளவனுயினும் கண்ணற்றவன் போலவும், செவியுள்ளவனுயினும் செவியில்லாதவன் போலும், மனமுள்ளவனுயினும் மனமில்லாதவன் போலும், ப்ராணனேடு கூடியவனுயினும் ப்ராணன் இல்லாதவன் போலும்'' என்றவாறு. இதே போல மற்றவைகளேயும் உதாஹரணமாகக் கொள்ளத் தக்கது.

ஸ்மிருதிகளில்—ஜீவந்முக்தன் என்ற சொல், ஸ்திதப்ரஜ்ஞன், பகவத்பக்தன், குணுதீதன், ப்ராஹ்மணன், அதிவர்ணுசரமீ முதலிய பெயர்களால் ஆங்காங்கு வ்யவஹாரம் செய்யப் பெறுகின்றது. வஸிஷ்டருக்கும், ராமனுக்கும் நிகழ்ந்த ஸம்வாதத்தில்—

'' ந்ருணும் ஞானைகநிஷ்டாநாம் '' ஞாநத்தைக் குறிக்கோளாகக் கொண்ட மனிதர்களுக்கு'' எனத் தொடங்கி, ''ஸத் கிம்சிதவசிஷ்யதே'' —''ஸத்தானது சிறிது எஞ்சியுள்ளது'' என்பது வரையிலுள்ள கிரந்தத்திஞல் ஜீவந்முக்தனது நிலே படிக்கப் பெறுகின்றது.

வஸிஷ்டர்—

"ஙருணும் ஞானைகநிஷ்டாநாம் ஆத்மஞாந விசாரிணும்.
ஸா ஜீவந்முக்ததோதேதி விதேஹோந்முக்ததேவ யா." (88)

—ஆத்மஞாநவிசாரம் செய்கின்றவர்களும், ஞாநத்தையே குறிக்கோளாகக் கொண்டவர்களுமான மனிதர்களுக்கு யாதொரு விதேஹத்தில் உந்முகத்தன்மை போல இருக்கின்றதோ, அது ஜீவந்முக்தித் தன்மை வாய்ந்ததாக உதயமாகின்றது" என்றவாறு.

"ஞானைகநிஷ்டாநாம் — என்றது லௌகிகமாயுள்ள கர்மம், வைதிகமாயுள்ள கர்மம் இவைகளுடைய த்யாகத்தைக் குறிப்பதாகும். சரீரம், இந்த்ரியங்கள், (புலன்) ஸத், அஸத் (இருப்பது, இல்லாதது) என்ற தன்மையின் அளவிலே முக்திகள் இரண்டுக்கும் விசேஷமாகும். அநுபவத் தன்மைக்கு அல்ல. ஏனெனில் த்வைதத்தினுடைய தோற்றமானது இரண்டினிடத்திலும் இல்லாததால் என்க. (88)

ஸ்ரீ ராமன்—

"ப்ரஹ்மந் விதேஹ முகத்ஸ்ய ஜீவந்முக்த்ஸ்ய லக்ஷணம்.
ப்ரூஹி யேந ததைவாஹம் யதே சாஸ்த்ரகபா த்ருசா." (89)

—ஓ ப்ரஹ்மந் ! விதேஹ முக்தனுக்கும், ஜீவந்முக்தனுக்கும் இருக்கின்ற இலக்கணத்தைச் சொல்லுவீராக. எக்காரணத்தால் நான் அவ்வாறே சாஸ்த்ரத்தைத் தொடர்ந்த வழியிலே முயற்சி செய்கிறேன்" என்றவாறு. (89)

வஸிஷ்டர்—

யதாஸ்திதமிதம் விச்வம் வ்யவஹாரவதோ ऽபி ச.
அஸ்தம் கதம் ஸ்திதம் வ்யோம ஸ் ஜீவந்முக்த உச்யதே". (90)

—உள்ளவாறுள்ள இவ்வுலகம் வ்யவஹாரம் செய்யப் பெற்றாலும், தத்வதருஷ்டியினுல் மறைவை அடைந்ததாயுள்ளதோ, ஆகாயம் ப்ரஹ்மத்தினிடம் இருப்பதாக எவன் காண்கின்றானோ அவன முக்தன் என்பது" என்றவாறு, (90)

காக்ஷிவடிவாகக் காணப் பெறுகின்ற மலை, ஆறு, கடல் முதலியவைகள் நிறைந்த உலகம், ஞாநியினுடைய சரீரம், இந்திரியங்கள் இவைகள் வ்யவஹாரத் தன்மையோடு கூட மஹாப்ரளயத்தில் பரமேச்வரனால் சுருக்கப் பெற்றுள்ளதாகக் கொண்டு ஸ்வரூபத்தினுடைய உபமர்தநத்தினால் (கடைதலால்) மறைவை யடைந்ததாக இருக்கின்றது.

இவ்விடத்தில் அவ்வாறன்று. ஆனால் சரீரம், இந்திரியங்கள் இவைகளுடைய வ்யவஹாரமானது இருக்கவே செய்கிறது. மலை, நதி, முதலியவைகளும் பரமேச்வரனால் உபஸம்ஹாரம் (சுருக்கம்) செய்யப் பெருவதால் உள்ளவாறு இருக்கின்றதாகக் கொண்டு, மற்ற பிராணிகளால் தெளிவாகக்காணப்பெறுகின்றது.

ஜீவந்முக்திக்கு அந்த நம்பிக்கையுள்ள சித்தவிருத்தியானது இன்மையின் காரணமாக ஸுஷுப்தியில்போல யாவும் மறைவை யடைந்துள்ளதாக இருக்கின்றன. தானே ஒளிருகின்ற 'சித்' என்னும் ஆகாயம் ஒன்றே எஞ்சியுள்ளது. கட்டுண்டவனுக்கு ஸுஷுப்தியில் தாத்காலிகமாயுள்ள புத்தியினுடைய விருத்தியின் இன்மையானது ஸாம்யமாயினும், வரப்போகின்ற புத்திவருத்தியினுடைய பீஜத்தின் ஸத்பாவத்தால் ஜீவந்முக்தத்தன்மை இல்லை.

"நோதேதி நாஸ்தமாயாதி ஸுகதுக்கே முகப்ரபா.
யதா ப்ராப்தே ஸ்திதிர்யஸ்ய ஸ ஜீவந்முக்த உச்யதே" (91)

"—ஸுகம், துக்கம் இவைகளில் ஸந்தோஷமானது தோன்றுவதில்லை. அஸத்தையும் (மறைவு) அடைவதில்லை. எவனுடைய முகத்தின் சோபையானது உள்ளவாறு அடையப் பெற்ற நிலையிலுள்ளதோ, அவன் ஜீவந்முக்தன் எனச் சொல்லப் பெறுவன்" என்றவாறு.

இவ்விடத்தில் 'முகப்ரபா' என்ற சொல் மகிழ்ச்சியைச் சொல்லும். மாலை, சந்தனம், பூஜை முதலிய ஸுகமானது கிடைத்தாலும், ஸம்ஸாரிகளைப்போல அவனுக்கு மகிழ்ச்சி தோன்றுது. மறைவானது முகப்ரபையின் (சோபை) தைந்யமாகும். தநஹாநி, திரஸ்காரம் முதலிய துக்கங்கள் வந்தாலும் தீநமாக இருக்க மாட்டான்.

இப்பொழுதுள்ள தனது முயற்சியின் விசேஷமில்லாத ப்ராரப்த கர்மத்தினுல் கிடைத்த முன் ப்ரவாஹத்தையடைந்த

பிக்ஷாந்நம், முதலியவை எவ்வாறு அடையப் பெற்றதோ, அதனிடத்தில் இருந்து கொண்டு தேஹரக்ஷையைச் செய்ய வேண்டும்.

ஸமாதியினுடைய உறுதியினல் மாலை சந்தநம் இவைகளுடைய தோற்றம் இல்லாத காரணத்தாலும், சில ஸமயம் எழுச்சியடைந்த நிலையில் மேலெழுந்த வாரியாகக் காணப் பெறினும், விவேகத்தினுடைய உறுதியினுலேயே விடவேண்டியது, எடுக்கவேண்டியது என்ற புத்தியின்மையினுலும் மகிழ்ச்சி முதலியவைகளுடைய இன்மையும் யுக்தமேயாகும். (91)

"யோ ஜாகர்தி ஸுஷுப்திஸ்தோ யஸ்ய ஜாக்ரந் ந வித்யதே.

யஸ்ய நிர்வாஸநோ போத: ஸ ஜீவந்முக்த உச்யதே. (92)

'—எவன் ஸுஷுப்தியிலிருந்து கொண்டு விழித்திருக்கின்ருனே, எவனுக்கு விழிப்பு இல்லையோ, எவனுடைய உணர்வானது நிர்வாஸனையாயுள்ளதோ, அவன் ஜீவந்முக்தன் எனப் பெறுவன்" என்றவாறு.

கண் முதலிய பொறிகளுக்கு தத்தம் கோளங்களின் நிலையிலிருப்பதால் உபரதி இல்லாத காரணத்தால் விழிப்பு உண்டாகின்றது. மநத்தினுடைய விருத்தி(செயல்)ல்லாததால் ஸுஷுப்தஸ்த: என்றது. ஆகையினுலேயே, "இந்த்ரியை: அர்த்தோபலப்தி: — "புலன்களினுல் அர்த்தங்களின் (பொருள்) அடைவு" என்ற இந்த ஜாகரண (விழிப்பு) லக்ஷணமின்மையால் விழிப்பானது இல்லை. உணர்வானது, இருந்த பொழுதிலும் ப்ரஹ்மவித் என்ற அபிமாநம் முதலியவைகளினுல் போகத்தின் காரணமாக செலுத்தப் பெற்ற காமம் முதலியவைகளோடு கூடிய புத்தியின் குற்றமே வாஸனையாகும். விருத்தியில்லாத காரணத்தால் அந்த தோஷமும் இல்லாததால் நிர்வாஸனையினுடைய தன்மையுமாம். (92)

"ராகத்வேஷபயாதீநாம் அநுரூபம் சரந்நபி.

யோऽந்தர்வ்யோமவதத்யச்ச: ஸ ஜீவந்முக்த உச்யதே." இதி. (93)

"—ப்ராரப்த கர்மவசத்தின் வேதநத்தினுல் தோன்றிய ராகம், த்வேஷம், பயம் முதலியவைகளுடைய தொடர்ந்த குணத்தையநுஸரித்து நடந்தாலும், எவன் உள்ளே ஆகாயத்தைப் போல மிகவும் ஸ்வச்ச்சமாக (அதிநிர்மலம்) இருக்கின்ருனே, அவனே ஜீவந்முக்தனுவன் என்றவாறு.

'ராகாநுரூபம்' என்றது — போஜநம் முதலியவைகளிலுள்ள ப்ரவிருத்தியாகும். த்வேஷரூபமோ வெனில் — பௌத்தர், காபாலிகர்கள், இவர்களிடத்தில் பராங்முகமாயிருப்பது. 'பயாநுரூபம்' — ஸர்பம், புலி முதலியவைகளிடமிருந்து விலகிநிற்பது. 'ஆதி' என்ற சொல்லால் மாத்ஸர்யம் முதலியவைகளைக் கொள்ள வேண்டும்.

மாத்ஸர்ய ரூபமானது மற்ற யோகிகளிடமிருந்து ஆதிக்யத்தோடு ஸமாதியை அநுஷ்டாநம் செய்தல். எழுச்சி நிலையிலும் இத்தகைய ஆசரணத்தில் முன்னுள்ள அப்யாஸத்தினால் அடைவிக்கப் பெற்றபொழுது விச்ராந்தியடைந்த சித்தத்தினுடைய காலுஷ்யமற்ற (குற்றம்) நிலையுள்ளதால் அத்யச்சத் தன்மை (அதிநிர்மலம்) என்றது. எவ்வாறு ஆகாயமானது புழுதியோடு கூடிய மேகம் முதலியவைகளோடு கூடியதாயினும் நிர்லேப (ஒட்டாது) மாயுள்ள ஸ்வபாவத்தால் வியக்கத்தக்க நிர்மலத் தன்மை காணப் பெறுகின்றதோ அது போல எனவுமாம். (93)

''யஸ்ய நாஹம்க்ருதோ பாவோ யஸ்ய புத்திர் ந லிப்யதே.
ஹர்ஷாமர்ஷபயாந் முக்த : ஸ ஜீவன்முக்த உச்யதே'' இதி. (94)

—எவனுடைய அஹம்காரபாவனையானது (நான் கர்த்தா-தலைவன்) என்ற இத்தகைய ஞாநமானது இல்லையோ, (புலன்கள் புலன்களின் வழியே இயங்குகின்றன. நானன்று. நானே அவைகளுடைய செயல்களுக்கு ஸாக்ஷியாயிருப்பவன் என்பது) எவனுடைய அந்த:கரணமானது ஒன்றிலும் ஒட்டாதிருக்கின்றதோ, (நான் இந்த நிஷித்தமான காரியத்தைச் செய்தேன். விஹிதமாயுள்ள இந்த காரியத்தைச் செய்யவில்லை. ஆகையால் நான் நரகத்தில் விழப்போகிறேன் என்பது போன்ற எண்ணமானது மனதில் தோன்றவில்லையென்பது) அவன் ஜீவன்முக்தன் எனச் சொல்லப் பெறுகின்றான்'' என்றவாறு.

இச் செய்யுளுடைய முற்பகுதி வித்வத்ஸம்ந்யாஸத்தைக் குறித்த ப்ரஸ்தாவத்தில் வியாக்யாநம் செய்யப் பெற்றுள்ளது. உலகில் பந்தத்தில் இணைந்தவனுக்கு சாஸ்த்ரத்தைச் சார்ந்த கர்மாவைச் செய்கின்றபொழுது 'நான் கர்த்தா'— (தலைவன்) என்ற சிதாத்மஸம்பந்தமான அஹம்காரமானது தோன்றுகின்றது. 'வருங்காலத்தில் ஸ்வர்க்த்தை அடையப் போகிறேன்' என்ற மகிழ்ச்சியினால் புத்தியானது ஒட்டிக் கொள்ளுகின்றது. கர்மாவைச் செய்யாதவனுக்கோ வெனில், 'எல்லாவற்றையும் விட்டவனாக நான் இருக்கிறேன்' என்ற அஹம்காரத் தன்மையும்

தோன்றுகின்றது. அது ஸ்வர்கலாபத்தைக் குறித்து துக்க வடிவாயமைந்த ஒட்டுதலாகும்.

இவ்வாறு தடுக்கப்பெற்ற கர்மாவிலும், லௌகிக கர்மாவிலும், முறையே கண்டுகொள்ள வேண்டும். ஜீவன்முக்தனுக்கோவெனில், தாதாத்ம்யத்தில் (ஒன்றிய நிலை) அத்யாஸத்தின் இன்மையினாலும், மகிழ்ச்சி முதலியவை யின்மையினாலும் இப்பொழுது சொன்ன இரண்டு குற்றங்களும் கிடையாது. (94)

"யஸ்மாந்நோத்விஜதே லோக: லோகாந் நோத்விஜதே ச ய:
ஹர்ஷாமர்ஷ பயாந்முக்த: ஸ ஜீவன்முக்த உச்யதே. (95)

– உலகமானது எவனிடத்திலிருந்து அச்சத்தையடைவதில்லையோ எவன் உலகைக் கண்டு அச்சமடைவதில்லையோ, ஹர்ஷம், (மகிழ்ச்சி) கோபம், பயம் இவைகளிலிருந்து எவன் விடுதலை பெற்றவனோ, அவனே ஜீவன்முக்தன் எனச் சொல்லப் பெறுவன், என்றவாறு.

அதிக்ஷேபம் (நிந்தை) தாடநம் (அடி) முதலியவைகளில் ப்ரவிருத்தியில்லாத காரணத்தால், இவனிடமிருந்து உலகம் அச்சமடைவதில்லை. ஆகையால் இந்த உலகத்திற்கும், அதிக்ஷேபம் (நிந்தை) முதலியவைகளில் பிரவிருத்தியின்மையால் ஒரு துஷ்டனுக்கு அதில் ப்ரவிருத்தி தோன்றினும் இவனுடைய சித்தத்தில் அத்தகைய விகல்பம் தோன்றாத காரணத்தால் இவனும் அச்சமடைவதில்லை. (95)

"சாந்தஸம்ஸ்காரகலந: கலாவாநபி நிஷ்கல:.
ய: ஸசித்தோऽபி நிஸ்சித்த: ஸ ஜீவன்முக்த உச்யதே" இதி (94).

"—சமநம் செய்யப் பெற்ற ஸம்ஸாரமென்னும் அலைகளையுடையவனும், கலைகளோடு கூடியவனாயினும், நிஷ்கலமாயிருப்பவனும், எவன் சித்தத்தோடு கூடியவனாயினும், சித்தமில்லாத நிலையிருப்பவனோ, அவனே ஜீவன்முக்தன் எனப் பெறுவன்" என்றவாறு.

பகைவன், நண்பன், மாநம், அவமாநம் முதலிய விகல்பங்கள் நிறைந்துள்ளது ஸம்ஸாரமென்னும் அலையாகும். அதையுடையவன் என்றது. கலைகள் அறுபத்து நான்கு. அவைகளை யுணர்ந்துள்ளவனாயினும், அவைகளிடத்தில் பற்றுக்கோடு, வியவஹாரம் இவைகள் இன்மையால் நிஷ்கலத்தன்மை எனச் சொல்லியது. சித்தத்தினுடைய ஸ்வரூபத்தோடு இருக்கின்ற

நிலையிலும், சித்தத்திற்குரியதான சேஷ்டைகள் (செயல்) தோன்றாத காரணத்தால் நிஸ்சித்தத் தன்மை என்றது.

இவ்விடத்தில், 'சிந்தையோடு கூடியவனாயினும் நிஸ்சிந்தை யுடையவன்' என்ற பாடமேயாகில், வாஸனையின் வசத்தினால் ஆத்மத்யாநவ்ருத்தியிருக்கின்ற காரணத்தால், லௌகிகமாயுள்ள வ்ருத்தியின் இன்மையால் நிஸ்சிந்தையின் தன்மை எனப் பொருள் காண வேண்டும். (96)

''யஃ ஸமஸ்தார்த்த ஜாதேஷு வ்யவஹார்யபி சீதல:.
பரார்த்தேஷ்விவ பூர்ணாத்மா ஸ ஜீவன்முக்த உச்யதே'' இதி. (97)

—எவன் எல்லாப் பொருள்களிலும் (வஸ்து) வ்யவஹாரம் செய்பவனாயினும், தாபமற்றவனாக இருக்கின்றானோ, எவன் பிறருடைய பொருள்களிடத்தில் நிறைவுற்ற மனத்தையுடைய வனாகவும் காணப் பெறுகின்றானோ, அவன் ஜீவன்முக்தன் எனப் பெறுவன்'' என்றவாறு.

பிறருடைய கல்யாணம், உத்ஸவம் முதலியவைகளில் அவர் களுடைய ப்ரீதியின் பொருட்டு, தானே சென்று அவர்களுடைய காரியங்களில் வ்யவஹாரம் செய்து கொண்டிருந்தாலும், லாபம், நஷ்டம், ஹர்ஷம், விவாதம் முதலியவைகளின் வடிவாயுள்ள புத்தி யினுடைய ஸம்தாபத்தை எவ்வாறு அடைவதில்லையோ, அவ் வாறு இந்த முக்தனும் தனது காரியத்திலும் சீதலமாயிருப் பவன். கேவலம் ஸம்தாபத்தின் இன்மையால் சீதலத்தன்மை யில்லை. ஆனால் பூரணமாயுள்ள ஸ்வரூபத்தினுடைய அநு ஸந்தானத்திலும் சீதலத் தன்மையுடையவன் என்பது.

இவ்வாறு ஜீவன்முக்தனுடைய இலக்கணம்
சொல்லப் பெற்றது.



## அத விதேஹமுக்தலக்ஷணம் (5)

பிறகு, விதேஹமுக்தனுடைய இலக்கணம் சொல்லப் பெறு கின்றது—

ஜீவன்முக்தபதம் த்யக்த்வா ஸ்வதேஹே காலஸாத்க்ருதே.
விஶத்யதேஹமுக்தத்வம் பவனோऽஸ்பந்ததாமிவ'' (98)

"காலத்தால் கவரப் பெற்ற தனது சரீரத்தில் ஜீவன்முக்த பதத்தை (இடம்) விட்டு, காற்றுனது சலிக்காது இருப்பது போல அதேஹத் தன்மையை அவன் பிரவேசிக்கிருன்" என்றவாறு.

எவ்வாறு, காற்றுனது சில பொழுது சலநத்தை (அசைதல்) விட்டு சலநமற்ற வடிவத்தோடு இருக்கின்றதோ, அவ்வாறு முக்தாத்மனும் உபாதிகளோடு இணைந்துள்ள ஸம்ஸாரத்தை விட்டு, தனது வடிவத்தில் நிற்கின்றுன். (98)

"விதேஹ முக்தோ நோதேதி நாஸ்தமேதி ந ஶாம்யதி.

ந ஸங்நாஸங் ந தூரஸ்தோ ந சாஹம் ந ச நேதர: (99)

"—விதேஹமுக்தன் தோன்றுவதுமில்லை. மறைவதுமில்லை. சமநமடைவதுமில்லை. ஸத்துமில்லை, அஸத்துமில்லை. தொலைவிலுமில்லை. நான் என்பதுமில்லை. மற்றவையுமில்லை" என்றவாறு.

இவ்விடத்தில், உதயம், அஸ்தமயம், என்ற இரண்டு சொற்களும் முறையே மகிழ்ச்சி, துன்பம் என்ற இரண்டையும் குறிப்பன. 'ந ஶாம்யதி' என்றது, அதைப் பரித்யாகம் செய்பவனல்லன். ஏனெனில், லிங்கதேஹத்திற்கு இவ்விடத்திலேயே மறைகின்ற தன்மை உள்ளதால் என்க. ஸத்துக்கும் இலக்கணமாயிருப்பவன்.

மற்றும், உலகத்திற்குக் காரணமாயுள்ள அவித்யா, மாயா இவைகளுடைய உபாதியைக் கொண்டுள்ள ப்ராஜ்ஞனுகிய ஈச்வரன் அன்று. அஸத்துக்கு இலக்கணமாயுள்ள பூத பௌதிகமும் அன்று, 'ந தூரஸ்த:' என்ற சொல்லால் மாயாதீதன் அல்லன். 'ந ச' என்ற சொல்லால் ஸ்தூலபுக்காகிய அவன் ஸமீபத்திலிருந்தாலும் நிஷேதம் செய்யப் பெறுகின்றது. 'அஹம் ந ச' என்றது. ஸமஷ்டியுமன்று 'ந இதர:'' மற்றவையும் இல்லை என்றது வ்யஷடியுமன்று. வ்யவஹாரத்திற்குத் தகுதியான விகல்பம் ஒன்றுமில்லை என்பது பொருள். (99)

"தத: ஸ்திமிதகம்பீரம் ந தேஜோ ந தமஸ்ததம்.

அநாக்யமநபிவ்யக்தம் ஸத்கிஞ்சிதவ சிஷ்யதே." இதி. (100)

"—பிறகு மிக ஆழமுள்ளதும், ஒளியில்லாததும், இருளால் வ்யாபிக்கப் பெற்றதாயில்லாததும், பெயரில்லாததும், வெளிப்

படுதலில்லாததுமான ஓர் ஸத்து (தை) எஞ்சியிருப்பதாகும்" என்றவாறு.

இத் தன்மை வாய்ந்த விதேஹமுக்தியோடு ஸமானமாயுள்ள உயர்வு சொல்லப் பெற்றிருத்தலால் ஜீவித்திருப்பவனுகிய முக்தனுக்கும், எவ்வளவுக்கெவ்வளவு நிர்விகல்பமிகுதிப்பாடுண்டோ அவ்வளவுக்கவ்வளவு உத்தமத் தன்மையும் காணத்தக்கதாம்.(100)

(இது வஸிஷ்டருக்கும் ராமனுக்கும் நடந்த ஸம்வாதம்)
எனச் சொல்லப் பெறும்)

இவ்வாறு விதேஹமுக்தன் இலக்கணம் சொல்லப் பெற்றது. (5)



## ஸ்திதப்ரஜ்ஞலக்ஷணம் (6)

இப்பொழுது, ஸ்திதப்ரஜ்ஞனுடைய இலக்கணம் சொல்லப் பெறுகின்றது—

பகவத்கீதையில் இரண்டாவது அத்தியாயத்தில் ஸ்திதப்ரஜ்ஞனுடைய இலக்கணம் சொல்லப் பெற்றுள்ளது வருமாறு—

அர்ஜுனன் சொன்ஞன்—

"ஸ்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ.
ஸ்திததீ : கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம்" இதி. (54)

"—ஓ கேசவ! ஸ்மாதியில் நிலைத்த அறிவைப் பெற்றவனுடைய இலக்கணம் எத்தகையது? நிலைத்த ஞானியானவன் எப்படிப் பேசுவான்? எப்படியிருப்பான்? எப்படி நடப்பான்" என்றவாறு.

'ப்ரஜ்ஞை' என்பது தத்வஜ்ஞானம், அது இருவகையாகும். ஸ்திதம், அஸ்திதம் என்பது. எவ்வாறு கள்ள புருஷனிடத்தில் ஆசை வைத்த பெண்ணானவள் எல்லா வ்யவஹாரங்களிலும் அவளுடைய புத்தியானது அக் கள்ள புருஷனையே சிந்தை செய்த வண்ணமிருக்குமோ, ப்ரமாணம், ப்ரமிதி இவைகளோடு செய்கின்ற க்ரஹகாரியங்களிலும் அப்பொழுதே மறதியுமுண்டாகுமோ அது போல சிறந்ததான வைராக்யத்தோடு கூடினவனுக்கு

யோகாப்யாஸத்தினுடைய முதிர்ச்சியினுல் மிகவும் நெருக்கமுற்று வசமாகச் செய்யப் பெற்ற சித்தத்திலிருந்து தோன்றிய தத்வ ஜ்ஞாநத்தில் புத்தியானது, திருடனைப் போல் இடைவிடாது தத்வத்தையே சிந்தனை செய்கின்றது. அத்தகைய இதுவே ஸ்திதம் என்ற ப்ரஜ்ஞாநம் என்பது.

இவ்வாறு சொல்லப் பெற்ற குணமில்லாதவனுக்கு ஏதோ ஒரு புண்ய விசேஷத்தினுல் எப்பொழுதாவது தத்வஜ்ஞாநம் தோன்றிய பொழுதிலும் க்ருஹகர்மாவைப் போல, அவ்விடத்திலேயே தத்வமானது மறக்கப் பெறுகின்றது. அத்தகைய இதுவே அஸ்திதம் என்ற ப்ரஜஞாநமாகும்.

இதைக் கருதியே வஸிஷ்டரும் சொல்லுகிறுர்—

''பரவ்யஸநிநீ நாரீ வ்யக்ராபி க்ருஹகர்மணி.

ததேவாஸ்வாதயத்யந்த : பரஸங்கரஸாயநம்'' இதி. (59)

—பரபுருஷனிடத்தில் ஆசை வைத்த பெண்ணுனவள் தனது க்ருஹக்ருத்யங்களில் (வீட்டு வேலைகளில்) முனைந்திருந்தாலும், பரபுருஷனுடைய ஸங்கமத்தினுலுண்டாகின்ற (சேர்க்கை) ஸுகத்தையே தனது மனதில் அநுஸந்தானம் செய்த வண்ணமிருந்துவருவாள்'' என்றவாறு. (59)

அவ்விடத்தில், ஸ்திதப்ரஜ்ஞன் காலபேதத்தால் இருவகையாவன். ஸமாஹிதன், வ்யுத்திதன் என்பது. இவை இரண்டுக்குமுள்ள இலக்கணங்களை முன்பகுதி, பின்பகுதி இவையிரண்டுகளினுலும் கேட்கிறுன்—ஸமாதியிலிருக்கின்ற ஸ்திதப்ரஜ்ஞனுக்கு பாஷை யாது? எத்தகைய இலக்கணமுள்ள வார்த்தைகளைக் கொண்ட சொற்களால் இவன் பேசுகிறுன்? வெளியே வந்த (ஸமாதியிலிருந்து) ஸ்திதப்ரஜ்ஞன் எத்தகையதான வாக்கின் வ்யவாஹாரத்தைச் செய்கிறுன்? அவனுடைய உட்காருதல், நடத்தல், முதலிய செயல்களில் மந்த நிலைகளிலிருந்து விலக்ஷணமாயுள்ள நிலை எத்தகையது?

ஸ்ரீ பகவான் சொல்லுகிறுர்—

''ப்ரஜ்ஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த்த மநோகதாந்.

ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்திதப்ரஜ்ஞஸ்ததோச்யதே''இதி.(55)

"—ஓ பார்த்த! எப்பொழுது ஒருவன் தன் மனத்திலுள்ள விருப்பங்கள் யாவையும் விட்டு, ஆத்மனிடத்திலேயே ஆத்மா வோடு மகிழ்ச்சியுள்ளவனாக இருக்கின்றானோ, அப்பொழுது அவன் நிலைத்த ஞானியெனச் சொல்லப் பெறுவன்" என்றவாறு.

மற்றும், காமனைகள் மூவகையாகும். அவை பாஹ்யங்கள், (வெளி) ஆந்தரங்கங்கள், (உள்ளேயுள்ளவை) வாஸனையளவான வடிவங்கள் என்பன. ஸம்பாதிக்கப் பெற்ற ஆநந்தம் முதலியன வெளிப்படைகளாகும். ஆசை, அன்பு முதலிய அந்தரங்கங்கள் (உள்ளே இயங்குவன). வழியிலே விழுந்த புற்கள் போன்று நாற் புரமும் காணப் பெறுகின்றவை வாஸநா வடிவங்கள். ஸமாதி யிலிருப்பவன் எல்லா வகையான புத்திவ்ருத்திகளுடைய நாசத் தினால் எல்லாவற்றையும் பரித்யாகம் செய்கிறான். இதற்கு முகத்தின் தெளிவு என்பதைக் கொண்ட அடையாளத்தைச் சார்ந்தது ஸந்தோஷமென்பது. அதுவும் காமனைகளினால் அன்று. ஆனால் ஆத்மனிடத்திலேயே இருப்பது. ஏனெனில் காமனைகளை அவன் விட்ட காரணத்தால் என்க.

மற்றும், புத்தியிலிருந்து தோன்றிய பரமாநந்த வடிவா யமைந்த ஆத்மதத்துவத்தை எதிர்நோக்கியிருப்பதாலும் என்க. இவ்விடத்தில், ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியில் போல ஆத்மாநந்த மானது மனோவிருத்தியினால் உல்லேகம் (கல்பனை) செய்யப் பெறுவதுமில்லை. ஆனால் ஸ்வப்ரகாசமான சித்தின் வடிவா யுள்ள ஆத்மாவினால் என்க. ஸந்தோஷமும் விருத்தியின் வடிவ மன்று. ஆனால் அது ஸம்ஸ்காரவடிவாயிருப்பது. இத்தகைய இலக்கண வாசகங்களோடு கூடிய சப்தங்களினால் ஸமாதியானது சொல்லப் பெறுகின்றது. (55)

"து:கேஷ்வநுத்விக்நமநா : ஸுகேஷு விகதஸ்ப்ருஹ :

வீதராகபய க்ரோத : ஸ்திததீர் முநிருச்யதே" இதி. (56)

"—துயரம் தோன்றும்பொழுது, துயரத்தால் துடிக்கப் பெறாத மனதையுடையவனாகவும், ஸுகம் தோன்றும் பொழுது, அந்த ஸுகத்தில் பற்றற்றவனாகவும், விருப்பம், அச்சம், சினம் இவை யாவும் இல்லாதவனாகவும் இருக்கின்ற உறுதி வாய்ந்த புத்தியை யுடையவன் முனி எனச் சொல்லப் பெறுகின்றான்" என்றவாறு.

துக்கமென்பது ஆசை முதலியவைகளின் காரணமாகத் தோன்றிய ரஜோகுணத்தின் மாறுதலின் வடிவாயுள்ள ஸம்

தாபத்தின் ப்ரதிகூலமான சித்த வ்ருத்தியாகும். அத்தகைய துக்கமானது தோன்றும் பொழுது "நான் பாபம் செய்தவன், துராத்மாவாகிய என்னைப் பொசுக்க வேண்டும்" என்ற அநு தாபத்தின் வடிவாயமைந்த சித்த வ்யாபாரத்தை உத்வேகம் எனச்சொல்லுவர்.

இருந்தாலும், இது விவேகம் போல் தோன்றும். ஆயினும், முற்பிறவியில் இது தோன்றுமே யாகில், அது பாபத்தினுடைய ப்ரதிபந்தத் தன்மையினால் (தடங்கல்) பிரயோஜநத் தன்மையும் வாய்ந்ததாக இருப்பதுமாகும். இப்பொழுதோ வெனில், பிரயோ ஜநமற்றது என்ற ப்ராந்தியின் (மயக்கம்) தன்மையைக் காண வேண்டும்.

மற்றும், ஸுகமென்பது அரசு, மக்கள் இவைகள் போன்ற லாபத்தின் காரணமாகத் தோன்றிய ஸாத்விகமான ப்ரீதியின் வடிவாயுள்ள அநுகூலமாயுள்ள சித்த வியாபாரமாகும். அந்த ஸுகமிருக்கும் பொழுது ஆகாமியான (வரப்போகிற) அத்தகைய ஸுகத்திற்குக் காரணமும் புண்யத்தைச் செய்யாது, வீணாகவே அதை அபேக்ஷித்துள்ள தாமஸமான சித்த வ்யாபாரமே ஸ்ப்ருஹா என்பது.

அவ்விடத்திலும் ஸுகம், துக்கம் இவைகளில் ப்ராரப்த (தொடங்கப் பெற்ற) கர்மத்தினால் அடைவிக்கப் பெற்றதால், எழுச்சியுற்ற வ்ருத்தியானது தோன்றுமாகையினால் இவ் விரண்டும் யுக்தமேயாகும். உத்வேகம், ஸ்ப்ருஹா இவைகளோ வெனில் விவேகிக்குத் தோன்றுவதில்லை.

அவ்வாறே ராகம், பயம், க்ரோதம் என்ற இவைகள் தாமஸத் தன்மை வாய்ந்த கர்மாவாதலால், அடைவிக்கும் தன்மையு மில்லாமையால் இவனுக்கு இவைகள் தோன்றாதன வாம். இத்தகைய இலக்கணத்தினால் சுட்டிக் காட்டப் பெற்ற 'ஸ்திததீ:,' (உறுதிவாய்ந்த புத்தி) தனது அநுபவத்தை வெளியிடு கின்ற காரணத்தால் சிஷ்யர்களுடைய சிக்ஷயின் பொருட்டு அநுத்வேகம் (துயரமற்ற நிலை) நிஸ்ப்ருஹத்வம் (ஆசையின்மை) முதயலிவைகளையடைந்த வார்த்தைகளைப் பேசுகின்றான் என்பது பொருளாகும். (56)

"ய : ஸர்வத்ராநபிஸ்நேஹ : தத்தத் ப்ராப்ய ஶுபாஶுபம்.
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா. இதி" (57)

'—எவன் எல்லா வஸ்துக்களிலும் பற்றற்றவனாகவும் 'தன்னுடைய விருப்பங்களைப் பெற்றுள்ள பொழுதிலும், மகிழ்ச்சியடையாமலும், துன்பம் தோன்றிடினும் துயரமடையாமலும், வெறுப்புத் தோன்றாமலும், இருக்கின்றானோ, அவன் நிலைத்த ஞானி எனப் பெறுவன்'' என்றவாறு.

எவ்விடத்தில், பிறருடைய குறை, நிறை இவைகள் தோன்றும் பொழுது அவைகளைத் தன்னுடையதாக நினைத்துத் தன்னிடத்தில் ஆரோபணம் செய்யப் பெறுகின்றதோ, அத்தகைய பிறரைப் பற்றிய விஷயமாயுள்ள விருத்தி விசேஷமானது ஸ்நேஹமெனச் சொல்லப் பெறும். ஸுகத்திற்குக் காரணமாயிருப்பது, தனது மனைவி முதலிய சுபமான விஷயமாகும். அவைகளுடைய குணங்களை எடுத்துச் சொல்லுகின்ற புத்தியின் வியாபாரமானது அபிநந்தம் எனச் சொல்லப் பெறும்.

இவ்விடத்தில், குணத்தினுடைய ப்ரஸ்தாவத்திற்கு (விஷயம்) பிறருடைய தூண்டுதல் இல்லாததினால் அதற்குக் காரணமாயுள்ள அபிநந்தமானது தாமஸமெனப்பெறும். அஸூயையைத் தோற்றுவிப்பதில் துக்கத்திற்குக் காரணமாயுள்ள பிறருடைய வித்தை முதலியன இவனைக் குறித்து அசுபமாயுள்ள விஷயமாகும்.

அதைத் தொடர்ந்து ப்ரவிருத்திக்கின்ற புத்திவ்யாபாரமானது த்வேஷம் எனப்பெறும். அதுவும் தாமஸமாகும். அது நிந்தையினுடைய நிவாரணத்திற்குரிய தன்மையில்லாததால் வீணேயாகும். இவை யாவும் தாமஸமாயுள்ள தர்மங்களாகும். இவை எவ்வாறு விவேகியினிடத்தில் தோன்றுவனவாயிருக்க முடியும்? முடியாதன்றோ! (57)

''யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ ऽங்கானீவ ஸர்வச :

இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்ய ; தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா'' இதி.

'—எப்பொழுது, நிலைத்துள்ள அறிவைப்பெற்ற யோகியானவன், ஆமையானது வெளியே நீட்டப்பெற்ற தனது அவயவங்களை உள்ளே இழுத்துக் கொள்ளுகின்றதோ, அதுபோல எல்லா விஷயங்களிலிருந்தும் தனது புலன்களை உள்ளுக்கு இழுத்துக் கொள்ளுவானோ, அப்பொழுது அவனுடைய அறிவு நிலைத்ததெனச் சொல்லப்பெறும்.' என்றவாறு.

எழுச்சியடைந்தவனுக்கு (ஸமாதியிலிருந்து) தாமஸ வ்யா பாரங்கள் யாவும் இல்லாத காரணமானது முந்தின செய்யுட் களில் சொல்லப் பெற்றது. ஸமாதியிலிருப்பவனுக்கோ வியாபார மென்பது இல்லை. ஆகையால் தாமஸத்தன்மையின் ஐயமானது எங்கே இருந்து வரக்கூடும்? என்பது அபிப்பிராயமாகும். (58)

"விஷயா விநிவர்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந:.

ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்ததே". இதி. (59)

—உணவையுட்கொள்ளாத உடலை யுடையவனுக்கு விஷயங்கள் நீங்கப் பெறும். இந்த இச்சையும் கூட பரமாத்மனைப் பார்த்தால் நிலையான ஞானத்தையடைந்தவனுக்கு நீங்கிவிடும்." என்றவாறு.

ப்ராரப்தமான கர்மாவானது, ஸுகம், துக்கம் இவைகளுக்குக் காரணமாயுள்ள சில விஷயங்களை, சந்த்ரோதயம், அந்தகாரம் (இருள்) என்ற வடிவங்களைத் தானுகவே ஸம்பாதித்துக் கொள்ளு கின்றது. மற்றவைகளான வீடு, க்ஷேத்ரம் முதலியவைகள் புருஷ னுடைய முயற்சியின் வாயிலாக ஸம்பாதிக்கப் பெறுகின்றது.

அவ்விடத்தில், சந்தரோதயம் முதலியன பூரணமாயுள்ள இந்த்ரியங்களுடைய அடக்கத்தின் வடிவாயமைந்த ஸமாதி யினுலே நிவிருத்தியடைகின்றன. மற்றென்றினுலும் அல்ல. வீடு முதலியவைகளோ வெனில் ஸமாதி யில்லாமலேயே விலகுகின்றன. ஆஹரணம் என்றது ஆஹாரம் எடுப்பது, உத்யோகம் (முயற்சி) என்ற பொருளில் வந்துள்ளது.

மற்றும், முயற்சியற்றவனுக்கு க்ருஹம் முதலிய விஷயங்கள் விலகுகின்றன. ரஸமோ வெனில் விலகுவதில்லை. ரஸமென்பது மனத்தைச் சார்ந்த த்ருஷ்ணு—வேட்கை—எனச் சொல்லப் பெறும். அதுவும் ப்ரமாநந்தவடிவாயமைந்த பரப்ரஹ்மத்தினுடைய தரிசன முண்டாகும் பொழுது சிறிய ஆநந்தத்தின் காரணங்களி லிருந்து விலகுகின்றது.

ச்ருதியும் —

"கிம் ப்ரஜயா கரிஷ்யாமோ யேஷாம் நோऽயமாத்மாயம் லோக".

"—ப்ரஜையினுல் என்ன செய்யப்போகிறோம். எவர்களுக்கு இந்த ஆத்மாவே இந்த உலகமாயுள்ளதோ" எனச் சொல்லும். (59)

"யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித:.
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:" 60

தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர :
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா" இதி(61)

"—ஓ குந்தியின் மகனே! வீடுபேறு (மோக்ஷம்) அடைவதற்கு முயற்சி செய்கின்ற பண்டிதனாகிய விவேகியினுடைய மனதையும் கூடக் கலங்கச் செய்கின்ற புலன்கள், அம்மனதை வலுக்கட்டாய மாக இழுத்துக் கொண்டு செல்லுகின்றன".

"அவைகள் யாவையும் நன்கு அடக்கப்பெற்ற மனநிலையை யுள்ளவனாக என்னையே பரம்பொருளெனச் சிந்தனை செய்பவனாக இருக்க வேண்டும். எவனுக்குப் புலன்கள் தன் வஶமாகின்றவோ, அவனே நிலைத்த அறிவைப் பெற்றவன்" எனச் சொல்லப் பெறுவன் என்றவாறு.

உத்யோகம் (முயற்சி) த்யாகம் என்ற இவைகளினால் ப்ரஹ்ம தரிசனத்தைச் செய்பவனுக்கும் எதிர்பாராத நழுவுதல் தோன்று கின்ற பரிஹாரத்தின் பொருட்டு ஸமாதியை அப்யாஸம் செய்ய வேண்டும். அத்தகைய இதுவும் "கிம் ஆஸீத" எப்படியிருப்பான் என்ற கேள்விக்குப் பதிலாகும். (60, 61)

"த்யாயதோ விஷயாந் பும்ஸ : ஸங்கஸ்தேஷூபஜாயதே.
ஸங்காத் ஸஞ்ஜாயதே : காம: காமாத் க்ரோதோऽபிஜாயதே (62)

க்ரோதாத் பவதி ஸம்மோஹ : ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ரம:
ஸ்ம்ருதிப்ரம்ஶாத் புத்திநாஶ : புத்திநாஶாத் ப்ரணஶ்யதி" இதி.(63)

"—உலகிலுள்ள பொருள்களின் மீது எப்பொழுதும் சிந்தையுள்ள மனிதனுக்கு, அத்தகைய பொருள்களின் மீது பற்றுதல் தோன்றுகின்றது. அப் பற்றுதலிலிருந்து ஆசையும், ஆசை யிலிருந்து கோபமும், கோபத்திலிருந்து அறிவின்மையும், அறி வின்மையிலிருந்து, நினைப்பின்மையும், (மறதி) மறதியிலிருந்து புத்தியின் அழிவும், ஒன்றிலிருந்து ஒன்றாகத் தோன்றுவன. புத்தியின் அழிவினால் முடிவில் அவனும் அழிந்து விடுகின்றான்" என்றவாறு. (62,63)

இவ்விடத்தில், ஸமாதியின் அப்யாஸம் இல்லாத நிலையில் நழுவுதலின் முறையானது சொல்லப் பெற்றது. 'ஸங்கம்' என்றது த்யேய விஷயத்தில் (சிந்தனைக்குரிய) ஸங்கிதியாகும். 'ஸம்மோஹம்' என்றது விவேகத்தினிடத்தில் உதாஸீனமாயிருக்கின்ற நிலையாகும். 'ஸம்ருதிவிப்ரம:' என்றது தத்துவத்தை அநுஸம்தாநம் செய்யாத நிலையாகும். 'புத்திநாச:' என்றது விபரீதமாயுள்ள பாவனையின் வளர்ச்சியோடு தோன்றும் தோஷத்தினால் தடுக்கப் பெற்ற ஞாநத்திற்கு மோக்ஷத்தைக் கொடுக்கத் திறமையற்ற நிலையைச் சொல்லும். (63, 63)

"ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்திரியைஶ்சரந்.
ஆத்மவச்யைர் விதேயாத்மா ப்ரஸாதமதி கச்சதி" இதி.(63)

"—விருப்பு, வெறுப்பு இவைகள் இல்லாது தனக்கு அடிமையாகச் செய்யப் பெற்ற புலன்களினால் உலக ஸுகங்களை அநுபவிக்கின்றவன் ஆயினும் அவன் மனத் தெளிவை அடைகின்றான்" என்றவாறு,

'விதேயாத்மா' என்றது தனக்கு வசமாகச் செய்யப் பெற்ற மனத்தின் தன்மையை யுடையவன் என்பது. 'ப்ராஸத:' என்றது நிர்மலத்தன்மை, அதாவது பந்தமில்லாத நிலை என்பது. ஸமாதியினுடைய அப்யாஸத்தோடு இணைந்துள்ளவன், அந்த ஸ்மாதியினுடைய வாஸனையின் வலிமையினால், எழுச்சி பெற்ற நிலையிலே இந்திரியங்களோடு வ்யவஹாரம் செய்து கொண்டிருப்பினும் தெளிவை நன்கு அடைகின்றான். அத்தகைய இது 'கிம் வ்ரஜேத' எப்படி நடப்பான் என்ற கேள்விக்கு பதிலாகும்' மேலேயுள்ள பல க்ரந்தங்களினாலும் ஸ்திதப்ரஜ்ஞனுடைய நிலையானது விஸ்தாரமாகச் சொல்லியுள்ளது.

சங்கை — ப்ரஜ்ஞைக்கு நிலை, தோற்றம் இவைகளினால் முன்பும் ஸாதநத் தன்மையோடு ராகம் த்வேஷம் முதலியவைகளின் இன்மையும் அபேக்ஷிக்கப் பெற்றுள்ளதே என்றால், ஆம்; ஆயினும் விசேஷமுள்ளது. அதுவும் சிரேயோமார்க்கம் என்ற நூலை யியற்றியவரால் காண்பிக்கப் பெற்றுள்ளது—

"வித்யாஸ்திதயே ப்ராக் யே
ஸாதநபூதா : ப்ரயத்நநிஷ்பாத்யா:.
லக்ஷணபூதாஸ்து புந :
ஸ்வபாவதஸ்தே ஸ்திதா: ஸ்திதப்ரஜ்ஞே.

ஜீவன்முக்திரீதிமாம்
வதந்த்யவஸ்தாம் ஸ்திதாத்மஸம்பந்தாம்.
பாதிதபேதப்ரதிபாம்
அபாதிதாத்மாவபோத ஸாமர்த்யாத்'' இதி.''

—வித்தையினுடைய நிலைத்தலின் பொருட்டு முன்பு எந்த ஸாதநத்தின் வடிவாயமைந்த ப்ரயத்நத்தினால் (முயற்சி) தோற்றுவிக்கப் பெற்ற இலக்கணவடிவாயுள்ளவைகள் எவைகள் இருக்கின்றனவோ அவைகள், மறுபடியும் இயல்பாகவே ஸ்திதப்ரஜ்ஞனிடத்தில் இருக்கின்றன.''

''இதை ஜீவன்முக்தி என்று சொல்லுகின்றனர். ஏனெனில் இந்த நிலையானது நிலைத்த ஆத்மஸம்போதம் (உணர்வு) என்பதால் என்க. பாதிக்கப்பெற்ற பேதங்களுடைய தகுதியையும், பாதிக்கப் பெறாத ஆத்மாவினுடைய உணர்வின் திறமையினாலும் என்க'' என்றவாறு.

இப்பொழுது பகவத் பக்தனுடைய இலக்கணம் சொல்லப் பெறுகின்றது—

இது பகவத்கீதை பன்னிரண்டாவது அத்யாயத்தில் பகவானால் வர்ணிக்கப் பெற்றுள்ளது—

''அத்வேஷ்டா ஸர்வபூதாநாம் மைத்ர: கருண ஏவ ச.
நிர்மமோ நிரஹம்காரோ ஸமதுக்க ஸுக : க்ஷமீ (13)

ஸம்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிஶ்சய :.
மய்யர்பிதமநோபுத்தி: யோ மத்பக்த : ஸ மே ப்ரிய:''(14)

''—எல்லா ப்ராணிகளிடத்திலும் த்வேஷம் (வெறுப்பு) இல்லாமலும், அவைகளிடத்தில் நட்புடனும், கருணையுடனும், தனது, தான் என்ற நினைப்பற்றவனும் துயரம், ஸுகம் இவைகளை ஸமமாகப் பார்ப்பவனும், பொறுமையுடனும், எப்பொழுதும் மகிழ்ச்சியோடும், எப்பொழுதும் சிந்தனை செய்து கொண்டும், மனத்தை யடக்குகின்ற இயல்பைப் பெற்றவனும், என்னுடைய வடிவத்தில் உறுதியான புத்தியோடும், மனம், புத்தி இவைகளை என்னிடத்தில் அர்ப்பணம் செய்துமிருக்கின்ற எனது பக்தன் எவனோ, அவனே எனக்கு மிகவும் விருப்பமுள்ளவன்'' (13 14) என்றவாறு.

ஈச்வரனிடத்தில் அர்ப்பணம் செய்யப் பெற்ற மனத்தோடு ஸமாதியிலிருப்பவனுக்கு வேறு ஒன்றையும் அநுஸம்தாநம்செய்ய முடியாதன்றோ ! ஸமாதியிலிருந்து எழுச்சியடைந்துள்ள பொழுதிலும் உதாஸீநநிலையைப் பின்பற்றுவதால் ஹர்ஷம், விஷாதம் (மகிழ்ச்சி, துன்பம்) என்ற இவைகள் இல்லாத காரணத்தால் ஸுகம், துக்கம் இவைகளில் ஸமாநநிலையும் தோன்றுவதாகும். இவ்வாறு சொல்லப் போகிற த்வந்தவ்விஷயங்களிலும் கண்டு கொள்ள வேண்டும். (13, 14)

''யஸ்மாந் நோத் விஜதே லோகோ லோகாந்நோத்விஜதே ச ய :
ஹர்ஷாமர்ஷபயோத்வேகை: முக்தோ ய: ஸ ச மே ப்ரிய : (15)

அநபேக்ஷ : ஶுசிர்தக்ஷ: உதாஸீநோ கதவ்யத:,
ஸர்வாரம்பபரித்யாகீ யோ மத்மக்த : ஸ மே ப்ரிய :. (16)

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந ஶோசதி ந காங்க்ஷதி.
ஶுபாஶுபபரித்யாகீ பக்திமாந் ய: ஸ மே ப்ரிய:. (17)

ஸம: ஶத்ரௌ ச மித்ரே ச ததா மாநாபமாநயோ:.
ஶீதோஷ்ண ஸுகதுக்கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித: (18)

துல்யநிந்தாஸ் துதிர்மௌநீ ஸம் துஷ்டோ யேந கேந சித்.
அநிகேத: ஸ்திரமதி: பக்திமாந் மே ப்ரியோ நர:'' இதி. (19)

''—எவனிடமிருந்து ஜநங்கள் அச்சங்கொள்வதில்லையோ, ஜநங்களிடமிருந்து எவன் அச்சங்கொள்வதில்லையோ மகிழ்ச்சி, கோபம், அச்சம், மனக்கலக்கம் என்ற இவைகளிலிருந்து எவன் விடுபட்டவனோ, அவனும் எனக்குப் பிரியமானவனே யாவன்.(15)

ஒரு வஸ்துவிலும் ஆசையில்லாமலும், சுத்தமாகவும், சோம்பலின்றியும், பக்ஷபாதம் இல்லாமலும், (விருப்பு, வெறுப்பு) மனநோயற்றும், முயற்சிகள் யாவையும் விட்டவனுகவும், இருக்கின்ற எனது பக்தன் எவனே, அவனே எனக்குப் பிரியமானவன்'' (16)

''எவன் மகிழ்ச்சி, த்வேஷம், விருப்பு, துயரம், எதிர்பார்த்தல் இவைகள் இல்லாமலும், நல்லது, கெட்டது இவைகளில் பற்றற்றவனுகவும், பக்தியோடு கூட எவன் இருக்கின்ருனேஅவனே எனக்குப் பிரியமானவன்'' (17)

பகைவன், நண்பன், மானம், அவமானம், சீதம், உஷ்ணம், ஸுகம், துக்கம் என்ற இவைகளில் ஒரே நிலையில் (ஸமமாக) இருப்பவனும் ஒன்றிலும் பற்றில்லாதவனும். தன்னைப் பிறர் நிந்தனை செய்தாலும், துதித்தாலும் ஸமநிலையிலிருப்பவனும், வாய்பேசாது எப்பொழுதும் மௌனமாயிருப்பவனும், எவ்வளவு கிடைத்தாலும் அதைக் கொண்டு மகிழ்ச்சியடைந்தவனும், ஸ்திரமான (நிலைத்த) இருப்பிடமில்லாதவனும், உறுதியாயுள்ள புத்தியையுடையவனும் எனக்குப் பிரியமானவன்". (18,19) என்றவாறு.

இவ்விஷயத்திலும் முன்போன்ற விசேஷமானது வார்த்திககாரர்களால் காண்பிக்க பெற்றுள்ளது.—

"உத்பந்நாத்மபோதஸ்ய ஹ்யத்வேஷ்ட்ருத்வாதயோ குணா:.
அயத்நதோ பவந்த்யுஸ்ய ந து ஸாதநரூபிண:" இதி.

"—ஆத்மஜ்ஞானம் தோன்றிய இந்த புருஷனுக்கு த்வேஷமின்மை முதலிய குணங்கள் முயற்சியின்றி இயல்பாகவே கிடைக்கின்றன ஸாதநரூபமுடையதோ இல்லை" என்றவாறு.

இவ்வாறு பகவத் பக்தனுடைய இலக்கணம்
சொல்லப் பெற்றது.



இப்பொழுது குணாதீதனுடைய இலக்கணம் சொல்லப் பெறுகின்றது—

இவனுடைய நிலையானது பகவத்கீதையில் பதினான்காவது அத்யாயத்தில் வர்ணிக்கப் பெற்றுளளது—

அர்ஜுனன் சொன்னான்—

"கைர்லிங்கைஸ்த்ரீந் குணாநேதாநதீதோ பவதி ப்ரபோ.
கிமாசார: கதம் சைதாம்ஸ்த்ரீந் குணாநதிவர்ததே". இதி. (21)

"—ஓ ப்ரபோ! இந்த மூன்று குணங்களையும் கடந்தவன் எத்தகைய அடையாளங்களோடு இருப்பவன்? அவன் எத்தகைய ஆசாரமுடையவன்? எவ்வாறு அவன் முக்குணங்களையும் கடந்து நிற்கின்றான்" என்றவாறு. (21)

மூன்று குணங்கள் — ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பவைகள். அவைகளுடைய பரிணமத்தின் விசேஷத்தால் யாவும் ஸம்ஸாரத்தில் பிரவேசிப்பதாகும். ஆகையால் குணங்களைக் கடந்து நிற்கின்ற நிலை ஸம்ஸாரமற்ற நிலையாகும். அதாவது ஜீவன்முக்த நிலையின் தன்மை என்பது. 'லிங்கங்கள்' என்றது மற்றவர்களுக்கு இவனுடைய குணங்களைக் கடந்துள்ள நிலையை உணரச் செய்பவைகள். ஆசாரம்-ஆசரணம்-நடத்தை-அதாவது அவனது மனதினுடைய ஸஞ்சாரத்தின் முறைகள். 'கதம்' ஏன் – எவ்வாறு. என்று சொன்னது ஸாதநமுறையைக் குறித்த கேழ்வியாகும். (21)

ஸ்ரீ பகவான் சொன்னர்—

''ப்ரகாசம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ.
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தாநி ந நிவ்ருத்தாநி காங்க்ஷதி.'' இதி. (22)

''—ஓ பாண்டுவின் மகனே! எவன் இயல்பாகத் தோன்றிய ஸத்வ குணங்களுடைய காரியங்களான ஒளி முதலியவைகளையும், ரஜோகுணங்களுடைய காரியங்களான ஈடுபாடு முதலியவைகளையும், தமோ குணங்களுடைய காரியங்களான மோஹம் முதலியவைகளையும் வெறுப்பதில்லையோ, விலகிப் போன அவைகளை மீண்டும் வேண்டுகின்றதில்லையோ'' என்றவாறு.

''உதாஸீநவதாஸீநோ குணைர்யோ ந விசால்யதே.
குணா வர்தந்த இத்யேவ யோऽவதிஷ்டதி நேங்கதே''. இதி. (23)

''—எவன் ஸாக்ஷியைப் போல் இருந்து கொண்டு குணங்களுடைய செயல்களாகிய ஸுகம் முதலியவைகளைக் கண்டு சலித்துக் கொள்வதில்லையோ, குணங்கள் அவைகளின் செயல்களில் தானே இயங்குகின்றன என எவன் உணர்ந்துள்ளானே, எவன் தனது நிஷ்டையிலிருந்து அசைவதில்லையோ'' என்றவாறு.

ஸுகம், துக்கம் (இன்பம், துன்பம்) என்ற இவைகளில் ஒரே நிலையிலும், (ஸமமாகவும்) தனது நிஷ்டையிலே இருக்கின்றவனகவும், மண், கல், பொன் இவைகளை ஒரே நோக்காக ஸமமாக நினைக்கின்றவனகவும், விரும்பியவை, விரும்பாதவைகளிலும் ஸமநோக்குடையவனகவும், தைரியமுள்ளவனகவும், தன்னை நிந்தனை செய்தாலும், புகழ்ந்தாலும், அவைகளில் ஸமானமாயுள்ள நோக்கத்தைக் கொண்டவனகவும்'' (23)

''மாநாபமாநயோஸ் துல்யஸ் துல்யோ மித்ராரி பக்ஷயோ:.
ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீத: ஸ உச்யதே'' இதி. (24)

''—மாநம், அவமாநம் இவைகளில் ஸமமாகவும், தனது பகைவன் நண்பன் இவ்விருவரிடத்திலும் ஒரே நிலையிலிருந்து கொண்டு பழகுகின்றவனும், எல்லாவகையான முயற்சிகளையும் விட்டவனாகவும் எவன் இருக்கின்றானோ, அவனே குணங்களுக்கு அப்பாற்பட்டவன் எனச் சொல்லப் பெறுகின்றான்'' (24) என்றவாறு.

மற்றும்,

''மாம் ச யோ ऽவ்யபிசாரேண பக்தியோகேந ஸேவதே.
ஸ குணாந் ஸமதீத்யைதாந் ப்ரஹ்மபூயாய கல்பதே'' இதி.

''—எவன் (பரமேச்வரனாகிய) என்னை சலிக்காத பக்தியோகத்தினால் உபாஸிக்கின்றானோ (ஸேவை) அவன் இந்த மூன்று குணங்களையும், வெற்றிகொண்டு, ப்ரஹ்மத் தன்மையைப் பெறுவதற்கும் தகுதியுள்ளவனாகவும் ஆகின்றான்'' என்றவாறு. (25)

இவ்விடத்தில் ப்ரகாசம், ப்ரவ்ருத்தி, மோஹம் என்ற இம்மூன்று சொற்களும் முறையே ஸத்வம், ரஜஸ், தமஸ். என்ற முக்குணங்களையும் குறிப்பன, அவைகளும் ஜாக்ரத், ஸ்வப்நம், இவைகளில் ப்ரவர்த்திக்கின்றன. ஸுஷுப்தியானது ஸமாதியில் சூந்யமாயுள்ள சித்தத்தினுடைய செயல்களின் நிலையில் நிவ்ருத்தியாகின்றன. ப்ரவ்ருத்தியும் இருவகையாகும். அவை, அநுகூலம், ப்ரதிகூலம் என்பன. அவைகளிலே மூடன் விழிப்பில் ப்ரதிகூலமான ப்ரவ்ருத்தியை வெறுப்பவன். அநுகூலமாயுள்ள ப்ரவ்ருத்தியை எதிர்பார்ப்பவன்.

''ஸமதுக்கஸுக: ஸ்வஸ்த: ஸமலோஷ்டாச்மகாஞ்சந:
துல்யப்ரியாப்ரியோ தீரஸ் துல்யநிந்தாத்மஸம்ஸ்துதி:'' இதி. (26)

மற்றும், குணங்களைக் கடந்தவனுக்கோவெனில், அநுகூலம் ப்ரதிகூலம் என்ற இவைகளுடைய அத்யாஸம் இன்மையால் வெறுப்பது எதிர்பார்ப்பது என்ற இவையிரண்டும் இல்லை எவ்வாறு இரண்டு மனிதர்கள் கலஹம் செய்து கொண்டிருக்கும் பொழுது, நடுநிலை வஹிப்பவன் ஒருவன் தான் தனித்த நிலையில் உதாஸீநமாயிருப்பானோ, வெற்றி தோல்வி இவைகளினால் இங்குமங்கும் அலையமாட்டானோ, அவ்வாறு குணங்களைக் கடந்த

விவேகியும் உதாஸீநமாயிருப்பான். குணகுணேஷு வர்தந்தே, ந த்வஹம் — குணங்கள் குணங்களிடத்தில் இருக்கின்றன, நானே இல்லை" என்ற விவேகத்தினுல் ஔதாஸீந்யமானது சொல்லப் பெற்றது.

மற்றும்! "அஹமேவ கரோமி"—நானே செய்கிறேன்" என்ற அத்யாஸமானது விசேஷமாயுள்ள சலநமாகும். துக்கம், ஸுகம் இவைகளுடைய ஸமாநமாயுள்ள நிலையே அடையாளங்களாகும். குற்றமற்ற பக்தியோடு கூடிய ஞாநத்தின் அத்யாஸத்தினுடைய அப்யாஸத்தினுலேயே பரமாத்மனுடைய ஸேவை என்று குணங்களைக் கடந்தவனுடைய ஸித்தாந்தத்தின் கேழ்விக்கு உத்தர மாகும்.

இவ்வாறு குணதீதனுடைய இலக்கணம் சொல்லப் பெற்றது.



இப்பொழுது ப்ராஹ்மணனுடைய இலக்கணம் கூறப்பெறு கின்றது. இதுவும் வியாஸர் முதலியவர்களால் வர்ணிக்கப் பெற்றுள்ளது. அது வருமாறு—

"அநுத்தரீயவஸநமநுபஸ்தீர்ணசாயிநம்.

பாஹூபதாயிநம் சாந்தம் தம் தேவா: ப்ராஹ்மணம் விது:" இதி.

"—உத்தரீயவஸ்த்ரமில்லாதவனும், விரிக்கப்பெருத சயநத்தை யுடையவனும், கைகளையே தலையணையாகக் கொண்டவனும், சாந்தம் நிறைந்தவனுமாக எவன் இருக்கின்ருனே, அவனைத் தேவர்கள் ப்ராஹ்மணன் என உணருகின்றனர்" என்றவாறு.

இவ்விடத்தில், ப்ராஹ்மணசப்தமானது ப்ரஹ்மத்தை யுணர்ந்துள்ளவனைக்குறிப்பது. "அத ப்ராஹ்மண:"— 'பிறகு ப்ராஹ்மணன், என்ற சுருதியினுல் வர்ணிக்கப் பெற்றுள்ளது மாகும். 'ப்ரஹ்மவித்' என்றதும் வித்வத் ஸம்ந்யாஸத்தில் அதிகார முள்ளவனைக் குறிப்பது, "யதா ஜாத ரூபதர: நாச்சாதநம் சரதி ஸ ப்ராஹ்மண:" இதி; 'எவ்வாறு பிறந்தமேனியாய் இருந்துகொண்டு ஆச்சாதந (மறைத்துக்கொள்வது) வஸ்த்ரம் இல்லாமல் ஸம்சாரம் செய்கின்றவன் ப்ராஹ்மணன்" என்பன போன்ற சுருதிகளினுல் பரிக்ரஹம் (எடுத்துக்கொள்வது) என்ற இல்லாத

முக்யத் தன்மையைச் சொன்ன காரணத்தால், அநுத்தரீயத் தன்மை போன்றவை யுக்தமேயாகும். (அநுத்தரீயம்-மேல் வஸ்த்ரமில்லா நிலை).

மற்றும்,

"யேந கேநசிதாச்ச்சந்ந: யேந கேநசிதாஸித :.
யத்ர க்வசந ஸாயீ ச தம் தேவா ப்ராஹ்மணம் விது:" இதி.

"—யாதாமொரு வஸ்துவினால் தன்னை மறைத்துக் கொண்டும், யாதாமொரு ஆஹாரத்தைப் புசித்துக் கொண்டும, ஏதாவது ஓரிடத்தில் சயநித்துக் கொண்டும், எவன் இருக்கின்றானோ, அவன் ப்ராஹ்மணன் என தேவர்கள் உணருகின்றனர்" என்றவாறு.

சரீரத்தின் நிர்வாஹத்தின் பொருட்டு, உணவு, வஸ்த்ரம், சயநம், இருப்பிடம் இவைகளை எதிர்பார்த்துள்ள பொழுதிலும், உணவு முதலியவைகளைச் சார்ந்த குணங்களிலும், குற்றங் களிலும் அவன் நாட்டமுடையவனாக இருக்க மாட்டான். தவிர வயிற்றை நிரப்புதல், புஷ்டியாயிருத்தல் என்ற வடிவாயமைந்த நிர்வாஹத்திற்கும் ஸமத்வத் தன்மையுள்ளதால் பிரயோஜந மற்றதாயுள்ள குணங்கள் இவைகளுடைய விசாரத்திற்குச் சித்தத்தினுடைய குற்றமேயாகும்.

அக்காரணம் கருதியே பாகவதத்தில் சொல்லப் பெற்றுள்ளது—

"கிம் வர்ணிதேந பஹுநா லக்ஷணம் குணதோஷயோ:.
குணதோஷத்ருஸிர் தோஷோ குணஸ்தூபயவர்ஜித:" இதி.

"—குணங்கள், குற்றங்கள் இவைகளுடைய இலக்கணத்தைப் பலவாறு வர்ணிப்பதில் என்ன பிரயோஜநம் இருக்கப் போகிறது? குணதோஷங்கள் (என்பது) கண்களின் தோஷங்கள். குணமோ வெனில் இரண்டுமில்லாதது" என்றவாறு.

"கந்தா கௌபீநவாஸ்ாஸ்து தண்டத்க்ருக் த்யாநதத்பர:.
ஏகாகீ ரமதே நித்யம் தம் தேவா ப்ராஹ்மணம் விது:" இதி

"—வஸ்த்ரம், கௌபீநவஸ்த்ரம் இவைகளையும், தண்டதாரணம், த்யாநத்தில் நிலைத்திருத்தல், எப்பொழுதும் ஒருவனாகவே ரமித்திருத்தல் என்ற இவை போன்றவைகள் எவனிடம் காண் கின்றனவோ, அவனை தேவர்கள் ப்ராஹ்மணன் என உணரு கின்றனர்." என்றவாறு.

மற்றும், ப்ரஹ்மோபதேசத்தினுல் பிராணிகளிடத்திலுள்ள அநுதாபத்தில் உத்தமத்தன்மையின் ஞாபகத்தினுல் சிரத்தையைத் தோற்றுவிப்பதற்கு, தண்டம், கௌபீநர் முதலியவைகளுடைய அடையாளத்தைத் தரிக்க வேண்டும்.

''கௌபீநம் தண்டமாச்சாதநம் ச ஸ்வசரீரபோகாய
லோகோபகாரார்த்தாய ச பரிக்ரஹேத்'' இதி.

''—கௌபீநம், தண்டம் என்ற இவைகளைத் தனது சரீரம் நிலைத்திருக்கின்ற அளவிற்கும், உலகத்தின் உபசாரத்தின் பொருட்டும் பரிக்ரஹம் செய்து கொள்ள வேண்டும்'' என்பது ச்ருதியாகும். அநுதாபம் தோன்றிய நிலையிலும் தான் அவர்களுடைய வீட்டைக் குறித்த முதலியவைகளின் வார்த்தையைக் கூடச் செய்யக் கூடாது. ஆனுல் த்யாநத்தில் திளைத்தவனுக இருக்க வேண்டும்.

ஏனெனில் — ''தமேவைகம் ஜாநத ஆத்மாநமந்யா வாசோ விமுஞ்சத'' — அந்த ஒன்ருயுள்ள ஆத்மனையே யுணருங்கள். மற்ற வார்த்தைகளை விடுங்கள்'' என்பது ச்ருதியாகும்.

மற்றும்,

''தமேவ தீரோ விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்ராஹ்மண:,
நாநுத்யாயாத் பஹூஂங் சப்தாந் வாசோ விக்லாபநம் ஹி தத்: இதி.

''—இத்தகைய ஆத்மனைப் பண்டிதனுகிய ப்ராஹ்மணன் உணர்ந்து, முடிவில் ப்ரஜ்ஞையையுடையவனுகப் பலவாறுள்ள வார்த்தைகளைச் சிந்தனை செய்ய வேண்டாம். அவ்வாறு அதிகமாகப் பேசுவது வாக்கிற்கு சிரமமே யன்றி வேறில்லை'' என்ற ச்ருதியினுலும் உணர வேண்டும்.

தவிர, ப்ரஹ்மோபதேசமோ வெனில், வேறு வாக்காக இருக்க முடியாது. ஆதலால் த்யாநத்திற்கு விரோதியுமாகாது. அந்த த்யாநமும் தனிமையிலே இடையூறு இல்லாமலும் இருப்பதுமாகும். அக்காரணத்தாலேயே வேறு ஸ்ம்ருதியிலும் சொல்லப் பெற்றுள்ளது.—

''ஏகோ பிக்ஷுர்யதோக்த: ஸ்யாத் த்வாவேவ மிதுநம் ஸ்ம்ருதம்.
த்ரயோ க்ராம: ஸமாக்யாத; ஊர்த்வம் து நகராயதே.
நகரம் ந ஹி கர்தவ்யம் க்ராமோ வா மிதுநம் ததா.
ராஜாதிவார்தா தேஷாம் ஸ்யாத் பிக்ஷாவார்தா பரஸ்பரம்.

நிராசிஷமநாரம்பம் நிர்நமஸ்காரமஸ்துதிம்.

அக்ஷீணம் க்ஷீணகர்மாணம் தம் தேவா ப்ராஹ்மணம் விது:'' இதி.

''—ஒரே பிக்ஷுவானவன் முன் சொல்லப் பெற்றவனாக இருப்பவன். இரண்டு பிக்ஷுக்களாயின் மிதுநம் எனச் சொல்லப் பெறும், மூன்று பிக்ஷுக்கள் சேர்ந்தால் அது கிராமமாகும். இதற்குமேல் அவர்கள் ஒன்றுசேர்ந்தால் அது நகரமாகிவிடும். நகரத்தைச் செய்வது கூடாது. ஏனெனில் அவர்கள் ஒருவருக்கொருவர் பிக்ஷையைக் குறித்த வார்த்தைகள் பேசுவதற்கு நேரிடும். அப்பொழுது அது அரசவார்த்தையாக மாறிவிடும்.'' என்றவாறு,

மேலும்,

''—ஆசிர்வாதமில்லாதவனும், ஒரு கர்மாவையும் தொடங்காதவனும், நமஸ்காரமில்லாதவனும், துதியில்லாதவனும், களைப்பில்லாதவனும், களையப்பெற்ற கர்மாவையுடையவனுமாக எவன் இருக்கின்றானோ, அவனை தேவர்கள் ப்ராஹ்மணன் என உணருகின்றனர், என்றவாறு.

விசேஷமாயுள்ள ஸம்ஸாரிகளினால் நமஸ்காரம் செய்கின்ற புருஷர்களுக்கு ஆசிர்வாதமானது செய்யப் பெறுகின்றது. எவனுக்கு எது விருப்பமோ, அந்த அந்த விருப்பத்தைக் குறித்து அதனுடைய வளர்ச்சியின் வேண்டுகோள் ஆசிர்வாதம் எனப் பெறும்.

ஆகவே புருஷர்களுடைய ருசியின் வேற்றுமையின் காரணமாக அவர்களுடைய விருப்பத்தின் அங்வேஷணத்தில் (தேடுதல்) வ்யக்ரமான (முனைந்துள்ள) சித்தத்தையுடையவனுக்கு லோக வாஸனையானது வளர்ச்சியடைகின்றது. அந்த வாஸனையும் ஞானத்திற்கு விரோதமாக அமைவதுமாகும்.

அவ்வாறே வேறு ஸம்ருதியிலும்—

''லோகவாஸநயா ஜந்தோ: ஶாஸ்த்ரவாஸநயாபி ச.

தேஹவாஸநயா ஞாநம் யதாவந்நைவ ஜாயதே'', இதி.

''—பிராணிகளுக்கு உலகவாஸனையினாலும், சாஸ்த்ரவாஸனையினாலும், சரீரவாஸனையினாலும் ஞானமானது உள்ளவாறு ஒரு பொழுதும் உண்டாகாது'' எனச் சொல்லப் பெற்றுள்ளது.

இதுவும், தொடக்கம் (ஆரம்பம்), நமஸ்காரம் முதலியவைகளிலும் காணவேண்டுவதாகும். இந்த க்ருஹம், க்ஷேத்ரம் முதலியவைகளுடைய ஸம்பாதநத்தின் முயற்சியானது தன் பொருட்டா? பிறருடைய உபகாரத்தின் பொருட்டா? இந்த ஆசிர்வாதம் ஆரம்பம் என்ற இரண்டையும் முக்தனுல் தியாகம் செய்யப் பெறவேண்டும்.

மற்றும், ஆசிர்வாதம் இல்லாத காரணத்தால் நமஸ்காரம் செய்கின்றவர்களுக்கு துக்கமுண்டாகுமே என்ற ஐயமும் வேண்டாம். லோகவாஸனே, துக்கம் என்ற இவ்விரண்டினுடைய பரிஹாரத்தின் பொருட்டு முழுவதுமான ஆசிர்வாதத்தினுடைய பிரதிநிதியாக, ''நாராயண'' என்ற சொல்லின் பிரயோகம் இருப்பதால் என்க. எல்லாவகையான ஆரம்பமும் குற்றமுள்ளதேயாகும்.

இவ்விஷயத்தைக்குறித்து ஸ்ம்ருதியும் — '' ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேநாக்நிரிவாவ்ருதா :— ''எவ்வாறு புகையினுல் அக்நியானது சூழப்பெற்றுள்ளதோ, அவ்வாறு கர்மங்கள் யாவும் தோஷங்களால் சூழப்பெற்றுள்ளன'' என்றவாறு நமஸ்காரமும் விவிதிஷா ஸம்ந்யாஸிக்குச் சொல்லப் பெற்றுள்ளது.

''யோ பவேத் பூர்வஸம்ந்யாஸீ துல்யோ வை தர்மதோ யதி.
தஸ்மை ப்ராணாம: கர்தவ்ய: நேதராய கதாசந'' இதி.

''—எவன் பூர்வஸம்ந்யாஸியாக இருக்கின்ருனே, அவன் தர்மத்தின் ஆசரணத்தின் காரணமாக தனக்கு துல்யமாக இருந்தால், அவன் பொருட்டு ப்ரணாமம் செய்ய வேண்டும். மற்றவர்களைக் குறித்து ஒரு பொழுதும் செய்யக் கூடாது'' என்றவாறு.

அவ்விடத்தில் பூர்வத்தின் தன்மை, தர்மத்திற்குத் துல்யமாயுள்ள நிலை இவைகளுடைய விசாரத்தில் சித்தமானது கலக்கத்தையடைகின்றது. அக்காரணத்தாலேயே நமஸ்காரத்தின் அளவிலேயே பலர் கலஹம் செய்து கொண்டு இருக்கின்றவர்களாகவும் காண்கின்றனர். அவ் விஷயத்திற்குரிய காரணமானது வார்திககாரரால் காண்பிக்கப் பெற்றுள்ளது—

''ப்ரமாதிநோ பஹிஸ்சித்தா : பிஶுநா : கலஹோத்ஸுகா:
ஸம்ந்யாஸிநோऽபி த்ருச்யந்தே தைவஸந்தூஷிதாஶயா:'' இதி.

"—(தனது) நிலையிலிருந்து நழுவியவர்களாகவும், சித்தத்தை வெளிவியாபாரங்களில் செலுத்துகின்றவர்களாகவும், கோள் சொல்லுகின்றவர்களாகவும், கலஹம் செய்வதில் உத்ஸாஹ முள்ளவர்களாகவும், தேவதைகளை தூஷிக்கின்ற மனப் பான்மையை யுடையவர்களாகவும் இருக்கின்ற ஸம்ந்யாஸி களும் காணப் பெறுகின்றனர்" என்றவாறு.

முக்தனுக்கு நமஸ்காரத்தின் இன்மையைக் குறித்து பகவத் பாதர்களால் காண்பிக்கப் பெற்றுள்ளது.—

"நாமாதிப்ய : பரே பூம்நி ஸ்வாராஜ்யே ஽வஸ்திதோ யதா.
ப்ரணமேத் கம் ததாத்மஜ்ஞோ ந கார்யம் கர்மணா ததா" இதி.

"—மேன் மேலும் உயர்ந்ததெனக் கேட்கப் பெற்ற நாம், வாங், (வாக்கு) மனம்,முதலிய ப்ராணாந்தங்களினின்றும் பரமும், அத்வய மும், ஸ்வாராஜ்யமுமாகிய பூமாவினிடத்தில் நான் பூமாவாயுள்ள ப்ரஹ்மமாயிருக்கிறேன் என்று எப்பொழுது நினைக்கின்றானோ, அந்த ஆத்மஜ்ஞன், அப்பொழுது யாரை நமஸ்காரம் செய்வான்? ஆதலின் கர்மத்தான் செய்யத் தக்கது யாதொன்றும் அவனுக்கு இன்று என உணர்க" என்றவாறு.

மற்றும், சித்தத்தினுடைய கலுஷத்தின் காரணமாகத் தோன்றிய நமஸ்காரத்தினுடைய இன்மையின் தடுத்தல் இருந்த பொழுதிலும், எல்லாவற்றையும் ஸமமாகக் காண்கின்ற புத்தியினாலே தெளிவிற்குக் காரணமாயுள்ள நமஸ்காரமும் அங்கிகரிக்கப் பெறுகின்றது.

இதைக் குறித்து ஸ்மிருதியிலும்—

"ஈஶ்வரோ ஜீவகலயா ப்ரவிஷ்டோ பகவாநிதி.
ப்ரணமேத் தண்டவத் பூமாவாச்வசண்டாளகோகரம்" இதி.

"—பகவானாகிய ஈச்வரன் ஜீவகலையோடு கூட (சராசரங்களில்) பிரவேசித்திருக்கிறார் என்ற நினைவோடு நாய் முதல் சண்டாளன், பசு, கழுதை என்ற இவைகளைக் குறித்து பூமியில் தண்டம் போல் விழுந்து நமஸ்காரம் செய்ய வேண்டும்". என்றவாறு

இவ்வாறு ப்ராஹ்மணனது இலக்கணம் சொல்லப் பெற்றது.

இப்பொழுது ஸ்துதி சொல்லப் பெறுகின்றது—

ஸ்துதி என்பது மநுஷ்யவிஷயமானது, அது தடுக்கப் பெற்றுள்ளது. ஈச்வரவிஷயமானது தடுக்கப் பெறவில்லை, ஆகவே ப்ருஹஸ்பதி ஸ்மிருதியிலும்—

''ஆதரேண யதா ஸ்தௌதி தநவந்தம் தநேச்சயா.
ததா சேத் விச்வகர்தாரம் கோ ந முச்யேத பந்தநாத்'' இதி.

''—எவ்வாறு பொருளை விரும்பி, பொருளுள்ளவனை ஆதரவோடு கூட துதி செய்யப் பெறுகின்றதோ; அவ்வாறு உலகத் தலைவனுயுள்ள பரமேச்வரனை துதி செய்தால் பந்தத்திலிருந்து எவன் தான் விடுதலை பெறமுடியாது? முடியுமன்றோ'' என்றவாறு.

அக்ஷீணத்வம் என்றது — அதீநத் தன்மை. ஆகையினுலேயே ஸ்ம்ருதியும்—

''அலப்த்வா ந விஷாதீ ஸ்யாத் காலேயுத்யுஶநம் க்வசித்.
லப்த்வா ந ஹ்ருஷ்யேத் த்ருதிமாந் உபயம் தைவதந்த்ரிதம்'' இதி.

''—காலாகாலத்தில் சில பொழுது உணவைப் பெறமுடியாது போனுல் துக்கத்தையடைந்தவனுக இருக்க மாட்டான். உணவைப் பெற்றுலோ ஸம்தோஷத்தையும் அடையமாட்டான். ஆகவே உறுதியுள்ள அவன் இந்த இரண்டும் தைவாயத்தம் எனக் கருதுவான்'' என்றவாறு.

க்ஷீணகர்மத்வம் என்பது, விதி, நிஷேதம் இவைகளுக்கு அதீநமன்று. ஏனெனில்—''நிஸ்த்ரைகுண்யே பதி விசரத: கோ விதி: கோ நிஷேத:'' — ''முக்குணங்களையும் கடந்துள்ள வழியில் ஸம்சாரம் செய்பவனுக்கு விதியேது? (கட்டளை) நிஷேதமேது? (தடுத்தல்) என்றதால்'' என்க.

இதைக் கருதியே பகவானுலும் சொல்லப் பெற்றுள்ளது—

''த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந.
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந்'' இதி.

''—ஓ அர்ஜுந! வேதங்கள் யாவும் முக்குணங்களைப்பற்றிய விஷயங்கள், ஆதலால் முக்குணங்களையும் விட்டவனுக நீ இருப்பாயாக. த்வந்தவங்களை (ஸுகம், துக்கம், வெற்றி, தோல்வி யகற்றி நிலைத்த ஸத்வத்தைத் தழுவியவனுகவும், யோகக்ஷேமங்

களை (வேட்டல், காத்தல்) யகற்றியவனாகவும், ஆத்மனைக் காண்கின்ற உணர்விலே முயற்சியுடையவனாகவும் இருப்பாயாக" என்றவாறு.

நாரதரும்—

"ஸ்மர்த்வ்ய : ஸததம் விஷ்ணுர் விஸ்மர்த்வயோ ந ஜாது சித்.
ஸர்வே விதிநிஷேதா: ஸ்யுரேதயோரேவ கிம்கரா:.
அஹேரிவ கணாத்பீத: ஸந்மாநாந்மரணாதிவ.
குணபாதிவ ய: ஸ்த்ரீப்யஸ்தம் தேவா ப்ராஹ்மணம் விது:" இதி.

"—எப்பொழுதும் விஷ்ணுவை ஸ்மரணம் செய்யவேண்டும் ஒருபொழுதும் அவரை மறப்பது கூடாது. யாவும், விதி, நிஷேதம் இவைகளோடு கூடியவைகள். இவைகளுக்கு ஏவலாளர்களாகவும் இருக்கின்றனர்" என்றவாறு.

"பாம்புக் கூட்டத்திலிருந்து அச்சமடைந்தவன், மரணத்தால் ஸம்மாநிக்கப் பெற்றவன் போலவும், எவன் பெண்களிடமிருந்து பிணத்தைப் போலவும் ஒதுங்குகின்றானோ, அவன் ப்ராஹ்மணன் என்று தேவர்கள் உணருகின்றனர்," என்றவாறு.

மற்றும், "ராஜவார்தாதி தேஷாம் ஸ்யாத்— அவர்களுக்கு ராஜ (அரச) வார்த்தை முதலியன உண்டாகும்" எனச் சொல்லியுள்ளதால், பாம்பைப் போன்று கூட்டத்திலிருந்து அச்சமானது தோன்றுவதுமாகும், ஸம்மாநத்திற்கு ஆசை (பற்று) காரணமாவதால் அது புருஷார்த்தத்திற்கு விரோதியாயிருப்பதால் மரணத்தைப் போல் விடவேண்டுவதுமாகும். இவ்விடத்தில் 'நரகத்தைப் போல்' எனவும் பாடம் காணப் பெறுகின்றது.

அக்காரணத்தால் ஸ்ம்ருதியும்—

"அஸம்மாநாத் தபோவ்ருத்தி : ஸம்மாநாத்து தப: க்ஷய:.
அர்சித: பூஜிதோ விப்ர: துக்தா கௌரிவ ஸீததி." இதி.

"—ஸம்மாநம் இல்லாது போனால் தவத்தினுடைய வளர்ச்சியுண்டாகின்றது. ஸம்மானம் இருக்குமேயாகில் தவத்தினுடைய வளர்ச்சியானது குன்றிவிடுகின்றது. அர்ச்சனை செய்தும், ஆராதனை செய்தும் விப்ரன் கறக்கப் பெற்ற பசுவைப் போல வருந்துகின்றான்" என்றவாறு.

இதைக் கருதியே அவமாநமானது கொள்ளத்தக்கதாக ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது.

"ததாசரேத வை யோகீ ஸ்தாம் தர்மமதூஷயந்.
ஜநா யதா நாவமந்யேரந் கச்சசேயுர் தைவ ஸங்கதிம்" இதி.

"—யோகியானவன் ஸாதுக்களுடைய தர்மத்தைத் தொடர்ந்து ஸ்மரணம் செய்து கொண்டு, அவ்வாறே ஆசரித்து (அநுஷ்டாநம்) வரவேண்டும். மக்கள் எவ்வாராயினும் அவமதித்தாலும், சேர்க்கையை ஒருபொழுதும் நாடக்கூடாது" என்றவாறு.

மற்றும், பெண்களிடத்தில் இருவகையான தோஷம் காணப் பெறுகின்றது —தடுத்து நிறுத்தல், ஜுகுப்ஸை யடைதல் என்பது. அவைகளில் தடுத்து நிறுத்தல் என்பது சிலபொழுது ஆசையால் ப்ராரப்தபலத்தைக் கொண்டு அது மீறப்பெறுவதுமாகும். இதைக் குறித்து ஸ்ம்ருதியும் சொல்லுகிறது—

"மாத்ரா ஸ்வஸ்ரா துஹித்ரா வா நைகசய்யாஸநோ பவேத்.
பலவாநிந்த்ரியக்ராமோ வித்வாம்ஸமபி கர்ஷதி," இதி.

"—அன்னையோடும், தங்கையோடும், பெண்ணோடும் கூட ஒரே சயநத்திலும், ஆஸநத்திலும் அமர்ந்தானேயாகில், புலன்களுடைய தொகுதியானது வலிமை வாய்ந்தவையாகையால் அவை பண்டிதனையும் இழுத்துக்கொள்ளும் திறமைவாய்ந்தது" என்றவாறு.

இவ்வாறே ஜுகுப்ஸையைக்குறித்து ஸ்மருதிகளிலும் காணப் பெறுகின்றது—

"ஸ்த்ரீணுமவாச்யதேசஸ்ய க்லிந்நநாடீவ்ரணஸ்ய ச.
அபேதே ऽபி மநோ பேதாத் ஜந: ப்ராயேண வஞ்ச்யதே." இதி.

"—நனைக்கப்பெற்ற நாடிகளென்னும் புண்களோடு கூடிய பெண்களுடையை கீழ்ப்ரதேசமானது பேதமில்லாமலிருந்தாலும், மனிதன் மனதினுடைய பேதத்தால் பெறும்பாலும் வஞ்சிக்கப் பெறுகின்றான்" என்றவாறு.

"சர்மகண்டம் த்விதா பிந்நமபாநோத்காரதூபிதம்.
யே ரமந்தி நராஸ்தத்ர ஸாஹஸம் கிமத: பரம்" இதி.

"—தோல் பகுதியை இரண்டாகப் பிளந்து அபாநத்தின் உத்காரத்தினால் தூபமாகச் செய்யப் பெற்ற சோர்வடைந்த விடத்தில்

மனிதர்கள் எக்காரணம் கொண்டுதான் ரமிக்கின்றரோ. தெரியவில்லை. இந்த ஸாஹஸச்செயலை என்னவென்று சொல்லுவது? இதைக்காட்டிலும் வேறு என்ன வேண்டியிருக்கின்றது? என்றவாறு.

இவ்விடத்தில் — "யே ரமந்தே நராஸ்தத்ர க்ருமிதுல்யா: கதம் ந தே" — "எந்த மனிதர்கள் அவ்விடத்தில் ரமிக்கின்றனரோ, அவர்கள் புழுவுக்கு துல்யமாக ஏன் இருக்க மாட்டார்கள்?' என்ற பாடமும் காணப்பெறுகின்றது. ஆகையினால் தடுத்தல், லஜ்ஜை என்ற இவையிரண்டினுடைய விவக்ஷையினால் குணபத்ருஷ்டாந்தமானது இவ்விடத்தில் சொல்லப்பெற்றது.

"யேந பூர்ணமிவாகாசம் பவத்யேகேந ஸர்வதா.

சூந்யம் யஸ்ய ஜநாகீர்ணம் தம் தேவா ப்ராஹ்மணம் விது:" இதி.

"—எவனால் நிறைந்துள்ள ஆகாசம் போல் தனிமையாகவே எப்பொழுதும் இருக்கப் பெறுகின்றதோ, எவனுக்கு மக்கள் தொகுதியானது சூந்யமாகக் காணப் பெறுகின்றதோ, அவனை தேவர்கள் ப்ராஹ்மணன் என உணருகின்றனர்" என்றவாறு.

மற்றும், ஸம்ஸாரிகளுக்கு தனித்த நிலையில் இருப்பது பயம், ஆலஸ்யம் முதலியவைகளுக்குக் காரணமாகையால், அது ஒதுக்கப் பெற வேண்டும். மக்கள் ஸமூஹம் அவ்வாறன்று. ஆதலால் அங்கீகரிக்க வேண்டும். யோகிகளுக்கோ வெனில் அதற்கு மாறானது. ஏகாகியாக இருக்கும் நிலையில் இடையூறு இல்லாமல் தியானத்தினுடைய தொடர்ந்த அநுவிருத்தியினால் (அநுஸந்தாநம்) பரிபூர்ணமாயுள்ள பரமாநந்த வடிவத்தோடு கூட யாவும் பூர்ணமான ஆகாசம் போல பிரகாசிக்கின்றது. ஆகையால் அச்சம், ஆலஸ்யம், சோகம், மோஹம் முதலியவைகள் இருக்கின்றதில்லை.

"யஸ்மிந் ஸர்வாணி பூதாநி ஆத்மைவாபூத் விஜாநத:.

தத்ர கோ மோஹ : க: சோக : ஏகத்வமநுபச்யத:" இதி.

"—ஆத்மஜ்ஞாநிக்கு எந்தக் காலத்தில் எல்லா பூதங்களும் தானாகவே ஆகிவிடுமோ, அப்பொழுது அவை யாவையும் ஒன்றாகவே காண்கின்றவனுக்கு ஆசையேது? சோகமேது?" என்பது ச்ருதியாகும்.

மற்றும், மக்களுடைய தொகுதியினுல் நிரம்பியுள்ள இடமானது அரசனுடைய வார்த்தை (கட்டளை) முதலியவையினுல் தியானத்திற்கு விரோதமாகையால், ஆநந்தத்தினுடைய வடிவத்தின் வெளியீடு இல்லாத காரணத்தால், அது சூந்யம் போல சித்தத்தை வருந்தச் செய்கின்றது. உலகத்திற்குப் பொய்யான தன்மை (மித்யாத்வம்) யுள்ள காரணத்தாலும், ஆத்மாவுக்கு பூர்ணத் தன்மை நிரம்பியுள்ளதாலும் என்பது பொருளாகும்.

இவ்வாறு ஸ்துதியினுடைய இலக்கணம்
சொல்லப் பெற்றது.



## அதிவர்ணுஶ்ரமியினுடைய இலக்கணம்.

இப்பொழுது அதிவர்ணுஶ்ரமியினுடைய இலக்கணம் சொல்லப் பெறுகின்றது ; இது ஸூதஸ்ம்ஹிதையில் முக்தி கண்டத்தில் ஐந்தாவது அத்யாயத்தில் விஷ்ணுவைக் குறித்து பரமேச்வரனுல் சொல்லப் பெற்றுள்ளது. அது வருமாறு—

"ப்ரஹ்மசாரீ க்ருஹஸ்தஶ்ச வாநப்ரஸ்தோ ऽத பிக்ஷுக:
அதிவர்ணுஶ்ரமீ தே ऽபி க்ரமாத் ச்ரேஷ்டா விசக்ஷுண:" (9)

"—ப்ரஹ்மசாரீ, க்ருஹஸ்தன், வாநப்ரஸ்தன், பிறகு பிக்ஷுகன், அதிவர்ணுச்ரமீ என்பவர்கள். இவர்கள் முறையே ஞாநம் நிரம்பியவர்களாகவும், சிறந்தவர்களாகவும் விளங்குகின்றனர். (9)

"அதிவர்ணுபிச்ரமீ ப்ரோக்த: குரு: ஸர்வாதிகாரிணும்.
ந கஸ்யாபி பவேச்சிஷ்யோ யதாஹம் புருஷோத்தம" (14)

"—அதிவர்ணுச்ரமியானவன் எல்லா அதிகாரிகளுக்கும் குருவாயிருப்பவன் எனச் சொல்லப் பெற்றது. அவன் ஒருவருக்கும் சிஷ்யனுகான். ஓ புருஷோத்தம ! எவ்வாறு நான் இருக்கிறேனே (அவ்வாறு) என்றவாறு. (14)

"அதிவர்ணுச்ரமீ ஸாக்ஷாத் குரூணும் குருருச்யதே.
தத்ஸமோ நாதிகஶ்சாஸ்மிந் லோகே ஸ்த்யேவ ந ஸம்சய:" (15)

"—அதிவர்ணுஶ்ரமீ ஸாக்ஷாத் குருக்களுக்கெல்லாம் குருவாயிருப்பவன். அவனுக்கு ஸமாநமானவனும், மேலானவனும் இவ்

வுலகத்தில் ஒருவரும் இல்லவே இல்லை. இவ்விஷயத்தில் ஐயமுமில்லை. (15)

"ய: சரீரேந்த்ரியாதிப்யோ விபிந்நம் ஸர்வஸாக்ஷிணம்.
பாரமார்த்திக விஜ்ஞாநம் ஸுகாத்மாநம் ஸ்வயம்பரபம்.
பரம் தத்வம் ந ஜாநாதி ஸோऽதிவர்ணாஸ்ரமீ பவேத்" (16)

"—எவன் சரீரம், புலன்கள் இவைகளைக் காட்டிலும் வேருகவும் எல்லா வஸ்துக்களுக்கும் ஸாக்ஷியாகவும், உண்மையாகவுமுள்ள விஜ்ஞாநமாகவும், ஸுகத்தின் வடிவாகவும், ஸ்வயம் ப்ரகாச மாகவுமுள்ள ஆத்மாவான பரதத்வத்தையுணருகின்ருனே, அவன் அதிவர்ணாஸ்ரமியாவன்" (16)

"யோ வேதாந்தமஹாவாக்ய ஸ்ரவணேனைவ கேசவ.
ஆத்மாநமீச்வரம் வேத ஸோ ऽதிவர்ணாஸ்ரமீ பவேத்." (17–)

"—எவன் வேதாந்த மஹாவாக்ய சிரவணத்திருலேயே ஆத்மாவை ஈச்வரனுக உணருகின்ருனே, ஓ கேசவ! அவனே அதிவர்ணாஸ்ரமி யாவன் (17-)

"யோ வர்ணாஸ்ரமநிர்முக்தம் அவஸ்தாத்ரயஸாக்ஷிணம்.
மஹாதேவம் விஜாநாதி ஸோऽதிவர்ணாஸ்ரமீ ப்வேத். (18–)

—எவன் வர்ணாச்ரம தர்மங்களால் விடுதலை பெற்றவனும், மூவகையாயுள்ள நிலைகளுக்கு (அவஸ்தை) ஸாக்ஷியாகவும் இருக்கின்ற மஹாதேவனை விசேஷமாக உணருகின்ருனே, அவன் அதிவர்ணாஸ்ரமியாவன். (18-)

"வர்ணாச்ரமாதயோ தேஹே மாயயா பரிகல்பிதா:
நாத்மனோ போத ரூபஸ்ய மம தே நாஸ்தி ஸர்வதா.
இதி யோ வேத வேதாந்தை; ஸோ ऽதிவர்ணாஸ்ரமீ பவேத்"

"—வர்ணாஸ்ரமதர்மங்கள் மாயையினுல் சரீரத்தில் கல்பனை செய்யப் பெற்றுள்ளன எனவும், ஞானவடிவாயுள்ள எனது ஆத்மனிடத்தில் அவை ஒருபொழுதும் இருப்பனவல்ல எனவும் எவன் வேதாந்தவிசாரணையினுல் உணருகின்ருனே, அவன் அதிவர்ணாஸ்ரமீ எனப் பெறுவான். (-19, 20)

''ஆதித்யஸம்நிதௌ லோகஸ்சேஷ்டதே ஸ்வயமேவ து.

ததா மத்ஸம்நிதாநே ஸமஸ்தம் சேஷ்டதே ஜகத்.

இதி யோ வேத வேதாந்தை: ஸோ ऽதிவர்ணுஸ்ரமீ பவேத். (21-)

*''—ஸூர்யனுடைய ஸந்நிதியில் (எதிரில்) எவ்வாறு உலகம் இயல்பாகவே இயங்குகின்றனதோ (சேஷ்டை) அவ்வாறே என்னுடைய ஸந்நிதியில் இவ்வுலகம் யாவும் இயங்குகின்றன, என வேதாந்த விசாரத்தால் எவன் உணருகின்ருனே, அவன் அதிவர்ணுச்ரமி யாவன்.''* (21-)

''ஸுவர்ணே ஹாரகேயூரகடகஸ்வஸ்திகாதய : (22)

கல்பிதா மாயயா தத்வத் ஜகந்மய்யேவ ஸர்வதா.

இதி யோ வேத வேதாந்தை: ஸோऽதிவர்ணுஸ்ரமீ பவேத்.'' (23)

*''—எவ்வாறு தங்கத்தில் மாலை, கேயூரம், காப்பு, கைவளை முதலியன மாயையினுல் கல்பனை செய்யப் பெறுகின்றனவோ, அவ்வாறே உலகமானது எப்பொழுதும் என்னிடத்திலேயே கல்பனை செய்யப் பெற்றுள்ளது என எவன் உணருகின்ருனே, அவன் அதிவர்ணுச்ரமி எனப் பெறுவன்''* (22,23)

''சுக்திகாயாம் யதா தாரம் கல்பிதம் மாயயா ததா

மஹதாதிஜகந்மாயாமயம் மய்யேவ கல்பிதம்.

இதி யோ வேத வேதாந்தை:! ஸோऽதிவரணுஸ்ரமீ பவேத். (24-)

*''—எவ்வாறு சிப்பியில் வெள்ளியானது மாயையினுல் கல்பனை செய்யப் பெற்றுள்ளதோ, அவ்வாறே மஹத் முதலான மாயா மயமான உலகம் என்னிடத்திலேயே கல்பனை செய்யப் பெற்றுள்ளது, என வேதாந்த விசாரங்களினுல் எவன் உணருகின்ருனே, அவன் அதிவர்ணுச்ரமியாவன்* (24)

''சண்டாளதேஹே பஸ்வாதிசரீரே ப்ரஹ்மவிக்ரஹே. (25)

அந்யேஷு தாரதம்யேந ஸ்த்திதேஷு புருஷோத்தம.

வ்யோமவத் ஸர்வதா வ்யாப்த: ஸர்வஸம்பந்தவர்ஜித: (26)

ஏகரூபோ மஹாதேவ: ஸ்தித: ஸோऽஹம் பராம்ருத:

இதி யோ வேத வேதாந்தை: ஸோ ऽதிவர்ணுஸ்ரமீ பவேத். (27)

''—எவ்வாறு சண்டாளனுடைய சரீரத்திலும், பசு முதலிய விலங்குகளின் சரீரத்திலும், ப்ராஹ்மண சரீரத்திலும், மற்றுமுள்ள எல்லாவற்றிலும் தாரதம்யத்தோடு இருக்கின்ற இவைகளில் ஆகாசம்போல் எப்பொழுதும் வியாபித்துக் கொண்டும், எல்லாத் தொடர்பையும் விட்டு, ஒரே வடிவாயுள்ள மஹாதேவனைப் பரமாயும், நித்யமாயுமுள்ள நான் என்று எவன், வேதாந்த விசாரங்களினால் உணருகின்றானோ, ஓ புருஷோத்தம! அவனே அதிவர்ணாச்ரமியாவன்.'' (25-27)

''விநஷ்டதிக்ப்ரமஸ்யாபி யதாபூர்வம் விபாதி திக்.
ததா விஜ்ஞாந வித்வஸ்தம் ஜகந்மே பாதி தந் நஹி. (28)

இதி யோ வேத வேதாந்தை: ஸோ ऽதிவர்ணாஶ்ரமீ பவேத்.

''—ஒருவனுக்கு திக்பரமையானது நாசமாயினும், முன் போல் எவ்வாறு அந்த திக் தோன்றுமோ, அவ்வாறே ஞானத்தால் நாசமடைந்த உலகம் எனக்குத் தோன்றுகின்றது. ஆனால் அது உண்மையன்று, என எவன் வேதாந்த விசாரங்களினால் உணருகின்றானோ, அவன் அதிவர்ணாச்ரமியாவன்.'' (28-)

''யதா ஸ்வப்ந ப்ரபஞ்சோ ऽயம் மயி மாயா விஜ்ரும்பித:. (29)
ததா ஜாக்ரத்ப்ரபஞ்சோ ऽயம் மயி மாயா விஜ்ரும்பித:.

இதி யோ வேதவேதாந்தை: ஸோ ऽதிவர்ணாஶ்ரமீ பவேத். (30)

''—எவ்வாறு இந்த ஸ்வப்நப்ரபஞ்சமானது என்னிடத்தில் மாயையினுடைய சக்தியினால் விரிந்துள்ளதோ, அவ்வாறே ஜாக்ரத்ப்ரபஞ்சமும் என்னிடத்தில் மாயையின் சக்தியினால் தோன்றுவது, என எவன் வேதாந்த விசாரங்களினால் உணருகின்றானோ, அவனே அதிவர்ணாச்ரமியாவன்.'' (-29, 30)

''யஸ்ய வர்ணாச்ரமாசாரோ கலித: ஸ்வாத்ம தர்சநாத்.
ஸ வர்ணாஶ்ரமாந் தர்மாந் அதீத்ய ஸ்வாத்மநி ஸ்தித:'' (31)

''—எவனுக்குத் தனது ஆத்மதர்சநத்தால் வர்ணாச்ரம தர்மங்கள் நழுவுகின்றனவோ, அவன் வர்ணாச்ரம தர்மங்கள் யாவையும் கடந்து தனது ஆத்மனிடத்தில் நிலைத்திருக்கின்றான்'' (31)

''யஸ்த்யக்த்வா ஸ்வாச்ரமாந் வர்ணாந் ஆத்மந்யேவ ஸ்தித: புமாந்.
ஸோ ऽதிவர்ணாச்ரமீ ப்ரோக்த: ஸர்வவேதார்த்தவேதிபி: (32)

"—எவன் தனது ஆச்ரமங்களையும், வர்ணங்களையும் கடந்து தனது ஆத்மனிடத்தில் நிலைத்திருக்கின்றானோ, அவன் வேதப்பொருள்கள் யாவையுமுணர்ந்தவர்களினால் அதிவர்ணாஶ்ரமீ எனச் சொல்லப் பெறுகின்றான். (32)

இப்பொழுது இவ்வாறு சொல்லப் பெற்ற அதிவர்ணாச்ரமியினுடைய அநுபவம் சொல்லப் பெறுகின்றது—

"ந தேஹோ நேந்த்ரியம் ப்ராணோ ந மநோபுத்யஹம்க்ருதீ.
ந சித்தம் நைவ மாயா வை ந ச வ்யோமாதிகம் ஜகத்" (33)

"ந கர்தா நைவ போக்தா ச ந ச போஜயிதா ததா.
கேவலம் சித் ஸதாநந்தோ ப்ரஹ்மைவாத்மா யதார்த்தத:" (34)

"—(ஆத்மா) சரீரமன்று, இந்த்ரியமுமன்று, ப்ராணனுமன்று, மனமுமன்று, புத்தியுமன்று, அஹம்காரமுமன்று, சித்தமுமன்று, மாயையுமன்று, புத்தியுமன்று, மேலும் ஆகாசம் முதலிய உலகமுமன்று, கர்தாவுமன்று, போக்தாவுமன்று, (புசிப்பவன்) அவ்வாறே போஜயிதாவுமன்று. (புசிப்பிக்கின்றவன்) ஆனால் உண்மையில் கேவலம் சித்து, ஸத்து, ஆநந்தம் என்ற வடிவாயமைந்த ப்ரஹ்மமேயாகும். இதுவே ஆத்மன் எனச் சொல்லப் பெறும்." (33, 34)

"ஜலஸ்ய சலநாதேவ சஞ்சலத்வம் யதா ரவே:.
ததாஹங்காரஸம்ஸர்காதேவ ஸம்ஸார ஆத்மந:" (35)

"—ஜலத்தினுடைய அசைவால் எவ்வாறு ஸூர்யனுக்கு அசைவு உண்டாகின்றதோ, அது போல அஹங்காரத்தின் தொடர்பால் ஆத்மாவுக்கு ஸம்ஸாரமும் தோன்றுவதாகும். (35)

"தஸ்மாதந்யகதா வர்ணா ஆச்ரமா அபி கேசவ.
ஆத்மந்யாரோபிதா ஏவ ப்ராந்த்யா தே நாத்மவேதிந:"(36)

"—ஓ கேசவ ! ஆகையினால் வேறு (வஸ்துக்களைச் சார்ந்த) குணங்களாயிருக்கின்ற வர்ணங்களும், ஆச்ரமங்களும் ப்ரஹ்மத்தில்–ஆத்மாவினிடத்தில் ஆரோபணம் செய்யப் பெற்றுள்ளன. அவர்கள் ஆத்மாவை அறிந்துள்ளவர்களுமன்று. (36)

"ந விதிர்ந நிஷேதஶ்ச ந வர்ஜ்யாவர்ஜ்யகல்பநா.
ஆத்மவிஜ்ஞாநிநாமஸ்தி ததா நாந்யஜ்ஜநார்தந." (37)

''—ஓ ஜநார்தந ! விதியோ, (கட்டளை) நிஷேதமோ (தடுத்தல்) கொள்ளத் தக்கதோ, தள்ளத்தகாததோ என்ற கல்பனையும், அவ்வாறே உலக வியாபாரத்திலுண்டாகின்ற வேறு ஏதாவதோ ஆத்மஞாநிகளுக்கு இல்லை. (37)

ஸ்வாத்மவிஜ்ஞாநிநாம் நிஷ்டாமீத்ருசீமம்புஜேக்ஷண.
மாயயா மோஹிதா மர்த்யா நைவ ஜாநந்தி ஸர்வதா. (38)

''—ஓ தாமரைக்கண்ணா ! தனது ஆத்மனையுணர்ந்துள்ள ஞாநிகளுடைய நிலையானது இத்தகையதாகும். மாயையால் கவரப்பெற்ற மக்கள் ஒருபொழுதும் உணர்ந்து கொள்ள மாட்டார்கள்.

''ந மாம்ஸசக்ஷுஷா த்ருஷ்டா ப்ரஹ்மவிஜ்ஞாநிநாமியம்.
த்ரஷ்டும் சக்யா ஸ்வத:ஸித்தா விதுஷாம் ஸைவ கேசவ.'' (39)

''—ஓ கேசவ ! ப்ரஹ்மஞாநிகளுடைய இந்த நிஷ்டையானது மாம்ஸமயமான கண்களைக் கொண்டு காணமுடியாது. இந்த நிஷ்டையே ஞாநிகளுக்கு இயல்பாக அமைந்துள்ளமாகும். (39)

''யத்ர ஸுப்தா ஜநா நித்யம் ப்ரபுத்தஸ்தத்ர ஸம்யமீ.
ப்ரபுத்தா யத்ர தே வித்வாந் ஸுஷுப்தஸ்தத்ர கேசவ'' (40)

''—எந்த தத்வவடிவில் (ப்ரஹ்மம்), மக்கள் எப்பொழுதும் உறங்குறன்றனரோ, அதில் யோகியானவன் விழித்துக் கொண்டிருக்கின்றான். எங்கு காக்ஷி வடிவாயுள்ள (த்ருச்ய) ப்ரபஞ்சத்தில் மக்கள் விழித்துக் கொண்டிருக்கின்றனரோ, அதில் யோகியானவன் ஸுஷுப்தி (உறக்கம்) நிலையிலிருக்கின்றான்.''

''ஏவமாத்மாநமத்வந்த்வம் நிராகாரம் நிரஞ்ஜநம்.
நித்யசுத்தம் நிராபாஸம் ஸச்சிந்மாத்ரம் பராம்ருதம்'' (41)

''—இவ்வாறு (தன்னை) ஆத்மாவை த்வந்த்வமற்றதாகவும், ஆகாரமற்றதாகவும் (வடிவம்) களங்கமற்றதாகவும், நிரஞ்ஜநமாயும், நித்யசுத்தமாயும், ஆபாஸமற்றதாயும், ஸத், சித் என்ற அளவிலேயுள்ளதாயும், சிறந்த அமுதமாயும்; (உள்ளதாக), (41)

''யோ விஜாநாதி வேதாந்தை: ஸ்வாநுபூத்யா ச நிஸ்சிதம்.
ஸோ ऽதிவர்ணாச்ரமீ ப்ரோக்தோ ஸ ஏவ குருருத்தம:'' (42)

''—எவன் வேதாந்த விசாரங்களினுலும், தனது அநுபவத்தினுலும், உறுதி செய்து கொண்டு உணருகின்ருனே, அவன் அதிவர்ணுச்ரமீ எனச் சொல்லப் பெறுவன். அவனே உத்தமமான குருவுமாவன்'' என்றவாறு.

அதுவும், இத்தன்மை கொண்டது—''விமுக்தஸ்ச விமுச்யதே'' முக்தனுனவன் (பந்தத்தினின்றும்) விடுதலை பெறுகின்ருன்'' என்பது முதலிய ச்ருதிகளும், ஜீவன்முக்தன், ஸ்திதப்ரஜ்ஞன், பகவத்பக்தன், குணுதீதன், ப்ராஹ்மணன் முதலிய வர்ணுச்ரமிகளை நிலைநாட்டுகின்ற ஸ்ம்ருதிகளும் ஜீவன்முக்தியுண்டு என்ற விஷயத்தில் ப்ராமணங்களாகின்றன என்பதும் நிலைபெற்ள்ளது.

இவ்வாறு ஜீவங்முக்திக்குரிய பிராமாணங்கள் சொல்லப் பெற்றன.

இவ்வாறு ஸ்ரீ வித்யாரண்ய முனிவர்
இயற்றிய ஜீவன்முக்தி விவேகத்தில்
முதலாவது ஜீவன்முக்தி ப்ரமாண
ப்ரகரணம் முற்றும்.



# வாஸநாக்ஷயப்ரகரணம். (2)

இனி ஜீவந்முக்தி ஸாதநம் யாது? என்ற மூன்ருவது கேள்விக்கு உத்தரம் சொல்லும் வகையான் ஜீவந்முக்திஸாதநத்தை நிரூபணம் செய்கிறேம்—

தத்வஜ்ஞாநம், மநோநாஶம், வாஸநாக்ஷயம் என்ற இந்த மூன்றும் அந்த ஜீவந்முக்திக்கு ஸாதநங்களாகும். இதனாலேயே வாஸிஷ்டராமாயணத்தில் உபஶாந்தி ப்ரகரணத்தினுடைய முடிவில்: "ஜீவந்முக்தஶரீராணாம்"— "ஜீவந்முக்தசரீரமுடையவர்களுக்கு", என்னும் இந்த ப்ரஸ்தாவத்தில் வஸிஷ்டர்—

"வாஸநாக்ஷய விஜஞாநமநோநாஶா மஹாமதே.
ஸமகாலம் சிராப்யஸ்தா பவந்தி பலதாயிந:" இதி;

"—பெருகிய மதியையுடைய ஓராம! வாஸநாக்ஷயம், தத்வஜ்ஞாநம், மநோநாஶம் என்ற இம்மூன்றையும் நீண்டகாலம் ஸமமாகவே அப்யாஸம் செய்துவந்தால் அவனுக்கு அவை ஜீவந்முக்தி என்ற பயனைக் கொடுப்பனவாய் 'இருக்கின்றன' எனக்கூறுகின்ருர். என இவ்வாறு அந்வயத்தைச் சொல்லி வ்யதிரேகத்தினைச் சொல்லுகிருர். அது—

"த்ரய ஏதே ஸமம் யாவந் ந ஸ்வப்யஸ்தா முஹுர் முஹு:.
தாவந்ந பதஸம்பராப்திர் பவத்யுபி ஸமாஶதை:" இதி;

"—இவை மூன்றும் எதுவரையில் அடிக்கடி ஸமமாக அப்யாஸம் செய்யப் பெறவில்லையோ, அதுவரையில் நூற்றுக்கணக்கான வருஷங்களாயினும் அந்த ஸ்தாநத்தின் நல்லடைவு தோன்றவே தோன்ருது" என்றவாறு.

ஸமகாலமாயுள்ள அப்யாஸமில்லாதவிடத்தும் பாதகத்தையும் சொல்லுகிருர்—

"ஏகைகஶோ நிஷேவ்யந்தே யத்யேதே சிரமப்யலம்.
தந்ந ஸித்திம் ப்ரயச்சந்தி மந்த்ரா: ஸம்கலிதா இவ"

"—இவை ஒவ்வொன்ருக நீண்டகாலம் மிகுதியாக ஸேவிக்கப் பெறினும், மந்த்ரங்கள் ஒவ்வொன்ருகக் கூட்டப்பட்ட பொழுது பயனைக் கொடுக்காதது போல அவை ஸித்தியைக் கொடுப்பவையுமாகா" என்றவாறு.

எவ்வாறு, ஸந்த்யாவந்தநத்தில் மார்ஜநத்தோடு (துடைத்தல்) பொருத்தப் பெற்றுள்ள "ஆபோஹிஷ்டா"..................... என்பது முதலிய மூன்று மந்த்ரங்களிலும் (ரிக்) ஒவ்வொரு ரிக்கினைத் தினந்தோறும் படித்தால் சாஸ்த்ரீயமான அநுஷ்டாநம் ஸித்தி பெறுவதில்லையோ, அல்லது, எவ்வாறு ஷடங்க (ஆறு அங்கம்) மந்த்ரங்களுள் ஒவ்வொரு மந்த்ரத்தால் ஸித்திபெறுவதில்லையோ, அல்லது, உலகத்தில் சாகம், பருப்பு, அந்நம் முதலியவற்றுள் ஒவ்வொன்றினுலும் போஜநம் ஸித்திபெறுவதில்லையோ, அவ்வாறு என்பது.

நீடித்த அப்யாஸத்தினுடைய பிரயோஜநத்தினைச் சொல்லுகிறுர்—

''த்ரிபிரேதைஸ்சிராப்யஸ்தை: ஹ்ருதயக்ரந்தயோ த்ருடா:

நி:சங்கமேவ த்ருட்யந்தி பிஸச்சேதாத் குணு இவ'' இதி;

"—இந்த மூன்றுகளினுலும் நீண்டகாலம் அப்யாஸம் செய்தால் வலிமை பெற்றுள்ள ஹ்ருதயக்ரந்திகள் தாமரைத் தண்டை ஒடித்தால், அதற்குள்ளே இருக்கின்ற நூல் எவ்வாறு அறுந்து போகுமோ, அவ்வாறு இந்த க்ரந்திகளும் அறுந்து போகும். இதில் ஐயமில்லை'' என்றவாறு.

இக் கூற்றுக்கு வ்யதிரேகத்தினைச் சொல்லுகிறுர்—

''ஜந்மாந்தரஶதாப்யஸ்தா ராம ஸம்ஸார ஸம்ஸ்திதி:

ஸா சிராப்யாஸயோகேந விநா ந க்ஷீயதே க்வசித்'' இதி;

"—ஓ ராம! பல பிறவிகளில் தொடர்ந்து வரப் பெற்ற இந்த ஸம்ஸார வாஸனையானது, தத்வஜ்ஞாநம் முதலியவைகள் நீண்ட காலம் ஸமமாகவே அப்யாஸம் செய்யப் பெறுவிட்டால் ஒருக்காலும் நாசமடைவதில்லை'' என்றவாறு.

கேவலம் ஒவ்வொன்றையும் அப்யாஸம் செய்தால் பலன் ஒன்றும் கிடைக்காது. ஆயினும் அவைகளின் உண்மை நிலையும் ஸித்தி பெறுவதில்லை என்று பின் வருகின்ற செய்யுளில் சொல்லப் பெறுகின்றது—

தத்வஜ்ஞாநம் மநோநாஶோ வாஸநாக்ஷய ஏவ ச.

மிதஃ காரணதாம் கத்வா து:ஸாதாநி ஸ்திதாநி ஹி'' இதி:

‘—தத்வஜ்ஞாநம், மநோநாஶம், வாஸநாக்ஷயம் என்ற இம் மூன்றும் ஒன்றுக்கொன்று காரணத் தன்மையைப் பெற்று ஸாதிக்க முடியாத நிலையின் இருக்கின்றனவன்றோ’’ என்றவாறு.

இந்த மூன்றுகளுக்குள் இரண்டின் இரண்டின் சேர்க்கை யினாலே மூன்று இரட்டைகள் கிடைப்பன, அவைகளில் மநோ நாஶமும், வாஸநாக்ஷயமும் சேர்ந்து ஒரு இரட்டை (த்வந்த்வம்), தத்வஜ்ஞாநமும், மநோநாஶமும் சேர்ந்து மற்றொரு இரட்டை, வாஸநாக்ஷயமும், தத்துவஞானமும் சேர்ந்து பிறிதொரு இரட்டை.

அவ்விடத்தில் மநோநாஶம், வாஸநாக்ஷயம் இந்த இரண்டுக் கும் அந்யோந்யமாயுள்ள காரணத்தன்மை (ஒன்றுக்கொன்று) யானது வ்யதிரேக முகத்தினால் சொல்லப்பெறுகின்றது—

‘‘யாவத் விலீநம் ந மநோ ந தாவத் வாஸநாக்ஷய:.

ந க்ஷீணா வாஸநா யாவத் தாவச்சித்தம் ந ஶாம்யதி’’

‘‘—எதுவரையில் மனம் லயத்தையடைய வில்லையோ, அது வரையில் வாஸநாநாஶமும் இல்லை. எதுவரையில் வாஸனை நாச மடையவில்லையோ அதுவரையில் சித்தமும் ஶமநத்தை அடை யாது’’ என்றவாறு.

மற்றும்—

ப்ரதீபஜ்வாலையினுடைய பரம்பரைபோல விருத்திகளுடைய பரம்பரை வடிவத்தோடு பரிணமிக்கின்ற (பரிணாமத்தை யடைந்த) அந்த:கரணமென்னும் த்ரவ்யம் மநநவடிவாயிருப் பதால் மனம் எனச்சொல்லப் பெறுகின்றது. அதனுடைய நாச மென்பது விருத்திவடிவாயுள்ள பரிணாமத்தை விட்டு, நிரோத வடிவாகவே (தடுப்பது) பரிணமிப்பது என்பது.

ஆகவே, இந்த மநோநாசத்தைக் குறித்துப் பதஞ்ஜலிமஹர் ஷியும் தமது யோகசாஸ்த்ரத்தில்—

‘‘வ்யுதத்தாநநிரோதஸம்ஸ்காரயோரபிபவப்ராதுர்பாவௌ

நிரோதக்ஷணசித்தாந்வயோ நிரோதபரிணாம:’’ இதி;

‘‘—பஹிர்முகமான (வெளிப்புறம்) வாஸனைகள், அவைகளைத் தடுக்கின்ற வாஸனைகள், இவைகள் முறையே குறைதலும், வளர்ச்சியடைதலும் (தோன்றும் நிலையில்) நிரோதம் என்ற

பூமியில் மனம் இடையருது நிற்கும். அது நிரோதபரிணமம் (நிரோதவ்ருத்தியாகிய மனம் மாற்றம் பெறுதல்) எனப்பெறும்'' என்றவாறு.

மநநமென்பது — அது, இது, அப்படி, இப்படி, அது கூடாது, இது கூடாது, அது நல்லது, இது கெட்டது, அதைச் செய்ய வேண்டும், இதைச் செய்யவேண்டாம் என்பன போன்ற சிந்தனையேயாகும் என்பது அந்த யோகஸூத்ரத்தினுடைய தாத்பர்யமாகும்.

மற்றும், வ்யுத்தாநஸம்ஸ்காரங்கள் குறைகின்றன. நிரோத ஸம்ஸ்காரங்கள் உண்டாகின்றன. நிரோதத்தோடு கூடிய காலத்தில் சித்தத்தோடு சேருகின்றது. இந்த நிலையிலுள்ள அது மநோநாசம் என்று உணரவேண்டும். முன்பின் ஒன்றையும் ஆலோசியாமல் விரைவில் தோன்றுகின்ற க்ரோதம் முதலிய வ்ருத்திவிசேஷத்திற்குக் காரணமான மனத்தைப் பற்றிய ஸம்ஸ்காரமானது வாஸனையெனப் பெறும். முன்னுக்கு முன்னுள்ள அப்யாஸத்தினுல் சித்தத்தில் நிலைத்திருப்பதால் என்க. (அதாவது அநாதிகாலமாக தொடர்ந்து ஹ்ருதயத்தில் வஸிக்கின்ற காரணத்தினுல் இதற்கு வாஸனையெனப் பெயர்.)

இந்த வாஸனையினுடைய நாசமானது, யாதெனில் விவேகத்திலிருந்து தோன்றிய சாந்தி, தாந்தி முதலிய சுத்தவாஸனையானது உறுதியாய் நிலைத்துள்ளபொழுது வெளியேயுள்ள (நிமித்தம்) காரணத்தினுல் குரோதம் முதலிய விருத்திகள் தோன்ருதிருப்பதே வாஸநாக்ஷயம் எனப்பெறும்.

இவ்வாறுள்ள நிலையில் மநோநாசமில்லாவிடில் விருத்திகள் தோற்றுங்கால் சில ஸமயம் பாஹ்ய (வெளி) நிமித்தமான க்ரோதம் முதலியன தோன்றுங்கால் வாஸநாக்ஷயம் இல்லை. வாஸனையானது நாசமடையாமலிருந்தாலோ, அவ்விதமே வ்ருத்தியினுடைய தோற்றத்திலிருந்தும் மநோநாசமும் இல்லை.

தத்வஜ்ஞானம், மநோநாசம் இவைகளுடைய ஒன்றுக்கொன்றுள்ள காரணத்தன்மையானது வ்யதிரேகமுகத்தினுல் சொல்லப்பெறுகின்றது—

''யாவந்ந தத்வவிஜ்ஞாநம் தாவச்சித்த ஶம: குத:
யாவந்ந சித்தோபஶமோ ந தாவத் தத்வவேதநம்'' இதி

''—எதுவரையில் தத்வவிஜ்ஞானம் தோன்றுவதில்லையோ அது வரையில் சித்தத்தின் ஶமனம் ஏது? எதுவரையில் சித்தத்தினுடைய உபஶமம் இல்லையோ, அதுவரையில் தத்வவேதனமும் இல்லை'' என்றவாறு.

''இவை யாவும் ஆத்மனைச் சார்ந்ததே. தோற்றமளிக்கின்ற ரூபம், ரஸம் முதலியவைகளைக் கொண்ட உலகம் மாயாமயம், இது உண்மையில் இல்லை'' என்ற உறுதியே தத்வஞானம். அதனுடைய தோற்றம் தோன்றாதபொழுது, ரூபம், ரஸம், முதலிய விஷயங்களுக்கு ஸத்பாவம் (இருக்கும் தன்மை) இருக்கும் பொழுது, அதற்குக் கோசரமாயுள்ள (புலன்) சித்த வ்ருத்திகள் தடுக்க முடியாததாகும். எவ்வாறு மேல் மேலும் கட்டைகளைப் போட்டுக் கொண்டேயிருந்தால் அக்நியினுடைய ஜ்வாலையானது தடுக்க முடியாதோ அது போலவேயாகும்.

சித்தத்தின் உபஶமம் இல்லாத பொழுது, வ்ருத்திகளினால் கரஹிக்கப் பெற்ற ரூபம் முதலியவைகளில் ''நேஹ நாநாஸ்தி'' —இவ்விடத்தில் பலவன இல்லை'' என்ற ச்ருதிக்கிணங்கவும், ''யஜமாந: ப்ரஸ்தர:''—யஜமானன் பரஸ்தரம்'' என்றது முதலியது போல ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமுண்டாகும் என்ற ஐயத்தினால் ''ப்ரஹ்மாத்விதீயம்''—''ப்ரஹ்மம் இரண்டற்றது'' என்ற இத் தகைய தத்வத்தின் உறுதியானது உண்டாகாது.

வாஸநாக்ஷயம், தத்வஜ்ஞானம் ஒன்றுக்கொன்றுள்ள காரணத் தன்மையை வ்யதிரேக முகத்தினால் சொல்லுகிறார்—

**''யாவந்ந வாஸநா நாஶஸ்தாவத் தத்வாகம: குத:.**

**யாவந்ந தத்வஸம்ப்ராப்திர் ந தாவத் வாஸநாக்ஷய:'' இதி;**

''—எதுவரையில் வாஸநாநாசம் உண்டாகவில்லையோ, அது வரையில் தத்வாகமமும் கிடையாது. எதுவரையில் தத்வத்தின் அடைதல் இல்லையோ, அதுவரையில் வாஸநாக்ஷயமும் இல்லை'' என்றவாறு.

குரோதம் முதலிய வாஸனைகள் நசிக்காதபொழுது, ஶமம் தமம் முதலிய ஸாதநங்கள் (வாஸனை) இல்லாமையால் தத்வ ஞானம் உதயமாகாது. (தோன்றாது). அவ்வாறே இரண்டற்ற ப்ரஹ்மதத்வத்தை உணர்ந்து கொள்ளாத நிலையில், குரோதம்

முதலிய நிமித்தத்தினுடைய ஸத்யத்வ (உண்மை நிலை) ப்ரம மானது (மயக்கம்) விலகாத காரணத்தினல் வாஸநாநாசமும் இல்லை.

இவ்வாறு சொல்லியுள்ள மூன்று இரட்டைகளுடைய ஒன்றுக்கொன்றுக்குள்ள காரணத்தன்மையை அந்வயமுகத் தினல் உதாஹரணங்களோடு சொல்லுகிறோம்.—

மனோநாசம் வந்துள்ளபொழுது ஸம்ஸ்காரத்தினல் தூண்டப் பெற்ற பாஹ்ய (வெளிப்படை) நிமித்தமான காரணம் தோன்றாத பொழுது வாஸனை நாசமடையும். அந்த வாஸனையும் நாசமடைந்துள்ள பொழுது, காரணமில்லாமலேயே க்ரோதம் முதலிய விருத்திகளும் தோன்றாது. அப்பொழுது மனதும் நாசமடையும். இது மனோநாசமென்ற த்வந்த்வமாகும்.

"த்ருச்யதே த்வக்ர்யயா புத்யா"—"—ஸூக்ஷ்மமாயும் ஏகாக்ர மாயும் இருக்கிற புத்தியைக் கொண்டு காணப் பெறுகிறார்"

—என்ற ச்ருதியினல் ஆத்மாவோடு ஒன்றிய எதிரிடையாகத் திருப்பப் பெற்ற வ்ருத்தியினுடைய தர்சநஹேதுவின் காரண மாக முழுவதுமான வ்ருத்தியின் நாசத்திற்கு தத்வஞாநத்தின் காரணத்தன்மை அறியப் பெறுகின்றது. தத்வஜ்ஞாநம் இருந்த பொழுதிலும், பொய்யாயுள்ள உலகில் மனிதனின் கொம்பு போல, புத்தியினுடைய வ்ருத்தியானது தோன்றாத தால், ஆத்மன் அறியப் பெற்ற பொழுதிலும், மறுபடியும் வ்ருத்தி யினுடைய உபயோகம் இன்மையால், விறகு இல்லாத அக்நி போல மனம் நாசமடைகின்றது. ஆகையினல் மனோநாசம் தத்வஜ்ஞாநம் என இவைகளுடைய த்வந்த்வமாகும்.

"ரிபௌ பந்தௌ ஸ்நேஹே ச ஸமைகாத்ம்யம் ப்ரபஶ்யத:.

விவேகிந: குத: கோப: ஸ்வதேஹாவயவேஷ்விவ" இதி ;

"—பகைவனிடத்திலும், பந்துவினிடத்திலும், தனது சரீரத் திலும், ஸமமாயுள்ள ஒன்றிய நிலையைக் (ஏகாத்மயம்) காண் கின்ற விவேகமுள்ளவனுக்கு, தனது சரீரங்களுடைய அவய வங்கள் போல, பிறருடைய சரீரங்களிலும் கோபம் எவ்வாறு வரும்? வராதன்றோ" என்று வார்த்திகாரரும் சொல்லுவர்.

குரோதம் முதலியவைகளுடைய வாஸநாக்ஷய ரூபத்திற்கு ஶமம் முதலியவைகளிலிருந்து தோன்றுகின்ற ஞானமும் காரணம் என்பது பிரஸித்தம். இதைக் குறித்து வஸிஷ்டரும்—

“குணா: ஶமாதயோ ஜ்ஞாஜ்ஞாத் ஶமாதிப்யஸ்த்தா ஜ்ஞதா.
பரஸ்பரம் விவர்தேதே த்வே பத்மஸரஸீ இவ” இதி;

“—ஶமம் முதலிய குணங்கள் ஞானத்திலிருந்தும், அவ்விதமே ஶமம் முதலியவைகளைக் காட்டிலும் ஞானத்தன்மையும் ஒன்றோடொன்று மாகிய இவையிரண்டும் குளத்திலுள்ள தாமரை போல் வளர்ச்சியடைகின்றன” எனச் சொல்லியுள்ளார். இது வாஸநாக்ஷயம் தத்வஜ்ஞானம் என்ற இரண்டின் த்வந்த்வமாகும். (த்வந்த்வம்—இரட்டை)

தத்வஜ்ஞானம் முதலிய மூன்றுகளுடைய ஸம்பாதனத்திற்குரிய ஸாதனம் சொல்லப் பெறுகின்றது.

“தஸ்மாத் ராகவ யத்நேந பௌருஷேண விவேகிநா.
போகேச்சாம் தூரதஸ்த்யக்த்வாத்ரயமேதத் ஸமாஶ்ரயேத்” இதி;

—“ஓ ராகவ! ஆகையினால் விவேகம் நிறைந்த புருஷ ப்ரயத்நத்தினால் போகேச்சையை தூரத்தில் ஒதுக்கிவிட்டு இந்த மூன்றையும் நன்கு ஆஶ்ரயிக்க வேண்டும்” என்பது.

புருஷஸம்பந்தமான யத்நமானது—ஏதாவது ஒரு உபாயத்தினால் அவச்யம் ஸம்பாதிக்கப் போகிறேன் என்ற இத்தகைய உத்ஸாஹ வடிவாயுள்ள நிர்பந்தமாகும். விவேகம் என்றது—தத்வஞானத்திற்கு வேண்டிய ஶ்ரவணம் முதலிய ஸாதனமாகும். மனோநாசத்திற்கு யோகம் ஸாதனமாகும். வாஸநாக்ஷயத்திற்கு ப்ரதிகூலமாயுள்ள வாஸனையின் பழக்கமே ஸாதனமாகும்.

மற்றும், போகத்திலுள்ள இச்சையை ஒரு சிறுதளவாவது அங்கீகாரம் செய்தால் அது “—ஹவிஷா க்ருஷ்ண வர்த்மேவ பூய ஏவாபி வர்த்தே” — ஹவிஸ்ஸினாலும், நெய்யினாலும் அக்நியானது மேலும் மேலும் ஜ்வாலைகளினால் வளர்ச்சியடைவது போல” என்ற ந்யாயத்தை யநுஸரித்து அதைத் தடுக்க முடியாதது போல, போகத்தைக் குறித்த விருப்பத்திற்குக் கொஞ்சம் கூட இடம் கொடுப்பது கூடாது. இங்கு அதிப்ரஸங்கமானது தடுக்க முடியாத காரணத்தால் ‘தூரத:’ என்றது சொல்லப் பெற்றது.

**சங்கை—**

முன்பு விவிதிஷாஸம்ந்யாஸத்திற்கு தத்வஜ்ஞானம் பலம், வித்வத்ஸமந்யாஸத்திற்கு ஜீவந்முக்தி பலம் என்று நிர்ணயம் செய்து வர்ணிக்கப் பெற்றுள்ளதே, அவ்வாறுள்ள நிலையில், முதலாவதாக தத்வஜ்ஞானம் ஸம்பாதித்துக் கொண்டு, பிறகு வித்வத்ஸம்ந்யாஸம் செய்து கொண்டு, ஜீவித்திருக்கிற புருஷனுக்கு, பந்த ரூபங்களான வாஸனை மனோவ்ருத்தி என்ற இவைகளுடைய விநாஶமானது ஸம்பாதிக்க வேண்டுமென்று பொருள் தோன்றுகின்றது அன்றோ !

இவ்விடத்திலோவெனில் — தத்வஜ்ஞானம் முதலியவைகளான மூன்றையும் கூடவே அப்யாஸம் செய்ய வேண்டுமென்று நியமம் செய்யப் பெறுவது, முன்பு சொல்லியதற்கு விரோதமாயுள்ளதே என்றால், அது அவ்வாறு குற்றமாகாது. ஏனெனில் ப்ரதாநம், உபஸர்ஜநம் என்ற நிர்ணயத்தினால் ஸமாதாநமாகும் என்க.

**உத்தரம்—**

விவிதிஷாஸம்ந்யாஸிக்கு தத்வஜ்ஞானம் ப்ரதாநமாக அப்யாஸம் செய்யத் தக்கது. மனோநாசம், வாஸனாக்ஷயம் இவையிரண்டும் உபஸர்ஜநமாகும். (அப்ரதாநமென்பது). வித்வத் ஸம்ந்யாஸிக்கோவெனில்—இதற்கு நேர்மாறாக வாஸனாக்ஷயம், மனோநாசம் இவைகளை முக்கியமாக அப்யாஸம் செய்ய வேண்டும். ஆகையினாலே ஒன்றாக அப்யாஸம் செய்வதில் இரண்டு வகையிலும் விரோதமாகாது.

அதாவது — தத்வஜ்ஞானம் முக்கியமாக அப்யாஸம் செய்யத் தக்கது என்று நியமம் செய்யப் பெற்றுள்ளதால் இருவகையான ஸம்ந்யாஸிகளுக்கும், தத்வஜ்ஞானம் முதலியவைகளை ஸமமாகவே அப்யாஸம் செய்வதில் யாதொரு விரோதமும் உண்டாகாது என்பது தாத்பர்யம்.

**சங்கை—**

தத்வஜ்ஞானம் தோன்றிய அளவிலே, க்ருதார்த்தனாகியவனுக்கு மேலே அப்யாஸம் செய்யத்தக்கதான வாஸனாக்ஷயம், மனோநாசம் முதலியவைகளுடைய அப்யாஸத்தினால் என்ன பலன் உண்டாகப்போகிறது? என்ற ஐயம் வேண்டாம்.

உத்தரம்—

இதற்கு ஸமாதாநமாக — ஜீவன்முக்திப்ரயோஜநம் சொல்லும்பொழுது அவ்விடத்தில் பரிஹாரமும் சொல்லப்போகிறோம்.

சங்கை—

தத்வஜ்ஞாநமானது, வஸ்து தந்த்ரமானதால் கர்மாவைப் போல செய்வதற்கும், செய்யாமலிருப்பதற்கும், வேறு விதமாகச் செய்வதற்கும் தகுதியில்லாத நிலையில் வித்வத்ஸம்ந்யாஸிக்கு அப்ரதாநமாயிருந்த பொழுதிலும், மேற்கொண்ட அப்யாஸம் எவ்வாறு பொருந்தும் என்று கேட்டால்; அதற்கு உத்தரம் சொல்லப் பெறுகின்றது—ஏதாகிலும் ஒரு வழியிலே திரும்பவும், திரும்பவும் தத்வஜ்ஞாநத்தை ஸ்மரணம் (நினைப்பது) செய்வதே தத்வஜ்ஞாநத்தின் அப்பியாஸமாகும்.

அத்தகைய அப்யாஸமும் லீலோபாக்யாநத்தில் சொல்லப் பெற்றுள்ளது—

“தச்சிந்தநம் தத்கதநம் அந்யோந்யம் தத்ப்ரபோதநம்.
ஏததேகபரத்வம் ச ஞாநாப்யாஸம் விதுர்புதா:.

ஸர்காதாவேவ நோத்பந்நம் த்ருச்யம் நாஸ்த்யேவ தத்ஸதா.
இதம் ஜகதஹம் சேதி போதாப்யாஸம் விது: பரே” இதி;

“—அதைக் குறித்த சிந்தனை, அதைக் குறித்துப் பேசுவது, ஒன்றுக்கொன்றுள்ள உணர்வு, இதையே முக்கியமாக நினைத்துச் சிந்தனை செய்தல் என்ற இவை உணர்வின் அப்யாஸம் எனப் பண்டிதர்கள் உணருகின்றனர்”;

“(இது) தோற்றத்தின் தொடக்கத்திலேயே உண்டாவதில்லை. அது எப்பொழுதும் காணத் தக்கதாகவும் இல்லை. இது உலகம், நான் என்னும் மற்றவர்கள் உணர்வின் அப்யாஸத்தை உணருகின்றனர்” என்றவாறு.

அதாவது இது உலகம், நான் காணப்பெறுகின்றவன். தோற்றத்தின் முதலில் உண்மையில் தோன்றியதாகவேயிருப்பது, ஆகையினால் அந்த த்ருச்யமும் (காணத்தக்கது) எப்பொழுதும் இல்லை என்ற அப்யாஸத்தை, ப்ரமாத்மாவினிடத்தில் உணர்வினுடைய அப்யாஸத்தையும் காண்கின்றனர் என்பது.

மற்றும் சிஷ்யனுக்கு வேதாந்த சாஸ்திரத்தின் பொருளேப் பாடம் சொல்லுவதும், தான் தானே மநநம் செய்வதும், யோக்கியர்களோடு சேர்ந்து ஒருவருக்கொருவர் ஸ்வரூப விசாரம் செய்வதும், தனிமையில் நிதித்யாஸம் செய்வதுமான இவை ப்ரஹ்மாப்யாஸம் என்று சொல்லப்பெறும். மற்றும்—இதம் வ்ருத்தி விஷயமாயுள்ள ஆகாசம் முதலிய வெளியேயுள்ள பிரபஞ்சமும், அஹம் வ்ருத்தி விஷயமான அஹம்காரம் முதலிய ஆந்தரப்ரபஞ்சமும் ஸ்ருஷ்டியினுடைய தொடக்கத்தில் தோன்றவில்லை.

ஆகையால், இப்பொழுது எங்கேயிருக்கும், இனிமேல் எப்படியிருக்கப்போகிறது, மூன்று காலத்திலும் காணக்கூடிய பிரபஞ்சம் இல்லவேயில்லை எனச் சொல்லப்பெறுகின்ற அப்யாஸத்தின் உறுதியே ப்ரஹ்மாப்யாஸம் எனச் சொல்லப்பெறும்.

மநோநாசம், வாஸநாக்ஷயம் இவைகளுடைய அப்யாஸங்களும் அவ்விடத்திலேயே சொல்லப் பெற்றுள்ளன—

"அத்யந்தாபாவஸம்பத்தௌ ஜ்ஞா துர்ஜ்ஞேயஸ்ய வஸ்துந:

யுக்த்யா சாஸ்தரைர்யதந்தே யே தே தத்ராப்யாஸிந: ஸ்திதா:", இதி;

"—அத்யந்தாபாவமுண்டாகும் பொழுது, அறிபவனுக்கு அறியத்தக்க வஸ்துவினுடைய நிலேயை யுக்தியினுலும், சாஸ்த்ரங்களினுலும் எவர்கள் முயற்சி செய்கின்றனரோ, அவர்கள் நிலேத்த ப்ரஹ்மத்தை அப்யாஸம் செய்கின்றவர்கள்" என்றவாறு.

ஞாதா, ஜ்ஞேயம் என்ற இவைகளில் தோன்றுகின்ற பொய்யான புத்தியானது, "அபாவஸம்பத்தி" எனச்சொல்லப்பெறும், ஸ்வரூபத்தினுலும் காணுமலிருப்பது, "அத்யந்தாபாவஸம்பத்தி" எனப் பெறும். யுக்தி என்பது யோகமாகும். இதுவே மநோநாசத்தின் அப்யாஸமாகும்.

வாஸிஷ்டத்தில்—

"த்ருச்யாஸம்பவபோதேந ராகத்வேஷாதிதாநவே.

ரதிர்நவோதிதாயாஸௌ ப்ரஹ்மாப்யாஸ: ஸ உச்யதே" இதி;

"—த்ரஷ்டாவினிடத்தில் மூன்றுகாலத்திலும் அஸம்பவத்தின் உணர்வினுல் ராகம், த்வேஷம், முதலியவைகளுடைய தாநவம்

சுருங்கும் பொழுது, வலிமையினலுண்டான அப்யாஸ பலத்தினல் வெளிப்பட்ட யாதொரு ப்ரஹ்மாநந்த இலக்கணமான ரதியுண்டோ, அதுவே ப்ரஹ்மாப்யாஸமாகும். அதாவது பரிபக்வமான ப்ரஹ்மஜ்ஞாநாப்யாஸமென்பது'' என்றவாறு. இதுவே வாஸநாக்ஷயத்தினுடைய அப்யாஸமுமாகும்.

இந்த மூவகையாயுள்ள அப்யாஸங்களினல் ஸாமாந்யமாக காணப் பெறுகின்றவைகளில், முக்கியம்-(ப்ரதாநம்,) உபஸர்ஜநம்-(கௌணம்) என்ற தன்மையானது விவேசநம் செய்ய முடியாதே என்ருல்—அப்படிச் சொல்ல வேண்டாம். ப்ரயோஜநத்தையநுஸரித்து விவேசநம் செய்ய முடியும். ஏனெனில், முமுக்ஷுவாயுள்ள புருஷனுக்கு ஜீவந்முக்தியென்றும், விதேஹமுக்தியென்றும் இருவகையாயுள்ள ப்ரயோஜநம் இருக்கின்றதல்லவா? இதைக் கருதியே —விமுக்தஸ்ச விமுச்யதே' (''அவித்தையிலிருந்து) விடுபட்டவன் விடுதலை பெறுகிருன்'' என்ற ச்ருதியும் காணப் பெறுகின்றது.

அவ்விடத்தில், ஜீவித்திருக்கின்ற முமுக்ஷுவுக்கு; ''தைவீஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா; ''தைவ ஸம்பத்தால் மோக்ஷம் கிடைக்கும். அஸுரஸம்பத்தால் பந்தம் கிடைக்கும்.'' என்றவாறு. இதுவும் பதினருவது அத்யாயத்தில் பகவானல் சொல்லப் பெற்றுள்ளது—

''அபயம் ஸத்வஸம் ஶுத்திர் ஞாநயோகவ்யவஸ்திதி:
தாநம் தமஶ்ச யஜ்ஞஶ்ச ஸ்வாத்யாய ஸ்தப ஆர்ஜவம்.
அஹிம்ஸா ஸத்ய மக்ரோதஸ்த்யாக: ஶாந்திரபைஶுநம்.
தயா பூதேஷ்வலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீரசாபலம்.
தேஜ: க்ஷமா த்ருதி: சௌசமத்ரோஹோ நாதிமாநிதா.
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய பாரத.
தம்போ தர்போऽபிமாநஶ்ச க்ரோத: பாருஷ்யமேவ ச.
அஜ்ஞாநம் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பதமாஸுரீம்''. இதி;

''—அஞ்சாமை, உள்ளத்தூய்மை, ஞாநயோகத்தில் உறுதி ஈகை, தன்னடக்கம், வேள்வி, வேதம் பயிலல், தவம், நேர்மை;

''கொல்லாமை, வாய்மை, சினவாமை, துறவு, ஆறுதல், வன்மை, ஜீவதயை, அவாவின்மை, மென்மை, நாணுடைமை, சலியாமை ;

'ஒளி, பொறை, உறுதி, சுத்தம், துரோகமின்மை. இவை யாவும் தைவஸம்பத்தை எய்தியவனிடம் காணப் பெறுகின்றன.

"தம்பம், இறுமாப்பு, கர்வம், சினம், கடுமை, அஜ்ஞாநம், இவை யாவும் அஸுரஸம்பத்தை எய்தியவனிடம் காணப் பெருகின்றன" ஓ பார்த்த ! என்றவாறு.

காமம், க்ரோதம், லோபம், அவிவேகம், நித்ரை, ஆலஸ்யம், பயம், மைதுநம் இவைகள் போன்ற துர்குணங்கள் அஸுர ஸம்பத்து எனச் சொல்லப் பெறும்.

(தமம் — பொறிகளை வெல்லுவது. யாகம் — நிஷ்காமமாக — பற்றற்ற நிலையில் அநுஷ்டாநம் செய்வது. தவம் — க்ருச்ர சாந்த்ராயணம் முதலியன. ஆர்ஜவம்—உள்ளேயும், வெளியேயும் ஒத்திருக்கிற நடப்பு. கர்வமில்லாமை — எவ்வளவு தர்மம் செய்த பொழுதிலும் அஹம்காரமில்லாமல் நான் செய்தது இவ்வளவு தானு என்ற விவேகமாகும். ஸுகம் வந்தாலும், துயரம் வந்தாலும் சாஸ்திரத்திலிருந்து தோன்றிய ஞாநத்தால் சித்தம் சலிக்காமல் இருப்பது சரீரகாந்தி. கோபம் வந்தாலும் மனத்தை யடக்குவது, சாஸ்திரீயமான காரியத்தில் உறுதி தைர்யம், மண், ஜலம் முதலியவைகளால் வெளிப்புறம் சுத்தம் செய்து கொள்வது பாஹ்ய சௌசம். விவேகத்தினுல் ராகம் (ஆசை) த்வேஷம் இவைகளுடைய நிவாரணம் ஆந்தரசௌசம், ஒருவரிடத்திலும் தீய எண்ணம் இல்லாமலிப்பது. அத்ரோஹம். தனக்கு நிகர் ஒருவருமில்லை என்ற எண்ணத்தைக் கைவிடுதல் அநஹங்காரம். இன்னேரன்ன பல ஸத்குணங்கள் நிரம்பியுள்ளதே தைவஸம்பத்து எனச் சொல்லப் பெறும்.

ஒருவனுடைய த்ரவ்யத்தை அபஹரிப்பதன் பொருட்டு தர்மம் செய்பவன் போலவும், உபாஸனை செய்பவன் போலவும், ஞாநி போலவும் அபிநயம் செய்வது தம்பம் எனச் சொல்லப் பெறும். அஹம்காரத்தை அடக்க முடியாத நிலையே கர்வமாகும்.)

மறுபடியும், அத்யாயத்தின் முடிவுவரையில் இந்த ஆஸுரீ ஸம்பத்தானது விஸ்தாரமாகச் சொல்லப் பெற்றுள்ளது. அவ்விடத்தில் சாஸ்த்ரத்திற்கு முரணுயுள்ளவையும் இயல்பாகவே இருப்பதுமான ஆஸுரஸம்பத்துக்கள் என்னும் துர்வாஸனைகள், சாஸ்திரத்தைத் தழுவிய புருஷனுடைய முயற்சியினுல் ஸாதிக்கத் தக்கதான தைவஸம்பத்தோடு கூடிய நல்ல வாஸனையினுல் அவை நாசமடையும் பொழுது ஜீவன்முக்தியானது உண்டாகின்றது.

ஜீவன்முக்திக்கு வாஸநாக்ஷயம் எவ்வாறு காரணமோ, அவ்வாறே மநோநாஶமும் காரணமாகும் என்று ஶ்ருதியில் சொல்லப் பெறுகின்றது—

''மந ஏவ மநுஷ்யாணும் காரணம் பந்தமோக்ஷயோ:.
பந்தாய விஷயாஸக்தம் முக்த்யை நிர்விஷயம் ஸ்ம்ருதம்,
யதோ நிர்விஷயஸ்யாஸ்யு மநஸோ முக்திரிஷ்யதே.
அதோ நிர்விஷயம் நித்யம் மந: கார்யம் முமுக்ஷுணு.
நிரஸ்த விஷயாஸங்கம் ஸம்நிருத்தம் மநோ ஹ்ருதி.
யதா யாத்யுந்மநீபாவம் ததா தத் பரமம் பதம்''. இதி;

''—மனிதர்களுக்கு பந்தம், மோக்ஷம் என்ற இவையிரண்டுக்கும் காரணமாயிருப்பது மனமேயாகும். விஷயங்களிலே பற்றுக்கொண்ட மனம் பந்தத்தைத் தோற்றுவிப்பது. விஷயங்களிலே பற்றுக்கொள்ளாத மனம் முக்தியைத் தோற்றுவிப்பது.''

''—எக்காரணத்தால் விஷயங்களில் பற்றற்ற மனதிற்கு முக்தி சொல்லப் பெற்றதோ, அக்காரணத்தால் மோக்ஷத்தை விரும்புகின்றவன், எப்பொழுதும் மனதை விஷயங்களில் செல்லவொட்டாது அப்யாஸம் செய்ய வேண்டும்''.

''—எப்பொழுது விஷயங்களைப் பற்றியுள்ள ஆசைகளையகற்றி ஹ்ருதயத்தில் நன்கு தடுக்கப் பெறுகின்ற மனமானது, ஆத்மனுடைய அபாவத்தை (இன்மை) யடைகின்றதோ, அப்பொழுது அது (அமநீபாவம்) என்ற உத்தமமான இடமாகும், என்றவாறு.

''தாவதேவ நிரோத்தவ்யம் யாவத் ஹ்ருதி கதம் க்ஷயம்.
ஏதஜ்ஜஞானம் ச மோக்ஷஶ்ச சேஷோ க்ரந்தஸ்ய விஸ்தர:'' இதி;

''—எவ்வளவு காலம் ஹ்ருதயத்தில் (காமனைகள்) நாசத்தை யடைகின்றனவோ, அவ்வளவு காலமே தடுக்கப் பெறவேண்டும். இந்த ஞானமும், மோக்ஷமும் இந்த அளவிலேதான். மற்றவை க்ரந்தத்தினுடைய விஸ்தாரமாகும்'' என்றவாறு.

அதாவது—எதுவரையில் அப்யாஸத்தினுலே மனமானது, ஆத்மாவினிடத்தில் லயத்தையடைகின்றதோ, அதுவரையில் வைராக்யம், த்யாநம் என்றவைகளை விடக்கூடாது. ஆத்மா

வினிடத்திலே மனம் லயித்திருப்பதே த்யாநத்தினுடைய பலபடியான ஞாநமாகும். அதுவே மோக்ஷம். மற்றவை யாவும் இப்பொழுது சொல்லப்பெற்ற க்ரந்தத்தினுடைய விஸ்தாரமேயல்லாது வேறொன்றுமில்லை, என்பது தாத்பர்யம்.

மற்றும், பந்தம் இருவகையாகும், அவை தீவ்ரம், ம்ருது என்பன. அவைகளில் ஆஸுரஸம்பத்தானது நேராகவே துயரத்திற்குக் காரணமாயிருப்பதால் அது தீவ்ரம் என்ற பந்தமாகும். த்வைதத்தினுடைய அளவிலே காணப்பெறுவதோ வெனில், தான் துன்பமில்லாத படியாயுள்ளதாலும் ஆஸுர ஸம்பத்தையுண்டுபண்ணுகிற காரணத்தினாலும் இது ம்ருதுபந்தம் எனச் சொல்லப்பெறும்.

அவைகளில், வாஸநாக்ஷயத்தினால் தீவ்ரமாயுள்ள பந்தமே விலக்கப் பெறுகின்றது. மநோநாசத்தினாலோ வெனில், இரண்டு பந்தங்களும் நீக்கப் பெறுகின்றன. அப்பொழுது மநோநாசத்தினாலேயே போதுமே. வாஸநாக்ஷயமோ வெனில் பிரயோஜநமில்லாமல் போகுமே என்றால், இல்லை.

வலியதான போகத்திற்குக் காரணமாயுள்ள ப்ராரப்தத்தினால் ஸமாதியை விட்டு, மனம் வெளியே வருகின்ற பொழுது தோன்றுகிற தீவ்ரபந்தத்தை நீக்குவதற்காக வாஸநாக்ஷயமும் வேண்டும்.

**சங்கை—**

போகத்திற்குக் காரணமாயுள்ள வலுவான ப்ராரப்தமானது, தனது பல வடிவாயமைந்த போகத்தைக் கொடுக்க முற்படும்பொழுது, வாஸநாக்ஷயத்தால் தீவ்ரபந்தமும் எவ்வாறு நிவிருத்தியாகும்? அந்த தீவ்ரபந்தமும் போகமன்றோ! ஆகையால் வாஸநாக்ஷயமென்பது வீணேயன்றோ என்றால்;

**உத்தரம்—**

அது வீணாகாது. எவ்விதமென்றால் — தாமஸவிருத்திகள் தீவ்ரபந்தமெனப்பெறும். ஸாத்விகம், ராஜஸம் என்ற இரண்டு விருத்திகளும் ம்ருதுபந்தம் எனப்பெறும். இதுவும் இவையிரண்டும் போகமென்று நியமமானதால் வாஸநாக்ஷயத்தினால் தீவரபந்தத்

திற்கு நிவ்ருத்தியும் கிடைக்கலாம். த்வைதத்தின் அளவிலே சொல்லப் பெற்ற ம்ருதுபந்தத்தினால் போகமும் கூடலாம். ஆகவே வாஸநாக்ஷயம் பயனுள்ளதேயாகும்.

இதுவும்—

"து:கேஷ்வநுத்விக்நமநா; ஸுகேஷு விகத; ஸ்ப்ருஹ;"

"—துன்பங்களிலே மனங்கெடாதவனாய், இன்பங்களிலே ஆவலற்றவனாய், அச்சமும், சினமும் தவிர்த்தவனாயின் அம்முனி, மதியிலே யுறுதிவாய்ந்தவனென்ப" என பகவத்கீதையில் சொல்லப் பெற்றுள்ளது.

சங்கை—

இவ்வாறுள்ள பொழுது ம்ருதுபந்தத்தையும் ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதால், தீவரபந்த வாஸநாக்ஷயத்தினாலே தான் நீக்கப் பெறுகின்றபடியினால், மநோநாஶம் வீணேயாகும் என்று சொன்னால், அது கூடாது.

உத்தரம்—

ஏனெனில், துர்பலமாயுள்ள ப்ராரப்தத்தினால் வரப்பெற்றதாயும், அவச்யம் வரப்போகிற போகங்களுடைய நீக்கத்திற்காகவும் (மநோநாஶம் வேண்டும்) அத்தகை போகத்தினுடைய பரிஹாரத்தின் முடிவைக் கருதியே—

"அவச்யம்பாவியோகாநாம் ப்ரதீகாரோ பவேத் யதி.
ததா து:கைர்ந லிப்யேரந் நலராமயுதிஷ்டிரா;" இதி.

"அவச்யம் வரப்போகின்ற போகங்களுக்கும் பரிஹாரம் உண்டாகுமேயாகில், அப்பொழுது துக்கங்களினால் நளன், ராமன், யுதிஷ்டிரன் என்ற இவர்கள் பாதிக்கப் பெறவில்லை" என்றவாறு.

இவ்வாறு ஜீவன்முக்தியைக் குறித்து வாஸநாக்ஷயம், மநோநாஶம் இவைகளுடைய தோற்றத்திற்கு ஸாக்ஷாத் ஸாதநமாகையினால் ப்ரதாந மென்றும், தத்வஞாநமோ வெனில் இரண்டையும் தோற்றுவிக்கின்ற காரணத்தினாலே விலகியிருப்பதால் அது உபஸர்ஜந மென்றும் சொல்லப் பெற்றது.

தத்வஞாநத்திற்கு வாஸநாக்ஷயஹேதுவின் தன்மையும் பலபடியாக வேதத்தில் காணப்பெறுகின்றது—

1) ''ஜ்ஞாத்வா தேவம் ஸர்வபாஶாபஹாநி;''

2) ''அத்யாத்மயோகாதிகமேந தேவம்
மத்வா தீரோ ஹர்ஷ ஶோகௌ ஜஹாதி''

3) ''தரதி ஶோகமாத்ம வித்''

4) ''தத்ர கோ மோஹ: க: ஶோக ஏகத்வமநுபஶ்யத;''

5) ''ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாஶை:'' இதி;

—(1) ''அத்தகைய தேவனையறிந்தால் (அவித்யை முதலிய) பாசங்கள் யாவும் அற்றுப்போகும்'' எனவும் (2) '' (அந்த தேவனை) அத்யாத்மயோகத்தினுல் (விஷயங்களையொதுக்கி ஆத்மாவையே சிந்தனை செய்வதினுல்) விவேகியானவன் பர்யாலோசனை செய்து ஸம்தோஷத்தையும், வ்யஸநத்தையும் விடுகிறுன்'' எனவும்; (3) ''ஆத்மனையுணர்ந்தவன் ஶோகத்தைக் கடக்கிறுன்'' எனவும்; (4) ''ஒன்றிய தன்மையைத் தொடர்ந்து பார்ப்பவனுக்கு அவ்விடத்தில் மோஹமேது? ஶோகமேது? எனவும்; (5) ''தேவனையுணர்ந்து எல்லா பாஶங்களினுலும் விடுதலையடைகிறுன்'' எனவும், சொல்லப் பெற்றுள்ளன.

தத்வஜ்ஞாநத்திற்கு மநோநாஶகாரணமும் உண்டு என்பது ஶ்ருதியில் ஸித்தமாயுள்ளது. வித்யாதஶையைக் குறித்து இதுவும் சொல்லப் பெறுகின்றது—

''யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத் கேந கம் பஶ்யேத்
கேந கம் ஜிக்ரேத்'' இத்யாதி;

''—இந்த வித்வானுக்கோ வெனில், எவ்விடத்தில் யாவும் ஆத்மாவாகவே காணப் பெறுகின்றதோ, அக்காரணத்தால் எதனேடு எதைப் பார்க்க முடியும்? எதனேடு எதை முகர முடியும்'' என்பன போன்றவை.

கௌடபாதாசார்யரும்—

''ஆத்மஸத்யாநுபோதேந ந ஸம்கல்ப்யதே யதா.
அமநஸ்கதாம் ததா யாதி க்ராஹ்யாபாவே ததக்ரஹ'': இதி;

''—எப்பொழுது ஆத்மா ஸத்யம் என்ற தொடர்ந்த உணர்வினுல் (ஒன்றையும்) ஸம்கல்பம் செய்வதில்லையோ, அதாவது இத்தகைய ஞாநம் தோன்றியதும் ஸம்கல்பங்கள் நீங்குகின்றன என்பது. ஏனெனில் கொள்ளுபவன் இல்லாமல் போனுல்

கொள்ளப் பெறுகின்ற வஸ்துவும் இல்லாது போல்வதேயாகும் என்க. அப்பொழுது அந்த மனமானது 'அமநஸ்கம்' என்ற நிலையை அடைகின்றது'' எனச் சொல்லுவர்.

மற்றும், ஜீவந்முக்திக்கு, வாஸநாக்ஷயம், மநோநாஶம் போலவே, விதேஹமுக்திக்கு ஸாக்ஷாத் ஸாதநமாயிருப்பது ஞாநம் ப்ரதாநமாகும்.

**''ஜ்ஞாநாதேவ து கைவல்யம் ப்ராப்யதே யேந முச்யதே''**

''—ஞாநத்தினலேயே யன்றோ கைவல்யம் அடையப் பெறுகின்றது. எக்காரணத்தால் விடுதலை கிடைக்கின்றதோ'' என்ற ஸ்ம்ருதியும் காணப் பெறுகின்றது. கைவல்யம் என்பது, கேவலஸ்ய ஆத்மந: பாவம்—தன்மை-கைவல்யம் எனச்சொல்லப் பெறும். ஏனெனில் சரீரம் முதலியன இல்லாதிருப்பதினல் என்க.

அதுவும்,

ஞாநத்தினலேயே அடையப்பெறுவது. சரீரத்தோடு கூடிய நிலையானது அஜ்ஞாநத்தால் கல்பனை செய்யப் பெற்றுள்ளதால் அது ஞாநத்தினலேயே நீங்கும் தன்மையையுடையது.

''ஞாநாதேவ'' என்ற சொல்லிலுள்ள 'ஏவ' என்ற சொல் கர்மத்தினுடைய வ்யாவ்ருத்தியைச் சொல்லும். **ந கர்மணா ந ப்ரஜயா தநேந**—''கர்மாவினல் இல்லை. ப்ரஜையினல் இல்லை. தநத்தினல் இல்லை'' என ஶ்ருதியும் இவ்வாறு சொல்லும்.

எவனெருவன், ஞாநசாஸ்த்ரத்தை அப்யாஸம் செய்யாது, உள்ளவாறு வாஸநாக்ஷயம், மநோநாஶம் என்ற இவைகளை அப்யாஸம் செய்து, ஸகுணப்ரஹ்மத்தை உபாஸனை செய்கின்ருனே, அவனுக்குக் கைவல்யம் கிடையாது. ஏனெனில் லிங்கதேஹம் விடாதிருப்பதால் என்க. ஆகையினலே 'ஏவ என்ற சொல்லால் அவைகளும் வ்யாவ்ருத்தி செய்யப் பெறுகின்றன.

**''யேந முச்யதே''**—''எக்காரணத்தால் விடுதலையோ'' என்ற சொல்லின் பொருள் விளக்கம் வருமாறு—எக்காரணத்தால் ஞாநத்தினல் அடைவிக்கப் பெற்ற கேவலத் தன்மையினல் முழுவதுமான பந்தத்திலிருந்து விடுதலை பெறுகின்ருனே'' என்பது.

பந்தமும் பலவகையாகும். அவை—அவித்யாக்ரந்தி, அப்ரஹ்மத்வம், ஹ்ருதயக்ரந்தி, ஸம்ஶயம், கர்மாக்கள், அஸர்வஜ்ஞத்வம் ம்ருத்யு, புநர்ஜந்மம் என்றவைகள் ஆங்காங்கு சொற்களினல் வ்யவஹாரம் செய்யப் பெறுவதுமாகும். இத்தகைய பந்தங்கள் யாவும் ஞாநத்திலேயே நிவர்த்தி செய்யப் பெறுவனவாம்.

இதற்குச் சான்ருக ச்ருதிகளும்—

**"ஏதத்யோ வேத நிஹிதம் குஹாயாம் ஸோ ऽவித்யாக்ரந்திம் விகிரதீஹ விச்வம்"**

"—ஓ ஸௌம்ய! இத்தகைய அக்ஷரபுருஷனுகிய பரப்ரஹ்மத்தை ஹ்ருதயமென்னும் குஹையில் நிலேத்திருப்பதாக எவன் உணருகின்ருனே, அவன் அவித்யை என்னும் முடிச்சைக் களேந்தவனுவன்" எனவும்,

**"ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி"**

"—எவனெருவன், அந்த ப்ரஹ்மத்தை யுணருகின்ருனே, அவன் ப்ரஹ்மமாகவே ஆகின்ருன்" எனவும்,

**"பித்யதே ஹ்ருதயக்ரந்திஶ்ச்சித்யந்தே ஸர்வஸம்ஶயா :.**
**க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே"**

"—அந்தப் பராவர வஸ்துவானது (கார்ய காரணுத்மா) பார்க்கப் பெற்ற அளவிலே ஹ்ருதயக்ரந்தியானது (காமம்) பிளந்து போகின்றது. ஸம்சயங்கள் (ஐயங்கள்) விலகுகின்றன, கர்மாக்கள் நாசமடைகின்றன" எனவும்;

**"யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந்;**
**ஸோ ऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ."**

**"தமேவ விதித்வாதிம்ருதயுமேதி"— இதி ச;**

"—பரமாயுள்ள ஹ்ருதயாகாச குஹையில் வைக்கப் பெற்றுள்ள ப்ரஹ்மத்தை எவன் உணருகின்ருனே, அவன் எல்லா விருப்பங்களேயும் ஒரே காலத்தில் அநுபவிக்கின்ருன்" "அந்த ப்ரஹ்மத்தையுணர்ந்து (அவன்) ம்ருத்யுவைக் கடக்கிருன்" எனவும்;

**"யஸ்து விஜ்ஞாநவாந் பவதி ஸமநஸ்க : ஸதா ஶுசி :**
**ஸ து தத்பதமாப்நோதி யஸ்மாத் பூயோ ந ஜாயதே." இதி;**

"ய ஏவம் வேதாஹம் ப்ரஹ்மாஸ்மீதி ஸ இதம் ஸர்வம் பவதி" இதி ச;

"—எவன் விவேகம் நிறைந்தவனுக எப்பொழுதும் தன் வசமாக செய்யப் பெற்ற மனதோடு கூடியவனுகவும், தூய்மையுள்ள வனுகவும் இருக்கின்ருனே, அவன் எதனின்றும் மறுபடியும் பிறப்பதில்லேயோ, அந்த இடத்தை அடைகின்ருன்" எனவும்;

"—எவனெருவன், நான் ப்ரஹ்மமாக இருக்கிறேன் என இவ்வாறு (தன்னே) உணருகின்ருனே, அவன் இவை யாவுமாகவும் இருக்கிருன்" எனவும் போன்ற அஸர்வஜ்ஞத்வம் முதலிய பந்தங் களுடைய நிவிருத்தியைச் சொல்லுகின்ற வாக்யங்களே இங்கு உதாஹரணமாகக் கொள்ள வேண்டும்.

இந்த விதேஹமுக்தியானது—ஞானத்தினுடைய தோற்றத் தின் ஸமான காலத்தையுடையது என்பதை உணர வேண்டும் ப்ரஹ்மத்தினிடத்தில் அவித்யையினுல் ஆரோபணம் செய்யப் பெற்ற இந்த பந்தங்கள் அனைத்தும் வித்யையினுல் நாசத்தை யடைந்துள்ளபொழுது, மறுபடியும் தோன்றுவது என்பது அஸம்பாவிதமும், அநுபவமற்றதாகவும் இருப்பதால் என்க இந்த வித்யையின் ஸமகாலமென்ற தன்மையை பாஷ்யகாரர் ஸமந்வயஸூத்ரத்தில் விஸ்தாரமாகச் சொல்லியுள்ளார்.

மற்றும்;

"தததிகம உத்தர பூர்வாகயோரச்லேஷவிநாசௌ தத்வ்யபதேசாத்"

"—ப்ரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரம் தோன்றியதும், ஞானத்திற்குப் பின்னும் முன்னுமுள்ள பாபங்களுடைய தொடர்பின்மையும், விநாசமும் தோன்றுகின்றன. ஏனெனில்? அவ்வாறு ஶ்ருதி சொல்லுவதே அதற்குரிய காரணமாகும்" என்க, என்றவிடத்தில் ஸூத்ரகாரர் சொல்லுவர்.

சங்கை—

வர்தமாந சரீரத்தின் மறைவுக்குப் பிறகு வரப்போகிறது விதேஹமுக்தி என்று பலர் சொல்லுகின்றனரே. அதற்கு ஶ்ருதியும்

"தஸ்ய தாவதேவ சிரம் - யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே இதி;"

"—ப்ராரப்தகர்மாவினுல் எதுவரையில் அநுபவம் இருக்கிறதோ, அதுவரையில் அந்த அநுபவம் முடிந்தவுடன் சரீரத்தின் நழுவுதல் உண்டாகின்றது. அதுவே மோக்ஷகாலமாகும். அந்த மோக்ஷகாலம் வரையில்தான் தாமதமும், பிறகு ஸத்ஸம்பத்தி-மோக்ஷம்-கிடைக்கின்றது'' என்றவாறு,

வாக்யவ்ருத்தியிலும்—

"ப்ராரப்தகர்மவேகேந ஜீவன்முக்தோ யதா பவேத்.
கம்சித்காலமநாரப்தகர்மபந்தஸ்ய ஸம்க்ஷயே.
நிரஸ்தாதிசயாநந்தம் வைஷ்ணவம் பரமம் பதம்.
புநராவ்ருத்திரஹிதம் கைவல்யம் ப்ரதிபத்யதே.'' இதி,

"—புருஷன் எப்பொழுது ஆரம்பிக்கப் பெருத கர்மபந்தத்தின் நாசமுண்டாகும் பொழுது ஜீவன் முக்தனுகின்ருனே, அப் பொழுது முதல் ப்ராரப்தவேகத்தினுல் சிறிதுகாலம் நிற்கிருன்.''

'—ப்ராரப்தம் நசித்தபொழுது எல்லையற்றதான ஆநந்தமய மான பரவிய பரமபதமும், திரும்பி வருவது இல்லாததுமான கைவல்யத்தையும் அடைகின்ருன்'' என்றவாறு.
ஸூத்ரகாரரும் சொல்லுகிருர்—

"போகேந த்விதரே க்ஷபயித்வா ஸம்பத்யதே''

"—தனது காரியத்தைத் தொடங்கிய புண்ய பாபங்களையோ வெனில் அநுபவத்தினுல் க்ஷயிக்கச் செய்து, ப்ரஹ்ம ஸம்பத்தியை யடைகின்ருன்; அதாவது ப்ரஹ்மமாகவே ஆகின்ருன்'' என்றவாறு. இவ்விடத்தில் 'இதரே' என்றது ப்ராரப்தமாயுள்ள புண்யபாபங்களைக் குறிப்பது.

விஸிஷ்டரும் சொல்லுகிருர்—

ஜீவன்முக்தபதம் த்யக்த்வா ஸ்வதேஹே ́காலஸாத்க்ருதே.
விஶத்யதேஹமுக்தத்வம் பவநோऽஸ்பந்ததாமிவ'' இதி,

"—காலத்தால் கவரப்பெற்ற தனது சரீரத்தில் ஜீவன்முக்த நிலையை விட்டு, காற்ருனது சலியாதிருப்பதுபோல அதேஹ முக்த நிலையை(யில்) அவன் பிரவேசிக்கிருன்'' என்றவாறு.

சங்கை—

குற்றமல்ல ; விசேஷமாகச் சொல்லுகிறவர்களுடைய விசேஷத்தினுல் இருமதத்திற்கும் விரோதமாகாது. விதேஹமுக்தி என்றவிடத்திலுள்ள 'தேஹ' என்றசொல்லால் முழுமையாயுள்ள தேஹஸமூஹத்தை விவக்ஷை செய்து பலபேர்களால் வர்ணிக்கப் பெற்றுள்ளது.

எங்களாலோ வெனில் — இந்த சரீரம் முன்பே தொடங்கப் பெற்றது. ஆகையினுல் ஞானத்தினுலும் கூட இதனுடைய தொடக்கம் தடுக்க முடியாது. இந்த சரீரநிவ்ருத்தியும் ஞானபலமாகாது. அஜ்ஞானிகளுக்கும் ஆரம்பமாயுள்ள கர்மக்ஷயத்தில் அதனுடைய நிவ்ருத்தியும் உண்டாகும்.

அப்பொழுது, வர்தமான லிங்கதேஹத்தினுடைய நிவ்ருத்தியானது ஞானபலமாக இருக்கலாமே என்றுல்; அதற்கு உத்தரம்—ஞானமில்லாமலேயே அதனுடைய நிவிருத்தியில்லை என்றுல், அவ்விதமன்று. ஞானமிருந்தாலும் ஜீவன்முக்திக்கு அதனுடைய நிவ்ருத்தி காணப்பெறவில்லையே.

சங்கை—

ஞானத்திற்கு சிலகாலம் ப்ராரப்தகர்மாவினுலே ப்ரதிபந்தத்தோடு நிவ்ருத்தியாகாவிடினும், ப்ரதிபந்தம் நசித்துள்ள பொழுது லிங்கதேஹ நிவ்ருத்தி உண்டாகப்போகிறது என்று சொல்லவும் முடியாது. பஞ்சபாதிகாசார்யர்—"எக்காரணத்தால் ஞானம் அஜ்ஞானத்தையே நிவ்ருத்திசெய்யுமோ" என்று ஸமர்த்தநம் செய்திருக்கிருர். அப்பொழுது லிங்கதேஹ நிவ்ருத்திக்கு ஸாதநம் யாது? என்றுல்; ஸாமக்ரிகைகளுடைய நிவ்ருத்தியேயாகும்.

கார்யநிவர்தகம் இருவகையாகும். அவை—விரோதிஸத்பாவம் ஸாமக்ரீநிவ்ருத்தி என்பன. அது எவ்விதமெனில்—

"விரோதியாயுள்ள வாயுவினுல் தைலம், வர்த்தி என்ற, ஸாமக்ரியைகளுடைய நிவ்ருத்தியினுல் தீபம் நிவ்ருத்தியடைவது போல, லிங்கதேஹத்திற்கு ஸாக்ஷாத்தாயுள்ள விரோதியை நாங்கள் காணவில்லை. ஸாமக்ரியையோ வெனில் இருவகையாகும்.

ப்ராரப்தம், அநாரப்தம், என்பன. அந்த இரண்டு ஸாமக்ரியை யினுலும் அஜ்ஞாநிகளுடைய லிங்கதேஹமானது இவ்வுலகத் திலும், மேல் உலகத்திலும் இருப்பதாகும்.

ஞாநிகளுக்கோ வெனில், ஸஞ்சிதமானது (அநாரப்தம்) ஞாநத்தினுலேயே நிவ்ருத்தியடைகின்றதாலும். பிராரப்த கர்மா வானது போகத்தினுல் நிவ்ருத்தியடைகின்றதாலும், எண்ணெ, வர்த்தி இவையில்லாத தீபம் போல ஸாமக்ரியையின் நிவ்ருத்தியி னுல் லிங்கதேஹம் நிவ்ருத்தியாகிறது. ஆகையினுல் அதனுடைய நிவ்ருத்தியானது ஞாநபலமாகமாட்டாது. இருக்கட்டும், இந்த நியாயத்தினுல் வரப்போகிற தேஹத்தினுடைய அநாரம்பமும் ஞாநபலமாகாது.

ஏனெனில்—

அநாரம்பமே பலமா என்ன? அல்லது அதனுடைய பரிபாலநமா? முதலில் சொல்லியது இல்லை. அதற்கு ப்ராகபாவ ரூபத்தினுல் அநாதிஸித்தமாயிருப்பதால் என்க. இரண்டாவது மில்லை. அநாரப்தமாயுள்ள கர்மரூபமான ஸாமக்ரியையினுடைய நிவ்ருத்தியினுலேயே வரப்போகிற தேஹத்திற்கு ப்ராகபாவத்தி னுடைய பரிபாலனமானது ஸித்திப்பதால் என்க. அதனுடைய நிவிருத்தியின் பலன் எனச் சொல்லுவதும் கூடாது. ஏனெனில் அவித்தையினுடைய நிவ்ருத்தியே வித்யையினுடைய பலன் எனச் சொல்லப் பெற்றதால் என்க.

இதுவும் குற்றமன்று—

வரப்போகிற ஜந்மத்தினுடைய ஆரம்பங்களுக்கு வித்யா பலத்தின் தன்மையானது ப்ரமாணமாயிருப்பதாலேயே என்க. ''யஸ்மாத் பூயோ ந ஜாயதே''— எக்காரணத்தால் மறுபடியும் உண்டாவதில்லையோ'' என்பன போன்ற உதாஹரணமாகக் கொள்ளப் பெற்ற ச்ருதிகளே அதற்கு ப்ரமாணமாகும்.

மற்றும்—

ஞாநமானது அஜ்ஞாநத்திற்கு நிவர்தகம் என்ற நியாயத்தி னுலும். விரோதமாகாது. அஜ்ஞாநத்தோடு கூடியிருக்கின்ற நியதமாயுள்ளவைகளான அப்ரஹ்மத்தன்மை முதலியவை களுக்கு அஜ்ஞாநம் என்ற சொல்லால், பஞ்சபாதிகாசார்யர் வ்யவஸ்தை செய்யப் பெற்றுள்ளதாலும் என்க.

அவ்வாறு இல்லாமல் போனால், அது அநுபவத்திற்கு விரோதமுமாகும். அஜ்ஞாந நிவ்ருத்தியைப் போல, அப்ரஹ்மம் முதலிய நிவ்ருத்தியும் அநுபவிக்கப் பெறுகின்றதன்றோ! ஆகையினால் பாவியாயுள்ள (வரப்போகின்றதான) தேஹமின்மையின் லக்ஷணமானது விதேஹமுக்தியினுடைய ஞாநஸமாநமாயுள்ள காலத்தைச் சார்ந்தது என்றவாறு.

இதற்கு ப்ரமாணமாக யாஜ்ஞவல்க்யருடைய வசநம் சொல்லப் பெறுகின்றது—

''அபயம் வை ஜநக'' —''ஓ ஜநக! நீ அபயத்தையன்றோ! அடைந்துள்ளாய்'' எனவும்; ''ஏதாவதரே கல்வம்ருதத்வம்'' இதி ச; ''ஓ மைத்ரேயி, இவ்வளவு வரையிலன்றோ அம்ருதத்தன்மையும் எனவும், வேறு ச்ருதியிலும், ''தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி—இதி; ''இவ்வாறு அந்த (ப்ரஹ்மத்தையுணர்ந்த) வித்வான் இவ்விடத்திலேயே அமுதத்தை (மோக்ஷம்)பெற்றவனாக இருக்கிறான்'' என்றவாறு.

தத்வஞாநம் உண்டாயிருந்த பொழுதிலும், அதனுடைய பலத்தின் வடிவாயுள்ள விதேஹமுக்தியானது அப்பொழுது உண்டாகாது. அது காலாந்தரத்தில் தோன்றுவதுமாகும். அப்பொழுது 'ஜ்யோதிஷ்டோமம்' முதலிய யாகங்களைப் போலவே ஞாநத்தினால் தோன்றியதான 'அபூர்வம்' என்பதைச் சிறிது காலம் கல்பனை செய்ய வேண்டும். ஆகவே தர்மசாஸ்திரத்திலேயே ஞாநசாஸ்திரமானது அடங்கியுள்ளதாக ஆகிவிடும்.

அதற்குப் பதில் இவ்வாறு சொல்லப் பெறுகின்றது—

மந்த்ரம் முதலியவைகளினால் கட்டுப்படுத்தப் பெற்ற அக்நிபோல, ப்ராரப்தத்தினால் கட்டுண்ட ஞாநம், காலாந்தரத்தில் விதேஹமுக்தியை கொடுக்கக் கூடும் என்பதாகும்.

அவ்வாறு சொல்ல வேண்டாம்; விரோதமின்மையால் என்க. நாங்கள் நினைக்கின்றவாறு பாவியான ('வரப்போகிற') தேஹத்திற்கு அத்யந்தாபாவலக்ஷணா என்பது உண்டு, விதேஹமுக்தியானது வர்தமாந தேஹமொன்றையே ஸ்தாபநம் செய்வதால், ப்ராரப்தத்தோடு விரோதியாகிறது. எக்காரணத்தினால் கட்டுப்படுத்துகின்றதோ அக்காரணத்தால் என்க.

மற்றும், க்ஷணிகத்தோடு காலாந்தரத்தில் தன்னிடத்தில் காணமுடியாத ஞாநம் எவ்வாறு முக்தியைக் கொடுக்கவல்லது? கடைசியாயுள்ள (சரமஸாக்ஷாத்காரமாயுள்ள) வேறு ஒரு ஞாந லக்ஷணமானது உண்டாகப் போவதால் என்று சொன்னால் அதுவுமில்லை. ஏனெனில் ஸாதநங்கள் ஒன்றுமின்மையால் என்க. ப்ரதிபந்தகமானது ப்ராரப்த நிவ்ருத்தியோடு கூட, குரு, சாஸ்திரம், தேஹம், இந்த்ரியம் முதலிய அசேஷமாயுள்ள உலகத்தின் ப்ரதிபாஸத்தினல் நிவ்ருத்தியுண்டாகும்.

அப்பொழுது, அந்த ஸாதநம் எவ்வாறு உண்டாகும்? அப்பொழுது "பூயஸ்சாந்தே விச்வமாயா நிவ்ருத்தி :— "மறுபடியும் முடிவில் உலகைப் பற்றிய மாயையானது விலகுகின்றது" என்ற இந்த சுருதிக்கு பொருள் யாது? என்றால், "ஆரம்பத்திலும் முடிவிலும் நிமித்தம் இல்லாமையினலும், தேஹேந்த்ரியங்களான யாவும் நைமித்திகங்களுடைய நிவ்ருத்தி என்பதே பொருளாகும். பிறகு உமக்கு ஸம்மதமான வர்த்தமாந தேஹமில்லாமை என்ற லக்ஷணமான விதேஹமுக்தியானது தேஹம் நழுவிய பிறகே இருக்கட்டும். எமது அபிப்பிராயமோ ஞாநத்தினுடைய ஸமாநகாலத்திலேயாகும்.

இக்கருத்தையே பகவான் சேஷனும்—

**"தீர்த்தே ஶ்வபசக்ருஹே வா**
**நஷ்டஸ்ம்ருதிரபி பரித்யஜந் தேஹம்.**
**ஞாநஸமகாலமுக்த:**
**கைவல்யம் யாதி ஹதஶோக;" இதி**

"—(புண்ய) தீர்த்தக்கரையிலாவது, தாழ்ந்தவனுடைய க்ருஹத்திலாவது, நினைவையிழந்தவனுயினும் தேஹத்தை விட்டவன் (எவனே) (அவன்) ஶோகங்களைக்களைந்தவனுக ஞாநஸமாந காலத்திலேயே விடுதலை பெற்று கைவல்யத்தை யடைகின்றான்" என்றவாறு,

ஆகையினல், விதேஹமுக்தியில் ஸாக்ஷாத்கார ஸாதநமாயுள்ள தத்வஞாநத்திற்கு ப்ரதாநத்தன்மையும் ஸம்மதமாகும். வாஸநாக்ஷயம், மநோநாஶம் இவைகளுக்கு ஞாநஸதநத்தினலேயே வ்யவஹிதத்தன்மையுள்ளதால் அது உபஸர்ஜநம் என்று சொல்லப் பெற்றது.

அஸுரஸம்பந்தமான வாஸநாக்ஷயத்தைச் செய்கின்ற தைவ வாஸனைக்கு ஞானஸாதநத்தன்மையானது சுருதிகளிலும், ஸ்ம்ருதிகளிலும் காணப்பெறுகின்றது—

"சாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷு: ஸமாஹிதோ பூத்வா
ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத்" இதி;

"—இவ்வாறு உணர்ந்தவன் சாந்தனுகவும், தாந்தனுகவும், உபரதனுகவும், திதிக்ஷுவாகவும்; ஸமாஹிதனுகவும் இருந்துகொண்டு தன்னிடத்திலேயே ஆத்மாவைக் காண்கின்றான்" என்பது ச்ருதியாகும். ஸ்ம்ருதியும்—

"அமாநித்வமதம்பித்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம்.
ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ:.
இந்த்ரியார்த்தேஷு வைராக்யமநஹம்கார ஏவ ச.
ஜந்மம்ருத்யுஜராவ்யாதி து:கதோஷாநுதர்சநம்.
அஸக்திரநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு.
நித்யம் ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு.
மயி சாநந்யயோகேந பக்திரவ்யபிசாரிணீ.
விவிக்ததேஶஸேவித்வமரதிர்ஜநஸம்ஸதி.
அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்வஜ்ஞாநார்த்ததர்ஶநம்.
ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தமஜ்ஞாநம் யததோऽந்யதா" இதி.

"—கர்வமின்மை, தம்பமின்மை, ஹிம்ஸை செய்யாமை, பொறுமை, நேர்மை, ஆசார்யனை வழிபடுதல், தூய்மை, ஸ்திரத்தன்மை, தன்னைக் கட்டுதல்;

"—இந்த்ரிய விஷயங்களில் விருப்பமின்மை, அஹம்காரம் இல்லாமை, பிறப்பு, இறப்பு, நரை, நோய், துக்கம், தோஷம் இவற்றின் கண் இசைந்த காக்ஷியுடைமை";

"—பற்றின்மை, மகனையும், மனைவியையும், வீட்டையும் தன்னுடைமை எனக் கருதாமை, விரும்பியனவும், விரும்பாதனவும் எய்துமிடத்தே ஸமசித்தமுடைமை,";

"—பிறழ்ச்சியற்ற யோகத்தோடு என்னிடத்தில் தவறுதலின்றிச் செலுத்தப் பெறும் பக்தி, தனியிடங்களை மேவுதல், ஜனக்கூட்டத்தில் விருப்பமின்மை";

"—ஆத்ம ஞாநத்தில் எப்பொழுதும் நழுவாமை, தத்துவ ஞாநத்தில் பொருளுணர்வு—இவை ஞாநமெனப் பெறும். இவற்றினின்று வேறுபட்டது அஜ்ஞாநம்" என்றவாறு.

வேற்று வஸ்துக்களிடத்தில் நான் என்ற புத்தியானது அபிஷ்வங்கம் எனச் சொல்லப் பெறும். இதனுல் இது அறியப் பெறுகின்றது என்ற சொல் விளக்கத்தால் ஞாநஸாதநம் எனச் சொல்லப் பெற்றது.

மநோநாசத்திற்கும், ஞாநஸாதநத்தன்மை ச்ருதிஸ்ம்ருதிகளில் பிரஸித்தமாகச் சொல்லப் பெற்றுள்ளது—

"ததஸ்து தம் பஶ்யதி நிஷ்கலம் த்யாயமாந": இதி ச்ருதி ;

—"சுத்தமான அந்த:கரணமுள்ளவனுன த்யாநிப்பவன் நிரவயவமாயிருக்கிற அந்த ப்ரஹ்மத்தைத் தெளிவான ஞாநத்தைக் கொண்டு காண்கின்ருன்" என்றவாறு;

"அத்யாத்மயோகாதிகமேந தேவம் மத்வா தீரோ ஹர்ஷசோகௌ ஜஹாதி" இதி ச;

"—அத்யாத்ம யோகத்தினுல் (விஷயங்களையகற்றி ஆத்மாவையே த்யானிப்பதால்) விவேகியானவன் பர்யாலோசனை செய்து ஸம்தோஷத்தையும், வ்யஸநத்தையும் விடுகின்ருன்" என்றவாறு. பிரத்யகாத்ம ஸமாதியை அடைந்த காரணத்தால் தேவனை உணர்ந்து என்பது தாத்பர்யம்.

"யம் விநித்ரா ஜிதச்வாஸா: ஸம்துஷ்டா: ஸம்யதேந்தரியா:.
ஜ்யோதி: பஶ்யந்தி யுஞ்ஜாநாஸ்தஸ்மை வித்யாத்மநே நம:" இதி

என்ற ஸ்ம்ருதியும்;

"—நித்ரையை விட்டவர்களும், ஶ்வாஸத்தை வென்றவர்களும், எப்பொழுதும் ஸம்துஷ்டியோடிருப்பவர்களும், அடக்கப்பெற்ற இந்திரியங்களையுடையவர்களாகவும், யோகத்தில் திளைத்துள்ளவர்களாகவும் இருக்கின்றனரோ, அவர்கள் எந்த ஒளியைக் காண்கின்றனரோ, அந்த வித்யாவடிவாயுள்ளவர்களுக்கு நமஸ்காரம்" எனச் சொல்லும்.

இவ்வாறு, மூவகையாயுள்ள தத்வஞாநம் முதலியவை களுக்கு விதேஹமுக்தி, ஜீவந்முக்தி இவைகளுடைய வசத்தால் (நிறைவால்) குணங்களுடைய ப்ரதாநமாயுள்ள நிலையின் வ்யவஸ்தை ஸித்தமாகியது.

**சங்கை—**

விவிதிஷா ஸம்ந்யாஸிகளினால் ஸம்பாதிக்கப் பெற்ற இந்த மூவகையாயுள்ள தத்வஞாநம் முதலிய மூன்றுகளுக்குள் வித்வத்ஸம்ந்யாஸத்திற்கு மேலே தொடர்ந்துள்ள நிலையின் அளவிலேயா? இல்லாவிடில் மறுபடியும் ஸம்பாதிப்பதற்குள்ள முயற்சி வேண்டப் பெறுகின்றதா? (என்றால்) முதலாவது இல்லை. தத்துவஞாநத்திற்குப் போலவே, மற்றவைகளுக்கும் முயற்சியில்லாமலேயே ப்ராதாந்யத்தைச் சேர்ந்த ஆதரவின் மையின் ப்ரஸங்கமுண்டாகும்.

இரண்டாவதும் இல்லை, மற்றவைகளுக்குரிய ஞாநத்திற்கும் முயற்சியின் அபேக்ஷையானது இருக்கும்பொழுது, உபஸர்ஜநத்தி னுடைய (அப்ரதாநம்) ஔதாஸீந்யத்தின் இன்மையானது தோன்றக்கூடும் என்பதால் என்க. இதுவும் குற்றமாகாது— ஞாநத்திற்கு அநுவ்ருத்தி மாத்திரமும் (தொடர்பு), மற்றவை களுக்கு முயற்சியினுடைய ஸாத்யமும் வேண்டுமென்பதை அங்கீகாரம் செய்துள்ளதால் என்க.

ஏனெனில்—வித்தைக்கு அதிகாரமுள்ளவன் இருவகை யாவன். செய்யப் பெற்ற உபாஸனையையுடையவன், செய்யப் பெறாத உபாஸனையையுடையவன் என்பது. அவைகளில் உபாஸ்யமாயுள்ள ஸாக்ஷாத்காரம் வரையில் உபாஸனையைச் செய்து எப்பொழுது ஞாநத்தில் ப்ரவ்ருத்திக்கின்றானோ, அப் பொழுது வாஸநாக்ஷயம் மனோநாஶம் இவைகளுக்கு உறுதி யாயுள்ள ஞாநத்தின் மேல் (ஞாநத்திற்குப் பிறகு) வித்வத் ஸம்ந்யாஸம், ஜீவந்முக்தி இவையிரண்டும் தானாகவே கிடைப் பனவாம்.

அத்தகைய சாஸ்திரத்திற்கு ஸம்மதமாயுள்ளவனே முக்யமான வித்யாதிகாரியாவன். ஆகையினால் அவனைக் குறித்து சாஸ்திரங்களோடு கூடவே பிரஸ்தாபிக்கப் பெற்றுள்ளதால் ஸ்வரூபத்தோடு தோஷமற்றவனாயினும், வித்வத்ஸம்ந்யாஸம், விவிதிஷாஸம்ந்யாஸம் இவைகளில் கலந்துள்ளவைகளாகவே காணப்பெறுகின்றன.

இக்காலத்திலுள்ளவர்களோவெனில் பெரும்பாலும் உபாஸனை, செய்யாமலேயே உத்ஸாஹத்தின் அளவிலே விரைவாக வித்தையில் ப்ரவேசிக்கின்றனர். வாஸநாக்ஷயம், மநோநாசம் இவ்விரண்டையும் தாத்காலிகமாகவும் ஸம்பாதித்துக் கொள்ளுகின்றனர். அந்த அளவிலே, சிரவணம், மநநம், நிதித்யாஸநம் என்ற இவைகளும் தோன்றுகின்றன.

அவைகளோடு உறுதியாயுள்ள அப்யாஸத்தின் காரணமாக அஞ்ஞாநம், ஸம்சயம், விபர்யயம் என்ற இம்மூன்றும் விலகுகின்றதால், தத்தவஞாநமும் நன்கு தோன்றுகிறது அவ்வாறு தோன்றுகின்ற ஞாநத்திற்கு பாதகமாயுள்ள (விரோதம்) ப்ரமாணங்களுடைய இன்மையால் நிவ்ருத்தியான அவித்தைக்கு மறுபடியும் தோன்றக்கூடிய காரணமுமில்லை, அதற்குத் தளர்ச்சியும் இல்லை.

வாஸநாக்ஷயம், மநோநாசம் இவை யிரண்டுக்குமோ வெனில், உறுதியான அப்யாஸமின்மையால் போகத்தைக் கொடுக்கின்ற ப்ராரப்தத்தினல் அடிக்கடி பாதிக்கப் பெறுகின்றமையாலும். காற்ருேடு கூடின பிரதேசத்திலிருக்கப்பெற்ற தீபம் போல விரைவில் நிவ்ருத்தியாகின்றது. இதற்கு உதாஹரணமும் வஸிஷ்டர் சொல்லுகிருர்—

''பூர்வேப்யஸ்து ப்ரயத்நேப்யோ விஷமோऽயம் ஹி ஸம்மதஃ.
து;ஸாதோ வாஸநாத்யாக: ஸுமேருந்மூலநாதபி.'' இதி;

''—முன்பு சொல்லப் பெற்றவைகளான முயற்சிகளிலிருந்து ஸாதிக்கமுடியாததும், விஷமமாயுமுள்ள இந்த வாஸநாத்யாகம் என்பது மேருவைப் பிளப்பதைக்காட்டிலும் மிகவும் சிரமமான காரியமாகும்'' என்றவாறு. அர்ஜுநனும்—''

''சஞ்சலம் ஹி மந:க்ருஷ்ண ப்ரமாதி பலவத்த்ருடம்.
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்'' இதி;

''கண்ணு! மனம் சஞ்சலமுடையது. அது தவறும் இயல்பினது, வலியதுமாம், உரனுடையது. அதைக் கட்டுப்படுத்துதல் காற்றைக் கட்டுவது போல மிகவும் கஷ்டமான செய்கை யென்று நான் மதிக்கிறேன்'' என்றவாறு.

ஆகையினுல் இப்பொழுதுள்ள வித்வத்ஸம்ந்யாஸிகளுக்கு ஞானத்தினுடைய தொடர்ந்த வியாபாரத்தின் அளவேயாகும். வாஸநாக்ஷயம், மனோநாஸம் இவ்விரண்டுமோ வெனில், முயற்சியினுலேயே ஸம்பாதிக்கத்தக்கன என்பது தீர்மானமாகும்.

சங்கை—

வாஸனை யென்பது யாது? எதனுடைய க்ஷயத்தின் பொருட்டு முயற்சி செய்ய வேண்டுமென்று சொன்னல், அம் முயற்சியினுடைய ஸ்வரூபம் சொல்லப்பெறுகின்றது—

"த்ருடபாவனையாத்யக்தபூர்வாபரவிசாரணம்.
யதாதாநம் பதார்த்தஸ்ய வாஸ்நா ஸா ப்ரகீர்த்திதா.,
பாவிதம் தீவ்ரஸம்வேகாதாத்மநா யத்ததேவ ஸ:.
பவத்யாஸு மஹாபாஹோ விகதேதரஸம்ஸ்ம்ருதி:.
தாத்ருக் ரூபோ ஹி புருஷோ வாஸநாவிவஸீக்ருத ;
ஸம்பஸ்யதி யதேவைதத் ஸத்வஸ்த்விதி விமுஹ்யதி.
வாஸநாவேகவைவஸ்யாத் ஸ்வரூபம் ப்ரஜஹாதி தத்.
ப்ராந்தம் பஸ்யதி துர்த்ருஷ்டி : ஸர்வம் மதவஸாதிவ." இதி.

"உறுதிவாய்ந்த பாவனையினுல் முன்பின் விசாரணை செய்வதை விட்டு வஸ்துவினுடைய யாதொரு ஸ்வீகாரமுண்டோ, அது வாஸனையெனச் சொல்லப்பெற்றது."

"ஆத்மாவோடு தீவிரமான சேர்க்கையினுல் யாதொரு வஸ்துவானது பாவிக்கப் பெறுகின்றதோ, அதுவே வாஸனையாகும். ஓ மஹாபாஹோ! அவன் வேறு வஸ்துவைச் சிந்தனை செய்யாமல் இருக்கின்றுனே, விரைவில் அந்த வஸ்துவாகவே இருக்கின்றுன்"

"வாஸனையினுல் விசேஷமாக வஸீகரிக்கப்பெற்ற அத்தகைய புருஷன், இது எப்பொழுது ஸத்வஸ்துவானது என்று நன்கு உணருகின்றுனே அப்பொழுதே மயங்கிவிடுகிறுன்."

"துர்வாஸனையினுல் தூஷிதமாயுள்ள பார்வையையுடைய புருஷன், வாஸனையுடைய வேகத்தின் பரவஸத்தினுல் அந்த ப்ரஸித்தமாயுள்ள வஸ்துஸ்வரூபத்தை விட்டுவிடுகிறுன். அவன் அதை கைக்கொள்ளுவதில்லை. அதாவது மதத்தின்

வமமானது போல எல்லா வஸ்துவையும் ப்ரமத்தினல் வேருகவே பார்க்கிருன் என்பது தாத்பர்யம்" என இவ்வாறு வஸிஷ்டர் சொல்லுகிருர்.

" இவ்விடத்தில் தத்தம் தேமாசாரம், குலாசாரம், தர்மம், பாஷை இவைகளின் பேதமும் அதனையடைந்துள்ள அபமப்தம், ஸுமப்தம் (கெட்டசொல், நற்சொல்) இவைகளில் ஜீவராசிகளுடைய பற்றுதலானது ஸாமான்யமான உதாஹரணமாகும். விசேஷமாயுள்ளதோ வெனில்—பேதங்களைச் சொல்லி பிறகு உதாஹரணங்களைச் சொல்லுவோம்.

" இவ்வாறுள்ள வாஸனையைக் குறித்து ப்ருஹதாரண்யகத்தில் சொல்லப் பெறுகின்றது—.:

ஸ யதாகாமோ பவதி தத் க்ரதுர் பவதி யத் க்ரதுர் பவதி
தத் கர்ம குருதே யத் கர்ம குருதே ததபிஸம்பத்யதே." இதி.

"—அவன் இயல்பாகவுள்ள காமத்தையுடையவனுகின்ருனே, அப்பொழுது உறுதியான புத்தி தோன்றுகின்றது. எப்பொழுது உறுதியான புத்தியுண்டோ, அப்பொழுது கர்மாவைச் செய்கிருன், எப்பொழுது கர்மாவைச் செய்கிருனே, அப்பொழுது அதோடு ஒன்றி விடுகின்ருன்" என்றவாறு.

வாஸனையினுடைய பேதமும் வால்மீகியினுல் சொல்லப்பெற்றுள்ளது—

" வாஸநா த்விவிதா ப்ரோக்தா மு௱த்தா ச மலிநா ததா.
மலிநா ஜந்மஹேது : ஸ்யாத் மு௱த்தா ஜந்மவிநாமிநீ.
அஜ்ஞாநஸு௱கநாகாரா கநாஹம்காரமாலிநீ.
புநர்ஜந்மகரீ ப்ரோக்தா மலிநா வாஸநா புதை :.
புநர்ஜந்மாங்குரம் த்யக்த்வா ஸ்திதா ஸம்ப்ரஷ்டபீஜவத்.
தேஹார்த்தம் த்ரியதே ஞாதஞேயா மு௱த்தேதி சோச்யதே ." இதி.

" வாஸனையானது இருவகை யெனச் சொல்லப் பெற்றது. அது மு௱த்தா. அவ்விதமே மலிநா என்பது. மலிநவாஸனையானது பிறவிக்குக் காரணமாயிருப்பது. மு௱த்த வாஸனையானது பிறவியைக்களைவது." என்றவாறு.

மலிநவாஸனையின் இலக்கணம் வருமாறு—

"அஜ்ஞானத்தினால் மிகவும் நெருக்கமாயுள்ள ஆகாரத்தை (வடிவம்) யுடையதும், நெருக்கமாயுள்ள அஹங்காரம் நிறைந்துள்ளதுமா யிருப்பது மலிநவாஸனையாகும். பண்டிதர்களினால் இந்த மலிநவாஸனை மறுபிறவியைத் தோற்றுவிக்கும் திறமை வாய்ந்தது" என்று சொல்லப் பெற்றுள்ளன."

"அந்த ஶுத்தவாஸனையானது, மறுபிறவியென்ற முளையை விட்டு, இறைந்துள்ள காய்ந்த விதைபோல இருப்பது எனவும், தேஹத்தின் பொருட்டு ஞாத்ரு ஞேயமாகத் தரித்திருப்பது எனவும் சொல்லப் பெறுகின்றது" என்றவாறு.

மற்றும், தேஹம் முதலிய ஐந்து கோசங்களுக்கும், அவைகளுக்கு ஸாக்ஷியாயுள்ள சிதாத்மாவுக்கும் பேதத்தால் மறைக்க பெற்றது அஜ்ஞானமாகும். அந்த அஜ்ஞானத்தினால் நன்கு நெருக்கமாகவுள்ள ஆகாரம் (வடிவம்) எதற்கு உண்டோ, அதுவே அஜ்ஞானஸுகநாகாரம் எனச் சொல்லப் பெறும். எவ்வாறு, க்ஷீரமானது மோரின் [சேர்க்கையால் கனமாயுள்ளதோ, (கெட்டி) அல்லது உருக்கிய நெய்யானது எவ்வாறு, குளிர்ந்த இடத்தில் நீண்டநேரம் வைத்திருந்தால் கனமாக (கெட்டி) உறைந்து விடுகின்றதோ), அவ்வாறே வாஸனையையும் காணவேண்டும். இந்த கநீபாவமும் (கெட்டியாயிருக்கும் தன்மை) ப்ராந்திஞானத்தின் பரம்பரையே யாகும்.

இதனை, ஆஸுரஸம்பத்தைக் குறித்து விவரமாகச் சொல்லப் பெற்றுள்ள இடத்தில் ஸ்ரீபகவான் விளக்கியுள்ளார்—

"ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜநா ந விதுராஸுரா:
த ஶௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே.
அஸத்யமப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீஸ்வரம்
அபரஸ்பரஸம்பூதம் கிமந்யத் காமஹைதுகம்.
ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மாநோऽல்பபுத்தய:
ப்ரபவந்த்யுக்ரகர்மாண: க்ஷயாய ஜகதோऽஹிதா:
காமமாஶ்ரித்ய துஷ்பூரம் தம்பமாநமதாந்விதா:
மோஹாத் க்ருஹீத்வாஸத்க்ராஹாந் ப்ரவர்தந்தேऽஶுசிவ்ரதா:
சிந்தாமபரிமேயாம் ச ப்ரலயாந்தாமுபாஶ்ரிதா:
காமோப்போகபரமா ஏதாவதிதி நிஶ்சிதா:
ஆஶாபாஶஶதைர்பத்தா: காமக்ரோதபராயணா:
ஈஹந்தே காமபோகார்த்தமந்யாயேநார்த்தஸஞ்சயாந்" இதி.

"—அஸுரத்தன்மை கொண்டோர் தொழிலின் இயல்பையும், வீட்டின் இயல்பையும் அறியார். தூய்மையேனும், ஒழுக்கமேனும், வாய்மையேனும் அவர்களிடம் காணப்பெறுவதில்லை."

"அவர்கள் இவ்வுலகம் உண்மையற்றதென்றும், நிலையற்றதென்றும், கடவுளற்றதென்றும், சொல்லுகிறார்கள். இது தொடர்பின்றிப் பிறந்ததென்றும், வெறுமே காமத்தைக் காரணமாக உடையது என்றும் சொல்லுகிறார்கள்."

"இந்தக் காக்ஷியில் நிலைபெற்று அற்பபுத்தியுடைய அந்த துஷ்டாத்மாக்கள் உலகத்துக்குத் தீங்கு சூழ்வோராய், அதன் நாசத்திற்குக்காக கொடிய தொழிலையும் செய்கின்றனர்."

நிரப்பவொண்ணாத காமத்தைச் சார்ந்து, டம்பமும், கர்வமும், மதமும் பொருந்தியவராய், மயக்கத்தால் பொய்க்கொள்கைகளைக் கொண்டு அஸுத்த நிச்சயங்களுடையவராய்த் தொழில் புரிகின்றனர்."

"பிரளய மட்டுந் தீராத எண்ணற்ற கவலைகளிற் பொருந்தி விருப்பங்களைத் தீர்த்துக் கொள்ளுவதில் ஈடுபட்டோராய் உண்மையே இவ்வளவுதான் என்ற நிச்சயமுடையோராய்;

"நூற்றுக்கணக்கான ஆசையென்னும் கயிறுகளால் கட்டுண்டு காமத்துக்கும், சினத்துக்கும், ஆட்பட்டோராய்க் காமபோகத்துக்காக அநியாயஞ் செய்து பொருட்குவைகள் சேர்க்க விரும்புகிறார்கள்" என்றவாறு.

அந்த ஆஸுரர்கள் உலகம் அஸத்யம் எனச் சொல்லுகின்றனர். வேதம், புராணம் முதலிய ப்ரமாணங்கள் உண்மையில் இல்லை, இத்தகையதே உலகம் எனவும் சொல்லுகின்றனர். அதாவது வேதங்களுக்கு ப்ரமாணம் இல்லையென்பது. அக்காரணத்தாலேயே ஈஸ்வரன் என்ற உறுதியாயுள்ள கர்த்தா இல்லை. இத்தகையதே உலகம் எனச் சொல்லுகிறார்கள்.

அப்பொழுது உலகத் தோற்றம் ஏது? எனச் சொல்லுகின்றவர்களைப்பார்த்து சொல்லுகிறார்—அன்யோன்யமாயுள்ள மங்கை, புருஷன் என்ற இவர்களுடைய மிதுநத்தால் இந்த உலகம் தோன்றியது. வேறு காரணம் இதற்கு உண்டோ என்றால், வேறு ஒன்றும் கிடையாது. ஆனால் காமத்தின் காரணமாகயிருப்பது. அதாவது பெண், புருஷன் இவர்களுக்கிடையே தோன்றுகின்ற

ப்ரவாஹவடிவாயுள்ள காமமே இந்த உலகம் தோன்று வதற்கு காரணம் என்பது பொருள்.

நெருக்கமுற்ற அஹம்காரத்திற்கு அவ்விடத்திலேயே உதாஹரணம் சொல்லப் பெற்றுள்ளது—

" இதமத்ய மயா லப்தம் இமம் ப்ராப்ஸ்யே மனோரதம்.
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புனர்தனம்.
அஸௌ மயா ஹத : ஶத்ருர் ஹநிஷ்யே சாபரானபி.
ஈச்வரோஹமஹம் போகீ ஸித்தோஹம் பலவாந் ஸுகீ.
ஆட்யோ ஽பிஜநவாநஸ்மி கோந்யோஸ்தி ஸத்ருஶோ மம.
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்யே இத்யஜ்ஞாநவிமோஹிதா:
அநேகசித்தவிப்ராந்தா மோஹ ஜாலஸமாவ்ருதா :
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகே஽ஶுசௌ." இதி.

" இன்று இன்ன லாபமடைந்தேன், இன்ன மனோரதத்தை இனி எய்துவேன்; இன்னத்தை யுடையோன்; இன்ன பொருளை இனிப் பெறுவேன் "

" இன்னபகைவரைக் கொன்று விட்டேன். இனி மற்றவர் களையும் கொல்வேன்; நான் ஆள்வோன்; நான் போகீ; நான் ஸித்தன்; நான் பலவான்; நான் ஸுகபுருஷன்;"

" நான் செல்வன்; இனப் பெருக்க முடையவன்; எனக்கு நிகர் யாவருளர். வேட்கிறேன்; கொடுப்பேன்; களிப்பேன்; என்ற அஜ்ஞாநங்களால் மயங்கினோர்."

"பல சித்தங்களால் மருண்டோர்; மோஹவலையில் அகப் பட்டோர்; காம போகங்களில் பற்றுண்டோர்;—இவர்கள் அஶுத்தமான நரகங்களில் விழுகிறார்கள்" என்றவாறு.

இந்த உதாஹரணங்களால் மறுபிறவிக்குள்ள காரணங்கள் சொல்லப் பெற்றுள்ளது—

"ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்தா : தநமாநமதாந்விதா:
யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே தம்போநாவிதிபூர்வகம்.
அஹம்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதம் ச ஸம்ஶ்ரிதா :
மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோ஽ப்யஸூயகா :
தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந்.
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு.

ஆஸுரீம் யோநிமாபந்நா மூட ஜந்மநி ஜந்மநி.
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் " இதி.

—"இவர்கள் தற்புகழ்ச்சி யுடையோர்; முரடர்; செல்வச் செருக்கும், மதமு முடையோர்; டம்பத்துக்காக விதி தவறிப் பெயரளவிலேயே வேள்வி செய்கின்றனர்."

" அஹம்காரத்தையும்; பலத்தையும்; செருக்கையும்; விருப்பத்தையும்; இனத்தையும் பற்றியவர்களாய் இன்னோர் தம் உடம்புகளிலும், பிற உடம்புகளிலும் உள்ள என்னைப் பகைக்கிறார்கள்."

" இங்ஙனம் பகைக்கும் கொடியோரை—உலகத்தில் எல்லாரிலும் கடைப் பட்ட இந்த அசுப மனிதரை நான் அஸுரப் பிறப்புகளில் எறிகிறேன் " என்றவாறு.

ஶுத்தவாஸனையோ வெனில், ஞாதஜ்ஞேயா என்பது. ஜ்ஞேயஸ்வரூபத்தை பதின்மூன்றும் அத்யாயத்தில் பகவான் சொல்லுகிறார்—

" ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வாம்ருதமஶ்நுதே.
அநாதிமத்பரம் ப்ரஹ்ம ந ஸத்தந்நாஸதுச்யதே.
ஸர்வத : பாணிபாதம் தத் ஸர்வதோக்ஷிஶிரோமுகம்.
ஸர்வத : ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி.
ஸர்வேந்த்ரிய குணாபாஸம் ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம்.
அஸக்தம் ஸர்வப்ருச்சைவ நிர்குணம் குணபோக்த்ரு ச.
பஹிரந்தஶ்ச பூதாநாமசரம் சரமேவ ச.
ஸூக்ஷ்மத்வாத் ததவிஜ்ஞேயம் தூரஸ்தம் சாந்திகே ச தத்.
அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம்.
பூதபர்த்ரு ச தஜ்ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச.
ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதிஸ்தமஸ: பரமுச்யதே.
ஞாநம் ஜ்ஞேயம் ஞாநகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் " இதி.

"—ஜ்ஞேயம் எது என்பதைச் சொல்லுகிறேன். அதை அறிந்தால் நீ சாகாமல் இருப்பாய். அநாதியாகிய பரப்ரஹமம், அது 'ஸத்' என்பதுமில்லை. 'அஸத்' என்பதுமில்லை."

" அது எங்கும் கைகால்களுடையது, எங்கும் கண்ணும், தலையும், வாயுமுடையது. எங்கும் செவியுடையது; உலகத்தில் எதனையும் சூழ்ந்து நிற்பது "

" எல்லா இந்திரிய குணங்களும் வாய்ந் தொளிர்வது; எல்லா இந்திரியங்களுக்கும் புறம்பானது; பற்றில்லாதது; அனைத்தையும் பொறுப்பது; குணமற்றது குணங்களைத் துய்ப்பது "

"பூதங்களுக்கு, உள்ளும் புறமு மாவது; அசரமும் சரமு மாவது; நுண்மையால் அறிவரிது; தூர மானது; அருகி லிருப்பது;

" உயிர்களில் பிரிவு பட்டு நில்லாமல் பிரிவு பட்டது போல் நிற்பது; அதுவே பூதங்களைத் தாங்குவது என்றறி; அவற்றை உண்பது; பிறப்பிப்பது;

"ஒளிகளுக்கெல்லாம் அ·.தொளி; இருளிலும் உயர்ந்த தென்ப; அதுவே ஞாநம்; ஞேயம்; ஞாநத்தால் எய்தப் படு பொருள்; எல்லாவற்றின் அகத்திலும் அமர்ந்தது." என்றவாறு.

அறியவேண்டியதாயுள்ள ஞேய மென்பது எதுவோ, அதை யறிந்து (ஜீவன்) மோக்ஷத்தை யடைகின்றனே, அதை நான் விசாரித்துச் சொல்லுவேன். ப்ரஹமம் ஆதியற்றது. அது ஸத் என்றோ, அஸத் என்றோ சொல்லப் பெறுவதில்லை. ஏனெனில்— அது விதி, நிஷேதம் என்ற இவை யிரண்டுக்கும் அப்பாற்பட்டது என்ற காரணத்தால் என்க.

அறிய வேண்டியதாயுள்ள முன்பு சொன்ன அந்த ப்ரஹ்ம மானது எவ்விடத்திலும் கைகளையும்; கால்களையு முடையது. அவ்விதமே கண்களையும், தலைகளையு முடையது, அவ்விதமே முகங்களையும் காதுகளையு முடையது. உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களையும் அது வியாபித்துக் கொண்டிருப்பது.

அந்த அறியத்தக்க வஸ்துவாகிய ப்ரஹ்மமானது, எல்லா இந்திரியங்களுடைய விஷயமான விருத்திகளிலும் அந்த அந்த விஷயமாக விளங்குகின்றது. அல்லது எல்லா இந்திரியங்களின் குணங்களையும் அதனதன் விஷயங்களையும் பிரகாசமடையச் செய் கின்றது. ஆனால் அது எல்லாவிதமான இந்திரியங்களைக் கொண்ட தன்று. அது ஒன்றிலும் ஒட்டாமலிருப்பது. ஆனால் எல்லாவஸ்து களுக்கும் அதுவே ஆதாரமாயிருப்பது, ஸ்த்வம் முதலிய குணங்க ளற்றது அது. ஆயினும் ஸத்வம் முதலிய குணங்களையநுபவிப்ப தாகும்.

அந்த பரஹ்மமானது, பூதங்களுக்கு வெளியேயும் உள்ளேயும் இருப்பதாகும். ஸ்தாவரம், ஜங்கமம் இவைகளினிடத்தில்

நுண்ணியதா யிருப்பதால் அறிய முடியாது. அது அஜ்ஞானி களுக்கு மிகவும் தொலைவிலுள்ளது. ஞானிகளுக்கோ அருகி லுள்ளது.

அறிய வேண்டிய அந்த ப்ரஹ்மமானது வெவ்வேருகப் பகுக்க பெருதது. ஆயினும் பூதங்களிடத்தில் அது வெவ்வேருகப் பகுக்க பட்டது போல் காணப்பெறுகின்றது. மற்றும், அதுவே பூதங்களை ரக்ஷிப்பதுமாகும். ஆயினும் அதுவே யாவற்றையும் விழுங்குகின்ற திறமை வாய்ந்ததாயு மிருப்பது. மற்றும், அது எல்லா பூதங்களை யும் தோற்றுவிப்பதுமாகும். அது ஒளிகளுக்கெல்லாம் ஒளியைக் கொடுப்பது (சந்திரன், ஸூர்யன் இவர்களுக்கு ஒளியைக் கொடுப்பதாயும் அமைந்துள்ளது) அது இருளுக்கு (அஜ்ஞானம்) அப்பாலுள்ளது. எனவும் சொல்லப் பெற்றுள்ளது.

இவ்விடத்தில், தடஸ்தலக்ஷணம், ஸ்வரூபலக்ஷணம் என்ற இவைகளினுல் அறிந்து கொள்வதற்கு உபாதியோடு கூடியது உபாதியோடு கூடாதது என்ற இவைகளுக்கு இரண்டு ஸ்வரூபம் சொல்லப் பெற்றது. எப்பொழுதாவது (ஒருவஸ்துவோடு) தொடர்பு கொண்டு யாதொன்று காணப் பெறுகின்றதோ அது தடஸ்த லக்ஷணம் என்பது. அது எவ்வாறெனில்— "காகத்தைப் போன்றது தேவதத்தனுடைய வீடு" என்பது.

அவ்விதமே மூன்று காலங்களிலும் தொடர்பு கொண்டு (ஒரு வஸ்துவோடு) யாதொன்று காணப் பெறுகின்றதோ, அது ஸ்வரூப லக்ஷணம் என்பது. அது எவ்வாறெனில்—மிகுந்த ஒளியுடன் இருப்பது சந்திரன் என்பது.

**சங்கை—**

விடப்பெற்ற முன் பின்னுள்ள விசாரத் தன்மையானது வாஸனையின் இலக்கணம் என்று சொல்லப் பெற்றது. ஜ்ஞேயமும், ஞானமும் விசாரத்திலிருந்தே தோன்றியதாகும். ஆகையினுல் ஶுத்தமாயுள்ள நிலையில் அந்த இலக்கணமில்லையே என்ருல்; அவ்வாறு சொல்லவேண்டாம்— இலக்கணத்தில் (வாஸநா) உறுதியாயுள்ள பாவனையினுல் என்று சொல்லப் பெற்றுள்ள தால் என்க.

எவ்வாறு, பல பிறவிகளில் உறுதியாயுள்ள பாவனைகளைச் செய்த காரணத்தால் இப் பிறவியில் பரோபதேசம் இல்லாமலே யே அஹம்காரம், மமகாரம், காமம், க்ரோதம் முதலிய மலிந

வாஸனைகள் உண்டாகின்றன. அவ்விதமே முதலாவதான உணர்வினுடைய விசாரத்திலுலிருந்து தோன்றிய பொழுதிலும் நீண்ட காலம் இடைவிடாத ஸத்காரங்களினால் தத்வமானது பாவனை செய்யப் பெற்றுள்ள பொழுது, பிறகு வாக்யம், யுக்தி இவைகளுடைய பராமர்ஸத்தின் துணை யில்லாது எதிரில் இருக்கிற குடம் முதலியவை போல விரைவில் தத்வமானது நன்கு பிரகாசிக்கின்றது. அத்தகைய போதத்தினுடைய அநுவிருத்தியினால் (பின்தொடர்வது) இந்திரிய வ்யவஹாரமா யுள்ளதே ஶுத்தவாஸனையென்பது.

அந்த ஶுத்தவாஸனையும், தேஹத்தையடைந்த ஜீவனுடைய அளவிலே உபயோகமா யிருப்பதுமாகும். அது தம்பம், தர்பம், முதலிய ஆஸுரஸம்பத்தைத் தோற்றுவிப்பதற்கல்ல. மற்றும் ஜந்மாந்தரத்திற்கு (மறுபிறவி) காரணமாயுள்ள தர்மாதர்மத்தி னுடைய தோற்றத்திற்காகவும் அன்று. எவ்வாறு கீழே சிதறிய நெல் முதலிய விதைகள் உரலை (களஞ்சியம்) நிரப்பும் அளவிலே உபயோகம் செய்யப் பெறுகின்றனவோ ருசியுள்ள அன்னத்திற்காக அன்று, மற்றும் பயிரையுண்டாக்குவதற்கு மன்று அது போலவேயாகும்.

மலிநவாஸனையும் மூவகையாகும். **லோகவாஸநா, ஶாஸ்த்ர வாஸநா, தேஹவாஸநா** என்பன அவை. எல்லா மக்களும் எவ்வாறு என்னை நிந்திக்கின்றவர்களாக இல்லையோ, எவ்வாறு துதிக் கின்றனரோ, அவ்வாறே எப்பொழுதும் (நான்) நடந்து கொள் வேன் என்ற யாதொரு அபிநிவேசம் (உறுதி) உண்டோ. அதுவே **லோகவாஸனை** யென்பது. அந்த வாஸனையை ஸம்பாதிப்பதற்கு முடியாதாகையினால் மலிநதன்மை யென்பது.

ஏனெனில்—

**"கோடந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கஶ்ச வீர்யவாந்."**

"—இப்பொழுது இவ் வுலகத்தில் எவன் குணம் பொருந் தியவன், எவன் வீர்யம் பொருந்தியவன்" என்பன போன்ற கேள்விகளினால் பலவாறு வால்மீகிமஹர்ஷி கேட்டார்.

**" இக்ஷ்வாகுவம்சரப்ரபவோ ராமோ நாம ஜநை : ஶ்ருத:; இத்யாதி—**

" இக்ஷ்வாகுவம்சத்தில் தோன்றிய ராமன் என்ற பெயரை யுடையவன். அவன் மக்களால் வெகுவாகப் பாராட்டப் பெறு கின்றவன்" என்பன போன்றவைகளால் நாரதர் மறுமொழி

சொன்னர். அத்தகைய ராமனுக்கும், பதிவ்ரதா சிரோமணி யாகிய உலகமாதாவாம் ஸீதைக்கும் கேட்பதற்கும் முடியாத ஜநங்களுடைய அபவாதமானது நன்கு தோன்றியதன்ருே? மற்றவர்களைக் குறித்து என்ன சொல்லமுடியும்?

ஏனெனில்—தேசவிசேஷத்தினல் ஒருவருக்கொருவருடைய பலவாராயுள்ள நிந்தையும் காணப் பெறுகின்றதன்ருே, தெற்கே யுள்ள அந்தணர்களால், வடக்கேயுள்ள வேதவிற்பன்னர்களான அந்தணர்கள் மாம்ஸம் புசிப்பவர்கள் என நிந்தனை செய்யப்பெறு கின்றனர். வடக்கேயுள்ளவர்களினுலும், மாதுலனுடைய மகளைக் கல்யாணம் செய்கின்றவர்களும், யாத்திரைகளில் மண் சட்டி களைச் சுமந்து கொண்டு செல்கின்றவர்களான தென்தேசத்த வர்கள் நிந்தனை செய்யப்பெறுகின்றனர். பஹ்வ்ருசர்கள், ஆஶ்வ லாயனஶாகையை, காண்வஶாகையைக் காட்டிலும் பெருமை யுடையது என நினைக்கின்றனர். வாஜஸநேயிகளோ வெனில், இதற்கு மாருக தங்களது ஶாகையே சிறந்தது எனச் சொல்லு கின்றனர்.

இவ்வாறு தத்தம் குலம், கோத்திரம், பந்துவர்கம் (உறவினர்) இஷ்டதேவதை முதலியவைகளுடைய பெருமையும், பிறருடைய நிந்தையும் பண்டிதர் முதல், பெண்கள், குழந்தைகள் வரையில் எல்லோரிடத்திலும் ப்ரஸித்தமாகக் காணப் பெறு கின்றது. இதைக் கருத்தில் கொண்டே சொல்லப் பெற்றுள்ளது வருமாறு—

“சுசி : பிசாசோ விசலோ விசக்ஷண:
க்ஷமோऽபஶக்தோ பலவாம்ஶ்ச துஷ்ட:.
நிஶ்சித்தசோர : ஸுபகோऽபிகாமீ
கோ லோகமாராதயிதும் ஸமர்த்த:” இதி;
“ வித்யதே ந கலு கஶ்சிதுபாய:
ஸர்வலோகபரிதோஷகரோ யு;
ஸர்வதா ஸ்வஹிதமாசரணீயம்
கிம் கரிஷ்யதி ஜநோ பஹுஜல்ப :.” இதி ச;

‘ தூய்மை, (யுள்ளவனுயினும்) பைசாசகுணமுள்ளவன்’ பண்டிதனுயினும் மிகுந்த சஞ்சலசித்தமுள்ளவன், பொறை யுடையவருயினும் திறமையற்றவன், பலசாலியாயினும் துஷ்ட குணமுள்ளவன், நல்லவனுயினும் காமுகனுயிருப்பவன் என்ற

இவ்வாறுள்ள உலகத்தை ஆராதநம் செய்வதற்கு எவன் திறமை வாய்ந்தவன் ” என்றும்,

“ உலகம் யாவையும் மகிழச் செய்வதற்கு ஏதாவது ஒரு உபாயமானது காணவில்லையன்றோ! ஏனெனில் எப்பொழுதும் தனது நன்மையைக் குறித்தே ஆசரணம் செய்கின்ற ஜநமானது பல வார்த்தைகள் பேசி என்னச் செய்யப்போகின்றதோ? எனவும் சொல்லப் பெற்றுள்ளது. ஆகையினால் உலக வாஸனைக்கு மலிநத்தன்மை குறித்து யோகீச்வரனுக்கு துல்யமாயுள்ள நிந்தை, ஸ்துதி இவ்விரண்டும் மோக்ஷஶாஸ்திரங்களில் வர்ணிக்கப் பெற்றுள்ளது.

மற்றும்—

ஶாஸ்த்ரவாஸனையானது மூவகையாகும். படிப்பதில் முயற்சி; ஶாஸ்த்ர விசாரத்தில் முயற்சி; அநுஷ்டாநம் செய்வதில் முயற்சி என்பன. அவைகளில் பாடத்தில் முயற்சியாவது—பரத்வாஜ னிடத்தில் காணப் பெறுகின்றது. அவனோவெனில், முன்னூறு வருஷம் வரையில் பலவகையாயுள்ள வேதங்களை அத்யயநம் செய்து, இந்த்ரனால் நான்காவது ஆயுளில் வஞ்சிக்கப் பெற்றார். அந்த நிலையிலும் அவர் எஞ்சியுள்ள வேதங்களை அத்யயநம் செய்வதற்கான முயற்சியையும் செய்தார். அதற்கும் (அதைப் படிப்பதற்கும்) சக்தியின்மையின் காரணத்தால் மலிநவாஸனை யின் தன்மையும் தோன்றியது.

அந்த சக்தியின்மையும் இந்த்ரன் உணரச் செய்து படிப் பதிலிருந்து திருப்பி, அதைக் காட்டிலும் அதிகமாயுள்ள புரு ஷார்த்தத்தின் பொருட்டு ஸகுணப்ரஹ்மவித்யையையும் உப செய்தான். இவ் விஷயம் யாவும் தைத்திரீயப்ராஹ்மணத்தில் காணத் தக்கவை.

அவ்விதமே, மிகவும் அருகிலுள்ள புருஷார்த்தத்தின் இன்மை யினால் பலஶாஸ்திரங்களுடைய முயற்சிக்கு மாலிந்யமாது காவஷேய கீதையில் காணப்பெறுகின்றது.—

“ கஶ்சிந்முநிர்: துர்வாஸா பஹுவிதசாஸ்த்ரபுஸ்தகபாரை:
ஸஹ மஹாதேவம் நமஸ்கர்தும் ஆகத: தத்ஸபாயாம்
முநிநா நாரதேந பாரவாஹிகர்தபஸாம்யமாபாதித :,
கோபாத் புஸ்தகாநி லவணார்வே பரித்யஜ்ய மஹாதேவேந
ஆத்மவித்யாயாம் ப்ரவர்தித:” இதி;

"—துர்வாஸர் என்ற ஒரு முனிவர் பலவகையான சாஸ்திரங்கள் நிறைந்த புத்தகச் சுமைகளைச் சுமந்து கொண்டு மஹாதேவனை நமஸ்காரம் செய்வதற்கு வந்ததை, அந்த ஸபையிலுள்ள நாரதர் புத்தகங்களை சுமந்து வந்துள்ளவரை கழுதைக்கு நிகராகச் சொல்லக் கேட்டு. கோபத்தை யடைந்து புத்தகங்களை உப்புக் கடலில் எறிந்துவிட்டு மஹாதேவனால் அவர் ஆத்மவித்யையை அப்யாஸம் செய்ய முனைந்தார்." என்பது. ஆத்மவித்யையும் அந்தர் முகமில்லாதவனுக்கும், குருவினுடைய கருணையில்லாதவனுக்கும் வேதங்கள், ஶாஸ்திரங்கள் இவைகளினால் மாத்திரம் உண்டாவதில்லை. இதற்கு ப்ரமாணமும் வருமாறு—

" நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந
பஹுநா ஶ்ருதேந" இதி.

"—இந்த ஆத்மா வசநத்தினால், (படிப்பினால்) அடையமுடியாது. புத்திசாலித்தனத்தினாலும், பலவிதமான கேழ்வியினாலும் அடைய முடியாது" என்றவாறு.

இக்கருத்தினையே வேறு ஓரிடத்தில் சொல்லப்பெற்றுள்ளதையும் காணலாம்—

" பஹுஶாஸ்தரகதாகந்தாரோமந்தேந வ்ருதைவ கிம்.
அந்வேஷ்டவ்யம் ப்ரயத்நேந தத்வஜ்ஞைர் ஜ்யோதிரவ்யயம்" இ தி;

"—பல ஶாஸ்தரங்களுடைய கதையென்னும் கந்தையின் (அழுக்கு) கண் அசைபோடுவதால் (காலம்) வீணாகவே ஏன் ஆகாது? ஆதலால் முயற்சியோடு கூட வாயுவின் உதவியினால் உள்ளே யிலங்கும் ஒளியைத் தேடவேண்டும்" எனவும்;

"அதீத்ய சதுரோ வேதாந் தர்மசாஸ்த்ராண்யநேகஶ:
ப்ரஹ்மத்வம் ந ஜாநாதி தர்வீம் பாகரஸம் யதா" இதி ச;

"—நான்கு வேதங்களையும் அத்யயநம் செய்து, பல சாஸ்த்ரங்களையும் பயின்று, ப்ரஹ்மத்தின் உண்மை நிலையினை யுணராது இருப்பவன், எவ்வாறு கரண்டியானது பாகத்தின் சுவையை யுணராதோ அது போலவே யாவன்" எனவும் சொல்லியுள்ளது.

"அதாவது ஶுத்தவாஸனையினால் ஸம்ஸ்காரம் பெற்ற பண்டிதனால் தனது ஆயுளை விழுங்குகின்ற பல ஶாஸ்த்ரங்களுடைய

தொகுதியோடு கூட மறு பிறவிக்கு முனை போன்றுள்ள மலிந வாஸனையின் தியாகத்தால் கிடைக்கப்பெறுகின்ற ப்ரஹ்மத்தையே தேட வேண்டும்; வேதம், ஶாஸ்த்ரம் இவைகள் யாவையும் கற்றுத் தேர்ந்துள்ளவனாயும், ப்ரஹ்ம த்வத்தை யுணருவதற்கு முயற்சி செய்யாதவன் அஜ்ஞாநியே யாவன்—என்பது அந்த இரண்டு மந்த்ரங்களுடைய தாத்பர்யமாகும்.

மற்றும்—

"நாரதஸ்து சது:ஷஷ்டிகலாகுசலோ ऽபி அநாத்மவித்வேந

அநுதப்த: ஸநத்குமாரம் உபஸஸாத" இதி.

"—நாரதர் அறுபத்துநான்கு கலைகளிலும் நன்கு திறமை வாய்ந்தவராயினும், ப்ரஹ்மத்வத்தை (ஆத்ம) யுணர்ந்து கொள்ளாத காரணத்தால் மிகவும் தாபத்தையடைந்து ஸநத்குமாரருடைய அண்மையை யடைந்து தனது நிலையை விளக்கினார்" என்று சந்தோகர்கள் படிக்கின்றனர்.

அநுஷ்டாநத்தின் முயற்சியானது விஷ்ணுபுராணத்தில் நிதாகனுடைய உபாக்யாநத்தில் சொல்லப் பெற்றுள்ளது. அவ்வாறே வாஸிஷ்டராமாயணத்திலும் தாசூரன் என்பவனுடைய உபாக்யாநத்திலும் காணப் பெறுகின்றது. நிதாகனோ வெனில் ரிபுமஹர்ஷியினால் அடிக்கடி உணர்வைப் பெறச் செய்தபொழுதிலும், கர்மாவின்மீதுள்ள பற்றுதலின் காரணமாக ஜாட்யத்தை விட முடியவில்லை. தாசூரனும் அளவு மீறிய பற்றுதலின் காரணமாக அநுஷ்டாநம் செய்வதற்குரிய ப்ரதேசத்தை (இடம்) ஓரிடத்திலும் அடையமுடியவில்லை.

இந்த கர்மவாஸனையானது மறுபிறவிக்கும் காரணமாயிருப்பது கொண்டு மலிநத்தன்மை சொல்லப் பெற்றது. இதற்குச் சான்றாக ஆதர்வணிகர்கள் சொல்லுகின்றனர். அது வருமாறு—

"ப்லவா ஹ்யதே அத்ருடா யஜ்ஞரூபா
அஷ்டாதசோக்தமவரம் யேஷு கர்ம.
ஏதச்ச்ரேயோ யேऽபிநந்தந்தி மூடா:
ஜராம்ருதயும் தே புநரேவாபி யந்தி.
அவித்யாயாமந்தரே வர்தமாநா:
ஸ்வயம் தீரா: பண்டிதம் மந்யமாநா:.

ஜங்கந்யமானா: பரியந்தி மூடா:
அந்தேனைவ நீயமானா யதாந்தா:
அவித்யாயாம் பஹுதா வர்த்மானா:
வயம் கிருதார்த்தா: இத்பிமந்யந்தி பாலா:.
யத்கர்மிணோ ந ப்ரவேதயந்தி ராகாத்
தேநாதுரா : க்ஷீணலோகாஸ்ச்யவந்தே.
இஷ்டாபூர்த்தம் மந்யமானா வரிஷ்டம்
நாந்யச்ச்ரேயோ வேதயந்தே ப்ரமூடா :
நாகஸ்ய ப்ருஷ்டே தே ஸுக்ருதேऽநுபூத்வா
இமம் லோகம் ஹீநதரம் விசந்தி''

"—வேள்வியின் வடிவாயிருக்கப் பெற்ற இந்த கர்மாக்கள் அழிவுள்ளன. பதினெட்டு அதிகாரிகளுள்ள கர்மா (வேள்வி) ஸ்லாக்ய (பெருமை) மில்லாதது. (ஞானமார்க்கத்தையபேக்ஷித்து ஸ்லாக் (பெருமை) மில்லதது என்பது பொருள்) ரித்விக முதலானவர்கள் பதினாறு. எஜமானன் ஒன்று, பத்நீ (மனைவி) ஒன்று ஆகப் பதினெட்டு இதை (இக்கர்மாவை) ஸ்ரேயஸ் என்று எந்த மூடர்கள் நினைக்கின்றனரோ, அவர்கள் ஜநநமரணத்தையடைகின்றனர்."

''அவித்தையின் நடுவிலிருக்கப் பெற்றவர்களும், பண்டிதர்கள் என்று தாங்களே தங்களைக் கொண்டாடிக் கொண்டிருக்கப் பெற்றவர்களுமான மூடர்கள் (ஜரை முதலியவற்றால்) பீடிக்கப் பெற்றவர்களாக இருந்து கொண்டு குருடனுக்குக் குருடன் வழி காட்டுவதுபோல் அலைகின்றனர்."

''அவித்தையில் பலவாறாக இருப்பவர்களும், தாங்கள் க்ருதார்த்தர்களாக ஆகிவிட்டோம் என்று சொல்லிக்கொள்ளுகின்றவர்களும், கர்மாவை விடாதவர்களுமான அவிவேகிகள், வருத்தமடைந்தவர்களாகவும், கர்மபலன் குறைந்துபோனவர்களாகவும் இருந்துகொண்டு ஸ்வர்கத்திலிருந்தும் நழுவி விடுகின்றவர்களாகவும் இருக்கின்றனர்,"

"இஷ்டாபூர்த்ததை (ஸ்ரௌத கர்மாவையும், ஸ்மார்த்தகர்மாவையும்), சிறந்தது என்றும், மற்றவை ஒன்றும் சிறந்ததன்று எனவும், நினைக்கின்ற முழுமூடர்கள், ஸ்வர்கத்தில் (கர்பலனை) அநுபவித்துப் பிறகு மறுபடியும் கீழானதாயிருக்கின்ற லோகத்திற்குத் திரும்புவார்கள்'' என்றவாறு.

ஸ்ரீபகவானாலும் சொல்லப் பெற்றுள்ளது—

''யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஶ்சித:,
வேதவாதரதா: பார்த்த நாந்யதஸ்தீதி வாதிந:.
காமாத்மாந: ஸ்வர்கபரா: ஜநமகர்மபலப்ரதாம்.
க்ரியாவிசேஷபஹுலாம் போகைஶ்வர்யகதிம் ப்ரதி.
போகைஶ்வர்யப்ரஸக்தாநாம் தயாபஹ்ருத சேதஸாம்.
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே.
த்ரைகுண்ய விஷயா வேதா: நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந.
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந்.
யாவாநர்த்த உதபாநே ஸர்வத: ஸம்ப்லுதோதகே.
தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத:'' இதி.

''—வேதங்களின் வெளி யுரையில் மகிழ்வார் சிலர், மலர்களைப் போன்ற (அலங்காரச்) சொற்கள் பேசுகின்றனர். தமது கொள்கை யொழிய மற்றது பிழை யென்கின்றனர்''

''இவர்கள் காமிகள், ஸ்வர்கத்தைப் பரமாகக் கொண்டவர்கள். பிறப்புக்கும் தொழிலுக்கும் பயன் வேண்டுவோர்; போகத்தையும், ஆக்ஷியையும் வேண்டுவோர்; பலவகையான க்ரியைகளைக் காட்டிப் பேசுகின்றனர்.''

''இவர்கள் சொல்லுவதைக் கேட்டு மதிமயங்கி, போகத்திலும் ஆக்ஷியிலும் பற்றுறுவோருடைய நிச்சயபுத்தி ஸமாதியில் நிலை பெறாது.''

''ஓ அர்ஜுந! வேதங்கள் மூன்று குணங்களுக்குட்பட்டனவற்றைக்குறித்துப் பேசுகின்றன. (ஆதலில்) நீ மூன்றுகுணங்களையும் கடந்தோனாகுக. *இருமைகளற்று எப்போதும் உண்மையில் நின்று யோகக்ஷேமங்களைக் கருதாமல் ஆத்மாவை வசப்படுத்தியவனாகுக.''

''எங்கும் நீர் நிரம்பிய இடத்தில் ஒரு சிறு குட்டம் என்ன பொருளுடையது; அன்ன பொருளே ஞானமுடைய ப்ராமணனுக்கு வேதங்களுமுடையன'' என்றவாறு.

---

(1) இருமைகள் — நன்மை, தீமை; ஒளி, இருள்; குளிர், வெப்பம் போன்ற இரட்டைகள்.

மற்றும்—தர்மத்திற்குக் காரணமாயிருப்பதால் ஶாஸ்த்ர வாஸனைக்கு மலிநத்தன்மையுமாம்.

"ச்வேதகேது: அல்பேனைவ காலேந ஸர்வாந் வேதாந்
அதீத்ய தர்பேண பிதுரபி புரதோ விநயம் ந சகார" இதி ;

"ச்வதேகேதுவானவன் சிறிது காலத்திலேயே எல்லா வேதங்களையும் அத்யயநம் செய்து, அதன் காரணமாகத் தந்தையினுடைய முன்னிலையிலும் விநயத்தைச் செய்யவில்லை." என்று சந்தோகர்கள் ஆருவது அத்யாயத்தில் படிக்கின்றனர்.

அதுபோலவே—

"ததா பாலாகி: காநிசித் உபாஸநாநி அவகத்ய
த்ருபத: உசீநராதிஷு பஹுஷு தேசேஷு திக்-
விஜயேந பஹூந் விப்ராந் அவஜ்ஞாய காச்யாம்
அஜாதசத்ரும் ப்ரஹ்மவிச்ச ஶிகாமணிம் அநுசாஸிதும்
தார்ஷ்ட்யம் சகார" இதி :

"அவ்விதமே, பாலாகி என்ற ரிஷியானவர் சிற்சில உபாஸனைகளைத் தெரிந்து கொண்டு, கர்வமடைந்து உசீநரம் முதலிய பல தேசங்களில் திக்விஜயம் செய்து கொண்டு, அந்தணர் பலரையும் அவமதித்து, காசியில் வாழ்ந்த அஜாதஶத்ரு என்ற ப்ரஹ்மத்தையுணர்ந்த ஶிகாமணியை ஶிக்ஷிப்பதற்கு உறுதி செய்தான்" என்று கௌஷீதகர்களும், வாஜஸநேயிகளும் படிக்கின்றனர்.

மற்றும்—

தேஹவாஸனையும், ஆத்மத் தன்மையின் குணத்தை எடுத்துக் கொள்வது, குற்றத்தைக் களைவது, ப்ராந்தி என மூவகையாகும். அவ் விஷயத்தில் ஆத்மத் தன்மையைக் குறித்து பாஷ்யகாரர் நிரூபித்துள்ளார்கள்—

"தேஹமாத்ரம் சைதந்ய விசிஷ்டம் ஆத்மேதி
ப்ராக்ருதா ஜநா:; லோகாயதிகாஶ்ச ப்ரதிபந்நா": இதி ;

"—தேஹத்தின் அளவிலேயே சைதந்ய விசிஷ்டமாயுள்ள ஆத்மா" என்று ப்ராக்ருதர்களான ஜநங்களும், லோகாயதிகர்களும் சொல்லுகின்றனர்" என்றவாறு.

மற்றும்—

"ஸ வா ஏஷ புருஷோऽந்நரஸமய: இத்யாரப்ய தஸ்மாதந்நம் ததுச்யத இதி";

"—அத்தகைய இந்த புருஷன் (ஆத்மா) அன்னரஸமய மானவன்" எனத் தொடங்கி, ஆகையினால்,"அந்த ப்ரஹ்மத்தை அன்னம் எனச் சொல்லப் பெற்றது" என்பது வரையிலுள்ள (மந்திரத்தினால் அந்த ப்ராக்ருதமாயுள்ள ப்ரதிபத்தியை நம்பிக்கை) தைத்திரீயர்கள் தெளிவுறச் சொல்லுகின்றனர்.

மற்றும்—

"விரோசந: ப்ரஜாபதிநா அநுஶிஷ்டோ ऽபி ஸ்வசித்ததோஷேண தேஹாத்மபுத்திம் த்ருடீக்ருத்ய ஆஸுராந் ஸர்வாந் அநுஶஶாஸ" இதி.

"—விரோசநன் என்பவன் ப்ரஜாபதியினால் ஶிக்ஷிக்கப் பெற்றவனாயினும், தனது சித்தத்தினுடைய தோஷத்தால் சரீரத்தில் ஆத்மபுத்தியை உறுதி செய்து கொண்டு அஸுரர்கள் அனைவரையும் தண்டித்தான்" எனச் சந்தோகர்கள் எட்டாவது, அத்யாயத்தில் சொல்லுகின்றனர்.

மற்றும்—

" குணாதாநம், த்விவிதம், லௌகிகம், ஶாஸ்த்ரீயம் சேதி, ஸமீசீநஶப்தாதிஸம்பாதநம் லௌகிகம், கோமளத்வநிநா காதுமத்யேதும் வா, தைலபாநமரீசிபக்ஷணாதிஷு லோகா: புஷ்டிகரௌ, ஔஷதாஹாரௌ உபயுஞ்ஜதே. லாவண்யாய அப்யங்கோத்வர்தநதுகூலாலங்காராநுபஸேவந்தே. ஸௌகந்த்யாய ஸ்ரகாலேபநே தாரயந்தி, ஶாஸ்த்ரீயம் குணமாதாதும் கங்காஸ்நாநஸாலக்ராமதீர்த்தாதிகம் ஸம்பாதயந்தி" இதி.

"—குணாதாநம் என்பது இருவகையாகும். லௌகிகம், ஶாஸ்த்ரீயம் என்பன அவை. இனிமையாயுள்ள ஶப்தங்கள் முதலியவைகளை ஸம்பாதிப்பது லௌகிகம் எனப் பெறும். கோமளமாயுள்ள த்வநியினால் (குரல்) பாடுவதற்கோ, அத்யயநம் செய்வதற்கோ, தைலபாநம், மிளகைப் புசிப்பது முதலியவைகளில் மக்கள் முயற்சி செய்கின்றனர். மென்மையான ஸ்பர்சத்திற்கும், ஶரீர வளர்ச்சிக்கும் மக்கள் புஷ்டியைச் செய்கின்ற மருந்து,

உணவு முதலியவைகளை உபயோகிக்கின்றனர். லாவண்யத்தின் பொருட்டு, எண்ணை தேய்த்துக் கொள்வது, தலையை வாரிக் கொள்வது, பட்டாடை அணிந்து கொள்வது போன்ற அலங் காரங்களை விரும்பி ஸேவிக்கின்றனர். நறுமணம் பெறுவதற்காக மாலையணிவது, சந்தனப் பூச்சைச் செய்து கொள்வது என்ற இவைகளைத் தரிக்கின்றனர். இவை யாவும் உலகைத் தழுவிய குணந்தரங்களாகும். ஶாஸ்த்ரீயமாயுள்ள குணத்தை எடுத்துக் கொள்வதற்கு, கங்காஸ்நாநம், ஸாலக்ராமதீர்த்தஸேவை முதலியவைகளை ஸம்பாதிக்கின்றனர்.

"தோஷாபநயநம் ச சிகித்ஸகோக்தை: ஔஷதை; முகாதி ப்ரக்ஷாளநேந ச லௌகிகம், ஶௌசாசமநாதிபி: வைதிகமித்யுபயவிதம். அஸ்யாஶ்ச தேஹவாஸநாயா: மாலிந்யம் வக்ஷ்யதே. தேஹஸ்ய ஆத்மத்வம் தாவத் அப்ராமாணிகத்வாத், அசேஷது:கஹேதுத்வாச்ச மாலிந்யம். அஸ்மிம்ஶ்சார்தே பூர்வாசார்யை; ஸர்வைரபி ப்ராக்ராந்தம். குணதாநம் ச ப்ராயேண ந பஶ்யாம:. ப்ரஸித்தா ஏவ காயகா அத்யாபகாஶ்ச ப்ரயதமாநா அபி பஹவோ த்வநிஸௌஷ்டவம் ந லபந்தே. ம்ருதுஸ்பர்ஶ:, அங்கபுஷ்டிஶ்ச ந நியதௌ. லாவண்யஸௌகந்த்யே அபி துகூலஸ்ரகாதிநிஷ்டே, ந து தேஹநிஷ்டே." இதி

—"தோஷாபநயநம் ச— (குற்றத்தைக் களைவது) என்பதும் மருத்துவர்களினுல் சொல்லப் பெற்ற மருந்துகளைக் கொண்டு முகத்தை அலம்புதல் போன்றவை லௌகிகம் எனப் பெறும். ஶௌசமானது, ஆசமநம் முதலியவைகளினுல் இருவகையாகும். இதற்கும் தேஹவாஸனையினுல் மாலிந்யமும் சொல்லப் போகிறது. சரீரத்திற்கு ஆத்மத் தன்மையோ வெனில், ப்ரமாணமில்லா மையால், எல்லாத் துயரங்களுக்கும் காரணமாயிருப்பதால் அது மலிநம் எனச் சொல்லப் பெற்றது. இவ்விஷயம் முன்னோர் களான ஆசார்யர்களால் சிறப்பாகச் சொல்லப் பெற்றுள்ளது. குணதாநத்தையும் பெரும்பாலும் நாங்கள் பார்த்ததில்லை. காயகர்களும், (பாடகர்கள்) அத்யாபகர்களும் (வேதமோது விப்பவர்கள்) பிரஸித்தமானவர்களே. (இவர்கள்) முயற்சி செய்துள்ள பொழுதிலும், பலர் த்வநியினுடைய (குரல்) ஸௌஷ்டவத்தை (வளர்ச்சி போன்ற நல்ல நிலையை) பெற்றவர் களாகக் காணமுடியவில்லை. மெல்லிய ஸ்பர்ஶமும், சரீர வளர்ச் சியும் நிலையற்றது. லாவண்யம், நறுமணம் என்பவைகளும் பட்டாடை, மாலை என்ற இவைகளைச் சார்ந்ததேயன்றி, தேஹத் தைச் சார்ந்தவை அல்ல" என்றவாறு.

அத ஏவ விஷ்ணுபுராணே அபிஹிதம் —"ஆகையினுலேயே விஷ்ணு புராணத்தில் இவ்வாறு சொல்லப் பெற்றுள்ளது"

''மாம்ஸாஸ்ருக்பூயவிண்மூத்ரஸ்நாயுமஜ்ஜாஸ்திஸம்ஹதௌ,
தேஹே சேத் ப்ரீதிமாந் மூடோ பவிதா நரகே டபி ஸ:
ஸ்வதேஹாஶுசிகந்தேந ந விரஜ்யேத ய: புமாந்.
வைராக்யகரணம் தஸ்ய கிமந்யதுபதிஶ்யதே'' இதி.

''—மாம்ஸம், ரத்தம், மலம், ரேதஸ், மூத்ரம், ஸ்நாயு, மஜ்ஜை அஸ்தி என்ற இவைகளின் சேர்க்கையோடு கூடிய சரீரத்தில் ஒருவன் ஆசை வைத்தானேயாகில் அவன் மூடனாவான். அவன் நரகத்திலும் விழுகின்றான்''.

''எவனொருவன் தனது சரீரத்தினுடைய அஶுத்தமாயுள்ள வாஸனையைக் கண்டு விரக்தி (வெறுப்பு) அடையவில்லையோ, அவனுக்கு வைராக்யத்தைப் பற்றிய காரணத்தை யுபதேசம் செய்வதில் யாது பயன்? பயன் ஒன்றுமில்லை'' என்றவாறு.

மற்றும்—

ஶாஸ்த்ரியமான குணத்தைக் கொள்வது ப்ரபலமான வேறு ஶாஸ்த்ரத்தினாலும் மறைக்கப் பெறுகின்றது. எவ்வாறெனில்—

''ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி'' எந்த பிராணிகளையும் ஹிம்ஸை செய்வது கூடாது'' என்ற இந்த வாக்யத்திற்கு ''அக்நீஷோமீயம் பசுமாலபேத''—அக்நீஷோம ஸம்பந்தமான பசுவைக் கொல்ல வேண்டும்'' என்ற இந்த வாக்யத்தினால் அபவாதமாகும். இது மற்ற ஶாஸ்த்ரத்தை அபேக்ஷித்து மிகவும் பிரபலமாயுள்ளது.

பாகவதத்திலும்—

''யஸ்யாத்மபுத்திः குணபே த்ரிதாதுகே
ஸ்வதீ: கலத்ராதிஷு பௌம இஜ்யதீ:.
யஸ்தீர்த்தபுத்தி: ஸலிலே ந கர்ஹிசித்
ஜநேஷ்வபிஜ்ஞேஷு ஸ ஏவ கோகர:'' இதி;

''—வாதம், பித்தம், கபம் என்ற மூவகையாயுள்ள தாதுக்களின் சேர்க்கையினாலான பிணமாகிய இச்சரீரத்தில், எவனுக்குத் தான் என்ற எண்ணமும், மனைவி, மக்கள் இவர்களிடம் நம்மைச் சார்ந்தவர்கள் என்ற எண்ணமும், தோன்றுகின்றதோ அவன் கோவேறு கழுதைக் கொப்பானவன். ஸாதுக்களுக்கு முன்பு சொல்லியவைகளில் மயக்கபுத்திகள் தோன்றுது.

அதாவது—கோவேறு கழுதை பார்ப்பதற்குக் குதிரை போன்றிருப்பினும் அது கழுதையாமன்றே! அது போல ஞாந மில்லாத மனிதன், மனிதனைப் போலிருந்தாலும் அவன் மனிதனல்ல'' என்பது கருத்து எனச் சொல்லியுள்ளது.

ஸூதஸம்ஹிதையும்—

''அத்யந்தமலிநோ தேஹோ தேஹீ சாத்யந்த நிர்மல :
உபயோரந்தரம் ஜ்ஞாத்வா கஸ்ய ஶௌசம் விதீயதே'' இதி ச;

''—இந்த ஶரீரம் மிகவும் மலிநத் தன்மை வாய்ந்தது. ஶரீரத்தைச் சார்ந்த ஆத்மனோ மிகவும் நிர்மலமானவன், எனவே இவ்விரண்டுக்கு முள்ள தாரதம்யத்தை (ஏற்றத்தாழ்வு) யுணர்ந்து கொண்டால் எவனுக்கு ஶௌசம் விதிக்கப்பெறுவது?'' எனவும் சொல்லும்.

ஆயினும், இந்த ஶாஸ்த்ரத்தினல் தோஷத்தின் அபாயாநம் தடுக்கப்பெறுகின்றது. குணோதாநம் அன்று. அவ்வாறாயினும் விரோதமிருக்கும்பொழுது மிகவும் பலம் வாய்ந்த தோஷத்தில் குணமானது எடுத்துக் கொள்ள முடியாது என்ற பொருளில் குணத்தினுடைய (எடுத்துக்கொள்வதற்கு) தடுத்தல் சொல்லப் பெற்றுள்ளது.

மற்றும்—

வலிமையான மாலிந்யமும் இவ்விடத்தில் மைத்ராயணீய சாகையில் காணப்பெறுகின்றது—

''பகவந் அஸ்திசர்மஸ்நாயுமஜ்ஜாமாம்ஸஶுக்ர—
ஶோணிதாஶ்ருதூஷிகாதூஷிதே,
விண்மூத்ரவாதபித்தகபஸம்காதே துர்கந்தே,
நி:ஸாரே஽ஸ்மிந் ஶரீரே கிம் காமோபபோகை:'' இதி;

''—ஓ பகவன்! அஸ்தி, சர்ம, ஸ்நாயு, மஜ்ஜா, மாம்ஸம், ஶுக்லம் ஶோணிதம், ஶ்லேஷ்மம், அஶ்ரு, (நேத்ரஜலம்) இவைகளினலும் மலம், மூத்ரம், வாதம், பித்தம், கபம் இவைகளுடைய கூட்டத்தினலும் துர்கந்தமுள்ளதும் (நாற்றம்) ஸாரமற்றதுமான இந்த சரீரத்தில் காமவேட்கை கொள்ளுவதால் என்ன பயன்? ஒன்று மில்லை'' என்றவாறு.

''சரீரமிதம் மைதுநாதேவோத்பூதம், ஸம்வித் வ்யபேதம், நிரய இவ முத்ரத்வாரேண நிஷ்க்ராந்தம், அஸ்திபிஸ்சிதம், மாம்ஸேந அநுலிப்தம் சர்மணு அவநத்தம், விண்மூத்ரபித்தகபமஜ்ஜாமேதோவஸாபிரந்யைஸ்ச மலை: பஹுபி: பரிபூர்ணம் கோஶ இவ வஸுநா'' இதி ச;

மேலும்,

''—இந்த சரீரமானது ஆண், பெண் சேர்க்கையினுலேயே தோன்றுவதுமாகும், ஸம்வித்தை விட்ட நரகம்போல, மூத்திரத்தின் வழியாக வெளியே வந்ததும், எலும்புகளுடைய சேர்க்கையினுலும், மாம்ஸத்தினுல் பூசப்பெற்றதும், தோலினுல் நன்கு கட்டப்பெற்றதும், மலம், மூத்ரம், பித்தம், கபம், மஜ்ஜை, மேதஸ் வஸா, என்ற இவைகளாலும், மற்றவைகளான பல வகையாயுள்ள மலங்களினுல் நிரப்பப் பெற்றுள்ளது. அது தனத்தினுல் நிறைந்துள்ள கோசம் (கருவூலம்) போன்றது எனவும், சிகித்ஸையினுலும் பிணியின் ஶமநமானது ஒழுங்காகாது. பிணி ஶமநமடைந்தாலும் அது மறுபடியும் தோன்றும் எனவும் சொல்லப் பெற்றுள்ளது.

ஒன்பது வாயில்களினுல் எப்பொழுதும் ஒழுகிக்கொண்டிருக்கின்ற மலங்களோடு கணக்கற்ற ரோமகூபங்களில் நனைந்துள்ள சரீரத்தில் எவன் தான் தனது ஶரீரத்தை உபாயத்தினுல் அலும்புவதற்கு முடியும்? இதைக் குறித்து பூர்வாசார்யர்களினுல்—

''நவச்சித்ரயுதா தேஹா: ஸ்ரவந்தி கடிகா இவ.
பாஹ்யஶௌசைர் ந ஶுத்யந்தி நாந்த: ஶௌசம் ச வித்யதே'' இதி.

''—ஒன்பது வாயில்களினுல் நிர்மாணம் செய்யப் பெற்ற ஶரீரங்கள் மண்குடம் போல பெருக்கெடுக்கின்றன. வெளிப்படையான ஶௌசங்களினுல் அவைகளை அடைக்கவும் முடியாது. அந்த: ஶௌசமும் காணமுடியவில்லை'' என்று சொல்லப் பெற்றுள்ளது.

ஆகையினுல் தேஹவாஸனை மலிநமுள்ளதே. இந்த மலிநத்தைக் குறித்து வஸிஷ்டரும்—

'' ஆபாதமஸ்தகமஹம் மாதாபித்ரு விநிர்மித:
இத்யேகோ நிஶ்சயோ ராம பந்தாயாஸத்விலோகநாத்'' இதி.

"—பாதம் முதல் தலைவரையில் நான் தாய் தந்தையர்களால் நிர்மாணம் செய்யப் பெற்றவன் என்ற இது ஒன்றே உறுதியாகும். ஓ ராம! அஸத்துக்களைப் பார்ப்பதால் அது பந்தத்தின் பொருட்டே யமைவது" எனச் சொல்லியுள்ளார்.

மற்றும்—

"ய: காலஸூத்ரபதவீ மாதாபித்ருவிநிர்மித:.
ஸாஸிபத்ரவநஸ்ரேணீ யா தேஹோsஹமிதி ஸ்திதி:.
ஸா த்யாஜ்யா ஸர்வயத்நேந ஸர்வநாஶே sப்யுபஸ்திதே.
ஸ்ப்ரஷ்ட்வ்யா ஸா ந பவ்யேந ஸஶ்வமாம்ஸேவ புல்கஸீ" இதி.

"—யாதொன்று காலஸூத்ரத்தின் ஸாதநமாயுள்ளதோ, அது பெரிய அலையில் விரிக்கின்ற வலையாகும். யாதொன்று சரீரத்தில் நான் என்ற உறுதியானது யுண்டாகின்றதோ, அது அஸிபத்ரவனத்தின் படிகளாகும்" (காலஸூத்ரம், அஸிபத்ரவநம் இவையிரண்டும் நரகவிசேஷங்கள்)

"அந்த தேஹாத்மவாஸனையானது முமுக்ஷுவினால் எத்தகைய நாஶம் வந்துள்ள பொழுதிலும் மிகுந்த முயற்சியோடு கூட ஒதுக்கப் பெறவேண்டும். சண்டாளி போன்ற அந்த தேஹவாஸனையானது நாய் மாம்ஸம் போல தொடவும் கூடாது" என வஸிஷ்டர் சொல்லுவர்.

மற்றும்—

"ததேதல்லோகஶாஸ்த்ரவாஸநாத்ரயம் அவிவேகிநாமுபாயத்வேந ப்ரதிபாஸமாநமபி விவிதிஷோர் வேதநோத்பத்திவிரோதித்வாத், விதுஷோ ஞாநப்ரதிஷ்டாவிரோதித்வாச்ச விவேகிபி: ஹேயம்; அத ஏவ ஸ்மர்யதே" இதி.

"—ஆகையால், இந்த லோகவாஸனை, ஶாஸ்தரவாஸனை, தேஹவாஸனை என்ற மூன்றையும் அஜ்ஞானிகளுக்கு எடுத்துக் கொள்ளத் தக்கவகையிலே நன்கு பிரகாசிக்கின்ற பொழுதிலும், விவிதிஷையுடைய (முமுக்ஷு) வர்களுக்கு உணர்வைத் தோற்றுவிப்பதற்கு விரோதியாயிருப்பதால், வித்வானுக்கு ஞானத்தின் நிலைபெறுதலுக்கு விரோதியாயிருப்பதாலும், விவேகிகளினால் விடத் தக்கதேயாகும். ஆகையினாலேயே ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது. (நினைவுறுத்தப் பெறுகின்றது) என்றவாறு.

" லோகவாஸனயா ஜந்தோ : ஶாஸ்த்ரவாஸனயாபி ச.
தேஹவாஸநயா ஞாநம் யதாவந்நைவ ஜாயதே." இதி.

"—ஒரு பிராணிக்கு லோகவாஸனையினாலும், ஶாஸ்த்ர வாஸனையினாலும், தேஹவாஸனையினாலும் ஞாநமானது உள்ள வாறு தோன்றாது" என்றவாறு.

மற்றும்—

" யா து தம்பதர்பாத்யாஸுரஸம்பத்ரூபா மாநஸவாஸநா, தஸ்யா நரகஹேதுத்வாத் மாலிந்யமதிப்ரஸித்தம். அத: கேநாப்யுபாயேந வாஸநாசதுஷ்டயஸ்ய க்ஷய: ஸம்பாதநீய:. யதா வாஸநாயா: க்ஷய: ஸம்பாதநீய: ததா மநஸோ ऽபி. ந ச தார்கிகவத் நித்யத்ரவயம்; அணு பரிணமம் மந: வைதிகா அப்யுபகச்சந்தி, யேந மநோநாஶோ து:ஸம்பாதநீய: ஸ்யாத். கிம் தர்ஹி ஸாவயவமநித்யம் ஸர்வதா ஜதுஸுவர்ணு திவத் பஹுவிதபரிணுமார்ஹம் த்ரவ்யம். மந:, தஸ்ய லக்ஷணம் ப்ரமாணம் ச வாஜஸநேயிந ; ஸமாமநந்தி'' இதி.

"—தம்பம், தர்பம் முதலியவையான ஆஸுரஸம்பத்தின் வடிவமாயுள்ள எந்த மாநஸவாஸனை யுண்டோ, அந்த வாஸனைக்கும் நரகத்திற்குக் காரணமாயுள்ள மாலிந்யமானது மிகவும் பிரஸித்தமானது. ஆகையினால் ஏதாவதொரு உபாயத்தினால் நான்கு வாஸனைகளுடைய நாஶத்தை ஸம்பாதிக்கவேண்டும், எவ்வாறு வாஸனையினுடைய நாஶமானது ஸம்பாதிக்க வேணடுமோ, அவ்வாறே மநத்திற்கும் ஸம்பாதிக்க வேண்டும்.

தார்க்கிகர்களைப் போல நித்யத்ரவ்யம், அணுபரிமாணம் மநம் என்பதை வைதிகர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். எக்காரணத்தால் மநோநாஶமானது ஸம்பாதிப்பதற்கு ஸுலபமாகமுடியாதோ. ஏனெனில், ஸாவயவமாயும், அநித்யமாயும், எப்பொழுதும் மெழுகு, ஸுவர்ணம் போல் பலவகையான பரிணுமத்திற்குத் தகுதியா யமைந்துள்ளது த்ரவ்யம் என்றும், மநம் அதனுடைய லக்ஷணமும் ப்ரமாணமும் ஆகும் என்ற இவைகளை வாஜஸநேயிகள் நன்கு சொல்லுகின்றனர். என்றவாறு.

" காம : ஸம்கல்ப : விசிகித்ஸா ஶ்ரததாஶ்ரத்தா
த்ருதிரத்ருதிர் ஹ்ரீர்தீர்பீரித்யேதத் ஸர்வம் மந ஏவ'' இதி.

"—இச்சை, ஸங்கல்பம், ஸம்சயஞாநம், சிரத்தை (ஆஸ்திக புத்தி) அஶ்ரத்தை, தைர்யம், அதைர்யம், லஜ்ஜை, புத்தி, பயம் இவைகள் யாவும் மநதின் ரூபங்கள்'' என்பது அந்த மநதின் லக்ஷணம்'' என்றவாறு.

மேலும்—

காமம் முதலிய விருத்திகள் எவைகள் முறையே தோன்று கின்றவோ, அவைகள் சாக்ஷுஷப்ரத்க்ஷமாயுள்ள குடம் முதலியவைகள் போல, ஸாக்ஷியினுடைய ப்ரத்யக்ஷத்தினால் மிகவும் தெளிவாக விளங்குகின்றன. அதனுடைய உபாதாநமும் மநம் என்பதாகும். ஶ்ருதியும்—

"அந்யத்ர மநா ஆபூவம் நாதர்சம், அந்யத்ர மநா
அபூவம் நாஶ்ரௌஷம்" இதி;

"மநம் வேறிடத்தில் சென்றிருந்தால் அருகிலிருப்பதைப் பார்க்கமுடியாது. அவ்வாறே அருகில் சொல்வதையும் கேட்க முடியாது". எனவும்;

"மநஸா ஹ்யேஷ பஶ்யதி மநஸா ஶ்ருணோதி" இதி;

"மனதால் தான் (அஃது இருந்தால்தான்) பார்க்கவும் கேட்கவும் முடியும்" எனவும் சொல்லியுள்ளது.

கண்களுக்கு அருகிலுள்ள ஸ்பீதாலோகத்தின் நடுவிலுள்ள குடமும், செவிகளுக்கு அருகில் உரக்கப் படிக்கப் பெற்ற வேதமும், எவனுக்கு அஜாக்ரதையாயிருக்கும்பொழுது புலனாவதில்லையோ, ஜாக்ரதையாக இருக்கும் பொழுது புலனாகின்றதோ, அத்தகையதான எல்லா விஷயங்களுக்கும் காணத்தக்கதான ஸாதாரணமானது அந்வயம், வியதிரேகம் இவைகளால் காண முடிகின்றது என்பது பொருள்.

"தஸ்மாதபி ப்ருஷ்டத உபஸ்ப்ருஷ்டோ
மநஸா விஜாநாதி" இத்யேதததுதாஹரணம்" இதி.

"—கண்களுடைய வியாபாரமில்லாமலேயே (செயல்) பின்புறமாகத் தொட்டுக்கொண்டு மனதால் அறிகிறான்" என்ற ஶ்ருதியும் உதாஹரணமாகும். என்றவாறு.

எக் காரணத்தால் லக்ஷணம், ப்ரமாணம் இவைகளினால் மநதானது ஸித்தமாகியதோ, அக் காரணத்தால் இத் தகையவைகள் உதாஹரணமாகக் கொள்ளத்தக்கன. பின்புறத்திலும் மற்றவனால் தொடப்பெற்ற தேவதத்தன் விசேஷத்தோடு அறிகின்றான், இது

கைகளின் ஸ்பர்சம், இது விரல்களின் ஸ்பர்சம் என்ற அவ்விடத்தில் கண்ணின் பார்வையில்லை. த்வகிந்திரியமோ, ம்ருதுத்தன்மை, (மார்தவம்) கடினத்தன்மை என்பதை மாத்திரம் கொள்ளுகின்ற வகையில் உபக்ஷீணமாயிருப்பது. ஆகையினுல் மநமே ஞாநத்திற்கு விசேஷமாயுள்ள காரணம் என்பதும் எஞ்சியுள்ளது.

அதுவும் மநநத்தின் காரணமாக மநம் எனவும், சிந்தை செய்வதால் சித்தம் எனவும் சொல்லப் பெறும். அந்தச் சித்தமும் ஸத்வம் ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களுடைய வடிவாய் அமைந்துள்ளது. இவைகள் முறையே ப்ரகாசம், ப்ரவிருத்தி, மோஹம் என்றவைகளுக்கும், ஸத்வம் முதலிய காரியங்களுக்கும் அவ்விடத்தின் காணப்பெறுவதால் என்க.

மற்றும், பிரகாசம் முதலியவைகளுக்கும் குணங்களுடைய காரியத்தன்மை, குணுதீதலக்ஷணத்தில் அறியப் பெறுகின்றது—

"ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ"
இத்யபிதாநாத்.

"—எவனொருவன், இயல்பாகத் தோன்றிய ஸத்வம், ரஜஸ், தமஸ், முதலியவைகளுடைய காரியங்களான பிரகாசம் முதலியயவைகளையும், ரஜோகுண காரியங்களான பிரவிருத்தி முதலியவைகளையும், தமோகுண காரியங்களான மோஹம் முதலியவைகளையும் பகைப்பதில்லையோ, விலகிச் சென்ற அவைகளை மறுபடியும் விரும்புவதில்லையோ, எனச் சொல்லி யுள்ளதால்" என்றவாறு.

ஸாங்க்யசாஸ்திரத்திலும்—

"ப்ரகாசப்ரவ்ருத்தி மோஹா: நியமார்த்தா: " இத்யுக்தம்;

"ப்ரகாசம், ப்ரவிருத்தி, மோஹம் என்ற இவைகள் நியமார்த்தங்கள் எனவும் சொல்லியுள்ளது." இவ்விடத்தில் ப்ரகாசமென்பது வெண்மை, சோபை போன்ற வடிவமன்று. ஆனுல் ஞாநமாகும். ஏனெனில்—

"ஸத்வாத் ஸம்ஜாயதே ஞாநம் ரஜஸோ லோப ஏவ ச.
ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞாநமேவ ச"
இத்யுக்தத்வாத்.

"—ஸத்வகுணத்திலிருந்து ஞாநம் தோன்றுவது, ரஜோ குணத்திலிருந்து லோபமும், தமோகுணத்திலிருந்து நழுவுதல், மோஹம், அறியாமை என்ற இவைகளும் தோன்றுவன" எனச் சொல்லியிருப்பதால்" என்றவாறு.

ஞாநத்தைப் போல் ஸுகமும் ஸத்வகுணத்தினுடைய காரிய மாகும் அதுவும் சொல்லப்பெற்றுள்ளது—

"ஸ்த்வம் ஸுகே ஸம்ஜயதி ரஜ: கர்மணி பாரத.
ஞாநமாவ்ருத்ய து தம் ப்ரமாதே ஸம்ஜயத்யுத," இதி.

"—ஸத்வகுணம் இன்பத்திலே பற்றுதலைத் தோறுகவிப்பது ஓ பாரத! ரஜோகுணம் செய்கையில் பற்றுதலைத் தோற்றுவிப்பது. தமோகுணம் ஞாநத்தைச் சூழ்ந்து (ஜீவனை) மயக்கத்தில் பிணிப்பது" என கீதையும் சொல்லும்.

மற்றும் ஆழியிலுள்ள அலைபோல் எப்பொழுதும் பரிணமித்துக் கொண்டுள்ள நிலையிலுள்ள குணங்களில் எப்பொழு தாவது ஒன்று உண்டாகின்றது. மற்றவைகள் அடக்கப் பெறு கின்றன. இதைக் குறித்தும் சொல்லப்பெற்றுள்ளது—

"ரஜஸ்தமஶ்சாபிபூய ஸத்வம் பவதி பாரத,
ரஜ: ஸத்வம் தமஶ்சைவ தம: ஸத்வம் ரஜஸ்ததா" இதி.

"—ஓபாரத! சிலவேளை ரஜோகுணத்தையும், தமோகுணத்தை யும் அடக்கி ஸத்வம் இயல்கின்றது. சிலவேளை ஸத்வத்தையும், தமோகுணத்தையும் அடக்கி ரஜோகுணம் நிற்கின்றது. அங்ஙனமே ஸத்வகுணத்தையும், ரஜோகுணத்தையும் அடக்கி தமோகுணம் எஞ்சி நிற்பது" எனவும்,

"பாத்ய பாதகதாம் யாந்தி கல்லோலா இவ ஸாகரே" இதி ச.

"—ஆழியினிடத்திலே தோன்றுகின்ற அலைகள் போல பாத்யம், பாதகம் என்ற தன்மைகளையும் அடைகின்றன" எனக் கீதையிலும், வாஸிஷடத்திலும் சொல்லியுள்ளன.

"தத்ர தமஸ உத்பவே ஸத்யாஸுரஸம்பதுதேதி.
ரஜ உத்பவே ஸதி லோகாதி வா ஸநா:திஸ்ரோ பவந்தி.
ஸத்வஸ்யோத்பவே ஸதி தைவீஸம்பதுபஜாயதே" இதி.

"—அவ்விடத்தில் தமஸ் தோன்றும் பொழுது ஆஸுரஸம்பத் தோன்றுகின்றது. ரஜஸ் தோன்றும் பொழுது உலகங்கள் முதலிய வாஸனைகள் மூன்றும் தோன்றுவன. ஸத்வம் தோனறுங்கால் தைவீஸம்பத்தும் தோன்றுவது." என்றவாறு.

இதைக் குறித்தே சொல்லப் பெற்றுள்ளதும் வருமாறு—

" ஸர்வத்வாரேஷுதேஹே஽ஸ்மிந் ப்ரகாச உபஜாயதே.
ஞாநம்யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்வமித்யுத" இதி.

"—இச்சரீரத்திலுள்ள எல்லா வாயில்களிலும் ப்ரகாசமுண்டாகின்றது. எப்பொழுது ஞாநமுண்டாகின்றதோ, அப்பொழுது ஸத்வகுணம் வளர்ச்சியடைகின்றது என அறிவாயாக." என்றவாறு.

"யுத்யபி அந்த: கரணம் த்ரிகுணாத்மகம் பாஸதே;
ததாபி ஸ்த்வமேவாஸ்ய மநஸோ முக்யமுபாதாந காரணம்.
உபாதாநஸஹகாரிபூதா அவயவா உபஷ்டம்பகா:.
ரஜஸ்தமஸீ தூபஷ்டம்ககே.
அத ஏவ ஞாநிநோ யோகாப்யாஸேந ரஜஸ்-
தமஸோரபநீதயோ : ஸ்த்வமேவ ஸ்வரூபம் பரிஸிஷ்யதே" இதி.

"—இருந்தபொழுதிலும் அந்த:கரணமானது முக்குண வடிவாய் ப்ரகாசமாகக் காணப்பெறினும் ஸத்வமே இம் மநதிற்கு முக்கியமாயுள்ள உபாதாநகாரணமாகும். உபாதாநத்திற்கு ஸஹசாரிவடிவமான அவயவங்கள் உபஷ்டம்பகமாகும் (துணைக் காரணமென்பது.) ரஜஸும் தமஸும் உபஷ்டம்பங்களாம். இக்காரணத்தாலேயே ஞாநிகளுக்கு யோகாப்யாஸத்தினால் ரஜஸும், தமஸும் நீங்கியுள்ள பொழுது ஸத்வவடிவே எஞ்சி நிற்பதுமாகும்". என்றவாறு

இந்த அபிப்பிராயத்தையே—

" ஞஸ்ய சித்தமசித்தம் ஸ்யாத் ஞசித்தம் ஸத்வமுச்யதே." இதி.

"—அறிஞனுடைய சித்தம் அசித்தமாகின்றது. அறிஞனது சித்தம் ஸத்வமெனப் பெறுகின்றது" எனச் சொல்லப் பெற்றுள்ளது.

"தச்ச ஸத்வம் சாஞ்சல்ய ஹேது ரஜோகுணசூந்யத்வாதேகாக்ரம்.
ப்ராந்தி கல்பிதா நாத்மஸ்வரூபஸ்தூல பதார்த்தாகார-
ஹேது தமோகுண சூந்யத்வாத் ஸூக்ஷ்மம்.
தத ஆத்மதர்சநயோக்யம்'' இதி.

"—அத்தகைய சித்தமும் சஞ்சலத்தன்மையின் காரணமாயுள்ள ரஜோகுணமின்மையால் ஏகாக்ரமெனப்பெறும். ப்ராந்தியினுல் கல்பனை செய்யப்பெற்ற ஆத்மா, அநாத்மா என்ற ஸ்தூலபதார்த்தவடிவிற்குக் காரணமான தமோகுண சூந்ய மாயிருத்தாலால் அது ஸூக்ஷ்மம் எனப் பெறும். அதனுல் ஆத்ம தர்சநயோக்யமுமாம்.'' என்றவாறு.

ஆகையினுலே ஶ்ருதியும்—

"த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மபுத்திபி:"
இதி.

"—இந்த ஆத்மா எல்லா பூதங்களிலும் மறைந்துள்ளது ப்ரகாசம் பெறுவதில்லை. ஸூக்ஷ்மதர்சிகளினுல் (விவேகி) ஸூக்ஷ்ம மாயும், ஏகாக்ரமாயுமிருக்கிற புத்தியின் உதவியைக் கொண்டு காணப்பெறுகின்றது'' என்றவாறு.

மேலும், பெரிய காற்றினுல் அலைகின்ற (அசைகின்ற) விளக்கைக் கொண்டு, இரத்தினம், முத்து முதலியவைகளுடைய லக்ஷணங்களை எவ்வாறு பரிக்ஷை செய்ய முடியாதோ, எவ்வாறு பெரிய கடப்பாறையினுடைய உதவியினுல் நுண்ணியதான பட்டு முதலான வஸ்தரங்களை இழையிட முடியாதோ, அத்தகைய தான ஸத்வகுணமானது யோகிகளிடத்தில் தமோகுணத்தோடு கூடிய ரஜோகுணத்தினுல் சூழப்பெற்றுப் பல வகையான த்வைத ஸம்கலப்த்தோடு சேதநத்தைத் தொடர்ந்த சித்தம் இருப்பதாகும். அந்த சித்தமும் தமோகுணத்தினுடைய எழுச்சியை யடையும் பொழுது ஆஸுரஸம்பத்தை வளர்ச்சியடையச் செய்து பருத்த தாக (பரவி) காணப்பெறுகின்றது.

இதையும் வஸிஷ்டர் சொல்லுகிறுர்—

" ஆநாத்மந்யாத்மபாவேந தேஹபாவநயா ததா.
புத்ரதாரை : குடும்பைஶ்ச சேதோ கச்சதி பீநதாம்.
அஹம்காரவிகாரேண மமதாமலலீலயா.
இதம் மமேதி பாவேந சேதோ கச்சதி பீநதாம்.

ஆதிவ்யாதிவிலாஸேந ஸமாஶ்வாஸேந ஸம்ஸ்ருதௌ.
ஹேயாதேயவிபாகேந சேதோ கச்சதி பீநதாம்.
ஸ்நேஹேந தநலோபேந லாபேந மணியோஷிதாம்.
ஆபாதரமணீயேந சேதோ கச்சதி பீநதாம்.
துராசாக்ஷீரபாநேந போகாநிலபலேந ச.
ஆஸ்தாதாநேந சாரேண சித்தாஹிர்யாதி பீநதாம்'' இதி.

''—அநாத்மாவாயுள்ள சரீரம் முதலியவைகளில் ஆத்மபுத்தியினால் சரீரத்தின் அளவிலே யாதொரு ஆதரவு உண்டோ, அத்தகைய புத்தியினாலே மக்கள், மனைவி முதலிய குடும்பங்களினாலும், பற்றுதலின் காரணமாகவும் சித்தமானது வளர்ச்சியடைகின்றது''.

''அஹம் காரவிகாரத்தினாலும், (விகாரம்—மாறுதல்) ம்மதையென்னும் மலத்தின் (அழுக்கு) லீலையினாலும், இது என்னுடையது என்ற பாவனையினாலும் சித்தம் வளர்ச்சியை யடைகின்றது.

''ஆதி, வ்யாதி இவைகளுடைய விலாஸத்தினாலும், ஸம்ஸாரத்திலுள்ள ஆசையினாலும், விடுவது, கொள்வது என்ற விபாகத்தினாலும் (பிரிப்பது) சித்தம் வளர்ச்சி யடைகின்றது.''

''ஸ்நேஹத்தினாலும், பொருளிலுள்ள பற்றுதலினாலும் இரத்தினம், மங்கை இவைகளில் ஆலோசியாமல் ஆசைவைப்பதினாலும் சித்தம் வளர்ச்சியடைகின்றது.'' என்றவாறு.

இவ்விடத்தில் 'ஆஸ்தை' என்பது பிரபஞ்சத்தில் ஸத்யமாயுள்ள புத்தியாகும், அதனுடைய ஆதாநம் (கொள்வது). அதுவே சாரம்-போக்குவரத்து என்ற செயலின் வடிவம், அதனால் என்றது. இவ்வாறு விநாஶம் செய்யத்தக்க வாஸனை, மநம் இவைகளுடைய ஸ்வரூபமானது நிரூபணம் செய்யப் பெற்றது.

இனி வாஸநாக்ஷயம், மநோநாஶம் இவ்விரண்டும் முறையே நிரூபணம் செய்யப் பெறுகின்றது. அவ்விடத்தில் வாஸநாக்ஷயத்தின் முறையானது யாது என்பதை வஸிஷ்டர் சொல்லுகிறார்—

''பந்தோ ஹி வாஸநாபந்தோ மோக்ஷ: ஸ்யாத் வாஸநாக்ஷய:
வாஸநாஸ்த்வம் பரித்யஜ்ய மோக்ஷார்த்தித்வமபி த்யஜ,
மாநஸீர் வாஸநா: பூர்வம் த்யக்த்வா விஷயவாஸநா:

மைத்ர்யாதிபாவநாநாம் நீர்க்ருஹாணுமலவாஸநா:.
தா அப்யந்தஃ பரித்யஜ்ய தாபிர்வ்யவஹரந்நபி.
அந்த: சாந்ததமஸ்நேஹோ பவ சிந்மாத்ரவாஸந:.
தாமப்யந்த: பரித்யஜ்ய மநோபுத்திஸமந்விதாம்.
சேஷே ஸ்திரஸமாஸீநோ யேந த்யஜஸி தத் த்யஜ'' இதி;

''—வாஸனையின் ஸம்பந்தமே பந்தமன்றோ! வாஸனையினுடைய க்ஷயத்தினல் மோக்ஷம் கிடைக்கும். ஆகையினுல் நீ வாஸனையை விட்டு, பிறகு மோக்ஷத்திலுள்ள விருப்பதையும் விடவேண்டும்''

''முதலில் விஷயாதிகளோடு, கலந்துள்ள மநதைச் சார்ந்த வாஸனைகளை விடவேண்டும். பிறகு நிர்மலமான வாஸனைகளையுடைய மைத்ரீ முதலிய பாவனைகள் என்ற பெயர்களையுடையவைகளை அப்யாஸம் செய்ய வேணடும்.''

''அந்த மைத்ரீ முதலிய வாஸனைகளோடு வ்யஹாரம் செய்த பொழுதிலும், மநதில் நான் மைத்ரீ முதலிய வாஸனைகளையுடையவன் என்ற சாந்த குணத்தோடு அபிமாநம் இல்லாமல் எல்லா ஆசைகளும் நீங்கப் பெற்றவனுய் சிந்மாத்ரமாயுள்ள வாஸனையில் நிற்கப் பழகுவாயாக''.

''பிறகு, மநம், புத்தி இவைகளோடு கூடிய அந்த சிந்மாத்திரமாயுள்ள வாஸனையை விட்டு, எல்லா வாஸனைகளிலுமிருந்து விடுபட்டு, எஞ்சியுள்ளதான சித்ரூபத்தினிடத்தில் உறுதி பெற்ற ஸமாதாநத்தோடு கூட, எந்த முயற்சியினுலே கீழே சொன்ன மநோவிகாரங்கள் யாவையும் களைந்தனையோ, அந்த முயற்சியையும் விட்டுவிட வேண்டும்'' என்றவாறு.

இவ்விடத்தில் 'மாநஸவாஸநா' என்ற சொல்லால் முன்பு சொல்லப் பெற்ற லோகம், சாஸ்தரம், தேஹம் என்ற இந்த மூன்றுகளுடைய வாஸனை என்ற பொருளைக் கொள்ள வேண்டும் 'விஷயவாஸநா' என்ற சொல்லால் தம்பம், தர்பம் முதலிய ஆஸுர ஸம்பத்தானது சொல்லப் பெற்றது, ம்ருது, தீவ்ரம் என்ற இவையிரண்டும், அவைகளுடைய விவக்ஷையின் பேதத்தைத் தழுவியதாகும்.

அல்லது—

ஶப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற இவைகள் விஷயங்களாகும். இவைகளை விரும்புகின்ற நிலையிலிருந்து தோன்றிய ஸம்ஸ்காரமே மாநஸவாஸனையாகும். (விஷயங்களை) அநுபவிப்பதிலிருக்கின்ற நிலையிலிருந்து தோன்றிய ஸம்ஸ்காரமே விஷய வாஸநையாகும். இக் கொள்கையில் முன்பு சொல்லப் பெற்ற நான்கும் (லோகவாஸனை, சாஸ்த்ரவாஸனை, தேஹவாஸனை, ஆஸுரவாஸனை,) அடங்கும். வெளி, உள் என்ற வ்யதிரேகத்தினால் வேறு வாஸனையும் தோன்றாதாகையால் என்க,

சங்கை—

வாஸனையினுடைய பரித்யாகமானது எவ்வாறு பொருந்தும்? அவைகளுக்கு உருவம் இல்லையன்றோ! ஏனெனில் ஸம்மார்ஜநியினால் (வாருகோல்) நன்கு கூட்டப்பட்ட (பெருக்கப்பெற்ற) புழுதி, புல் என்ற இவைகளைக் கையால் எடுத்து கட்டி, அதனால் எடுத்து வெளியில் கொட்டுவது போல்வதா? என்றால்? அப்படிச் சொல்ல முடியாது. உபவாஸம், கண்விழிப்பு, இவைகள் போல இதுவும் கைகூடும். இயல்பாகவே யுள்ள உணவு, நித்ரை இவைகளுக்கு உருவத்தின் வடிவம் இல்லாவிடினும் இவைகளை விட்டு விட வேண்டிய விஷயத்தில் உபவாஸம், விழிப்பு இவை யாவும் எல்லோராலும் எவ்வாறு அநுஷ்டாநம் செய்யப் பெறுகின்றனவோ, அதுபோல வாஸனைகளுக்கு உருவமில்லாவிடினும் அவைகளை, விடலாம். ஆதலால் ஐயம் கொள்வது கூடாது.

மற்றும்,

"அத்ய ஸ்தித்வா நிராஹாரம்" "—இன்று ஆஹாரமில்லாமல் இருந்து கொண்டு" என்பன முதலிய மந்த்ரத்தினால் ஸம்கல்பம் செய்து கொண்டு ஸாவதாநத்தோடு இருப்பதும் இந்த விஷயத்தில் த்யாகம் என்று சொல்ல முடியுமன்றோ! அவ் விஷயத்திலும் அது தண்டத்தினால் கூட தடுக்க முடியாது. ப்ரைஷமந்த்ரத்தினால் ஸம்கல்பம் செய்து கொண்டு ஜாக்ரதையாக இருப்பதற்கும் முடியுமன்றோ! வைதிகமந்த்ரத்தில் அதிகாரம் இல்லாதவர்களுக்கோ வெனில் தத்தம் பாஷைகளினால் ஸம்கல்பம் இருக்கலாம்.

அவ் விஷயத்தில் பதார்த்தம், பருப்பு, அன்னம் இவைகளுடைய முன்னிலையில் பரித்யாக முண்டாகுமேயாகில், அந்த விஷயத்திலும் மாலை, சந்தனம், மங்கை முதலியவைகளுடைய முன்னில்லையில் என்ற பரித்யாகமும் இருக்கலாமன்றோ! மற்றும்

பசி நித்ரை, சோம்பர் இவைகளை மறக்கக்கூடிய புராண ச்ரவணம், தேவபூஜை, ந்ருத்யம், கீதம், வாத்யம் முதலியவை களினால் சித்தமானது ஸ்வாதீநம் செய்து கொள்ள கூடுமே என்றால், அப்பொழுது அவ் விஷயத்திலும், மைத்ரீ முதலியவை களினால் அது ஸ்வாதீநம் செய்து கொள்ள முடியும்.

மைத்ரீ முதலியவைகள் பதஞ்ஜலியினால் ஸூத்ரங்களில் சொல்லப் பெற்றுள்ளன—

— "மைத்ரீ கருணாமுதிதோபேக்ஷாணாம் ஸுக துக்கபுண்யா-புண்யவிஷயாணாம் பாவநாத: சித்தப்ரஸாதநம்" இதி.

—"ஸுகமுள்ளவர்கள், துக்கமுள்ளவர்கள், புண்யம் செய்பவர்கள். பாபம் செய்பவர்கள், இவர்களிடம் முறையே ஸ்நேஹம், கருணை, ஸந்தோஷம், உபேக்ஷை என்ற இவைக ளுடைய பாவனைகளை சிந்தனை (அப்யாஸம்) செய்வதால் மநம் தெளிவடைகின்றது" என்றவாறு.

ஸங்கல்பமாவது—

"இரவு நித்ரையில்லாமமல் நான்கு ஜாமங்களிலும் பூஜை செய்வோம்" என்ற ஸங்கல்பம். சித்தமோ வெனில், ராகம் த்வேஷம், புண்யம், பாபம் இவைகளினால் கலங்கச்செய்கின்றது. ராகம், த்வேஷம் என்பவைகளையும் பதஞ்சலி மஹர்ஷி ஸூத்ரத்தில் சொல்லியுள்ளார்—

"ஸுகாநுசயீ ராக: துக்காநுசயீ த்வேஷ இதி:" —ஆசையானது ஸுகத்தைத் தழுவி நடைபெறுகின்றது. த்வேஷமானது துக்கத்தைத் தழுவி நடைபெறுகின்றது" என்பது அந்த ஸூத்திரத்தின் பொருளாகும்.

மற்றும்—

தன்னால் அநுபவிக்கப் பெறுகின்ற ஸுகத்தையநுஸரித்து வருகின்ற ஒரு புத்தியினுடைய விருத்தி விசேஷமானது. ஸாகஜாதியம் மே ஸர்வம் பூயாத்" 'அது ஸுகத்திலிருந்து தோன்றிய யாவும் எனக்கு உண்டாவதாக' என்பது. அதுவும் த்ருஷ்டம், அத்ருஷ்டம் (காணப்பெறுவது, காணப்பெருத்து) என்ற ஸாமக்ரியையினுடைய (ஸாதநம்) இன்மையின் காரணமாக ஸம்பாதிப்பதற்கும்

முடியாது. ஆகையினால் அந்த ராகமானது சித்தத்தைக் கலங்கச் செய்கின்றது.

மேலும், ஸுகமாயிருப்பவைகளிடத்தில் இந்த மைத்ரீயானது பாவனை செய்யப் பெறுகின்றது. அப்பொழுது, ஸர்வே ऽப்யேதே ஸுகினோ மதீயா:''— இவை யாவும் என்னுடைய ஸுகவடிவா மைந்துள்ளன, என்ற எண்ணம் எப்பொழுது தோன்று கின்றதோ, அப்பொழுது அந்த ஸுகம் தன்னுடையதாகவே நிறைந்து விடுகின்றது. அவ்விஷயத்திலுள்ள ராகமும் மறைந்து விடுகின்றது. எவ்வாறு தனக்கு ராஜ்யமில்லாவிடினும், புத்திரக் குரிய ராஜ்யமேமைந்துள்ளது ராஜ்யம் என்பதுபோல்வதாகும். ராகமானது மறையும் பொழுது வர்ஷாகாலம் சென்ற பிறகு சரத்காலத்திலுள்ள ஆற்றைப்போல் சித்தம் தெளிவைப் பெறு கின்றது.

அவ்வாறே துக்கத்தையநுஸரித்துள்ள ஒரு நம்பிக்கை யானது: "ஈத்ருசம் ஸர்வம் துக்கம் ஸர்வதா மே மா பூயாத்''—இத் தகைய துக்கங்கள் யாவும் எப்பொழுதும் எனக்குத் தோன்றுவது கூடாது என்பது. அதுவும், பிணி, பகைவன், புலி முதலியவை களிடத்தில் இருக்கும் பொழுது தடுப்பதற்கும் முடியாது. எல்லா துக்கங்களுக்கும் காரணமாயிருப்பவைகள் களைவதற்கும் முடியாதன.

பிறகு அந்த த்வேஷமானது எப்பொழுதும் ஹ்ருதயத்தைச் சுட்டவாறு இருப்பதுமாகும். எப்பொழுது தனக்குப் போல மற்ற வர்களுக்கும் ப்ரதிகூலமானதுக்கம் கூடாது என்ற இந்த முறை யினாலே கருணையானது துக்கத்தையடைந்த ப்ராணிகளிடத்தில் பாவனைசெய்யப் பெறுகின்றதோ, அப்பொழுது, விரோதம், த்வேஷம் இவைகளிலிருந்து திரும்பிய சித்தம் தெளிவைப் பெறு கின்றது.

ஆகையினாலேயே ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது—

"ப்ராணா யதாத் மனோऽபீஷ்டா பூதாநாமபி தே ததா.
ஆத்மௌபம்யேந பூதாநாம் தயாம் குர்வந்தி ஸாதவ:'' இதி.

"—ப்ராணன்கள் எவ்வாறு ஆத்மனுக்கு விருப்பமாயுள்ள னவோ, அவைகள் அவ்விதமே பூதங்களுக்கும் இருக்கின்றன.

ஸாதுக்கள் தங்களுடைய ஆத்மனுக்கு ஸமானமாகவே, பூதங்களிடத்திலும் தயையைச் செய்கின்றனர்" என்றவாறு.

அம்முறையினையும் மஹான்கள் காண்பிக்கின்றனர்—

" ஸர்வேऽத்ர ஸுகித : ஸந்து ஸர்வே ஸந்து நிராமயா :
ஸர்வே பத்ராணி பச்யந்து மா கஸ்சித்து : கமாப்நுயாத்" இதி.

"—இவ்விடத்தில் எல்லோரும் ஸுகத்தையடைந்தவர்களாக இருக்கட்டும். எல்லோரும் பிணிகள் அகன்றவர்களாக இருக்கட்டும். எல்லோரும் மங்களங்களைப் பார்க்கட்டும். ஒருவரும் துக்கத்தை அடைவது கூடாது" என்றவாறு.

"புண்யஸ்ய பலமிச்சந்தி புண்யம் நேச்சந்தி மாநவா:.
ந பாபபலமிச்சந்தி பாபம் குர்வந்தி யத்நத;" இதி.

"மக்கள் இயள்பாகவே புண்யத்தை அநுஷ்டிப்பது இல்லை. பாபத்தையோ வெனில் முயற்சியோடு அநுஷ்டிக்கின்றனர். என்றவாறு.

ஏனெனில்—

" மனிதர்கள் இயல்பாகவே புண்யத்தினுடைய பயனை விரும்புகின்றனர். ஆனால் அவர்கள் புண்யத்தை விரும்புவதில்லை. அவ்விதமே பாபத்தினுடைய பயனை விரும்புகின்றனரில்லை. ஆனல் முயற்சியோடுகூட அவர்கள் பாபத்தைச் செய்கின்றனர்." என ஶிஷ்டர்கள் சொல்லுகின்றனர்.

அந்தப் புண்யபாபங்களும் அநுதாபத்தைத் தோற்றுவிப்பன. அந்த அநுதாபமும் வேதத்தினல் சொல்லப் பெறுகின்றது—

" கிமஹம் ஸாது நாகரவம்; கிமஹம் பாபமகரவம்" இதி.

"—நான் ஏன் நல்ல காரியமாயுள்ள புண்யத்தைச் செய்யவில்லை; நான் ஏன் பாவத்தைச் செய்தேன்." என்றவாறு.

அதாவது—

இவ்வாறுணர்ந்த வித்வான் புண்யம், பாபம் இவ்விரண்டையும் தனது ஆத்மனுகக் காண்கின்ருன். அதாவது தான்மாத்திரம் எஞ்சி நின்று முன்பு சொல்லிய இரண்டையும் நாசம் செய்கின்ருன்" என்பது தாத்பர்யம்.

மற்றும்—

இவன் புண்யம், பாபம் இவைகளில் முதிதையைப் பாவனை செய்தானேயாகில், அப்பொழுது அந்த வாஸனையினுல் தானுகவே ஜாக்ரதையாயிருத்துகொண்டு புண்யங்களில் பிரவிருத்தியை யுடையவனுகின்ருன். அவ்விதமே பாபங்களில் உபேக்ஷயை பாவனை செய்து தானும் பாபத்திலிருந்து திரும்புகிருன். ஆகை யினுல் அநுதாபத்தினுடைய இன்மையால் சித்தம் தெளிவடை கின்றது. ஸுகிகளிடத்தில் மைதரியை பாவனை செய்கிறவனுக்குக் கேவலம் ராகம் மாத்திரம் நிவிருத்தியாவதில்லை. ஆனுல் அஸூயை ஈர்ஷை முதலியவைகளும். நிவிருத்தியாகின்றன குணங்களில் குற்றத்தை வெளிபடுத்துவது அஸூயை எனப்பெறும். பிறருடைய குணங்களைக்கண்டு பொறுமையிழப்பது ஈர்ஷ்யை எனப்பெரும்.

எப்பொழுது மைத்ரியின் வசத்தால் பிறருடைய ஸுகமானது தனதாகவே கிடைக்கின்றதோ, அப்பொழுது பிறருடைய குணங் களில் எவ்வாறு அஸூயையுண்டாகும்? (உண்டாகாது என்றவாறு) இவ்வாறு மற்ற தோஷங்கள் முதலியவைகளின் நிவிருத்தியும் உள்ளவாறு உணர்ந்துகொள்ளவேண்டும். துக்க மடைந்தவர்களிடத்தில் கருணைப் பாவனை செய்கின்றவனுக்கு ஶத்ருவதம் முதலியவைகளில் த்வேஷமானது எப்பொழுது நிவிர்த்தியடைகின்றதோ, அப்பொழுது துக்கத்திற்குப் பகையா யுள்ள ஸுகத்தினுல் ஏவப்பெற்ற தர்பமும் நிவிருத்தியாகிறது அந்த தர்பமும் ஆஸுரஸம்பத்தில் சொல்லிய அஹம்கார ப்ரஸ் தாவத்தில் முன்பு நிரூபணம் செய்யப் பெற்றுள்ளது—

“ ஈச்வரோऽஹமஹம் போகீ ஸித்தோऽஹம் பலவாந் ஸுகீ.

ஆட்யோऽபிஜநவாநஸ்மி கோऽந்யோऽஸ்தி ஸத்ருசோ மயா”

“—நான் செல்வன். இன்பப் பெருக்கமுடையவன். எனக்கு நிகர் யாவருளர். வேட்கிறேன் (வேட்டல்-யாகம்) கொடுப்பேன். களிப்பேன் என்ற அறியாமையினுல் மயங்கினேர்” என்றவாறு.

**சங்கை—**

புண்யசாலிகளிடத்தில் முதிதையைப் பாவனை செய்கின்ற வனுக்கு புண்யத்தில் பிருவிருத்தியானது பலத்தன்மையோடு சொல்லப் பெற்றுள்ளது. அதுவும் யோகிகளுக்கு யுக்தமன்று

மலிநமாயுள்ள ஶாஸ்தரவாஸனையில் புண்யமானது அடங்கியது என்று முன்பு உதாஹரணமாகக் கொண்டதாலேயே என்றவாறு.

அவ்வாறு சொல்ல வேண்டாம்—

ஏனெனில், மறுபிறவிக்குக் காரணமாயுள்ள காம்யமான (பலனைவிரும்பி) இஷ்டம், பூர்த்தம் முதலியவைகளுக்கு அவ்விடத்தில் மலிநதன்மையோடு உதாஹரணம் சொல்லியவாறு என்க. இவ்விடத்திலேவெனில் — யோகாப்யாஸந்தினால் தோன்றிய அசுக்லம், அக்ருஷ்ணம் என்ற இவைகளின் தன்மையினால் பிறவியின் தோன்றாமை என்னும் புண்யாமானது சொல்லப் பெற்றது. அசுக்லம், அக்ருஷ்ணம் என்ற இவைகளுடைய தன்மையானது பதஞ்ஜலி ஸூத்திரத்தில் சொல்லப் பெற்றுள்ளது.

" கர்மாசுக்லாக்ருஷ்ணம் யோகிந:, த்ரிவிதமிதரேஷாம்" இதி.

—"யோகிக்கு கர்மங்கள் வெளுப்பு, கருப்பு என்பது இல்லை மற்றவர்களுக்கு கருப்பு, வெளுப்பு, இரண்டும் கலந்தவை என கர்மங்கள் மூவகையாகும்" என்றவாறு.

காம்யமான கர்மாவானது விதிக்கப் பெற்றதால் அது சுக்லம் எனப் பெறும். தடுக்கப் பெற்ற காரணத்தால் க்ருஷ்ணம் எனப் பெறும். மிஶ்ர மென்பது சுக்லம், க்ருஷ்ணம் என்ற இரண்டுமாகும். இந்த மூன்றும் அயோகிகள் (யோகாப்யாஸம் செய்யாதவர்கள்) அடையத்தக்கது. அந்த மூன்றும் பிறவியைக் கொடுப்பது தாத்பாயம்.

விச்வரூபாசார்யரும் இவ்விதம் சொல்லுகிறார்—

" சுபை: ப்ராப்னோதி தேவத்வம் நிஷித்தைர்நாரகீம் கதிம்.
உபாப்யாம் புண்யபாபாப்யாம் மாநுஷ்யம் லபதே ऽவச:" இதி.

"—நல்வினைகளினால் தேவத் தன்மையை யடைகின்றான். தீவினைகளினால் நரகத்தைத் தொடர்ந்த கதியை யடைகின்றான். புண்யம், பாபம் இவையிரண்டுகளினாலும் ஸ்வதந்த்ரத்தை யிழந்து மனிதத் தொடர்புள்ள பிறவியை அடையப் பெறுகின்றான்" என்யவாறு.

சங்கை—

அந்த க்ருஷ்ணத் தன்மையும் யோகத்திற்குத் தடுக்கப் பெறாத காரணத்தாலும், ஶுக்லத் தன்மை விதிக்கப்பெற்றுள்ள

காரணத்தாலும் என்று சொல்லலாமே யென்ருல்; சொல்ல முடியாது. ஏனெனில்—காமனையில்லாத நிலை என்ற அபிப்பிராயத் தோடு அஶுக்லத் தன்மையானது சொல்லப் பெற்றதால் என்க.

ஆகையினுல், புண்ணியமாயுள்ள சுக்லம், க்ருஷ்ணம் இவை களில் யோகிக்கு அபேக்ஷயானது. இருப்பதுமாகும், இருக் கட்டும், யோகிகளுக்கு இந்த நியாயத்தினுல் உள்ளவாறு புண்யாத்மாக்களிடத்தில் முக்தியைப் பாவனை செய்து, புண்யங் களிலேயே ப்ரவ்ருத்திக்கின்றவர்களாக இருக்கலாமே என்ருல் ப்ரவ்ருத்திக் கட்டுமே, எவர்கள் மைத்ரீ முதலிய பாவனைகளினுல் சித்தத்தை தெளிவாகச் செய்து கொள்ளுகின்றனரோ, அவர் களுக்கே யோகியாயிருக்கும் தன்மையும் உண்டு என்பதால் என்க. இவ்விடத்தில் மைத்ரீ முதலிய நான்கும் உப லக்ஷணமாகும்.

அக்காரணத்தால், “அபயம் ஸத்வஸம்சுத்தி:—அச்சமின்மை· உளத்தூய்மை” என்பன போன்றவை தைவஸம்பத்து. அமாநித்வம் அதம்பித்வம்”—கர்வமின்மை தம்பமின்மை என்பன போன்றவை ஞானத்திற்கு ஸாதநங்களாவன. இவை ஜீவன்முக்த நாயுள்ள ஸ்திதப்ரஜ்ஞன் முதலியவர்களுடைய வசநங்களால் சொல்லப் பெற்றுள்ளன. தர்மங்களும் காணப்பெறுகின்றன· இவை யாவும் ஶுபவாஸநா ரூபவடிவத்தால் மலிந வாஸனைகளை நிவிருத்தி செய்யலாம்.

சங்கை—

ஶுபவாஸனைகள் கணக்கற்றவனவாக இருக்கின்றனவே, அவைகள் யாவும் ஒருவனுல் அப்யாஸம் செய்யவும் முடியாதன வன்ருே! அவைகளுடைய அப்யாஸமும் பிரயோஜநமற்ற தாகவே போகுமே என்ருல், போகாது—கணக்கற்றவைகளான நிவ்ருத்திகளையுடைய மலிநவாஸனைகளுக்கு ஒருவனுடைய மனதில் தோன்ருது என்பதால் என்க.

ஆயுர்வேத சாஸ்திரத்தில் சொல்லியவைகளான எல்லா ஔஷதங்களும் ஒருவனுல் ஸேவிப்பதற்கு முடியாதன்ருே! அந்த ஔஷதங்களினுல் நிவ்ருத்தியாகின்ற எல்லா ரோகங்களும் ஒருவ னுடைய சரீரத்தில் தோன்ருதனவன்ருே! இவ்வாறுள்ள பொழுது தனது சித்தத்தை முதலாவதாக பரீக்ஷை செய்து அவ் விஷயத்தில் எப்பொழுது எவ்வளவில் மலிநவாஸனைகள்

உள்ளனவோ, அவ்வளவு வரையில் அவைகளுக்கு விரோதியாயுள்ள ஶுபவாஸனைகள் அப்யாஸம் செய்ய வேண்டுவன.

எவ்வாறு புத்திரன், நண்பன், மனைவி முதலியவர்களினுல் துன்புறுத்தப் பெற்று, பிறகு விரக்தியையடைந்த புருஷன், அவைகளுடைய துன்பத்தின் நிவ்ருத்தியின் பொருட்டு ஸம்ந்யாஸத்தை ஸ்வீகரிக்கின்ருனே, அவ்விதமே, வித்தியாமதம் தனத்தின் மதம், குலாசாரமதம் முதலிய மலிநவாஸனைகளினுல் துன்புறுத்தப் பெற்றவன் இவைகளுக்கு விரோதியாயுள்ள விவேகத்தை அப்யாஸம் செய்யவேண்டும். அந்த விவேகமும் ஜநகராஜனுல் காண்பிக்கப் பெற்றுள்ளது—

" அத்ய யே மஹதாம் மூர்த்நி தே திநைர்நிபதந்த்யத:
ஹந்த சித்த மஹத்தாயா : கைஷா விச்வஸ்ததா தவ"
" க்வ தநாநி மஹீபாநாம் ப்ரஹ்மண : க்வ ஜகந்தி வா.
ப்ராக்தநாநி ப்ரயாதாநி கேயம் விச்வஸ்ததா தவ.
கோடயோ ப்ரஹ்மணும் யாதா : கதா : ஸ்வர்கபரம்பரா:
ப்ரயாதா: பாம்ஸுவத் பூபா : கா த்ருதிர் மம ஜீவிதே."
"யேஷாம் நிமேஷணோந்மேஷோ ஜகத : ப்ரளயோதயௌ.
தாத்ருஶா : புருஷா நஷ்டா மாத்ருஶாம் கணனைவ கா." இதி.

"—இப்பொழுது எவர்கள் மிகவும் உத்தமமான லோகங்களில் வஸிக்கின்றரோ, அவர்கள் சில நாட்களில் கீழே விழுகின்றனர் என்னே கஷ்டம்! இவ்வாறுள்ள நிலையில் ஓ மனமே! உனக்கு மஹத்தாயுள்ள விஷயத்தில் இந்த நம்பிக்கையின் தன்மையானது எதற்காக? இது விந்தையாயிருக்கின்றதே"

" அரசர்களுடைய அளவற்ற தநங்கள் எங்கே சென்றன. ப்ரஹ்னுடைய உலகங்கள் எங்கே இருக்கின்றன. பழமையான முயற்சிகள் எங்கே சென்றன. இந்த நம்பிக்கையின் தன்மை உனக்கு எதற்காக?

" ப்ரஹ்மாக்களுடைய கோடிகள் சென்றுவிட்டன. அவ்விதமே ஸ்வர்க பரம்பரைகளும் சென்றன. அரசர்களும் புழுதியெனச் சென்று விட்டனர். எனக்கு ஜீவித்திருக்கும் விஷயத்தில் உறுதியேது?

" எவர்களுடைய கண் திறந்த அளவிலே உலகம் தோன்றுகின்றதோ, எவர்களுடைய கண் மூடிய அளவிலே உலகம் மறைகின்றதோ, அத்தகைய புருஷர்களும் மறைந்தனர். என்னைப்

போன்றுள்ளவனுடைய நிலையைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? வேண்டாமென்பது," என்றவாறு.

சங்கை—

இந்த விவேகமும் தத்வஜ்ஞானத்தின் தோற்றத்திற்கு முன்னேடியாயமைவது. நித்யாநித்யவஸ்துவிவேகம் முதலிய ஸாதநம் இல்லாமல் ப்ரஹ்மஞானம் தோன்றுதாகையால் என்க.

இவ்விடத்திலோ வெனில்! தோன்றியுள்ள ப்ரஹ்மஸாக்ஷாத்காரத்தினுடைய ஜீவன்முக்தியின் பொருட்டு வாஸநாக்ஷயம் முதலிய ஸாதநத்தைச் சொல்லுவதற்காகத் தொடங்கப் பெற்றதாகும். ஆகையினால் காரணமில்லாமல் திடீரென்று இந்தக் கூத்து ஏன் வந்தது என்றால்; இது குற்றமாகாது—ஸாதந சதுஷ்டயங்கள் நிறைந்துள்ள பிறகே ப்ரஹ்மஞானம் தோன்றுவது என்ற இது ஸர்வஸாதாரணமாயுள்ள சிறந்த ராஜமார்கமாகும்.

ஜநகருக்கோ வெனில்—

பூர்வபுண்ய விசேஷ பரிபாகத்தினாலே ஆகாசத்திலிருந்து விழுந்த பழம் போல் திடீரென்று ஸித்தமாயுள்ள கீதாச்ரவணத்தின் அளவிலே தத்வஞானம் தோன்றியது. பிறகு சித்தத்தின் விச்ராந்தியின் பொருட்டு இந்த விவேகமும் செய்யப் பெற்றது என்பதால் திடீரென்று தோன்றிய இத் தாண்டவம் உசிதமேயாகும்.

சங்கை—

இவ்வாறுள்ள பொழுதிலும் இந்த விவேகத்திற்கு ஞானத்தினுடைய அடுத்து வரப்போகின்ற மலிநவாஸனையினுடைய அநுவ்ருத்தியின் இன்மையால் ஶுத்தவாஸநாபேக்ஷயானது வேண்டுவதில்லையே என்றால்? அவ்வாறன்று—

ஜநகருக்கு அந்த மலிநவாஸனை தொடர்ந்து வராதது கொண்டு விவேகம் வேண்டாத பொழுதிலும் யாஜ்ஞவல்க்யர், பகீரதன் முதலியவர்களுக்கு மலிநவாஸனை தொடர்ந்து வந்திருக்கின்ற காரணத்தாலே அவர்களுக்கும் விவேகம் வேண்டியது தான். யாஜ்ஞவல்கியருக்கும் அவருடைய ப்ரதிவாதிகளான உஷஸ்தி, கஹோலர் முதலியவர்களுக்கும் மிகுந்த வித்யாமதம் உண்டென்று

ப்ருஹதாரண்யகசஸ்தியில் காணப்பெறுகின்றதன்றோ! அவர்கள் எல்லோராலும் விஜிகீஷுகதையில் (வெற்றியடைய வேண்டுமென்று) வாதத்தில் ப்ரவ்ருத்தியுள்ளவர்களாதலால் என்க.

சங்கை—

அவர்களுக்கு வேறு வித்யையிருக்கின்றது. ப்ரஹ்மவித்யை இல்லையென்றால், அவ்வாறன்று. கதையில் வருகின்ற ப்ரஸ்னோத்ரங்களுக்கு ப்ரஹ்மவித்யாவிஷயமிருப்பதாலும் என்க. மற்றும் ப்ரஹ்மவிஷயத்திலும் அவர்களுக்கு மேலெழுந்தவாறுள்ள ஞானமே யுள்ளது. நன்கு அறிந்துள்ள நிலையில்லை என்றால் அதுவுமில்லை. அவ்வாறுள்ளதே யாகில் நமக்கும் அந்த வாக்கியங்களினால் தோன்றுகின்ற ப்ரஹ்மவித்தைக்கு நல்ல நிலைமையின் தன்மை இல்லை யென்பதும் நேரிடும்.

மற்றும்—

நல்லதன்மையிலும் பரோக்ஷமாயுள்ள ஞானமே தான் என்றால் அதுவுமில்லை; '' யத்ஸாக்ஷாதபரோக்ஷாத் ப்ரஹ்ம''— எது ஸாக்ஷாத்தாகவும், மறைவில்லாமலும் முக்கியமாயுள்ள ப்ரஹ்மமோ'' என்று முக்கியமாயுள்ள அபரோக்ஷ விஷயத்தின் தன்மையினாலேயே விசேஷமாக ப்ரஸ்நங்கள் காணப்பெறுகின்றன. ஆத்மஞானிகளுக்கு வித்யாமதமென்பது ஆசார்யர்களினால் அங்கீகரிக்கப் பெறவில்லை.

அவ்விதமே உபதேசஸாஹஸ்ரியிலும் சொல்லப்பெற்றுள்ளது.

—''ப்ரஹ்மவித்வம் ததா முக்த்வா ஸ ஆத்மஜ்ஞோ ந சேதர:''

'—அவ்விதமே எவன் நான் ப்ரஹ்மத்தையுணர்ந்தவன் என்பதை விடுத்துள்ளானோ, அவனே ஆத்மாவையுணருகின்றவன், மற்றவர்களில்லை.'' எனவும், நைஷ்கர்ம்யஸித்தியிலும்—

'' ந சாத்யாத்மாபிமாநோऽபி விதுஷோऽஸ்த்யாஸுரத்வத:.
விதுஷோऽப்யாஸுரஸ்சேத்ஸ்யாத் நிஷ்பலம் ப்ரஹ்மதர்சநம்'' இதி.

''—அஸுரஸம்பந்தமாகலின் வித்வானுக்கு அத்யாத்மாபிமானமுமின்று. வித்வானுக்கும் அஸுரஸம்பந்தியான அத்யாத்மாபிமாநம் இருக்குமாயின் ப்ரஹ்மஞாநம் வீணேயாகும்'' எனவும் சொல்லியுள்ளது.

எனவே இவ்வாறு சொன்னால் இது குற்றமாகாது. ஏனெனில் ஜீவன்முக்தி வரையிலுள்ள தத்வஞானத்திற்கு அவ் விடத்தில் விவக்ஷையுள்ளதால் என்க. நாங்களும் ஜீவன்முக்தர் களுடைய வித்யாமதத்தை அங்கிகாரம் செய்வதில்லையன்றோ!

மற்றும்—

இருக்கட்டும், வெற்றியை விரும்புகின்றவனுக்கு ஆத்ம போதமும் இல்லையன்றோ! ஏனெனில்—

" ராகோ லிங்கமபோதஸ்ய சித்தவ்யாயாமபூமிஷு.
குத : ஶாத்வலதா தஸ்ய யஸ்யாக்நி : கோடரே தரோ:;
இத்யாசார்யை: அப்யுபகமாப்திதி சேத் ந;

"—சித்தத்தினுடைய ஸ்வாரஸிகமாயுள்ள ப்ரவிருத்தி யானது ஆலம்பநத்தில்; ராகமானது அஜ்ஞானத்திற்கு லிங்க மாகும் எந்த விருக்ஷத்தின் கோடரத்தில் அக்நி (இருக்கின்றதோ) அதற்கு சாட்வலத்தன்மை (வைடூர்யமணி) எங்ஙனம்?" என்று ஆசார்யகளினால் அங்கீகரித்துள்ளது என்றால், அது இல்லை

" ராகாதய : ஸந்து காமம் ந தத் பாவோऽபராத்யதி.
உத்காததம்ஷ்ட்ரோரகவதவித்யயா கிம் கரிஷ்யதி." இத்யத்ர;

ஏனெனில்—

" ராகம் முதலியவை விரும்பியவாறு இருக்கட்டும். அதனு டைய பாவமானது (பாவனை—தன்மை) என்ன குற்றம் செய்தது. பல்லைப் பிடுங்கிய பாம்பு போல அவித்தையானது என்ன செய்யப் போகின்றது என்றவிடத்தில் அவர்களாலேயே அங்கீகாரம் செய்யப் பெற்றுள்ளதால்" என்க.

இவ்விடத்தில் ஒன்றுக்கொன்றுள்ள வியாஹதியுமில்லை. ஸ்திதப்ரஜ்ஞனாயுள்ள ஞானியின் அளவிலே தான் இரண்டு வசநத் திற்கும் வ்யவஸ்தை செய்வதில் உபயோகம் செயயப் பெற்றுள்ள காரணத்தாலுமே யாகும்.

**சங்கை—**

ஞானிக்கு ராகம் முதலியவைகளின் அங்கிகாரத்தினால் தர்மா தர்மங்களின் வழியாக மறுபிறவியின் ப்ரஸங்கம் உண்டாகுமே எனில்; அவ்வாறு சொல்லவேண்டாம். பொரிக்கப் பெறாத விதை

போல், அவித்தையை முன்னேடியாகக் கொண்ட கர்மம் முதலிய வைகளுக்கே முக்கியமாயுள்ள ராகம் முதலியவைகளின் தன்மை யினுல் மறுபிறவிக்கும் காரணமாகும். ஞானிகளுக்கோ வெனில்! பொரிக்கப் பெற்ற விதை போல ஆபாஸத்தின் அளவிலேயே ராகம் முதலியவைகள் இருப்பனவாம்.

இதைக் கருத்தில் கொண்டே இவ்வாறு சொல்லப் பெற் றுள்ளது—

**"உத்பத்யமாநா ராகாத்யா விவேகஞாநவஹ்நிநா.**

**ததா தைவத தஹ்யந்தே குதஸ்தேஷாம் ப்ரரோஹணம்" இதி.**

"—தோன்றுபவைகளான ராகம் முதலியவைகள் விவேக ஞானம் என்னும் அக்நியினுல் அவ்வப்பொழுது எரிக்கப் பெறுகின்றன. ஆதலின் அவைகளுக்கு முளைதோன்றுவதற்குரிய தகுதி எங்ஙனமுண்டாகும்" (இல்லையென்பது) அப்பொழுது ஸ்திதப்ரஜ்ஞனுக்கும் அவைகள் இருக்கலாமே என்ருல்; அது இல்லை. அச்சமத்தில் முக்கியத்தைப் போலவே ஒளிருகின்ற வைகளுக்குப் பாதகம் தோன்றக் கூடுமென்பதால் என்க. ரஜ்ஜு, ஸர்பம் இவைகளும் முக்கியமாயுள்ள ஸர்பம் போல அப்பொழுது அச்சுறுத்திக் கொண்டு காணப்பெறுகின்றதோ அதுபோலவேயாம். என்க.

அப்பொழுது ஆபாஸத்தன்மையினுடைய அநுஸந்தாநத் தின் அநுவ்ருத்தியிலே ஒருவிதமான இடையூறுமில்லையே என்ருல் நீ சிரம்ஜீவியாயிருக்கக்கடவது. இதுவேயன்ருே எங்களுக்கும் ஸம்மதமான ஜீவன்முக்தியுமாகும்.

யாஜ்ஞவல்க்யரோவெனில்— வெற்றிகொள்ள விழைகின்ற நிலையில் இவ்விதம் போலன்று. சித்த விஶ்ராந்தியின் பொருட்டு வித்வத்ஸந்ந்யாஸம் அவரால் செய்து கொள்ளப் போகின்ற காரணத்தால் என்க. அவருக்குக் கேவல வெற்றியிலே விழைவு மில்லை. ஆனுல் தனத்தின் மீதுள்ள பெருகிய பற்றுக்கோடே காரணமாகும்.

ஏனெனில்— ப்ரஹ்மவித்துக்கள் பலர் முன்னிலையில் நிறுத்தப்பெற்ற அலங்காரங்களோடு கூடிய ஆயிரம் பசுக் களையும் தானே எடுத்துக்கொண்டு, பிறகு தானே ஜநகருடைய ஸபையில் பின் வருமாறு சொன்னுர்—

"நமோ வயம் ப்ரஹ்மிஷ்டாய குர்மோ கோகாமா ஏவ வயம் ஸ்ம" இதி.

"—ஓ ஸபையோர்களே! உங்களுக்குள் எவர் ப்ரஹ்மநிஷ்டர்களாக இருக்கின்றனரோ, அவர் இந்த பசுக்களைக் கொண்டு செல்லட்டும்" எனச் சொன்னார். அச் சமயம் ஒருவரும் துணிந்து பதில் சொல்வதற்கு முன்வரவில்லை. பிறகு யாஜ்ஞவல்கயர் ப்ரஹ்நிஷ்டர்களின் பொருட்டு நாம் நமஸ்காரம் செய்வோம். நாம் எல்லோரும் பசுக்களிடத்தில் விருப்பமுற்றவர்களாகவும் இருக்கிறோம்" எனச் சொன்னார்.

மற்றும், இவர் இவ்வாறு சொல்லிய வார்த்தையானது ஏனைய ப்ரஹ்மவித்துக்களை அவமதிப்பதாகச் சொன்னார் என்றால், இதுவும் மற்றொரு குற்றமாகும். ஏனெனில் மற்றவர்களான ப்ரஹ்மவித்துக்கள் தங்களுக்குச் சேரவேண்டிய தனம், ஸம்மாநம் இவைகளை இவர் அபஹரித்துக் கொண்டாரே என நினைத்துக் கோபமடைந்தனர். இந்தக் கோபத்திற்கு அடிமையாயுள்ள நிலையானது சாபத்தினால் சாகல்யன் என்பவனை மாய்த்தது.

ஆகவே ப்ரஹ்மஹத்தி செய்த இவருக்கு மோக்ஷமில்லை என்ற ஐயம் கொள்வதும் கூடாது, ஏனெனில் கௌஷீதகர்கள் இவ் விஷயத்தைக்குத் தெளிவாகச் சொல்லுகின்றனர்—

"நாஸ்ய கேநாபி கர்மணா லோகோ மீயதே,
ந மாத்ருவதேந, ந பித்ருவதேந, ந ஸ்தேயேந,
ந ப்ரூணஹத்யயா" இதி.

"—எவனொருவன் என்னை அறிகின்றானோ அவனுக்கு எந்தக் கர்மத்தாலும் உலகம் அளவிடப்பெறாது. மாத்ருவதத்தாலும், பித்ருவதத்தாலும், திருட்டினாலும், ப்ரூணஹத்தியினாலும் இவனுக்குப் பாபம் இல்லை" என்றவாறு. மற்றும் சேஷனும் தன்னாலியற்றப்பெற்ற ஆர்யாபஞ்சாசீதியிலும் இதைச் சொல்லியுள்ளார்—

"ஹயமேதஸ்ஹஸ்ராண்—
யத குருதே ப்ரஹ்மகாதலக்ஷாணி.
பரமார்த்தவிந் ந புண்யைர்
ந ச பாபைஃ ஸ்ப்ருஶ்யதே விமல:" இதி.

"—ஆயிரக்கணக்கான அச்வமேதயாகம் செய்தபொழுதிலும், பிறகு லக்ஷக்கணக்கான ப்ரஹ்மஹத்தி செய்தாலும், பரமார்த்த

மாயுள்ள ப்ரஹ்மஸ்வரூபத்தையுணர்ந்த பரிசுத்தம் வாய்ந்தவன் முறையே புண்யங்களினுலோ, பாபங்களினுலோ தொடரப் பெறுவதில்லை'' என்றவாறு.

ஆகையினுல் அதிகம் சொல்லவேண்டியதுமில்லை. ப்ரஹ்ம வித்துக்களான யாஜ்ஞவல்கியர் முதலியவர்களுக்கு மலிநவாஸனை யின் அநுவிருத்தியானது இருக்கவே செய்யும். பகீரதனுக்கோ வெனில்— தத்துவத்தை யுணர்ந்துள்ள பொழுதிலும் ராஜ்யத்தை பரிபாலநம் செய்து கொண்டு வரும்பொழுது, மலிநவாஸனை களினுல் சித்தத்தினுடைய விச்ராந்தியின்மையினுல் எல்லா வற்றையும் பரித்யாகம் செய்து, பிறகு விச்ராந்தியை யடைந் தான்'' என்று வஸிஷ்டரால் சொல்லப் பெறுகின்றது—

''ஆகையினுல் தன்னிடத்திலுள்ள மலிநவாஸனையின் விசே ஷத்தை, பிறரிடத்தில் காண்கின்ற குற்றத்தைப் போல நன்கு சோதனை செய்து பார்த்து, அவைகள் விலகுவதற்குரிய உபாயத் தைச் செம்மையாக அப்யாஸம் செய்யவேண்டும்'' என்றவாறு

இந்த அபிப்பிராயத்தோடுகூட ஸ்மரணம் செய்ய பெறுவது வருமாறு—

''யதா ஸுநிபுண : ஸம்யக் பரதோஷேக்ஷணே ரத:.
ததா சேந்நிபுண : ஸ்வேஷு கோ ந மூச்யேத பந்தநாத்'' இதி.

''—நல்ல புத்திசாலியாயுள்ள ஒருவன் பிறருடைய குற்றங்களை மிகவும் ஜாக்ரதையாக (கவனமாக) எவ்வாறு ஆராய்ந்து பார்க் கின்ருனே, அந்த மனிதனை இந்த ஸம்ஸாரபந்தத்திலிருந்து எவரால் விடுவிக்க முடியும்? முடியாது என்றவாறு.

சங்கை—

முதலாவதாக வித்யாமதத்திற்கோ வெனில் என்ன உபாயம் என்ருல்; அது தன்னைச் சார்ந்த மதத்திற்கா? பிறரைச் சார்ந்த மதத்திற்கா? அல்லது தனது விஷயத்திற்கா? பிறருடைய விஷயத் திற்கா? முதலாவதாயுள்ள பங்கமானது அவஸ்யம் சில விஷயங் களில் உண்டாகும் என இடைவிடாது பாவனைசெய்து வர வேண்டும்.

அது எவ்வாறெனில்—

'' ஶ்வேதுகேதுவானவன் வித்தையினுல் மதத்தைடைந்து ப்ரவாஹணன் என்னும் அரசனுடைய ஸபையை யடைந்துள்ள

பொழுது பஞ்சாக்நிவித்தையில் அவனால் கேள்விகள் கேட்கப் பெற்றபொழுது, அந்த வித்தையை ஸ்வேதகேது அறிந்துகொள் ளாத காரணத்தால், பதில் சொல்ல முடியாமல் மௌனமாக இருந்தான்''.

''இதைக் கண்ட அரசன் அவனைப் பல வழிகளிலும் மடக்கியப் பலபடியாக அவமானமடையச் செய்தான். பிறகு ஸ்வேதகேது தனது தந்தையின் ஸமீபத்தை யடைந்து, அரசஸபையில் தான் அவமானமடைந்த விஷயத்தைச் சொல்லிக் கொண்டான். தந்தை உத்தாலகனோ வெனில்! தனக்கு வித்யாமதம் இல்லாத காரணத் தால் அந்த அரசனுடைய அபிப்பிராயத்தை யுணர்ந்து, அதைய நுஸரித்தே அவனிடம் வந்து அந்த வித்யையைத் தெரிந்து கொண்டான்''.

மற்றும், த்ருப்தபாலாகி என்பவனும் வித்யாமதத்தினால் கர்வ மடைந்து காசியிலுள்ள அஜாதசத்ரு என்ற அரசனால் அவமாந மடைந்து, பிறகு தனது வித்யாமதத்தை விட்டு, அந்த அரசனையே ஆச்ரயித்து ப்ரஹ்ம வித்யையை யுணர்ந்து கொண்டான். இவ் விதமே உஷஸ்தி, கஹோலன் முதலியவர்களும் யாஜ்ஞவல்க்யரோடு வாதம் செய்து வித்யாமதத்தால் தோல்விகண்டனர்.

''எப்பொழுது தன்னைக் குறித்து மற்றவன் மதத்தினால் ப்ரவ்ருத்திக்கின்றானோ, அப்பொழுது என்னைக்குறித்து அந்த அந்நியன் நிந்தனை செய்யட்டும், அல்லது அவமானம் செய்யட்டும், எப்படியாவது இருக்கட்டும், அதனால் எனக்கொன்றும் கெடுதல் இல்லை என்று பாவனை செய்யவேண்டும். ஏனெனில்—

'' ஆத்மாநம் யதி நிந்தந்தி நிந்தந்தி ஸ்வயமேவ ஹி.
சரீரம் யதி நிந்தந்தி ஸஹாயாஸ்தே மதா மம.
நிந்தாவமாநாவத்யந்தம் பூஷணம் யஸ்ய யோகிந:
தீவிக்ஷேப: கதம் தஸ்ய வாசாடை: க்ரியதாமிஹ'' இதி.

''—எவர்கள் எப்பொழுதாவது ஆத்மாவை நிந்தனை செய் கின்றனரோ, அல்லது ஸ்வயமாகவே நிந்தனை செய்கின்றனரோ, சரீரத்தை நிந்தனை செய்தாலும் அவர்கள் எனக்கு உபகாரி களாவர்,''

''எந்த யோகிக்கு நிந்தனை அவமாநம் இவையிரண்டும் மிகவும் விருப்பமாயுள்ள ஆபரணமாயுள்ளதோ, அவனுக்கு புத்தியினுடைய விக்ஷேபமானது வாயாடிகளினால் இவ் விடத்தில் எவ்வாறு செய்யமுடியும்? முடியாதென்பது.

நைஷ்கர்ம்யஸித்தியிலும்—

" வர்சஸ்கே ஸம்பரித்யக்தே தோஷதஸ் சாவதாரிதே.
யதி தோஷம் வதெத் தஸ்மை கிம் தத்ரோச்சரிதுர்பவேத்"

" தத்வத் ஸ்தூலே ததா ஸூக்ஷ்மே தேஹே த்யக்தே விவேகத:
யதி தோஷம் வதேத் தாப்யாம் கிம் தத்ர விதுஷோ பவேத்."

" ஶோகஹர்ஷபயக்ரோதலோபமோஹஸ்ப்ருஹாதய:
அஹம்காரஸ்ய த்ருசயந்தே ஜந்ம ம்ருத்யுஶ்ச நாத்மந:" இதி.

"மலத்தைப் பரித்யாகம் செய்யும்பொழுது, தோஷமாக அறியும் காலத்தும், ஒருவன் தோஷம் கூறுவானுயின், அவனுக்கு அவ்விடத்துக் கற்பிப்பவன் என்ன ஆகின்ருன்?"

" அதுபோன்று, விவேகத்தால் ஸூக்ஷ்மஸ்தூலதேகங்கள் விடப்படுங்கால் தோஷம் கூறப் பெறுமாயின், அவ்விடத்து வித்வானுக்கு அவ்விரு சரீரங்களின் பொருட்டு என்ன உண்டாம்?"

"துயரம், மகிழ்ச்சி, பயம், க்ரோதம், லோபம், மோஹம் ஆசை முதலியவைகள், அஹங்காரத்தினுடையதாகக் காண்ப பெறுகின்றன. ஆத்மாவுக்கோ பிறவியும், ம்ருத்யுவும் இல்லை" எனவும் சொல்லியுள்ளது.

நிந்தனையினுடைய பூஷணத்தன்மையும் (அலங்காரம்) ஞானாங்குசத்தில் காண்பிக்கப் பெற்றுள்ளது—

" மந்நிந்தயா யதி ஜந: பரிதோஷமேதி
நந்வப்ரயத்நஸுலபோऽயமநுக்ரஹோ மே.
ஶ்ரேயோऽர்த்திநோ ஹி புருஷா : பரிதுஷ்டிஹேதோ:
து:கார்ஜிதாந்யபி தநாநி பரித்யஜந்தி".

"ஸததஸுலபதைந்யே நி:ஸுகே ஜீவலோகே
யதி மம பரிவாதாத் ப்ரீதிமாப்நோதி கஶ்சித்.
பரிவததுயதேஷ்டம் மத்ஸமக்ஷம் திரோ வா
ஜகதி ஹி பஹுது:கே துர்லப: ப்ரீதியோக:" இதி.

"—எனது நிந்தனையினுல் மக்கள் மகிழ்ச்சியடைவார்களே யாகில், இது முயற்சியில்லாத ஸுலமாயுள்ள அநுக்ரஹமாக எனக்கு அமைவதன்ருே! ஶ்ரேயஸை விரும்புகின்ற புருஷர்கள் (தங்கள்) மகிழ்ச்சியின் காரணமாக, மிகவும் ஶ்ரமப்பட்டு

ஸம்பாதித்துள்ள பொருள்களையும் த்யாகம் செய்கின்றனர் அன்றோ!"

"ஒருவன், எப்பொழுதும் ஸுலமாயுள்ளதும், தைன்யமாயுள்ளதுமான ஸுகமற்றதான ஜீவலோகத்தில் என்னுடைய அவமானத்தினால் ப்ரீதியை அடைந்தானே யாகில் இஷ்டப்படி அவமானத்தையோ, நிந்தனையையோ செய்யட்டும். ஏனெனில் அளவு மீறிய துக்கத்தையுடைய இந்த உலகில் ப்ரீதியோகம் கிடைப்பது துர்லபமன்றோ!" ஆனதால் என்க.

மற்றும் அவமானத்திற்கு அலங்காரத்தன்மை ஸ்மரணம் செய்யப் பெற்றுள்ளது—

"ததா சரேத வை யோகீ ஸதாம் தர்மமதூஷயந்.

ஜநா யதாவமந்யேரந் கச்ச்சேயுர்நைவஸம்கதிம்" இதி.

"—ஸாதுக்களுடைய தர்மத்தை தூஷணை செய்யாமல் எவ்வாறு இருக்கமுடியுமோ, அவ்வாறு யோகியானவன் ஸஞ்சாரம் செய்யவேண்டும். மக்கள் எவ்வாறு அவமானம் செய்தாலும் அவர்களோடுள்ள சேர்க்கையை அடைவது கூடாது என்றவாறு.

யாஜ்ருவலக்யர் உஷஸ்தி முதலியவர்களுக்கு தன்னைச் சார்ந்ததாகவோ, பிறரைச் சார்ந்ததாகவோ உள்ள யாதொரு வித்யா மதமுண்டோ அவைகளை எவ்வாறு விவேகத்தோடு கூடிய பரிஹாரமானது தேடப் பெற்றதோ, அவ்விதமே தனத்திலுள் விருப்பம், கோபம் என்ற இவைகளுக்கும் பரிஹாரம் காணவேண்டும். ஏனெனில்—

"அர்த்தாநாமார்ஜநே க்லேச்ஸ்ததைவ பரிபாலநே.

நாமே து:கம் வ்யயே து:கம் திகர்த்தாந் க்லேசகாரிண:"

தநவிஷயேவிவேக:" இதி.

"—பொருள்களுடைய ஸம்பாதநத்திலும், சிரமம் இருக்கின்றது. அவ்வாறே அதைப் பரிபாலநம் செய்வதிலும் சிரமமிருக்கின்றது. அப்பொருள் அழியும்பொழுது துக்கமுண்டாகின்றது. அப்பொருள் செலவு செய்யும் பொழுதும் துக்கமுண்டாகின்றது ஆகையினால் துயரத்தைக் கொடுக்கக்கூடிய பொருள் வரவை நிந்தனை செய்து ஒதுக்கவேண்டும்" என்ற தநவிஷயமான விவேகத்தைப் பெற வேண்டுவதும் அவசியமாகும்.

க்ரோதமும் இருவகையாகும். அது தன்விஷயமதயுள்ள பிறரைச் சார்ந்தது, பிறரைச் சார்ந்துள்ள தன் விஷயமாயுள்ளது. என்பது. அவ்விஷயத்தில் தன்னைச் சார்ந்த பிறருடைய விஷயத்தைத் குறித்து இவ்வாறு சொல்லப் பெற்றுள்ளது—

''அபகாரிணி கோபஶ்சேத் கோப: கோபே கதம் ந தே.
தர்மார்தகாம மோக்ஷாணும் ப்ரஸஹ்ய பரிபந்திநி.
பலார்த்திநோ தர்மயசோர்த்தநாசந:
ஸ சேதபார்த்த: ஸ்வஶரீரதாபந:.
ந சேஹ நாமுத்ர ஹிதாய ய: ஸதாம்
மநாம்ஸி கோப: ஸமுபாஶ்ரயேத் கதம்'' இதி.

''—அபகாரம் செய்பவனிடம் கோபம் தோன்றுமே யாகில், அப்பொழுது கோபத்தில் கோபமானது உனக்கு எவ்வாறு பொருந்தும்? (பொருந்தாது), தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற இவைகளை பலாத்காரம் செய்கின்ற பரமஶத்ருவாகவும் அது இருப்பதன்றோ!''

''அந்தக் கோபமும், பயனை விரும்புகின்றவர்களுடைய தர்மம், புகழ், தாநம், எல்லாவற்றையும் நாஶம் செய்யவல்லது. அது குற்றமுள்ளது. தனது சரீரத்தையும் தஹிக்கவல்லது. இவ்வுலகத்திற்கோ மறு உலகத்திற்கோ அநுகூலமாயிருப்பதுமன்று. இந்தக் கோ்பமானது ஸாதுக்களுடைய மனதை எவ்வாறு ஆச்ரயித்திருக்கமுடியும்? முடியாதன்றோ'' என்றவாறு.

தனது விஷயமான பிறரைச் சார்ந்ததைக் குறித்து இவ்வாறு சொல்லப் பெற்றுள்ளது—

''ந மே஽பராத: கிமகாரணே ந்ருணும்
மதப்யஸூயேத்யபி நைவ சிந்தயேத்.
ந யத்க்ருதா ப்ராக்பவபந்தநிஷ்க்ருதி:
ததோ ஽பராத: பரமோ ஽நுசிந்த்யதாம்.
''நமோ஽ஸ்து கோபதேவாய ஸ்வாஶ்ரயஜ்வாலிநே ப்ருசம்.
கோப்யஸ்ய மம வைராக்யதாயிநே தோஷபோதிநே.'' இதி.

''—தன்னைக் குறித்துப் பிறர் எப்பொழுது கோபித்துக் கொள்ளுகின்றரோ, அப்பொழுது ஜனங்களுக்கு நாம் ஒரு குற்றமும் செய்யாமல் இருக்கும்பொழுது காரணமில்லாமல் வீணுக நம்மைக் குறித்து ஏன் கோபமடைகின்றனர் எனவும் நினைப்பது கூடாது. ஏனெனில்! யாதொரு காரணத்ததல் பிறர் கோபம் செய்

தற்கு முன்பே ஸம்ஸாரஸம்பந்தமான ப்ராயஸ்சித்தமாகும் என நினைத்து, பிறகு இக் குற்றமானது சிறந்ததே யாகும் எனத் தொடர்ந்து சிந்தனை செய்வாயாக." எனவும் சொல்லப் பெற்றுள்ளது.

மற்றும்;

"நமோऽஸ்து கோபதேவாய ஸ்வாஸ்ரயஜ்வாலினே ப்ருஸம்.
கோப்யஸ்ய மம வைராக்யதாயி னே தோஷபோதினே". இதி.

"தன்னை ஆஸ்ரயத்துள்ள ஜ்வாலையையுடைய கோபதேவனுக்கு நமஸ்காரம். ஏனெனில்— கோபியான என்னிடமுள்ள குற்றத்தை யுணர்த்திய காரணத்தாலும், எனக்கு வைராக்யத்தைக் கொடுத்த காரணத்தாலும் என்க" எனவும் சொல்லப் பெற்றுள்ளது.

மேலும் தநத்தை விரும்புகின்ற கோபம் போல், மனைவி மக்கள் இவர்களிடமுள்ள ஆசைகளையும் விவேகத்தினுடைய உதவியினால் நிவ்ருத்தி செய்ய வேண்டும்.

அவ் விஷயத்தில் பெண்ணைக் குறித்த விவேகமானது வஸிஷ்டரால் காண்பிக்கப் பெற்றுள்ளது—

"மாம்ஸபாஞ்சாலிகாயாஸ்து யந்த்ரலோலே ऽங்கபஞ்ஜரே.
ஸ்நாய்வஸ்திக்ரந்திஸாலிந்யா: ஸ்த்ரியா: கிமிவ ஸோபநம்.
த்வங்மாம்ஸ ரக்தபாஷ்பாம்பு ப்ருதக் க்ருத்வா விலோசநே.
ஸமாலோகய ரம்யே சேத் கிம் முதா பரிமுஹ்யஸி.
மேருஸ்ருங்கதடோல்லாஸி கங்காஜலரயோபமா.
த்ருஷ்டா யஸ்மிந் ஸ்தநே முக்தாஹாரஸ்யோல்லாஸஸாலிதா.
ஸ்மஸாநேஷு திகந்தேஷு ஸ ஏவ லலநாஸ்தந:.
ஸ்வபிராஸ்வாத்யதே காலே லகுபிண்ட இவாந்தஸ:.
கேசகஜ்ஜலதாரிண்யோ து:ஸ்பர்சா லோசநப்ரியா:.
துஷ்க்ருதாக்நிசிகா நார்யோ தஹந்தி த்ருணவந்நராந்.
ஜ்வலதாமதிதூரே ऽபி ஸரஸா அபி நீரஸா:.
ஸ்த்ரியோ ஹி நரகாக்நீநாமிந்தநம் சாரு தாருணம்.
காமநாம்நா கிராதேந விகீர்ணா முக்தசேதஸாம்.
நார்யோ நரவிஹங்காநாம் அங்கபந்தநவாகுரா:
ஜந்மபல்வலமத்ஸ்யாநாம் சித்தகர்தமசாரிணாம்.
பும்ஸாம் துர்வாஸநாரஜ்ஜுர் நாரீபடிச பிண்டிகா.
ஸர்வேஷாம் தோஷரத்நாநாம் ஸுஸமுத்கிகயாநயா.

து:கச்ருங்கலயா நித்யமலமஸ்து மம ஸ்த்ரியா.
இதோ மாம்ஸமிதோ ரக்தமிதோsஸ்தீநீதி வாஸரை:
ப்ரஹ்மங் கதிபயைரேவ யாதி ஸ்த்ரீ விஶராருதாம்.
யஸ்ய ஸ்த்ரீ தஸ்ய போகேச்சா நி:ஸ்த்ரீகஸ்ய க்வ போகபூ:.
ஸ்த்ரியம் த்யுக்த்வா ஜகத் த்யக்தம் ஜகத் த்யக்த்வா ஸுகீ பவேத்'
இதி:

"—மாம்ஸங்களினுல் நிர்மாணம் செய்யப் பெற்ற புத்தலிகையோ (பொம்மை) வெனில் அவயவமென்றும் கூட்டில் ஜலயந்த்ரம் போல் சஞ்சலம் கொண்டதும், ஸ்நாயு, அஸ்தி இவைகளுடைய முடிச்சுக்களோடு கூடியதாயுமிருக்கின்ற பெண்ணுடைய வனப்பைக் கண்டு ஏன் மோஹம் கொள்ளவேண்டும்"

"த்வக், மாம்ஸம், ரக்தம், கண்ணீர் என்ற இவைகளைத் தனித் தனியே பிரித்துப் பார்த்தால் அழகாக இருக்குமோ? ஏன் வீணுக அதைக் கண்டு மோஹமடைகின்ருய்"

"எந்த நகிலின் மீது முத்தாலான மாலையினுல் நன்கு ப்ராகாசிக்கின்ற நிலையை, மேருமலையின் தாழ்வரையிலுள்ள கங்கையினுடைய ஜலத்தின் வேகத்திற்கு உவமையாகவும்"; காண்கின்ருயோ,

"அந்தப் பெண்ணின் நகிலானது ஸ்மசாநங்களிலுள்ள மூலைகளில் பிற்காலத்தில் அன்னத்தினுடைய பிண்டம் போல நாய்களினுல் ஆஸ்வாதம் (புசித்தல்) செய்யப் பெறுவதுமன்ரு"

"தலைமுடியென்னும் மையைத் தரித்துள்ளவர்களும், பார்ப்பதற்கு ப்ரியமாயினும், தொடுவதற்கு முடியாத பாபமென்னும் அக்கினியைப் போலுள்ள பெண்கள் மனிதர்களைப் புற்கள் போல எரிக்கின்றனர்'.

"வெகு தொலைவில் ப்ரகாசிக்கின்றவர்களாயினும், ரஸத்தோடு கூடியவர்களாயினும், ரஸமற்றதாயுள்ள பெண்கள், நரகமென்னும் அக்நிகளுக்கு விறகுகள் போல வியக்கத்தக்கக் கொடுமையுள்ளவர்ளாக இருக்கின்றனர்"

"காமன் என்ற பெயரையுடைய வேடனுல், மூடமதியுள்ள மனிதர்கள் என்ற பறவைகளுடைய அவயவங்களைப் பிணைப்பதற்குப் பெண்கள் என்னும் வலை விரிக்கப் பெறுகின்றது"

"பிறவி யென்னும் குட்டையிலுள்ள மத்ஸயங்களுக்கு, சித்தமென்னும் சேற்றில் ஸஞ்சாரம் செய்கின்ற புருஷர்களைப் பிடிப்பதற்கு, துர்வாஸனையென்ற செம்படவனுடைய கையிலுள்ள

கயிறாக இருக்கின்றது. பெண்களோ வெனில் வலையிலுள்ள பிண்டிகையாக (ஈயத்தாலான கொட்டை) இருக்கின்றனர்"

"தோஷங்கள் என்னும் ரத்நங்களுக்கெல்லாம் அழகிய ஸம்புடிகையாகிற துயரமென்னும் தளையின் வடிவாயமைந்த பெண்ணால் எனக்கு வேதனையுண்டாகியது போதும்"

"இங்கு மாம்ஸம், இங்கு ரக்தம், இங்கு எலும்பு என்று ஓ ப்ரஹ்மந்! சில நாட்களிலேயே ஒரு பெண்ணானவள் ஸாரமற்ற நிலையை அடைகின்றாள்"

"எவனுக்கு மங்கையிருக்கின்றாளோ, அவனுக்குப் போகத்தில் விருப்பம் இருப்பதாகும். மங்கையில்லாத ஒருவனுக்கு போகத்திற்குரிய இடமானது எங்ஙனம் இருக்க முடியும்? முடியாதன்றோ! ஆதலில் மங்கையை மறந்து விட்டு, உலகை விட வேண்டும். உலகை விட்டதும் ஸுகியாக இருக்க வேண்டும்" என்றவாறு.

அடுத்தபடியாக புத்ரனைக் குறித்த விவேகமானது ப்ரஹ்மானந்தத்தில் (பஞ்சதசி) காண்பிக்கப் பெற்றுள்ளது—

"அல்பயுமாநஸ்தநய : பிதரௌ க்லேயயேச்சிரம்.
லப்போ ऽபி கர்ப்பாதேந ப்ரஸவேந ச பாததே.
ஜாதஸ்ய க்ரஹரோகாதி: குமாரஸ்ய ச மூர்கதா.
உபநீதே த்வவித்யாத்வமநுத்வாஹஸ்ச பண்டிதே.
யூநஸ்ச பரதாராதிர்தாரித்ர்யம் ச குடும்பிந :
பித்ரோர் து:கஸ்ய நாஸ்த்யந்தோ தநீ சேந்ம்ரியதே ததா" இதி.

"—புத்திரன் பிறவாதபொழுது, தாய்தந்தையர்களுக்கு வருத்தமுண்டாகின்றது. பிறகு கருவிலிருந்து தோன்றும் பொழுது, அவன் துன்பத்தைக் கொடுக்கின்றான். இவ்வாறு பிறந்துள்ள மகன் பிணிகளுக்கு இலக்காகாமல் இருக்க வேண்டுமே என்ற வருத்தம் தோன்றுகின்றது. பிறகு வயது வந்ததும் மூர்க்கத் தன்மை முதலான குணங்கள் இல்லாமல் இருக்க வேண்டுமே என்ற துக்கம். உபநயநம் செய்த பிறகு நன்கு படித்து ஆசாரசீலனாக இருக்க வேண்டுமே என்ற கவலை. அப்படியே கற்றுத் தேர்ந்த பிறகு விவாஹத்தைப் பற்றிய கவலை";

"மறுபடியும் விவாஹம் நடந்தேறினாலும் நடத்தை பிசகாமல் இருக்க வேண்டுமே என்ற கவலை. அதற்குப் பிறகு குடும்பத்தில்

வறுமை புகாமல் இருக்க வேண்டுமே என்ற கவலை. பிறகு ஸம்பாதித்துப் புத்திரன் தநவந்தனுயிருந்து மரித்துவிட்டால் பெருகிய துயரமுண்டு பண்ணக் கூடும். இவ்வாறு தாய் தந்தையர்களுக்கு மகனுல் எல்லையில்லாத் துயரமும் தோன்று கின்றன'' என்றவாறு.

மற்றும்,—

—''எவ்வாறு வித்தை, தநம், கோபம், பெண் என்ற இவை களுடைய விஷயங்களைக் கொண்ட மலிநவாஸனைகளுக்கு விவேகத்தோடு பரிஹாரமும், காணப் பெறுகின்றதோ, அவ் விதமே மற்றவைகளான வாஸனைகளுக்கு முறையே சாஸ்திரங் களினுலும், யுக்திகளினுலும் குற்றத்தைப் பரிசீலனை செய்து, பரிஹாரத்தைக் காண வேண்டும். இவ்வாறு பரிஹாரம் செய்துள்ள பொழுது ஜீவன்முக்திக்கு இலக்கணமாயுள்ள சிறந்த பதத்தையும் அவன் அடைகின்றுன்.'' என்றவாறு.

இதைக் குறித்து வஸிஷ்டர் சொல்லுகிருர்—

''வாஸநாநாம் பரித்யாகே யதி யத்நம் கரோஷ்யலம்.
தத்தே சிதிலதாம் யாந்தி ஸர்வாதிவ்யாதயு: க்ஷணுத்.
பௌருஷேண ப்ரயத்நேந பலாத் ஸம்த்யஜ்ய வாஸநா:.
ஸ்திதிம் பத்நாஸி சேத்தர்ஹி பதமாஸாதயத்யலம்'' இதி.

—''வாஸனைகளுடைய பரித்யாகத்தில் முயற்சி செய்தாயே யாகில், அப்பொழுது அதுவே உன்னுடைய எல்லாப் பிணி களையும் க்ஷணகாலத்தில் கலகலத்துப் போகின்ற தன்மையை யடையச் செய்வது''.

''புருஷனைத் தொடர்ந்த முயற்சியோடு கூட வாஸனைகளை பலாத்காரமாக நன்கு ஒதுக்கி விட்டு, (உனது) நிலையை கட்டுப் படுத்துவாயே யாகில், அப்பொழுது சிறந்த பதத்தை யடைவா யன்றே!''

**சங்கை—**

இவ்விடத்தில் புருஷனைத் தொடர்ந்த முயற்சியென்பது முன்பு சொல்லிய விஷயங்களுடைய குற்றத்தைக் கணிப்பதற் குரிய விவேகமாகும். அதுவும் அடிக்கடி செய்யப் பெறுகின்ற பொழுதிலும் வலிமையான இந்த்ரியங்களுடைய செயல்களினுல் சூழப்பெறுகின்றது.

இதைக் குறித்து பகவானல்—

''யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சித:
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:''
இந்த்ரியாணும் ஹி சரதாம் யந்மநோऽநுவிதீயதே,
ததஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்நாவமிவாம்பஸி'' இதி.

''—ஓ குந்தியின் மகனே! முயற்சியையுடைய புருஷனிடத்தில் கூட இந்திரியங்கள் வரம்பு கடந்து செல்லும் பொழுது, தம்முடன் மனத்தையும் வலிய வாரிச் செல்லுகின்றனவே''

'' இந்த்ரியங்கள் சலிக்கையில் ஒருவனுடைய மனமும் அவற்றைப் பின்பற்றிச் செல்லுமாயின், அம்மனம் கடலில் செல்லுகின்ற தோணியைக் காற்று மோதுவதுபோல் அறிவை மோதுகின்றது'' எனவும் சொல்லப் பெற்றுள்ளது.

அப்பொழுது இவ்வாறுள்ள பொழுது உத்பத்தியான விவேகத்தினுடைய ரக்ஷையின் பொருட்டு இந்த்ரியங்களைத் தடுத்து நிறுத்த வேண்டுமன்றோ! அதுவும் அவ்விடத்திலேயே அடுத்துள்ள செய்யுட்களால் காண்பிக்கப் பெற்றுள்ளது—

''தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:
வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா''
''தஸ்மாத்யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதாநி ஸர்வஸ:
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்ய்ஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா''

''—அவற்றை யெல்லாம் நன்கு அடக்கி யோகத்தில் அமர்ந்தவனுக என்னைப் பரமாகக் கொண்டு, புலன்களை வஶ்யபடுத்தி வைத்திருப்பவன் எவனே, அவனுடைய ப்ரஜ்ஞையானது அறிவு நிலைகொண்டது''

'' ஆகையினல் ஓ பெருந்தோளாய்! யாங்கணும் விஷயங்களினின்றும், இந்த்ரியங்களைக் கட்டவல்லான் எவனே, அவனது அறிவே நிலைகொண்டது,'' எனவும் சொல்லப் பெற்றுள்ளது.

வேறு ஸ்ம்ருதியிலும்—

ந பாணிபாதசபல: ந நேத்ர சபலோ யதி:.
ந ச வாக்சபலஸ்சைவமிதி சிஷ்டஸ்ய லக்ஷணம்'' இதி

'' —ஒரு யதியானவன், கைகள், கால்கள் என்ற இவைகளில் சபலமுள்ளவனுகவும், கண்களில் சபலமுள்ளவனுகவும்,

வாக்கினிடத்தில் சபலமுள்ளவனாகவும் இருப்பது கூடாது. இதுவே சிஷ்டனுடைய இலக்கணமும் ஆகும்'' எனவும்;

இதையே வேறொரு இடத்தில் ஸங்க்ரஹமாகவும் (சுருக்கம்), விளக்கமாகவும் தெளிவாகச் சொல்லப் பெற்றுள்ளது—

''அஜிஹ்வ: ஷண்ட: பங்குரந்தோ பதிர ஏவ ச.
முக்தஸ்ச முச்யுதே ஷட்பிரேதைர் ந ஸம்ஶய:.
இதமிஷ்டமிதம் நேதி யோ ऽஸ்நந்நபி ந ஸஜ்ஜதே.
ஹிதம் ஸத்யம் மிதம் வக்தி தமஜிஹ்வம் ப்ரசக்ஷதே.
அத்ய ஜாதாம் யதா நாரீ ததா ஷோடஶ வார்ஷிகீம்.
ஶதவர்ஷா ச யோ த்ருஷ்ட்வா நிர்விகார: ஸ ஷண்டக:.
பிக்ஷார்த்தமடநம் யஸ்ய விண்மூத்ரகரணாய ச.
யோஜநாந்ந பரம் யாதி ஸர்வதா பங்குரேவ ச.
திஷ்டதோ வ்ரஜதோ வாபி யஸ்ய சக்ஷுர் ந தூரகம்.
சதுர்யுகாம் புவம் த்யக்த்வா பரிவ்ராட் ஸோ ऽந்த உச்யதே.
ஹிதம் மிதம் மநோரம்யம் வச: ஶோகாபஹம் ச யத்:
ஶ்ருத்வா யோ ந ஶ்ருணோதீவ பதிர: ஸ ப்ரகீர்தித:.
ஸம்நிதௌ விஷயாணாம் ச ஸமர்த்தோ ऽவிகலேந்த்ரிய:.
ஸுப்தவத் வர்த்தே நித்யம் பிக்ஷுர் முக்த ஸ உச்யதே.
ந நிந்தாம் ந ஸ்துதிம் குர்யாந் ந கிம்சிந் மர்மணி ஸ்பருஶேத்.
நாதிவாதீ பவேத் தத்வத் ஸர்வத்ரைவ ஸமோ பவேத்.
ந ஸம்பாஷேத ஸ்த்ரியம் காம்சித் பூர்வத்ருஷ்டாம் ந ச ஸ்மரேத்.
கதாம் ச வர்ஜயேத் தஸ்யா ந பஶ்யேத் லிகிதாமபி.'' இதி.

—''அஜிஹ்வ:, ஷண்ட:, பங்கு:, அந்த; பதிர: முக்த: ச —நாவில்லாதவன், ஆண்மையில்லாதவன் அலி; முடவன், குருடன், செவிடன், அறிவற்றவன் என்ற இவைகள் ஆறுகளிலுைம் பிக்ஷுவானவன் விடுதலை பெறுகின்றான், ஐயமில்லை'' என்றவாறு.

பொருள் விளக்கம்—

''இது விரும்பத்தக்கது, இது விரும்பத்தகாதது என்ற வேற்றுமையைக் காணாமல் எவன் புசிக்கின்றானோ, எவன் பற்றுக் கொள்வதில்லையோ, ஸத்யத்தை விரும்புவனும், மிதமாக (அளவாக) பேசுபவனுமாக இருக்கின்றானோ, அவன் அஜிஹ்வன் எனப் பெறுவன்,

"எவ்வாறு ஒருவன் பெண்ணைக் கண்டு இப்பொழுது பிறந்துள்ளவள் போலக் கருதுகின்றானோ, அவ்வாறே பதினாறு வயதுள்ள மங்கையையும், அவ்வாறே நூறுவயதுள்ளவளையும் பார்த்து மனத்தின் கண் விகாரமடையாமல் இருக்கின்றானோ, அவன் ஷண்டன் எனப் பெறுவன்.

"எவன் பிக்ஷையின் பொருட்டும், மலமூத்ரவிஸர்ஜநத்தின் பொருட்டும், ஒரு யோஜனைக்கு மேற்படாமல் ஸஞ்சாரமும் செய்கின்றானோ, அவன் உண்மையான பங்கு ஆவன்.

"நிற்கும் பொழுதும், செல்லும் பொழுதும் எவனுடைய கண்ணானது தொலைவை யடைவதில்லையோ, நான்கு யுகங்களுடைய (நுகத்தடி) பூமியை விடுகின்றானோ அந்த பரிவ்ராட் அந்தன் எனச் சொல்லப் பெறுகின்றான்,"

"அநுகூலமாகவும், மிதமாகவும் (அளவோடுகூடியது) மனத்தை மகிழச் செய்வதாயுள்ள வார்த்தையையும், சோகத்தைக் களைவதாயும் இருக்கின்றதோ, (அதை) எவன் கேட்டும், கேட்காதவன் போல் இருக்கின்றானோ, அவன் பதிரன் (செவிடன்) எனச் சொல்லப் பெறுகின்றான்"

"எவன், விஷயங்களுடைய முன்னிலையில் திறமைவாய்ந்த பூர்ணமாயுள்ள இந்த்ரியங்களோடு கூடியவனாயினும், தூங்குகின்றவனைப் போல் எப்பொழுதும் இருக்கின்றானோ, அந்த பிக்ஷுவானவன் முக்தன் எனச் சொல்லப் பெறுவன்"

"நிந்தை, துதி இவைகளைச் செய்யாதவனும், மற்றவனுடைய ரஹஸ்யத்தைத் தீண்டாதவனாகவும், அதிகம் பேசாதவனுமாக எவன் இருக்கின்றானோ, அதே போலே எங்கும் ஸமமாகவுள்ள நிலையிலும் இருக்கின்றானோ,"

"ஒரு மங்கையையும் கண்டு பேசாமலும், முன்பு கண்டதைத் திரும்பவும் நினையாதிருக்கின்றானோ! மங்கையைப் பற்றிய கதையைக் களைந்தவனாகவும், சித்திரத்தில் வரைந்துள்ளவளையும் பார்க்காமல் இருக்கின்றானோ, அவன் முக்தன் எனப் பெறுவன்" என்றவாறு.

எப்படியாவது வ்ரதத்தைக் கைக்கொண்ட ஒருவன், இரவு ஒரு வேளை புசிப்பது, உபவாஸம், மௌநம், முதலிய வ்ரதத்தை ஸம்கல்பம் செய்து கொண்டு, அவ்வாறு அந்த வ்ரதத்தை ஸாவதாநமாக நழுவ விடாமல் காப்பாற்றி வருகின்றானோ,

அப்படியே நாவடக்கம் முதலிய இந்த்ரியவ்யாபாரத்தின் நிரோத மாகிய வ்ரதத்தில் நின்றுகொண்டு ஸாவதாநமாக விவேகத்தைக் காப்பாற்றவேண்டும்.

இவ்வாறு, விவேகத்தினுல் இந்த்ரியங்களுடைய நிரோதங்க ளோடு நீண்டகாலம் இடைவிடாமலுள்ள ஸத்காரங்களினுல் ஸேவிக்கப் பெறுகின்ற மைத்ரீ முதலிய பாவனைகளில் நிலைபெற் றுள்ள ஆஸுரஸ்மபத்தின் வடிவாயமைந்த மலிநவாஸனைகள் நாசமடைகின்றன.

பிறகு நி:ஶ்வாஸம், உச்ச்வாஸம், விழிப்பு, முடுதல் போன்ற புருஷனுடைய முயற்சி யில்லாமலேயே வருகின்றவைகளான மைத்ரீ முதலிய வாஸனைகளோடு உலகத்தில் வ்யவஹாரம் செய்பவனுயினும், சித்தத்தில் அவைகளுடைய அதிகம், குறைவு என்ற அநுஸந்தாநத்தை யொதுக்கி, நித்ரை, ஆலஸ்யம் மனோராஜ்யம் முதலியவைகளின் வடிவாயமைந்த எல்லா சேஷ்டைகளையும் முயற்சியினுலே விட்டு, சாந்தகுணங்கள் நிரம்பியதாகச் செய்து, சின்மாத்திரமாயுள்ள வாஸனையை அப்யாஸம் செய்யவேண்டும்.

மற்றும்—

தன்னிடமிருந்து இந்த உலகமோவெனில், சித், ஜடம் என்ற இரண்டு வடிவாக ஒளிருகின்றது. ஆயினும், ஶப்தம், ஸ்பர்ஶம், முதலிய ஜடவஸ்துக்களுடைய பிரகாசத்தின் பொருட்டே இந்த்ரி யங்கள் தோற்றுவிக்கப் பெற்றுள்ளன.;

**"பராஞ்சி காநி வ்யத்ருணத் ஸ்வயம்பூ:" இதி.**

—"பரமாத்மா—(ஸ்வயம்பூ:) இந்த்ரியங்களை ஆத்மாவுக்கு அந்யமாயுள்ள வஸ்து விஷயங்களாக ஸ்ருஷ்டித்தான்" என்பது ஶ்ருதியாகும்.

இருந்தாலும், சைதந்யத்தினுடைய உபாதாநத்தன்மை யோடு விலக்குவதற்கு முடியாத காரணத்தால், சைதந்யத்தை முன்னிட்டுக் கொண்டே ஜடமாயுள்ள உலகம் பிரகாசிப்பது மாகும்;"

**"தமேவ பாந்தமநு பாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி" இதி.**

"—அவனையே தொடர்ந்து பிரகாசிக்கின்றன, இவை யாவும் அவனுடைய (அந்த ப்ரஹ்மத்தினுடைய) ஒளியினுல் ஒளிருகின்றன." என்ற ஶ்ருதியிலிருந்தும் அவ்வாறுள்ள பொழுது,

பிறகு ஒளிரப் போகின்ற ஜடத்திற்கு, முதலாவதாக ஒளிருகின்ற சைதந்யமே உண்மையான வடிவம் என உறுதி செய்து, ஜடத்தை ஒதுக்கி சிந்மாத்ரத்தையே சித்தத்தில் வஸிக்கச் செய்யவேணடும்.

இவ் விஷயமும் பலி, ஶுக்ரன் இவ்விருவருடைய, கேள்வி, பதில் என்றவைகளினால் மிகத் தெளிவாக அறியமுடிகின்றது—

**'' கிமிஹாஸ்தீஹ கியந்மாத்ரமிதம் கிமயமேவ ச.**
**கஸ்த்வம் கோ ऽஹம் க ஏதே வா லோகா இதி வதாஶு மே'' இதி.**

''—இவ்விடத்தில் என்ன இருக்கின்றது? இவ்விடத்தில் எந்த அளவு இது? இதுவே தானா? நீ யார்? நான் யார்? இந்த ஜநங்கள் தான் எவர்? என்ற இவைகளை எனக்கு விரைவில் சொல்லு வீராக'' எனவும்;

**'' சிதிஹாஸ்தீஹ சிந்மாத்ரமிதம் சிந்மயமேவ ச.**
**சித்வம் சிதஹமேதே ச லோகாஸ்சிதிதி ஸம்க்ரஹ:'' இதி.**

''—இவ்விடத்தில் சித் இருக்கிறதென்றால், இது சிந்மாத்திர மாகும். அது சிந்மயமாகவும் ஆவது. சித்தின் தன்மையான சித்தே நான்; இந்த ஜநங்களும் சித்தே யாவன என்பது ஸம் க்ரஹமாகும். (சுருக்கம்). அதாவது சித்தைக் காட்டிலும் வேறு ஒரு பொருளும் இவ்வுலகில் இல்லை'' என்பது;''

மற்றும், இவ்விடத்தில் எப்பொழுதும் நிலைத்துள்ளது சித்தே தான். அது சிதேகரஸமானது. பரிணாமம் கிடையாது. அதுவே எங்கும் பரிபூரணமாக நிறைந்துள்ளது. ஜடமாகக் காண்கின்ற இந்த உலகத்துக்கு சித்தே உண்மையான வடிவம் நீயும் சித்து, நானும் சித்து, இந்த மக்களும் சித்தே யாவன. இதுவே எல்லா வேதாந்தங்களுடைய ஸாரமாயுள்ள ஸம்க்ரஹமாகும். என்றவாறு.

எவ்வாறு ஸுவர்ணத்தை விரும்புகின்றவன், வலயத்தை வாங்கிய பொழுதிலும், வலயவடிவாயுள்ள குண தோஷங்களை விலக்கி பெருமை, (குருத்வம்) வர்ணம் இவைகளினிடத்திலேயே மனதைப் பெரும்பாலும் செலுத்துகின்றானோ, அவ்வாறு சித்தின் அளவிலே (சித்மாத்ரே) மனதைச் செலுத்தவேண்டும். எவ்வளவு காலம் வரையில் ஜடத்தை எப்பொழுதும் விலக்கி, சிந்மாத்திரத் தில் மனத்தினுடைய ப்ரவ்ருத்தியானது மூச்சுவிடுவதுபோல,

இயல்பாகவே தோன்றுகின்றதோ, அவ்வளவு காலம் வரையில் சிந்மாத்ர வாஸனையினுல் முயற்சியும் செய்யவேண்டும்.

**சங்கை—**

முன்னதாகவே சிந்மாத்ரவாஸனை இருக்கட்டும். அந்த வாஸனையினுலேயே மலினவாஸனையினுடைய நிவ்ருத்தியுமாகுமே. எதற்காக மனத்தை ஶ்ரமபடுத்திக் கொண்டு மைத்ரீ முதலிய வாஸனைகளுடைய அப்பியாஸத்தால்? என்று சொன்னுல், அவ்விதமில்லை.

ஏனெனில், சித்வாஸனைக்கு நிலையில்லாத ப்ரஸங்கம் தோன்றக் கூடுமாதலால் என்க. எவ்வாறு சுவரானது உறுதியாயில்லாமல் போனுல், ஸ்தம்பம், சுவர் இவைகளின் வடிவாயுள்ள வீடு நிர்மாணம் செய்யப் பெறினும் அது நிலைத்து நிற்காதன்றே! அல்லது, விரேசநத்தினுல் (பேதி) வலியதாயுள்ள தோஷமானது வெளியேறுவதற்காக ஸேவிக்கப் பெற்ற மருந்தானது ஆரோக்யமாயில்லாமல் போனுல் எவ்விதமோ? அது போலவே யாகும்.

**சங்கை—**

"தாமப்யத பரித்யுஜேத்"—பிறகு அதையும் பரித்யாகம் செய்ய வேண்டும்" என்று சிந்மாத்ர வாஸனைக்கும் பரித்யாகமானது அறியப் பெறுகின்றதே என்றுல், அதுவும் யுக்தமன்று. சிந்மாத்ரத்தைப் பரித்யாகம் செய்து, ஏதாவது ஒன்றை எடுத்துக் கொள்ள முடியாத காரணத்தாலே யாதலின் என்க.

இது குற்றமன்று, சிந்மாத்ர வாஸனையென்பது இருவகையாகும். மனம், புத்தி இவைகளோடு கூடியது, இவையிரண்டோடும் கூடாதது என்பன. மனமென்பது கரணமாகும் (செயல்) புத்தியென்பது கர்த்தா (தலைவன்) என்ற நிலையினையுடையது. அவ்வாறுள்ள பொழுது—நான் அப்ரமத்தன், ஏகாக்ரமாயுள்ள மனத்தோடு சிந்மாத்திரத்தைப் பாவனை செய்யப் போகிறேன் என்ற இத்தகைய கர்த்தா, கரணம் என்றவையினுடைய அநுஸந்தாநத்தோடு கூடிய முதலாவதாயுள்ள யாதொரு சிந்மாத்ரமாயுள்ள வாஸனையுள்ளதோ, அது த்யாகம் என்ற சொல்லால் அதை பரித்யாகம் செய்யவேண்டும். யாதொரு வாஸனையோ வெனில் அப்யாஸத்தினுடைய முதிற்சியினுல் கர்த்ருத்தன்மை (தலைவனுடையதன்மை) முதலிய அநுஸந்தாநத்தினுடைய மறைவு இல்லாத ஸமாதிஸப்தத்தால் சொல்லப் பெறுவதான் அதை எடுத்துக் கொள்ளவேண்டும்.

த்யானம், ஸமாதி இவைகளுடைய இலக்கணமேதோவெனில் பதஞ்சலியானவர் ஸூத்ரவடிவாகச் சொல்லியுள்ளார்—

"தத்ர ப்ரதயயைகதானதா த்யானம்"

"—அவ்விடத்தில் அவ்வாறு மனம் ஓர் இடத்தில் கட்டுண்டு இருப்பதில் மனம் ஒரே வ்ருத்தியின் வடிவாக இருத்தல் த்யானம் எனப் பெறும்"

"ததேவார்த்தமாத்ரநிர்பாஸம் ஸ்வரூபஶூன்யமிவ ஸமாதி:', இதி.

"—அந்த த்யானமும் வஸ்துவடிவமாக மாத்திரம் தோன்றுவதாயும், தனது வடிவம் இல்லாதது போலும் நிகழ்கின்ற மனத்தின் நிலே, ஸமாதி எனப்பெயர் பெறும்" என்றவாறு.

அத்தகைய ஸமாதியில் நீண்டகாலம் இடைவிடாதிருத்தல், இவைகளுடைய ஸத்காரங்களினல் ஸேவிக்கப் பெறுகின்ற பொழுது, உறுதியைப்பெற்று, பிறகு கர்த்தா, கரணம் என்ற இவைகளுடைய அநுஸந்தானத்தின் பரித்யாகத்தின் விஷயமான யாதொரு முயற்சியுண்டோ, அதையும் பரித்யாகம் செய்ய வேண்டும்.

சங்கை—

இவ்வாறுள்ள நிலேயில் அவைகளுடைய த்யானத்தின் முயற்சியும் பரித்யாகம் செய்வது என்ற அனவஸ்தாதோஷம் (உறுதியற்றநிலே) உண்டாகுமே எனில், உண்டாகாது.

ஏனெனில்— (கதகரஜோந்யாயம்) எவ்வாறு கலங்கியிருக்கின்ற ஜலத்தில், கலக்கம் தெளிவதற்காகத் தேத்தாங் கொட்டையை அந்த ஜலத்தில் போட்டதும், அக் கொட்டையினுடைய நுரையானது ஜலத்திலுள்ள அழுக்கை அகற்றி விடுவதோடு, தானும் எவ்வாறு மறைகின்றதோ, அது போல த்யான விஷயமான முயற்சியானது, கர்த்தா, கரணம் இவைகளுடைய தொடர்பை (அநுஸந்தானம்) நிவ்ருத்தி செய்து கொண்டு, தன்னையும் நிவ்ருத்தி செய்து கொள்ளுகிறது. அவ்வாறு அந்த நிவ்ருத்தியிலும் மலினவாஸனையைப் போல ஶுத்த வாஸனையும் நாசமடைவதால் வாஸனையில்லா மனமே நிலேத்து நிற்பது.

இதைக் கருதியே வஸிஷ்டரும் சொல்லுகிறார்—

" தஸ்மாத் வாஸநயா பத்தம் முக்தம் நிர்வாஸநம் மந:.
ராம நிர்வாஸநீபாவமாஹராஶு விவேகத:.
ஸம்யகாலோசநாத் ஸத்யாத் வாஸநா ப்ரவிலீயதே.
வாஸநா விலயே சேத: ஶாம்யத்யஸ்நேஹதீபவத்." இதி.

"—ஓ ராம! வாஸனையால் கட்டுண்ட மனம் நிர்வாஸனையினுல் விடுதலை பெறும். ஆகையினுல் விரைவில் விவேகத்திஞல் நிர்வாஸனையின் தன்மையை எடுத்துக்கொள்"

"நன்கு ஆலோசனை செய்த அளவிலே வாஸனையானது நன்கு மறைந்து விடுகின்றது. அந்த வாஸனையினுடைய விசேஷமான லயத்தில் மனமானது ஶமநத்தை யடைகின்றது. எவ்வாறெனில் எண்ணெயில்லாத தீபத்தைப் போல" என்றவாறு.

மற்றும்—

" யோ ஜாகர்தி ஸுஷுப்திஸ்தோ யஸ்ய ஜாக்ரந் ந வித்யதே.
யஸ்ய நிர்வாஸநோ போத: ஸ ஜீவந்முக்த உச்யுதே" இதி ச.

"—எவன் ஸுஷுப்தியிலிருக்கும் பொழுது விழித்துள்ளானே, எவனுக்கு ஜாக்ரதவஸ்தை யில்லையோ, எவனுக்கு நிர்வாஸனையினுடைய உணர்வு இருக்கின்றதோ, அவன் ஜீவந்முக்தன் எனச் சொல்லப் பெறுவன்" எனவும்;

" ஸுஷுப்த்வத் ப்ரஶமிதபாவவ்ருத்திநா
ஸ்திதம் ஸதா ஜாக்ரதி யஸ்ய சேதஸா.
கலாந்விதோ விதுரிவ ய: ஸதா புதை:
நிஷேவ்யதே முக்த இதீஹ ஸ ஸ்ம்ருத:" இதி ச.

"—எந்த முமுக்ஷுவினுல் ஜாக்ரத் தசையிலும், ஸுஷுப்தி நிலையில் போல் நன்கு ஶமநம் செய்யப் பெற்ற ஹர்ஷம், சோகம் முதலியவைகளுடைய பாவனைகளின் செயலையுடைய மனத்தால் எப்பொழுதும் விழித்துள்ளானே, எவன் எப்பொழுதும் கலையோடு கூடிய சந்திரன் போல, பண்டிதர்களால் ஸேவிக்கப் பெறுகின்றுனே, அவன் இவ்விடத்தில் முக்தன் என்று சொல்லப் பெறுகின்றுன்" எனவும்;

" ஹ்ருதயாத் ஸம்பரித்யஜ்ய ஸர்வமேவ மஹாமதி:.
யஸ்திஷ்டதி கதவ்யக்ர: ஸ முக்த: பரமேச்வர:.
ஸமாதிமத கர்மாணி மா கரோது கரோது வா.
ஹ்ருதயேநாஸ்தஸர்வாஶோ முக்த ஏவோத்தமாஶய:.

நைஷ்கர்ம்யெண ந தஸ்யார்த்தஸ்தஸ்யார்த்தோ ऽஸ்தி ந கர்மபி:
ந ஸமாதாநஜப்யாப்யாம் யஸ்ய நிர்வாஸநம் மந:.
விசாரிதமலம் சாஸ்தரம் சிரமுத்க்ராஹிதம் மித:.
ஸம்தயக்தவாஸநாந்மௌநாத்ருதே நாஸ்த்யுத்தமம் பதம்.'' இதி ச.

''—பெருகிய புத்தியையுடைய ஒருவன், எல்லாவற்றையும் ஹ்ருதயத்திலிருந்து பரித்யாகம் செய்து, களையைப் பெற்ற துயரத்தையுடையவனாக இருக்கின்றானோ, அவன் பரமேச்வரன் என்னும் முக்தனாவன்.''

''ஸமாதியையோ அல்லது கர்மங்களையோ செய்தாலும், செய்யாவிட்டாலும் ஹ்ருதயத்தினால் அழிக்கப் பெற்ற எல்லா ஆசையை யுடையவனா யிருக்கின்றானோ, அவனே உயரிய மனப் பான்மை கொண்ட முக்தனாவன்.''

'' நைஷ்கர்ம்யத்தினால் அதனுடைய பொருள் இல்லை. அதனு டைய பொருளும் கர்மங்களினாலும் இல்லை. ஸமாதாநம், ஜபம் இவைகளினாலும் இல்லை. ஏனெனில் எவனுடைய மனமானது நிர்வாஸனையாயுள்ளதோ''

'' நீண்டகாலம் பரஸ்பரம் (ஏகாந்தம்) ஆராயச்சி செய்யப் பெற்ற சாஸ்த்ரவிசாரம் செய்தது போதும்! நன்கு விடப் பெற்ற வாஸனையிலிருந்து மௌநமாயிருப்பதைக் காட்டிலும் உயரிய ஸ்தாநம் (இடம்) வேறு இல்லை'' எனவும் சொல்லப் பெற்றுள்ளது.

மற்றும், நிர்வாஸனையாயுள்ள மனத்திற்கு ஜீவநத்திற்குக் காரணமாயுள்ள வ்யவஹாரமானது லோபத்தை யடையுமே என்று ஐயம் கொள்ள வேண்டாம். அந்த லோபமும் கண்கள் முதலிய வ்யவாஹாரத்தினுடைய லோபமா? அல்லது மாநஸ மாயுள்ள வ்யஹாரத்திற்கா? அவ்விஷயத்தில் முதலாவது ஐயத்தை உத்தாலகர் நிராகரணம் செய்கிறார்:—

'' வாஸநாஹீநமப்யேதத் சக்ஷுராதீந்த்ரியம் ஸ்வத:.
ப்ரவர்ததே பஹி: ஸ்வார்த்தம் வாஸநா நாத்ர காரணம்'' இதி.

'' —வாஸநாஹீனமாயினும் இந்த சக்ஷுஸ் முதலிய இந்த்ரிய மானது தானாகவே வெளியில் தனது விஷயத்தின் பொருட்டு ப்ரவிருத்திக்கின்றது. இவ் விஷயத்தில் வாஸனை காரணமன்று.'' எனவும்;

இரண்டாவது ஐயத்தையும் வஸிஷ்டர் நிராகரணம் செய்கிறார்—

" அயத்நோபநதேஷ்வக்ஷி திக்த்ரவ்யேஷு யதா புந:.
நீராகமேவ பததி தத்வத் கார்யேஷு தீரதீ:."

"—திக்குகளில் இருக்கப் பெற்ற வஸ்துக்களில் கண்ணனது முயற்சியில்லாமலேயே எவ்வாறு மறுபடியும் ராகமில்லாமலேயே விழுகின்றதோ, அது போல தைர்யசாலியான ப்ரஹ்மவித்தும் கார்யங்களில் ராகமில்லாமலேயே பொருந்துவன்";

அத்தகைய புத்தியினுல் ப்ராரப்தமாயுள்ள போகத்தினை அவரே உபபாதநம் செய்கிறார்—

"பரிஜ்ஞாயோபபுக்தோ ஹி போகோ பவதி துஷ்டயே.
விஜ்ஞாய ஸேவிதஸ்சோரோ மைத்ரீமேதி ந சோரதாம்"

"—நன்கு பரிசிலனை செய்து அநுபவிக்கப் பெற்ற போகமே மகிழ்ச்சியின் பொருட்டு அமைவது. தெரிந்து ஸேவிக்கப் பெற்ற சோரன் மித்ரத் தன்மையை யடைகின்ருன். திருடன் தன்மையை அடைகின்றதில்லை"

" அஶங்கிதோபஸம்ப்ராப்தா க்ராமயாத்ரா யதாத்வகை:
ப்ரேக்ஷயதே தத்வதேவ ஜ்ஞைர் போகஸ்ரீரவலோக்யதே."

"—எவ்வாறு ஐயத்திற்கிடமில்லாமல் நன்கு அடையப் பெற்ற க்ராமயாத்திரையானது வழிப்போக்கர்களினுல் பார்க்கப் படுகின்றதோ, அது போலவே, போகலக்ஷ்மியானது (போகம், (ஐச்வர்யம்) அறிஞர்களால் (மேலெழுந்த தன்மையாக) பார்க்கப் பெறுகின்றது"

(க்ராமயாத்திரை—கிராமத்தில் நடக்கின்ற விவாஹம் முதலிய மஹோத்ஸவங்களில் பரிகல்பனை செய்யப் பெற்ற யாத்திரை யென்பது. சிஷ்டர்களுடைய (ஸாதுக்கள்) வழியில் திளைப்பவர்கள்.)

மற்றும், போககாலத்திலும் வாஸனையுள்ளவனைவிட, வாஸனை யில்லாதவனுடைய விசேஷமாயுள்ள நிலையைச் சொல்லுகிறார்—

" நாபதி க்லாநிமாயாதி ஹேமபத்மம் யதா நிசி.
நேஹந்தே ப்ராக்ருதாதந்யத் ரமந்தே சிஷ்டவர்த்மநி"

"—எவ்வாறு; இரவில் பொற்ருமரையினைப் போல் ஆபத்தில் வாட்டமடைகின்றதில்லையோ தனக்குத் தற்காலம் வாய்த் துள்ளதைவிட வேருென்றனை அவர் விரும்பார்.

''நித்யமா பூர்ணதாமந்தரக்ஷுப்தாமிந்துஸுந்தரீம்.
ஆபத்யபி ந முஞ்சந்தி சசிந: சீததாமிவ.''

''—அவர்கள் மனதில் எப்பொழுதும் பூரணத்தன்மை கொண்டவர்கள். அவர்கள், கலக்கமற்ற இந்து என்னும் ஸுந்தரியை ஆபத்திலும் மனத்தை விட்டு அகற்றி விட மாட்டார்கள். எவ்வாறெனில் சந்திரனுடைய தண்மையின் தன்மை போல'' எனவும்;

'' அப்திவத் த்ருதமர்யாதா பவந்தி விகதாஶயா:.
நியதிம் ந விமுஞ்சந்தி மஹாந்தோ பாஸ்கரா இவ.''

''—விரிந்த கருத்துடையோராய் கடல் போல் எல்லையற்ற (வரம்பில்லாத) வர்கள். ஆகையால் ஓ பெருந்தோளாய்! அம் மஹான்கள் ஸூர்யர்களைப் போல நியதியை விடமாட்டார்கள்''

ஸமாதியிலிருந்து எழுந்துள்ள ஜநகனுக்கு இத்தகையதா யுள்ள ஆசரணமானது படிக்கப் பெறுகின்றது—

'' தூஷ்ணீமத சிரம் ஸ்தித்வா ஜநகோ ஜநஜீவிதம்.
வ்யுத்தித: சிந்தயாமாஸ மநஸா ஶமஶாலிநா.''

—மக்களால் உய்விக்கப் பெற்ற ஜநகன், பிறகு நீண்ட காலம் மௌநமாயிருந்து எழுச்சியடைந்து ஶமத்தைக் கைக்கொண்ட அவர் மநதினால் சிந்தனை செய்யலானார்.''

'' கிமுபாதேயமஸ்தீஹ யத்நாத் ஸம்ஸாதயாமி கிம்.
ஸ்வத: ஸ்திதஸ்ய ஶுத்தஸ்ய சித: கா மே ऽஸ்தி கல்பநா,''

—இவ்விடத்தில் எடுக்கத்தக்கது யாது உள்ளது? முயற்சியினால் எதை நன்கு ஸாதித்துக் கொள்ளப் போகிறேன். ஏனெனில்— இயல்பாயுள்ளதும், சுத்தமாயுள்ளதுமான சித்தாகிய எனக்கு என்ன கல்பனையுள்ளது? ஒன்றுமில்லை என்பது.

'' நாபிவாஞ்ச்சாம்யஸம்ப்ராப்தம் ஸம்ப்ராப்தம் ந த்யஜாம்யஹம்.
ஸ்வச்ச ஆத்மநி திஷ்டாமி யந்மமாஸ்தி ததஸ்து மே.''

"—அடையத்தகாததை நான் விரும்ப மாட்டேன். அடையத் தக்கதையும் நான் விடமாட்டேன். நிர்மலமாயுள்ள ஆத்மனிடத்தில் நான் நிற்கின்றேன். யாதொன்று என்னுடைய தாக இருக்கின்றதோ, அது எனக்கு இருப்பதாக."

" இதி ஸம்சிந்த்ய ஜநக: யதா ப்ராப்தக்ரியாமஸௌ.

அஸக்த: கர்துமுத்தஸ்தௌ திநம் திநபதிர் யதா"

"—இவ்வாறு ஜநகன் நன்கு சிந்தனை செய்து, விதிவசத்தால் அடையப்பெற்ற செயலில் பற்றற்றவனுய்ச் செய்ய எழுந்தார். எவ்வாறெனில்—தினத்தினைக் குறித்து திநபதியான ஸுர்யன். தினத்தைக் குறித்து விளக்க எழுந்தாற் போல"

(இவ்விடத்தில் ஸுர்யன் என்ற சொல்லானது மாதந் தோறுமுள்ள வ்யக்தி பேதத்தினுல் சொல்லப் பெற்றது. அல்லது — சந்திரன், அக்நி முதலியவர்களையும் கொள்ளுதற்காம். உபமேயத்தினை நோக்கியது எனினுமாம்.)

" பவிஷயங் நாநுஸம்தத்தே நாதீதம் சிந்தயத்யஸௌ.

வர்தமாநநிமேஷம் து ஹஸங்நேவாநுவர்ததே." இதி.

"—இவன் வரப்போவதைச் சிந்தனை செய்வதில்லை, சென்ற தனையும் சிந்தனை செய்வதில்லை, நிகழ்கின்ற நிமிஷத்தினையும் சிரித்துக் கொண்டே (பரிஹாஸம்) அநுஸரிப்பவனுமாவன்" என்றவாறு கூறப் பெற்றுள்ளது. ஆகவே இன்னேரன்ன வாஸநாக்ஷயத்தினுல் ஜீவங்முக்தி யுண்டாகின்றது என்பது நன்ருக நிலைத்துள்ளது." என்றவாறு.

இவ்வாறு ஸ்ரீவித்யாரண்யர் இயற்றிய
ஜீவங்முக்திப்ரகரணத்தில் வாஸநாக்ஷயம் என்ற
இரண்டாவது ப்ரகரணம் இவண் முற்றும்.



# மநோநாசப்ரகரணம்

இவ்வாறு, வாஸநாக்ஷயத்தைச் சொன்னோம். இனி ஜீவ முக்திக்கு ஸாதநமாயுள்ள மநோநாஶத்தை நிரூபணம் செய்கிறோம்.

சங்கை—

ஆயினும், எல்லா வாஸனைகளுடைய நாஶம் உண்டாகும் போது, உண்மையில் மநம் நாஶத்தையடைந்தே விடுமன்றோ! அப்படியிருக்கையில் ஸ்வதந்த்ரத்தோடு மநோநாஶமானது நன்கு அப்யாஸம் செய்யப்பெற்ற பொழுது, வாஸநாக்ஷய மானது ரக்ஷிக்கப் பெற்றதாக இருக்கிறது.

மற்றும், அஜிஹ்வத்வம், ஷண்டத்வம் முதலியவற்றின் அப்யாஸத்தினாலேயே அந்த வாஸநாக்ஷயத்தினுடைய நிறைவு கிடைக்குமென்று சொல்லக் கூடாது. மனம் நாஶமாகிய பொழுது அஜிஹ்வத்வம் முதலியன உண்மையில் ஸித்திப்பதாலேயே அப்யாஸத்தினுடைய அபாவமும் (இன்மை) கிடைப்பதாகும்.

சங்கை—

மநோநாஶத்தின் அப்யாஸமானது அவ்விடத்திலும் இருக்கிறது என்று சொல்லுவாயேயாகில், இருக்கட்டுமே, அதற்கு அவஶ்யத்தன்மையும் இருப்பதால் என்க. மநோநாஶமில்லாமலேயே அப்யாஸம் செய்த பொழுதிலும் அஜிஹ்வத்வம் முதலியன உறுதியாயிருப்பனவன்று.

“ ஸஹஸ்ராங்குரசாகாத்மபலபல்லவஶாலிந:.
அஸ்ய ஸம்ஸாரவ்ருக்ஷஸ்ய மநோமூலமிதி ஸ்ம்ருதம்.
ஸம்கல்பமேவ தத்மந்யே மநோ மூலமிதி ஸ்திதம்.
ஸம்கல்பமேவ தந்மந்யே ஸம்கல்போபசமேந தத்.
சோஷயாமி யதா சோஷமேதி ஸம்ஸாரபாதப:
ப்ரபுத்தோऽஸ்மி ப்ரபுத்தோऽஸ்மி த்ருஷ்டஶ்சோரோ மயாத்மந:.
மநோ நாமேஹ ஹந்ம்யேநம் மநஸாஸ்மி சிரம் ஹத:” இதி.

ஆகையினாலேயே மனத்தின் நாஶம் செய்யவேண்டிய தன்மையை ஜநகர் சொல்லுகிறார்—

"ஆயிரக்கணக்கான முளைகளோடு கூடியதும், கிளைகளோடு கூடியதும், பழங்கள், தளிர்கள் இவைகள் நிறைந்துள்ளதுமான இந்த ஸம்ஸாரமென்னும் வ்ருக்ஷத்திற்கு மனமே மூலகாரணமாயிருக்கிறது.

"அதற்கும் ஸங்கல்பமே காரணம் என நினைக்கிறேன். அந்த ஸங்கல்பம் ஶமநத்தையடைந்துள்ள பொழுது, அதுவும் இல்லை. ஸம்ஸாரம் என்ற இந்த மரமானது எவ்வாறு சோஷத்தையடைகின்றதோ, அவ்வாறு எரிக்கப் போகிறேன்."

"நான் விழித்துக் கொண்டேன். நான் விழித்துக் கொண்டேன். ஆத்மாவை அபஹரிக்கின்ற சோரன் என்னால் காணப் பெற்றான். மனம் என்ற பெயருடைய அந்தச் சோரனை நான் அழிக்கிறேன். ஏனெனில் இந்த மனத்தாலன்றோ! நான் நீண்ட காலம் அழிந்தவனாக இருக்கிறேன்" என்றவாறு.

வஸிஷ்டரும் சொல்லுகிறார்—

" அஸ்ய ஸம்ஸாரவ்ருக்ஷஸ்ய ஸர்வோபத்ரவதாயிந:.
உபாய ஏக ஏவாஸ்தி மநஸ: ஸ்வஸ்ய நிக்ரஹ:
மநஸோऽப்யுதயோ நாஶோ மநோநாசோ மஹோதய:.
ஜ்ஞமநோ நாஶமப்யேதி மநோऽஜ்ஞஸ்ய ஹி ச்ருங்கலா.
தாவந்நிஶீதவேதாலா வல்கந்தி ஹ்ருதி வாஸநா:.
ஏகதத்வத்ருடாப்யாஸாத் யாவந்ந விஜிதம் மந:
ப்ரக்ஷீணசித்ததர்பஸ்ய நிக்ருஹிதேந்த்ரியத்விஷ:.
பத்மிந்ய இவ ஹேமந்தே க்ஷீயந்தேபோகவாஸநா:.
ஹஸ்தம் ஹஸ்தேந ஸம்பீட்ய தந்தைர் தந்தாந் விசூர்ண்ய ச.
அங்காந்யங்கை: ஸமாக்ரம்ய ஜயேதாதௌ ஸ்வகம் மந:

"ஏதாவதி தரணிதலே
ஸுபகாஸ்தே ஸாதுசேதஸ: புருஷா:
புருஷகதாஸு ச கண்யா
ந ஜிதா யே சேதநா ஸ்வேந.
ஹ்ருதயபிலே க்ருதகுண்டல
உல்பணகலநாவிஷோ மநோபுஜக:
யஸ்யோபசாந்திமகமத்
சந்த்ரவதுதிதம் தமவ்யம் வந்தே.
சித்தம் நாபி: கிலாஸ்யேதம் மாயாசக்ரஸ்ய ஸர்வத:
ஸ்தீயதே சேத் ததாக்ரம்ய கிம்சித் ப்ரபாததே," இதி.

"—எல்லாத் துயரங்களையும் கொடுக்க வல்லதாயுள்ள இந்த ஸம்ஸாரமென்னும் துக்கத்திற்குக் காரணமாயுள்ளதைக் களைவதற்கு ஒரே ஒரு உபாயமுள்ளது. அது தனது மநத்தை நிக்ரஹம் செய்வதேயாகும்.

"மனத்தின் பரவலான தோற்றத்தின் நாமமானது மநோநாமம் எனப் பெறும். அது ஆத்மனுடைய பெருகிய உதயமாகும். ஏனெனில் மோக்ஷத்திற்கு அது காரணமாய் அமைவதால் என்க. ஞாநியினுடைய மனம் நாமத்தை யடைகின்றது. அஜ்ஞாநியினுடைய மனம் தளையாக (விலங்கு) அவனுக்கு அமைகின்றது."

"எது வரையில் ஒரே ஆத்மதத்வத்தினுடைய அப்யாஸத்தினாலே மனம் ஜயிக்கப் பெறவில்லையோ; அதுவரையில், இரவில் ஸஞ்சாரம் செய்கின்ற வேதாளம் என்ற வாஸனைகள் ஹ்ருதயத்தைச் சூழ்ந்து நிற்பதுமாகும்"

"நாமத்தையடைந்த சித்தத்தினுடைய கொழுப்பையுடையவனும், அடக்கப் பெற்ற பொறிகளென்னும் பகைவர்களையுடையவனுடைய வாஸனைகள் ஹேமந்தகாலத்திலுள்ள தாமரைகள் போல நாசமடைகின்றன.

"தனது மனதை, கையோடு கையை நன்கு பிடித்துக் கொண்டும், பற்களினால் பற்களை நெருக்கியும், அவயவங்களினால் அவயவங்களை நன்கு ஆக்கிரமிக்கச் செய்து வெல்ல வேண்டும்"

"இப் பூவுலகில் கோமளமாயுள்ள அழகிய மனத்தையுடைய எவர்கள் இருக்கின்றனரோ, அம் மஹாபுருஷர்கள், புருஷர்களுடைய வ்யவஹாரங்களின் முன்னிலையில் கணிக்கப் பெறுகின்றவர். எவர்கள் தனது மனத்தால் வெற்றிகொள்ள முடியவில்லையோ அவர்கள் கணநம் செய்வதற்கு அர்ஹதையற்றவர்கள்"

"ஹ்ருதயமென்னும் பிலத்தில், வலயமாகச் செய்யப் பெற்ற கருப்பையில், குற்றமுள்ள விஷயத்தையுடைய மனமென்னும் ஸர்பமானது, எவனுக்கு உபசாந்தியை அடைவிக்கின்றதோ, சந்த்ரனைப் போல வெளியே வருகின்ற குற்றமற்ற அந்த மஹா புருஷனை நான் நமஸ்காரம் செய்கின்றேன்"

"உலகவடிவாயமைந்த மாயாப்ரபஞ்சமென்னும் சக்ரத்திற்குச் சித்தமென்பதே நடுவிலுள்ள த்வாரமாகும். அதை

எல்லாவிடத்திலும் தடுத்து நிறுத்தினல் அப்பொழுது அந்த மாயாசக்ரம் ஒரு சிறிதும் பாதிக்காது'' என்றவாறு.

கௌடபாதாசார்யராலும் சொல்லப் பெற்றுள்ளது—

" மநஸோ நிக்ரஹாயத்தமபயம் ஸர்வயோகிநாம்.
து:கக்ஷய: ப்ரபோதஶ்சாப்யக்ஷயா ஶாந்திரேவ ச'' இதி.

''—எல்லா யோகிகளுக்கும், அச்சமின்மை, துக்கநாஶம் அழிவில்லா ப்ரபோதம் (விழிப்பு) குற்றமில்லா ஶாந்தி, என்ற இவைகள் மனத்தின் நிக்ரஹத்திற்கு வசமாயிருப்பது'' என்றவாறு.

மற்றும் யாதொன்று அர்ஜுனனுல் சொல்லப் பெற்றதோ—

" சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்.
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்'' இதி.

''—ஓ கண்ணு! மனம் சஞ்சலமுடையது. அது தவறும் இயல்புடையது. வலியதுமாகும். அதைக் கட்டுப்படுத்துதல் காற்றைக் கட்டுப்படுத்துவது போல் மிகவும் கஷ்டமான காரியம் என்று நினைக்கிறேன்'' என்ற இது ஹடயோக விஷயத்தைக் குறித்ததாகும்.

ஆகையினுலே வால்மீகியும் சொல்லுகிருர்—

" உபவிஶ்யோபவிஶ்யைகசித்தகேந முஹுர்முஹு:
ந ஶக்யதே மநோஜேதும் விநா யுக்திமநிந்திதாம்.
அங்குஶேந விநா மத்தோ யதா துஷ்டமதங்கஜ:
விஜேதும் ஶக்யதே நைவ ததா யுகத்யா விநா மந:''
மநோவிலயஹேதூநாம் யுக்தீநாம் ஸம்யகீரணம்.
வஸிஷ்டேந க்ருதம் தாவத் தந்நிஷ்டஸ்ய வஶே மந:.
நிக்ரஹோ தீக்ரியாக்ஷாணும் ஹடோ கோலகநிக்ரஹாத்.
கதாசித் ஜாயதே கஶ்சித் மநஸ்தேந விலீயதே.
அத்யாத்மவித்யாதிகம்: ஸாதுஸங்கம ஏவ ச.
வாஸநாஸம்பரித்யாக: ப்ராணஸ்பந்தநிரோதநம்.
ஏதாஸ்து யுக்தய: புஷ்டா: ஸந்தி சித்தஜயே கில.
ஸதீஷு யுக்திஷ்வேதாஸு ஹடாந்நியமயந்தி யே.
சேதஸ்தே தீபமுத்ஸ்ருஜ்ய விநிக்நந்தி தமோऽஞ்ஜநை:.
விமூடா: கர்துமுத்யுக்தா யே ஹடாச்சேதஸோ ஜயம்.
தே நிபத்நந்தி நாகேந்த்ரமுந்மத்தம் பிஸதந்துபி:.'' இதி.

"—அடிக்கடி உட்கார்ந்து, உட்கார்ந்து ஒரு முகமாகச் செய்யப் பெற்ற மனத்தோடு கூடியவனுயிலும், குற்றமற்ற யுக்தியை விட்டு மனதை வெல்லுவதற்கு முடியாது"

"எவ்வாறு மதமுள்ள துஷ்டத் தன்மை வாய்ந்த யானை யானது, மாவட்டியில்லாது அடக்க முடியாதோ, அது போல; ஆகையினுல் மனமானது யுக்தியினுல் இல்லாது வெல்லுவதற்கு ஒருக்காலும் முடியாது"

" மனத்தினுடைய விசேஷமாயுள்ள லயத்திற்குக் காரணமா யுள்ள யுக்திகளுடைய உபதேசமானது, வஸிஷ்டரால் அவ்வளவும் நன்கு சொல்லப் பெற்றுள்ளது. அந்த உபதேசத்தைக் கடைப் பிடிப்பவனுக்கு மனம் வஶமாகுமன்ருே!"

" ஹடத்தினுலும், யுக்தினுலும் நிக்ரஹமானது இரு வகை யாகும். நிக்ரஹமென்பது புத்தியின் செயல்களோடு கூடிய பொருளைச் சார்ந்தது. ஹடமென்பது கோளகத்தை (பிண்டத்தை) நிக்ரஹம் செய்வது"

" அத்யாத்மவித்தைகளை அடைவது, ஸாதுக்களுடைய சேர்க்கையினுலும் பெறுகின்ற காரணத்தால் ஒருவனுக்கு ஒரு ஸமயத்தில் மனமானது லயத்தை யடைகின்ற நிலையைப் பெறுகின்றது."

" வாஸனைகளுடைய பரித்யாகம், ப்ராணனுடைய சலநத் தன்மையை அடக்குவது (தடுப்பது) என்ற இந்த யுக்திகளோ வெனில், சித்தத்தை வெற்றிகொள்ளப் பெறு மளவில், வளர்ச்சியடைகின்றன."

"எவர்கள், இத்தகைய யுக்திகள் இருக்கும் பொழுது ஹடத் தினுல் சித்தத்தை அடக்குகின்றனரோ, அவர்கள் விளக்கை விட்டு மைகளால் இருளையழியச் செய்கின்றன"

" எவர்கள் மனத்தினுடைய வெற்றியை ஹடத்திலிருந்து கொண்டு செய்வதற்கு முயற்சிக்கின்றனரோ, அவர்கள் மதியீனர்கள். ஏனெனில், அவர்கள் மதம் பிடித்த யானையைத் தாமரைத் தண்டுகளினுல் நன்கு பிணைக்கின்றனர் அன்ருே! என்றதால் என்க" என்றவாறு.

மற்றும், நிக்ரஹம் இருவகையாகும். அவை ஹடநிக்ரஹம், க்ரமநிக்ரஹம் என்பன. அவைகளில் செவிகள் முதலிய ஞாநேந்திரியங்கள், வாக்முதலிய கர்மேந்திரியங்கள் என்றவைகள் அந்த அந்த கோளகத்தின் தடுத்தலின் அளவிலே பலாத்காரமாக நிக்ரஹம் செய்யப் பெறுகின்றன. அந்த திருஷ்டாநத்தத்தாலே மனதையும் அவ்வாறு நிக்ரஹம் செய்யப் போகிறேன் என மதியீனனுக்கு ப்ராந்தியானது தோன்றுகின்றது. அவனால் அதை நிக்ரஹம் செய்வதற்கு முடியாது. ஏனெனில்? கோளகமாயுள்ள அந்த ஹ்ருதயகமலத்தைத் தடுப்பதற்கு முடியாதாகையால் என்க.

ஆகையினால், க்ரமநிக்ரஹமே சிறந்தது. அந்த க்ரமநிக்ஹத்திலும் அத்யாத்ம வித்தை முதலியவைகளின் அடைவு முதலியவைகளே உபாயங்களாவன. அந்த வித்தையும் காணப் பெறுகின்ற மித்யாத்வத்தையும் (பொய்யின் தன்மை), காண்கின்ற வஸ்துவினுடைய ஸ்வப்ரகாசத் தன்மையையும் உணரச் செய்கின்றது.

ஆகவே, இவ்வாறுள்ள பொழுது இந்த மனம் தனக்கு கோசரமாயுள்ள (காக்ஷி) த்ருஶ்யங்களில் ப்ரயோஜநத்தின் இன்மையை, ப்ரயோஜநவத்தாயுள்ள த்ருக்வஸ்து கோசரத் தன்மையையும் உணர்ந்து கொண்டு, விறகில்லாத அக்நியைப் போல, தானகவே ஶமநத்தை யடைகின்றது. அவ்விதமே கேட்கப் பெறுகின்றது—

"யதா நிரிந்தநோ வஹ்நி: ஸ்வயோநாவுபஶாம்யதி.
ததா வ்ருத்திக்ஷயாத் சித்தம் ஸ்வயோநாவுபஶாம்யதி. இதி.

"—எவ்வாறு விறகில்லாத அக்நியானது தன்னிடத்திலேயே ஶமநத்தை யடைகின்றதோ, அவ்வாறே வ்ருத்திகளுடைய க்ஷயத்தின் காரணமாக சித்தமும் தன்னிடத்திலேயே ஶமநத்தை யடைகின்றது" என்றவாறு. இவ்விடத்தில் யோநி என்ற சொல் ஆத்மனைக் குறிப்பது.

மற்றும், எவனொருவன் உணரச் செய்தும், தத்வ நிலையை உணர்ந்து கொள்ளவில்லையோ, எவனொருவன், மறக்கின்றானே இவ் விருவர்களுக்கும் ஸாதுக்களுடைய சேர்க்கையே உபாயமாகும். ஸாதுக்களுக்களோ வெனில் அடிக்கடி உணரச் செய்கின்றனர். நினைக்குமாறும் செய்கின்றனர்.

"எவனொருவன், வித்தை மதம் முதலிய துர்வாஸனையினால் பீடிக்கப் பெற்று ஸாதுக்களைப் பின் தொடருவதற்கு ஸம்மதிக்க வில்லையோ, அவனுக்கு முன்பு சொல்லிய விவேகத்தோடு வாஸனையினுடைய பரித்யாகமே உபாயமாகும். வாஸனைகளுடைய வலிமையினால் அவைகளை விடுவதற்கு முடியாத நிலையில் ப்ராணனுடைய சலநத்தைத் தடுத்து நிறுத்துவதே உபாயமாகும். ப்ராணசலநம், வாஸனை இவைகளுக்கு சித்தத்தினுடைய ப்ரேரணை இருப்பதால், அவைகளுடைய தடுத்தலில் சித்தத்தினுடைய ஶாந்தியும் கிடைப்பதாகும்.

ப்ரேரகத் தன்மையையும் வஸிஷ்டர் சொல்லுகிறார்—

" த்வே பீஜே சித்தவ்ருக்ஷஸ்ய வ்ருத்திவ்ரததிதாரிண:
ஏகம் ப்ராணபரிஸ்பந்தோ த்விதீயம் த்ருடவாஸநா."
ஸதீ ஸர்வகதா ஸம்வித் ப்ராணஸ்பந்தேந போத்யதே.
ஸம்வேதநாதநந்தாநி ததோ து:காநி சேதஸீ:." இதி,

"—ஓ ராம! சித்தமென்னும் மரத்திற்கு இரண்டு விதைகள், அது வ்ருத்திகளென்னும் கொடிகளைத் தரித்துள்ளது, ஒன்று ப்ராணனுடைய பரிஸ்பந்தம். (சலநம்) இரண்டாவது உறுதியாயுள்ள வாஸனை என்பது"

"ஸம்வித்தானது, எங்கும் சென்றுள்ளதாயிருக்கும் பொழுது ப்ராணஸ்பந்தத்தினாலே உணரப் பெறுகின்றது. அதாவது கலக்கப் பெறுகின்றது. ஆகையினால் ஸம்வித்தை நன்கு தடுத்து நிறுத்துவதே சிறந்த ஶ்ரேயஸ் என உணருவாயாக ஓராம!" என்றவாறு.

மற்றும், எவ்வாறு பஸ்மத்தினால் மறைக்கப் பெற்ற அக்நியை கருமார்கள் துருத்திகளினால் ஊதுகின்றனரோ, அவ்விடத்திலும் துருத்தியிலிருந்து தோன்றிய வாயுவினால் அந்த அக்நியானது ஜ்வலிக்கின்றதோ, அவ்வாறு சித்தத்தினுடைய உபாதாநத்தினால் கட்டையின் இருப்பிடமாயிருக்கிற அஜ்ஞாநத்தால் சூழப் பெற்ற ஸம்வித்தானது, ப்ராணனுடைய ஸ்பந்தத்தினால் (அசைதல்) உணர்த்தப் பெற்று, சித்தத்தினுடைய விருத்தி வடிவத்தோடு ஜ்வலிப்பதாகும்.

ஆகையினால், சித்த வ்ருத்தி என்ற பெயரையுடைய ஸம்வித் என்னும் ஜ்வாலையின் வடிவாயுள்ள ஸம்வேதநத்திலிருந்து (உணர்ச்சியிலிருந்து) துக்கங்கள் தோன்றுகின்றன. இந்த

சித்தவ்ருத்தியானது ப்ராணனுடைய சலனத்தினல் ப்ரேரணை செய்யப் பெறுவதுமாகும்.

பிறவற்றையும் அவரே சொல்லுகிறார்—

"பாவஸம்வித்ப்ரகடிதாமநுபூதாம் ச ராகவ.
சித்தஸ்யோத்பத்திமபராம் வாஸநாஜநிதாம் ஸ்ருணு.
த்ருடாப்யஸ்தபதார்த்தைகபாவநாததிசஞ்சலம்.
சித்தம் ஸ்ம்ஜாயதே ஜந்மஜராமரணகாரணம்" இதி.

"—ஓ ராகவ! பாவனையினல் ஸம்வித்தை வெளிப்படுத்துகின்ற அநுபவத்தையும், வாஸனையினலே தோன்றிய மற்றொரு சித்தத்தினுடைய வ்ருத்தியையும் கேட்பாயாக"

"பதார்த்தத்தினுடைய முக்கியமாயுள்ள பாவனையிலிருந்து, உறுதியாயுள்ள அப்யாஸத்தின் காரணமாக மிகவும் சஞ்சலமாயுள்ள சித்தமானது பிறவிக்குக் காரணமாகவும் இருப்பதாகும்" என்றவாறு. (அதாவது பிறவி, ஜரை, மரணம் இவைகளுக்குக் காரணமென்பது)

கேவலம், ப்ராணன், வாஸனை, இவைகளைக்குச் சித்தத்தினுடைய ப்ரேரகத் தன்மையன்று. ஆனல் ஒன்றுக்கொன்றுள்ள ப்ரேரகத் தன்மையுமுண்டு. இதைக் குறித்து வஸிஷ்டர் சொல்லுகிறார்—

"வாஸநாவசத: ப்ராணஸ்பந்தஸ்தேந ச வாஸநா.
ஜாயதே சித்தவ்ருக்ஷஸ்ய தேந பீஜாங்குரக்ரமம்." இதி.

"—வாஸனையினுடைய வஶத்தினல் ப்ராணஸ்பந்தமானது இருக்கின்றது. அதன் காரணமாக வாஸனையும் உண்டாகின்றது. அதனல் சித்தமென்றும் வ்ருக்ஷத்திற்கு விதை, முளை என்ற வரிசையும் தோன்றுகின்றது." என்றவாறு.

ஆகையினலேயே மற்றொன்று நாசமடையும் பொழுது இரண்டும் நாசமடைகின்றது என்பதையும் சொல்லுகிறார்—

"த்வே பீஜே சித்தவ்ருக்ஷஸ்ய ப்ராணஸ்பந்தநவாஸநே.
ஏகஸ்மிம்ஸ்ச தயோ: க்ஷீணே க்ஷிப்ரம் த்வே அபி நஸ்யத:." இதி.

—"அவைகளுடைய நாஶத்திற்குரிய உபாயமும், நாஶத்தினலுண்டாகின்ற பலனும் சொல்லப் பெறுகின்றது—

"ப்ராணாயாமத்ருடாப்யாஸைர்யுக்த்யா ச குருதத்தயா,
ஆஸநாஶநயோகேந ப்ராணஸ்பந்தோ நிருத்யதே.
அஸங்கவ்யவஹாரித்வாத் பவபாவநவர்ஜநாத்.
சரீரநாஶதர்சித்வாத் வாஸநா ந ப்ரவர்ததே.
வாஸநாஸம்பரித்யாகாத் சித்தம் கச்ச்சத்யசித்ததாம்.
ப்ராணஸ்பந்தநிரோதாச்ச யதேச்ச்சஸி ததா குரு.
ஏதாவன்மாத்ரகம் மந்யே ரூபம் சித்தஸ்ய ராகவ.
யத்பாவநம் வஸ்துநோ஽ந்தர்வஸ்துத்வேந ரஸேந ச.
யதா ந பாவயதே கிம்சித் ஹேயோபாதேயரூபி யத்.
ஸ்தீயதே ஸகலம் த்யக்த்வா ததா சித்தம் ந ஜாயதே.
அவாஸநத்வாத் ஸததம் யதா ந மநுதே மந:.
அமநஸ்தா ததோதேதி பரமோபஶமப்ரதா!" இதி.

'—ஓராம! சித்தமென்ற வ்ருக்ஷத்திற்கு ப்ராணஸ்பந்தநம், வாஸனை என்ற இரண்டு விதைகள் உண்டு. அவைகளில் ஒன்று, மறைந்தாலும், விரைவில் இரண்டும் நாசமடைந்துவிடும்' என்றவாறு.

"குருவினால் கொடுக்கப் பெற்ற ப்ராணாயாமத்தினுடைய உறுதியான அப்யாஸத்தினாலும், யுக்தியினாலும், ஆஸநத்தினாலும், அசநத்தினாலும், ப்ராணஸ்பந்தமானது தடுக்கப் பெறுகின்றது"

"ஸங்கமில்லாத வ்யவஹாரத்திலும், ஸம்ஸாரபாவனையினுடைய த்யாகத்தினாலும், ஶரீரத்தின் நாஶத்தைக் காண்பதாலும் வாஸனையானது ப்ரவேசிப்பதில்லை."

"வாஸனையினுடைய பரித்யாகத்தினால் சித்தமானது சித்தமற்றதாயுள்ள தன்மையை அடைகின்றது. ப்ராணஸ்பந்தத்தினுடைய நிரோதத்தினால் எவ்வாறு விரும்புகின்றாயோ, அவ்வாறு செய்வாயாக"

"ஓ ராகவ! இந்த அளவிலேயே சித்தத்தினுடைய ஸ்வரூபத்தை நினைக்கிறேன். அந்த:கரணத்தில் வஸ்துவினுடைய யாதொரு பாவனையுண்டோ, வஸ்துவின் தன்மையினாலும், ரஸத்தினாலும்," (நினைக்கிறேன்)

எப்பொழுது, யாதொன்று விடுவது, கொள்ளுவது என்ற இவைகளின் வடிவாயுள்ள யாதொரு வஸ்துவுண்டோ, அது பாவனை செய்யப் பெறுவதுமில்லையோ, அப்பொழுது எல்லா

வற்றையும் விட்டு மௌந நிலையிலுள்ள பொழுது சித்தமானது தோன்றுவதில்லை.''

" எப்பொழுதும் வாஸனையற்ற, நிலையில் (சித்தம்) இருகின்றதோ அப் பொழுது மனது ஒன்றையும் நினைப்பதில்லை. அப்பொழுது சிறந்த உபஶமத்தைக் கொடுக்கின்ற அமநஸ்கதா உதயமாகின்றது'' என்றவாறு.

" அமநஸ்கதா' என்ற நிலை தோன்றாத நிலையில் ஶாந்தியினுடைய இன்மையும் சொல்லப் பெறுகின்றது—

"சித்தயக்ஷத்ருடாக்ராந்தம் ந மித்ராணி ந பாந்தவா:.
ஶக்நுவந்தி பரித்ராதும் குரவோ ந ச மாநவா:'' இதி.

"—சித்தமென்ற யக்ஷனால் உறுதியோடு ஆட்கொள்ளப் பெற்ற நிலையில் நண்பர்கள் இல்லை. உறவினரும் கிடையாது. அந்த நிலையை காப்பாற்றுவதற்குத் தகுதியுள்ளவர்கள் மாநவர்களும் அன்று'' என்றவாறு.

"ஆஸநாஶநயோகத்தினால்'' என்று முன்பு யாதொன்று அவ்விடத்தில் சொல்லப் பெற்றுள்ளதோ, அந்த ஆஸநத்தினுடைய இலக்கணம், பலன் இவைகளை மூன்று ஸூத்ரங்களைக் கொண்டு பதஞ்ஜலி அவர்களினால் செய்யப் பெற்றுள்ளது வருமாறு—

"ஸ்திரஸுகமாஸநம்''— உறுதியாயும், (அசைவை யுண்டாக்காதது) ஸுகத்தையுண்டு பண்ணக் கூடியதாயு முள்ளது யாதொன்று உண்டோ, அதுவே ஆஸநமெனப் பெறும்.

" ப்ரயத்நஶைதில்யாநந்தஸமாபத்திப்யாம் ''— "சரீரம் நிலைத்திருப்பதற்கு வேண்டிய இயல்பாயமைந்துள்ள முயற்சியைக் குறைத்துக் கொள்வதாலும், ஆதிசேஷனிடத்தில் மனத்தைச் செலுத்துதலாலும் ஆஸநஜயமானது தோன்றுவது.

"ததோ த்வந்த்வாநபிகாத:—"பிறகு அதனால் (அந்த ஆஸநஜயத்தினால்) த்வந்த்வங்களுடைய (சீதோஷ்ணங்கள்) உபத்திரவமானது தோன்றுவதில்லை'' என்றவாறு.

அதாவது, பத்மகம், ஸ்வஸ்திகம் முதலியவைகளினால் எத்தகையதான சரீரத்தினுடைய நிலைநிறுத்தல் உண்டோ, எந்த

புருஷனுடைய அவயவங்களுக்குத் துன்பம் தோன்றாத நிலையான இலக்கணமாயுள்ள ஸுகமோ, அது தனது சரீரத்தினுடைய சலனமில்லாத இலக்கணத்தோடு கூடிய ஸ்திரத்தன்மையையும் ஸம்பாதித்துக் கொடுப்பதுமாகும். அவனுக்கு அதுவே தான் ஸுகமாயுள்ள ஆஸநம் எனப்பெறும். அதனுடைய முயற்சியின் சைதில்யமானது (தளர்தல்) லௌகிகமான உபாயமாகும். நடப்பது, வீட்டு வேலைகள், தீர்த்தயாத்திரை, புண்யஸ்நானம், ஹோமம் முதலிய விஷயமாயுள்ள யாதொரு முயற்சியானது மாநஸிகமாயுள்ள உத்ஸாஹமுண்டோ அந்த உத்ஸாஹத்தினுடைய சைதில்யத்தைச் செய்ய வேண்டும்.

இல்லாவிடில், அந்த உத்ஸாஹமானது வலுவாக தேஹத்தை எழுச்சியடையச் செய்து எந்த இடத்திலாவது ப்ரேரணை செய்யத் தூண்டும். அலௌகிகமாயுள்ள உபாயமானது, "ஆயிரம் படங்களோடு பூமியைத் தரித்துக் கொண்டு (தாங்கிக் கொண்டு) உறுதி வாய்ந்த நிலையில் நிற்கின்ற யாதொரு அநந்தன் உண்டோ, அவனே தானாக இருக்கிறேன்" என்ற த்யாநம் சித்தத்தினுடைய அநந்தஸமாபத்தி என்பது. இவ் வகையினால் முன்பு சொல்லப் பெற்ற ஆஸநஸம்பாதகமான அதிருஷ்டமும் உண்டாகும். இத்தகைய ஆஸநமானது கைவரப் பெற்ற பொழுது, சீதம், உஷ்ணம், மானம், அவமானம, ஸுகம், துக்கம் முதலிய த்வந்த்வங்களினால் முன் போல் பீடிப்பதில்லை.

அத்தகைய ஆஸநத்திற்குத் தகுதியான தேசமும் (இடம்) ஶ்ருதியில் காணப் பெறுகின்றது.—

"விவிக்த தேசே ச ஸுகாஸநஸ்த;
 சுசி: ஸமக்ரீவசிர: சரீர:" இதி.

"—ஜநஸம்சாரமில்லாத இடத்தில் சுத்தனாக ஸுகமான ஆஸநத்தில் இருந்து கொண்டு (ஸ்வஸ்திகம் முதலிய) நிமிர்ந்துள்ள கழுத்து, சிரஸ் இவைகளோடு கூடிய சரீரத்தோடும், பொறிகளையடக்கிய தடுத்துள்ள நிலையில் பக்தியோடு கூட தனது குருவை வணங்கி" என்றும்,

"ஸமே சுசௌ சர்கரவஹ்நிவாலுகா-
 விவர்ஜிதே ஶப்தஜலாஶயாதிபிஃ
மநோऽநுகூலே ந து சக்ஷுஃ பீடநே
 குஹாநிவாதாச்ரயணே ப்ரயோஜயேத்" இதி ச.

"—ஸமமாயுள்ள பூமியிலும், ஶுத்தமான விடத்திலும், பொடிக்கல், மணல், அக்நி, (ஒளி) ஜலம், கட்டிடம் இவைகளில்லாத இடத்திலும், மனதிற்கு அநுகூலமும், பார்வைக்குத் தொந்திரவு இல்லாததும், ஏகாந்தமானதும், காற்றில்லாததுமான இடங்களிலும் பரமாத்மாவின் மீது சித்தத்தைச் செலுத்த வேண்டும்" எனவும் சொல்லப் பெற்றுள்ளது. இது ஆஸந யோகமாகும்.

—"அஶநயோகஸ்து மிதாஹாரத்வம்"—அஶநயோகமோ வெனில் மிதமான ஆஹாரத்தைக் கொள்ளுகின்ற நிலையாகும்.

"அத்யாஹாரமநாஹரம் நித்யும் யோகீ விவர்ஜயேத்" இதி ஶ்ருதே:.

—"மிதமிஞ்சிய ஆஹாரமும், ஆஹாரமேயில்லாமலும் உள்ள நிலையை யோகியானவன் எப்பொழுதும் விடவேண்டும்". என்பது ஶ்ருதியாகும்.

பகவானுலும் சொல்லப் பெற்றுள்ளது—

"நாத்யசநதஸ்து யோகோஸ்தி ந சைகாந்தமநஶ்நத:
ந சாதிஸ்வபநசீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுந.
யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு
யுக்தஸ்வப்நாவபோதஸ்ய யோகோ பவதி து:கஹா." இதி.

"—ஓ அர்ஜுந! அதிகமாக உண்பவன், முற்றிலும் உணவை விட்டவன், அதிகமாக உறங்குகின்றவன், முற்றிலும் உறக்கமற்றவன் ஆகியோருக்கு த்யாநயோகமில்லை"

"மிதமான உணவும், (உடலைக் காப்பதற்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு உணவு என்பது) மிதமான நடையும், செயல்களைப் புரிவதில் மிதமாகவும், மிதமான தூக்கமும், மிதமான விழிப்பு முள்ளவனுக்கு, துயரத்தைக் களைவதற்கு வேண்டிய த்யாநயோகம் கைகூடும்" என்றவாறு.

வெற்றிகொள்ளப் பெற்ற ஆஸநத்தையுடைய ப்ராணயாமத்தினுல் மநோவிநாஶமானது ச்வேதாச்வதரர்களினுல் சொல்லப் பெறுகின்றது.—

" த்ரிருந்நதம் ஸ்தாப்ய ஸமம் ஶரீரம்
ஹ்ருதீந்த்ரியாணி மநஸா ஸம்நிவேஶ்ய.
ப்ரஹ்மோடுபேந ப்ரதரதே வித்வாந்
ஸ்ரோதாம்ஸி ஸர்வாணி பயாவஹாநி.

ப்ராணாந் ப்ரபீட்யேஹ ஸ யுக்தசேஷ்ட:
க்ஷீணே ப்ராணே நாஸிகயோச்ச்வஸீத.
துஷ்டாச்வயுக்தமிவ வாஹமேநம்
வித்வாந்மனோ தாரயேதாப்ரமத்த:" இதி.

"—மார்பு, கழுத்து, தலை இம் மூன்றையும் உந்நதமாய் (உயர்ந்து) உடைத்தாயிருக்கின்றதும், ஸமமாயிருக்கின்றதுமான சரீரத்தை நிலைத்ததாகச் செய்து கொண்டு, பொறிகளை ஹ்ருதயத்தில் மனத்தால் அடக்கி, ப்ரணவமென்ற தோணியினால் அச்சத்தைக் கொடுக்கின்ற எல்லா ஸம்ஸாரமென்னும் நதிகளை விவேகியானவன் கடக்க வேண்டும்"

"விவேகியானவன், ப்ராணவாயுக்களை அடக்கி, நேரிய நடத்தையுள்ளவனாக (அதாவது மிதாஹாரம் முதலியவைகளைக் கைக் கொண்டவனாக) ப்ராணவாயு குறைந்தால் நாஸியினால் ஶ்வாஸம் விடுகின்றவனாகவும், நழுவுதல் இல்லாதவனாகவும், துஷ்டத் தன்மை வாய்ந்த குதிரைகளையுடைய ரதத்தைப் போல, இம் மனத்தை ஜாக்கிரதையாக தாரணம் (தாங்குவது) செய்ய வேண்டும்" என்றவாறு

மற்றும்,—

யோகியானவன் இருவகையாவன். வித்தை, மதம் முதலிய ஆஸுரஸம்பத் இல்லாதவன், அந்த ஸம்பத்தோடு கூடியவன் என்பன. அவர்களில் முதலாவது நிலையிலுள்ளவனுக்கு ப்ரஹ்மத்யாநத்தினால் மனது தடுக்கப்பெற்ற பொழுது, அது அவாந்தர பலத்தினால் ப்ராணன் தடுக்கப் பெறுகின்றது. அவனைக் குறித்து "த்ரிருந்நதம்" மூன்றையும் உந்நதமாகச் செய்து" என்ற மந்த்ரம் படிக்கப் பெற்றது.

இரண்டாமவனுக்கு—அப்யாஸத்தினால் ப்ராணன் தடுக்கப் பெறும் பொழுது, அது அவாந்தரபலத்தினால் மனம் தடுக்கப் பெறுகின்றது. அவனைக் குறித்து "ப்ராணாந் ப்ரபீட்ய"— "ப்ராணன்களை நன்கு பிடித்து" என்ற மந்த்ரம் ப்ரவ்ருத்திப்பதாகும், ப்ராணனுடைய பீடந முறையானது சொல்லப் போகிறது. அந்த பீடநத்தினால் உசிதமாயுள்ள வ்யாபாரமானது உண்டாகிறது. மனத்தினுடைய வ்யாபாரமானது வித்தை, மதம் முதலியவைகளைத் தடுக்கின்றன.

மற்றும்,

ப்ராணனுடைய தடுத்தலால், சித்தத்தைச் சார்ந்த நிரோதத்தில் உதாஹரணமானது வேறு இடத்தில் காணப் பெறுகின்றது—

" யதா பர்வததாதுநாம் தஹ்யந்தே தமநாந்மலா:
ததேந்த்ரியக்ருதா தோஷா தஹ்யந்தே ப்ராணநிக்ரஹாத்" இதி.

"—எவ்வாறு துருத்தியினுல் ஊதப்பெற்ற அக்நியினுல் மலையிலுள்ள கற்களின் அழுக்குகள் தஹிக்கப் பெறுகின்றதோ, அவ்வாறு ப்ராணுயாமதாரணையினுல் பொறிகளைச் சார்ந்த குற்றங்கள் தஹிக்கப் பெறுகின்றன" என்றவாறு.

இவ் விஷயத்தில் உபபத்தியும் வஸிஷ்டரால் காண்பிக்கப் பெற்றுள்ளது—

" யு: ப்ராணபவநஸ்பந்தஶ்சித்தஸ்பந்த: ஸ ஏவ ஹி.
ப்ராணஸ்பந்தக்ஷயே யத்ந: கர்தவ்யோ தீமதோச்சகை:" இதி.

"—யாதொரு ப்ராணஸ்பந்மானது இருக்கின்றதோ, அதுவே சித்தஸப்ந்தமன்றே! ப்ராணஸ்பந்தத்தின் நாஶத்தில் முயற்சியானது விவேகியினுல் அதிகமாயிருக்குமாறு செய்யவேண்டும்." என்றவாறு.

மற்றும், மனம், வாக், சக்ஷுஸ் முதலிய பொறிகளாகிய தேவதைதள் தங்கள் தங்கள் வ்யாபாரத்தை நிரந்தரமாகச் செய்வோம் என்ற வ்ரதத்தைத் தரித்து, ஶ்ரமவடிவாயுள்ள மிருத்யுவினுல் விழுங்கப் பெற்றனர். அந்த ம்ருத்யுவும் ப்ராணனை அடையவில்லை. பிறகு நிரந்தரமாக உச்ச்வாஸம், நிஶ்வாஸம், என்ற இவைகளை செய்துள்ள பொழுதிலும், இந்த ப்ராணன் ஶமநத்தை யடையவில்லை. அப்பொழுது விசாரணை செய்து தேவதைகள் ப்ராணவடிவைக் குறித்து பிரவேசித்தன. என்ற இந்த விஷயமானது வாஜஸதேயிகளினுல் சொல்லப் பெறுகின்றது—

" அயம் வை ந: ஶ்ரேஷ்ட: ய: ஸம்சரம்ஶ்சாஸம்சரம்ஶ்ச
ந ஜாயதே ந வ்யததே அதோ ந ரிஷ்யதி ஹந்தாஸ்யைவ
ஸர்வே ரூபமஸாமேதி. ஏதஸ்யைவ ஸர்வே ரூபமஸ்மபவந்
தஸ்மாதேத ஏதேநாக்யாயந்தே ப்ராணு:" இதி.

''—இந்த முக்ய ப்ராணன் நம்முள் தலைசிறந்ததாயிருக்கின்றது. இது ஸஞ்சாரம் செய்தும், செய்யாமலும் குறைவின்றியும் அழிவற்றதாயும் இருக்கின்றது. நாம் எல்லோரும் அதனுடைய ஆத்மாவாக இருக்கின்றோம். என எண்ணிக்கொண்டு அந்தப் ப்ராணனுடைய ரூபமாகவே ஆகிவிட்டோம். ஆதலால் வாக் முதலியவைகள் பிராணன்கள் என அழைக்கப் பெறுகின்றன'' என்றவாறு.

ஆகையினால், இந்த்ரியங்களுக்கும் ப்ராணனின் வடிவமென்பது, ப்ராணனுக்கு அதீனமாயுள்ள வ்யாபாரத் தன்மையாகும். அதுவும் அந்தர்யாமிப்ராஹ்மணத்தில் ஸூத்ராத்மத் தன்மையின் ப்ரஸ்தாவத்திலே கேட்கப் பெறுகின்றது—

'' வாயுர்வை கௌதம தத்ஸூத்ரம் வாயுநா வை
கௌதம ஸூத்ரேணாயம் ச லோக: பரஶ்ச லோக:
ஸர்வாணி ச பூதாநி ஸம்த்ருப்தாநி பவந்தி, தஸ்மாத் வை
கௌதம புருஷம் ப்ரேதமாஹு: வ்யஸ்ரம்ஸிஷிதாஸ்யாங்-
கானீதி. வாயுநா ஹி கௌதம ஸூத்ரேண ஸம்த்ருப்தாநி
பவந்தி'' இதி.

''—ஓ கௌதம! அந்த ஸூத்ரம் வாயு தேவதையாகும். வாயுவே எல்லாவற்றையும் கட்டிப் பிடித்துக் கொண்டிருப்பது. ஒரு சரீரத்திலிருந்து வாயுவெளியேறி விட்டால், அவன் ப்ரேதனாக ஆகி விடுகின்றான் என்றும், அவனுடைய அங்கங்கள் நழுவிப் போய் விட்டதாகவும் சொல்லுகின்றனர். வாயுவினால் அன்றோ ஓ கௌதம! ஸூத்திரத்தினால் நன்கு கட்டுண்டதாக இருக்கின்றன.

ஆகையினால் ப்ராணன், மனம் இவைகளுடைய ஸ்பந்தங்களுக்கு ஒன்றாக இணைந்துள்ள நிலையிருப்பதால் ப்ராணனை அடக்கினால் மநம் அடங்கியதாகும். ஸ்பந்தத்தோடு சேர்ந்துள்ளது என்பது பொருந்தாது.

ஏனெனில், ஸுஷுப்தியில் ப்ராணன் வ்யாபாரம் செய்து கொண்டிருப்பினும், மனதிற்கு வ்யாபாரமின்மை காணப்பெறுவதால் என்க. அவ்வாறன்று. மறைந்துள்ள காரணத்தால் அப்பொழுது மனத்தினுடைய நிலை இன்மையால் என்க. நாஶமடைந்த ப்ராணனையுடைய மரித்தவனுக்கு ஶ்வாஸம் இருப்பதைப் பார்த்ததில்லை. ஶ்வாஸம் விட்டு ஜீவித்திருப்பவனுக்கு ப்ராணனுடைய க்ஷயமானது இல்லையன்றோ! அவ்வாறு சொல்ல

வேண்டாம். அநுல்பணத்தன்மையினுடைய க்ஷயத்தினால் இவ்விடம் விவக்ஷையிருப்பதால் என்க.

அவ்வாறே குழிவெட்டுதல், மரம் வெட்டுதல், மலையின் மீது ஏறுதல், விரைவில் ஓடுவது போன்றவைகளில் ச்வாஸத்தின் வேகம் எவ்வளவு இருக்கின்றதோ, அவ்வளவு நிற்பவருக்கோ, உட்கார்ந்துள்ளவனுக்கோ, தூங்குகின்றவனுக்கோ காணப் பெறுவதில்லை. அவ்வாறே ப்ராணாயாமத்தில் திறமையோடு கூடியவனுக்கு மற்றவர்களைக் காட்டிலும் ச்வாஸமானது அல்பமாகவே இருக்கின்றது.

இதைக் கருதியே கேட்கப் பெறுகின்றது.

**"பூத்வா தத்ராயத: ப்ராண: சனைரேவ ஸமுச்சரயேத்" இதி**

—"அவ்விடத்தில் நீண்ட ப்ராணனையுடையவனாக இருந்து கொண்டு மெதுவாகவே நன்கு மூச்சை விட வேண்டும்" என்றவாறு. எவ்வாறு துஷ்டத் தன்மை வாய்ந்த குதிரைகளோடு கூடிய ரதமானது வழியை விட்டு விலகி எங்காவது இழுத்துக் கொண்டு செல்லுமேயாகில், அதையும் ஸாரதியினால் பலமுள்ள குதிரையை கயிறுகளினால் இழுத்து, நேர் வழியிலே மறுபடியும் வந்து சேர்க்கப் பெறுகின்றதோ, அவ்வாறே இந்த்ரியங்களோடு வாஸனைகளினால் இங்குமங்கும் இழுத்துச் செல்லுகின்ற சித்தமானது ப்ராணனென்ற கயிற்றில் உறுதியாக பிடிக்கப் பெற்றுள்ளது.

மற்றும்,

**"ப்ராணான் ஸம்பீட்ய"** —ப்ராணன்களை நன்கு பிடித்து" என்று யாதொன்று சொல்லப் பெற்றதோ, அவ்விஷயத்தில் **ப்ராண பீடந** ப்ரகாரமானது (வழி) வேறிடத்தில் காணப் பெறுகின்றது—

**" ஸவ்யாஹ்ருதிம் ஸ்ப்ரணவாம் காயத்ரீம் சிரஸா ஸஹ.**
**த்ரி: படேதாயதப்ராண: ப்ராணாயாம: ஸ உச்யதே.**
**ப்ராணாயாமாஸ்த்ரய: ப்ரோக்தா ரேசபூரககும்பயோ:.**
**உத்க்ஷிப்ய வாயுமாகாசம் சூந்யம் க்ருத்வா நிராத்மகம்.**
**சூந்யாபாவேந யுஞ்ஜீத ரேசகஸ்யேதி லக்ஷணம்.**
**வக்த்ரேணோத்பலநாலேந தோயமாகர்ஷயேந்நர:**
**ஏவம் வாயுர்க்ருஹீதவ்ய: பூரகஸ்யேதி லக்ஷணம்.**
**நோச்ச்வஸேந்நி:ச்வஸேந்நைவ நைவ காத்ராணி சாலயேத்.**
**ஏவம் தாவந்நியுஞ்ஜீத கும்பகஸ்யேதி லக்ஷணம்" இதி.**

"—வ்யாஹ்ருதியோடு கூடவும், ப்ரணவத்தோடு கூடவும் காயத்ரியை சிரஸோடு கூட மூன்று முறை படிக்கவேண்டும். நீண்ட வாயுவை யுடையதாகச் செய்தால் அது ப்ராணாயாமம் எனச் சொல்லப் பெறும்."

"ரேசகம், பூரகம், கும்பகம் என்று ஏழுவகையாக ப்ராணா யாமம் சொல்லப் பெற்றுள்ளன, வெளியேயுள்ள ஆகாசத்தில் வாயுவை உயர்த்தி நிறுத்தி, தைலதாரையைப் போல மெள்ள மெள்ள விரேசநம் செய்து வடிவமற்றதாக வாயுவை ஶூந்ய மாகச் செய்ய வேண்டும். "ஶூந்யமில்லாமல் இணைப்பது ரேசகத்தினுடைய லக்ஷணம்" எனப் பெறும்.

"மனிதன் முகத்திலிருக்கின்ற உத்பல நாளத்தினால் (நாசியின் த்வாரத்தினால்) ஜலத்தை ஆகர்ஷணம் செய்ய வேண்டும். இவ்வாறு வாயுவை க்ரஹிக்க வேண்டும். இது பூரகத்தின் லக்ஷணமாகும்"

"மூச்சை உள்ளுக்கு இழுக்காமலும், வெளியில் விடாமலும் அவயவங்களை அசைவற்ற நிலையில் இருக்கச் செய்தும், இவ்வாறு பாவனையை இணைக்க வேண்டும். இது கும்பகத்தினுடைய லக்ஷணமாகும்" என்றவாறு.

இவ்விடத்தில் ஶரீரத்தினுள்ளேயே வாயுவை வெளியேற்று வதற்கு உயர்த்தி ஶரீரத்தை ஆகாசம் (போல) ஶூந்யமாக வடிவ மற்றதாகவும், வாயு இல்லாமலும் செய்து, சிறிதளவு கூட வாயுவை ப்ரவேசியாது செய்து ஶூந்யபாவனையோடு இருப்பதே **ரேசகம் எனப் பெறும். கும்பகம் இருவகையாகும். அவை ஆந்தரம், பாஹ்யம் என்பன. இவ்விரண்டைக் குறித்து வஸிஷ்டர்** சொல்லுகிறார்—

**"அபாநேऽஸ்தம் கதே ப்ராணோ யாவந்நாப்யுதிதோ ஹ்ருதி.**
**தாவத் ஸா கும்பகாவஸ்தா யோகிபிர் யாநுபூயதே.**
**பஹிரஸ்தம் கதே ப்ராணே யாவந்நாபாந உத்கத:**
**தாவத் பூர்ணஸமாவஸ்தாம் பஹிஷ்டம் கும்பகம் விது:" இதி.**

"—அபாநவாயுவானது மறைந்துள்ள பொழுது, ஹ்ருதயத்தில் ப்ராணனானது எதுவரையில் வெளியே வருவதில்லையோ, அது வரையில் அவ்வாயுவினுடைய சலனமற்ற கதியானது இருக் கின்றதோ, அது கும்பகத்தின் நிலை எனச் சொல்லப் பெறும்.

12

இக் கதியானது யோகிகளினுல் அநுபவிக்கப் பெறுகின்றது. இந்த நிலையானது அந்த:கும்பகம் எனச் சொல்லப் பெறும்''

''ப்ராணவாயுவானது வெளியே மறைந்துள்ள பொழுது, எவ்வளவு வரையில் அபாநவாயுவானது வெளியில் வரவில்லையோ, அது வரையில் பூர்ணகும்பகத்திற்கு நிகராயுள்ள நிலையானது உண்டோ, அதை வெளியில் இருக்கப் பெற்ற பாஹ்ய கும்பகம் எனப்பெறும். ஏனெனில் ஶரீரத்திற்கு வெளியே வாயுவினுடைய கும்பகத் தன்மையுள்ளதால் என்க'' என்றவாறு.

அவ்விடத்தில் உச்ஶ்வாஸமானது ஆந்தரமாயுள்ள கும்பகத்திற்கு விரோதியாகும்; நி:ஶ்வாஸமானது பாஹ்ய (வெளி) கும்பகத்திற்கு விரோதியாகும், ஶரீரத்தினுடைய சலநமானது (அசைதல்) இரண்டுக்கும் விரோதியாகும், இவ்வாறுள்ள பொழுது, நி:ஶ்வாஸம், உச்ஶ்வாஸம் இவ்விரண்டிற்கும் வேருகவுள்ள ஒன்று அவஶ்யம் இருக்க வேண்டுவதுமாகும்.

பதஞ்ஜலியும் ஆஸநத்திற்குப் பிறகு வரப்போகிற ப்ராணுயாமத்தை ஸூத்ரத்தினுல் இயற்றியுள்ளார்—

''தஸ்மிந் ஸதி நி:ஶ்வாஸோச்ஶ்வாஸயோர் கதிவிச்சேத:
ப்ராணுயாம:'' இதி.

''—அந்த ஆஸநஜயத்திற்குப் பிறகு ஶ்வாஸத்தினுடைய வரத்துப் போக்கை நிறுத்தல் ப்ராணுயாமம் எனப் பெறும்' என்றவாறு.

**சங்கை—**

வேறு கதியில்லாமல் கும்பகத்தில் ரேசகம், பூரகம் இவைகளுடைய உச்ஶ்வாஸம், நி:ஶ்வாஸம் என்று இவைகளுடைய கதிகள் இருக்கின்றன என்று சொன்னுல், இல்லை. ஏனெனில் 'அதிக அளவில் அப்யாஸத்தினுலே இயல்பாக இருக்கின்ற ஸமமாயுள்ள ப்ராணகதிக்கு விச்சேதமுண்டாகும்' என்பதால் என்க.

அந்த அப்யாஸத்தையே ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லுகிருர்—

''பாஹ்யாஹ்ப்யந்தரஸ்தம்பவ்ருத்திர் தேஶகாலஸம்க்யாபி:
பரித்ருஷ்டோ தீர்க: ஸூக்ஷ்ம:'' இதி.

''—வெளியே போகின்ற ஶ்வாஸம் (ரேசகம்), உள்ளே செல்லுகின்ற ஶ்வாஸம் (பூரகம்), நிறுத்தப் பெறுகின்ற ஶ்வாஸம் (கும்பகம்) இவைகளை தேசக் (இடம்) கணக்குகளினுலும், காலக் கணக்குகளினுலும். கவனித்துப் பார்த்து வருதலினுல், ஶ்வாஸம் நீண்டதாகவும், ஸூக்ஷ்மமாகவும் ஆகுதல் இயலும்'' என்றவாறு.

மற்றும், ரேசகம் என்பது பாஹ்யவ்யாபாரம். பூரகமென்பது ஆந்தரவ்யாபாரம், கும்பகமென்பது ஸ்தம்பவ்யாபாரம். அவைகள் ஒவ்வொன்றும் தேசம் முதலியவைகளினுல் பரீக்ஷை செய்யப் பெற வேண்டும். அது எவ்வாறெனில்—இயல்பாய் இருக்கின்ற ரேசகத்தில் ஹ்ருதயத்திலிருந்து வெளியே வந்து நாசியின் எதிரில் பன்னிரண்டு அங்குலம் வரையில், ஶ்வாஸமானது முடிவடைகின்றது. அப்யாஸத்தினுலோ வெனில்! முறையே நாபியிலிருந்தோ, ஆதாரத்திலிருந்தோ வாயுவானது வெளியே வருவதாகும். அது இருபத்துநான்கு அங்குலம் வரையிலாவது, முப்பத்தாறு அங்குலம் வரையிலாவது முடிவையடைவதுமாகும்.

இவ்விடத்தில் முயற்சியின் அதிஶயம் இருக்கும் பொழுது ரேசகமானது நாபி முதலிய ப்ரதேஶங்களுடைய கலக்கத்தினுல் அந்த: (உள்ளே) உறுதி செய்ய முடியும். வெளியிலும் ஸூக்ஷ்மமாயுள்ள ஆகாசத்தைத் தரித்து அதனுடைய சாலநத்தினுல் உறுதி செய்யவேண்டும். இது **தேஶபரீக்ஷா** என்பதாகும்.

ரேசகம் செய்யும் பொழுது ப்ரணவத்தினுடைய ஆவ்ருத்திகள் பத்து, இருபது, முப்பது என்பன போன்றவைகளினுல் செய்யப் பெறுவது **காலபரீக்ஷா** என்பதாகும்.

இந்த மாஸத்தில் தினந்தோறும் பத்து ரேசகங்கள் செய்யப் பெற்றன. வருகின்ற மாஸத்தில் இருபது செய்ய வேண்டும், அதற்கு அடுத்த மாஸத்திலே முப்பது செய்ய வேண்டும் என்பன போன்றவைகள் **ஸங்க்யா (எண்ணிக்கை)** பரீக்ஷா என்பதாகும். இவ்வாறே பூரகத்திற்கும் இவைகளைக் கண்டு கொள்ளவேண்டும்.

இருந்தாலும், கும்பகத்தில் தேஶத்தினுடைய வ்யாப்தியானது அறிய முடியவில்லை. ஆயினும் காலம், ஸங்க்யை என்ற இவைகளுடைய வ்யாப்தியானது உணர்ந்து கொள்ளவும் முடியும். எவ்வாறு கனமாயுள்ள பஞ்சுப் பொதியானது விரிவடையச்

செய்யும் பொழுது, அது நீளமாகவும், தனித் தனியாகவும் ஸூக்ஷ்மமாகவும், இருக்கின்றதோ, அவ்வாறு ப்ராணனும் தேசம், காலம், ஸங்க்யை இவைகளுடைய ஆதிக்யத்தினுல் அப்யாஸம் செய்யும்பொழுது அது நீண்டதாகவும், புலனுகாது நுண்ணியதாகவும் தோன்றுவதாகும்.

ரேசகம் முதலிய மூன்றுகளைக்காட்டிலும் வேறு ஒரு வழியை ஸூத்ரமாகச் செய்யப் பெறுகின்றது—

''பாஹ்யாப்யந்தரவிஷயாநபேக்ஷீ சதுர்த்த:'' இதி.

''—பாஹ்யாப்யந்தர (வெளி, உள்) விஷயங்களை அபேக்ஷிக்காதது நான்காவதாகும்.—'' (அதாவது ரேசகம், கும்பகம் இவைகள் நீங்கியது) வெளிவிஷயம், உள்விஷயமின்றி தோன்றுகின்றது என்பது. இயன்ற அளவு வாயுக்கள் யாவையும் விரேசனம் செய்து, பிறகு செய்யப் பெறுவது பஹிஷ்கும்பகமாகும். (வெளிப்படையான கும்பகம்) இயன்ற அளவு வாயுவை நிரப்பிப் பிறகு செய்யப் பெறுவது அந்த:கும்பகம் (உள்ளேயுள்ள கும்பகம்) எனப் பெறும்,

இவ்வாறு ரேசகம், பூரகம் இவையிரண்டையும் ஒதுக்கி, கேவல கும்பகமானது அப்யாஸம் செய்பவனுக்கு முன் சொல்லிய மூன்றைக்காட்டிலும் நான்காவதும் இருக்கின்றது என்பதாகும். இதுவும் நித்ரை, சோம்பர் முதலிய வலியதான தோஷத்தோடு கூடியவர்களுக்கு ரேசகம் முதலிய மூன்றும் சொல்லப் பெற்றது, தோஷமில்லாதவர்களுக்கு நான்காவது என்பதையும் உணர்ந்து கொள்ள வேண்டும்.

இப்பொழுது ப்ராணுயாமத்தினுடைய பயனை ஸூத்ரமாகச் செய்கிருர்—

''தத: க்ஷீயதே ப்ரகாஶாவரணம்'' இதி.

''—அதனுல் (கேவல கும்பகத்தினுல்) ப்ரகாஶத்தை (புத்தியின் தெளிவை) மறைக்கின்ற திரையானது வரவர நீங்குகின்றது'' என்றவாறு.

ஸத்வத்தைத் தழுவிய ப்ரகாஶத்திற்கு ஆவரணமானது தமஸாகும். அது நித்ரை, ஆலஸ்யம் முதலியவை தோன்றுவதற்குக் காரணமாயிருப்பது. அதனுடைய நாஶமானது உண்டாகின்றது

அவ்வாறு நாஸமுண்டாகும் பொழுது வேறு பயன்களும் தோன்றுமென்பதையும் ஸூத்ரத்தினால் தெரிவிக்கிறார்—

"தாரணாஸு ச யோக்யதா மநஸ:" இதி

"—ப்ராணாயாமத்தினால் ஆவரணம் நீங்கியதும், மனத்திற்குத் தாரணைகளில் (அதாவது ப்ரத்யாஹாரம், தாரணை, த்யாநம், ஸமாதி. இவைகளில்.) தகைமை யுண்டாகின்றது" என்பது.

ஆதாரம், நாபிசக்ரம், ஹ்ருதயம், ப்ரூமத்யம் (புருவத்தின் நடு) ப்ரஹ்மரந்த்ரம் என்ற இருப்பிடங்களில் சித்தத்தினுடைய ஸ்தாபநமானது (வைப்பு) தாரணை எனச் சொல்லப் பெறும். ஏனெனில்—

"தேசபந்த : சித்தஸ்ய தாரணா" இதி

"—சரீரத்திற்குள்ளும், வெளியிலுமுள்ள இடத்தில் நிலைத்துள்ள சித்தத்தினுடைய இருப்பானது தாரணை எனச் சொல்லப் பெற்றதால் என்க.

ஶ்ருதியும்—

"மந: ஸம்கல்பகம் த்யாத்வா ஸம்க்ஷிப்யாத்மநி புத்திமாந்.
தாரயித்வா ததாத்மாநம் தாரணா பரிகீர்திதா" இதி.

"—விவேகியாகிய யோகியானவன், ஸம்கல்பவடிவாயமைந்த மனம், அதனுடைய வ்யாபாரங்கள் முதலியவற்றை ஆத்மாவினிடத்தில் ஸம்கோசம் செய்து, அவ்விதமே நிர்விகல்பமான மனதில் அத்தகைய பரமாத்மனை தாரணம் செய்வதையே தாரணா எனச் சொல்லப் பெறும்" என்றவாறு.

மற்றும், ப்ராணாயாமத்தினால் ரஜோகுண கார்யமாயுள்ள சஞ்சலத்தன்மையிலிருந்தும், தமோகுணகார்யமாயுள்ள ஆலஸ்யத்தன்மையிலிருந்தும் தடுக்கப் பெற்ற மனமானது, அந்த தாரணையில் தகுதியுள்ளதாக இருக்கின்றது. லகுயோகவாஸிஷ்டத்தில்—

"ப்ராணாயாமத்ருடாப்யாஸைர்யுக்த்யா ச குருதத்தயா" இதி.

"—ப்ராணாயாமத்தினுடைய உறுதியான அப்யாஸத்தினாலும், குருவினால் கொடுக்கப் பெற்ற யுக்தினாலும்" எனச் சொல்லியவிடத்திலுள்ள யுக்திசப்தத்தினால் யோகிஜனங்களிடையே பிரஸித்தமாயுள்ள ஶிரோரூபமான மேருசாலநம், நாவின் நுனியினால் கண்டிகையின் ப்ரமணம், நாபிசக்ரம், ஹ்ருதயம் இவைகளில் ஜ்யோதிஸ்ஸின் த்யாநம், மறத்தலைக் கொடுக்கக்

கூடிய ஓஷதிஸேவை போன்ற மற்றவைகளையும் க்ரஹித்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு அத்யாத்மவித்தை, ஸாதுக்களுடைய சேர்க்கை, வாஸனாக்ஷயம், ப்ராணநிரோதம், என்ற இவைகள் யாவும் சித்த நாஶத்திற்குரிய உபாயங்களாகும் எனக் காண்பிக்கப் பெற்றன.

பிறகு, அதற்கு உபாயமாயமைந்துள்ள ஸமாதியைச் சொல்லுவோம்—ஐந்து பூமிகைகளோடு கூடிய சித்தத்திற்கு மூன்று பூமிகைகளுடைய த்யாகத்தினால், எஞ்சியுள்ள இரண்டு பூமிகைகளே ஸமாதியாகும். இத்தகைய பூமிகளும் யோகபாஷ்யம் செய்தவரால் காண்பிக்கப் பெற்றுள்ளன—

**"க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்ரம்,**
**நிருத்தம் இதி பஞ்ச சித்தஸ்ய பூமய:" இதி.**

"—**க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்ரம், நிருத்தம்** என இந்த ஐந்தும் **சித்தத்தினுடைய பூமிகைகளாகும்.**" என்றவாறு

இவ்விடத்தில் **க்ஷிப்தமென்பது**— ஆஸுரஸம்பத், லோகம், ஶாஸ்த்ரம், தேஹம் என்ற இவைகளுடைய வாஸனைகளில் இருக்கின்ற சித்தத்தின் நிலையாகும். **மூடமென்பது**—நித்ரை, ஆலஸ்யம், இவைகளால் விழுங்கப் பெற்ற சித்தத்தின் நிலையாகும். **விக்ஷிப்தமென்பது**—சில ஸமயம் த்யானத்தோடு கூடியது. இது க்ஷிப்தத்தைக் காட்டிலும் விசேஷமாயிருப்பது. **ஏகாக்ரமென்பது**—ஒரே நிலையிலுள்ள சித்தத்தின் நிலையாகும். **நிருத்தமென்பது**—ஒரு வஸ்துவைப் பற்றியுள்ள சித்தத்தின் உறுதியான நிலையாகும்.

அவ்விடத்தில் க்ஷிப்தம், மூடம் இவையிரண்டுக்கும் ஸமாதி என்றதே இல்லை. விக்ஷிப்தமாயுள்ள மனத்தில் விக்ஷேபத்தினால் விடப் பெற்ற ஸமாதியானது யோகபக்ஷத்தில் (கொள்கை) இருக்க மாட்டாது, அது விக்ஷேபத்தில் அடங்கியதாயுள்ளது, அக்நியில் போடப் பெற்ற விதை போல உடனே நாசத்தையடைகின்றது.

---

(1) ஐந்து பூமிகைகளுடைய விளக்கம்—

(1) **க்ஷப்தம்** = சஞ்சலமாயுள்ள நிலை (2) மூடம் = ஒன்றுமறியாத நிலை, (3) **விக்ஷிப்தம்** = சிறிதுகாலம் சஞ்சலமின்மையும், வெகுகாலம் சஞ்சலமின்மையும் இருக்கின்ற நிலை (4) **ஏகாக்ரம்** = ஒரே வஸ்துவை யவலம்பித்துள்ள நிலை (5) **நிருத்தம்** = விருத்தி சூந்யமான நிலை. ஆனால் விருத்தி பீஜமாகிய ஸம்ஸ்காரமாத்திரமாயுள்ள நிலைமை முதல் மூன்று படிகளில் யோகாப்யாஸம் முடியாது, நான்கு, ஐந்து படிகளில் கூடும்,

எவனொருவன் ஏகாக்ரமாயுள்ள மனதில் தோன்றிய பொருளை ப்ரகாஶிக்கச் செய்கின்றானோ, க்லேசங்களை குறையச் செய்கின்றானோ, கர்மபந்தங்களைத் தளர்த்துகின்றானோ, நிரோதத்தை (தடுத்தல்) எதிர் நோக்கியுள்ளானோ. அவன் ஸம்ப்ரஜ்ஞாதயோகி எனச் சொல்லப்பெறுவன். எல்லா வ்ருத்திகளுடைய நிரோதத்திலோ வெனில்! அஸம்ப்ரஜஞாதஸமாதி எனச் சொல்லுவர்.

அவ்விடத்தில் ஸம்ப்ரஜ்ஞாதஸமாதியைக் குறித்த ஏகாக்ரதையானது, ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லப் பெறுகின்றது—

"சாந்தோதிதௌ துல்யப்ரத்யயௌ சித்தஸ்ய ஏகாக்ரதா பரிணாம:"— இதி.

"—பிறகு (விக்ஷேபவ்ருத்தி குறைந்த பிறகு) மறுபடியும் சித்தத்தின் சென்ற விருத்தியும், நிகழும் விருத்தியும், ஒரே ரூபமாக இருந்தால் மனம் ஏகாக்ரநிலையைப் பெறும்" என்றவாறு.

சாந்த மென்பது = கடந்தது. உதிதமென்பது = நடப்பது. (வர்த்தமானம்) ப்ரத்யயமென்பது = சித்தத்தினுடைய வ்ருத்தியாகும். சென்றதாயுள்ள ப்ரத்யயமானது எந்த பதார்த்தத்தை எடுக்கின்றதோ, அதையே உதிதமானது எடுக்குமே யாகில் அப்பொழுது அவையிரண்டும் ஸமாநங்களாகும். அத்தகைய சித்தத்தினுடைய பரிணாமமே ஏகாக்ரதை எனச் சொல்லப் பெறுவது.

இப்பொழுது ஏகாக்ரதையின் வளர்ச்சி லக்ஷணமாயமைந்த ஸமாதியை ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லுகிறார்—

"ஸர்வார்த்ததைகாக்ரதயோ: க்ஷயோதயௌ சித்தஸ்ய ஸமாதி பரிணாம:" இதி.

"—எல்லா வஸ்துக்களையும் பற்றிச் செல்லும் மனத்தின் தன்மை குறையவும், ஐகாக்ரியம் (ஏகாக்ரத்தன்மை) வளர்ச்சியாகவும் மனம் ஸமாதி நிலையைப் பெறுகின்றது" என்றவாறு.

ரஜோகுணத்தினால் கலக்கமடைந்த சித்தமானது, முறையே எல்லா பதார்த்தங்களையும் எடுத்துக் கொள்ளுகின்றது. அந்த ரஜோகுணத்தினுடைய நிரோதத்தின் பொருட்டு செய்யப் பெறுகின்ற யோகியினுடைய முயற்சியின் விசேஷத்தினால், ஒவ்வொரு நாளும் எல்லா வஸ்துவின் தன்மையானது க்ஷயத்தையுடைகின்றது.

அந்த ஸமாதியினுடைய எண்வகையான அங்கங்களில், யமம், நியமம், ஆஸநம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம் என்ற ஐந்தும் வெளியேயுள்ள அங்கங்கள், அவ்விடத்திலுள்ள யமம் என்றவைகளை ஸூத்ரத்தினால் சொல்லுகிறார்—

"அஹிம்ஸா ஸத்யாஸ்தேயப்ரஹ்மசர்யாபரிக்ரஹா: யமா:" இதி.

"—அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம், ப்ரஹ்மசர்யம், அபரிக்ரஹம் என்ற இவைகள் யமமெனப் பெறும். அதாவது ஹிம்ஸை முதலியவைகளால் தடுக்கப் பெற்ற தர்மங்களிலிருந்து யோகியை அடக்குகின்ற காரணத்தால் யமங்கள் என இவை சொல்லப் பெற்றுள்ளன.

---

அஹிம்ஸை—மனம், வாக்கு, காயம் இவைகளால் எவ்விதத்தாலும், எக்காலத்திலும், எப்பிராணிக்கும் ஹிம்ஸை செய்யாதிருத்தல். ஸத்யம் முதலான மற்றவை அஹிம்ஸை என்ற தர்மத்தைத் சுத்தம் செய்வதற்கும், நிறைவுறச் செய்வதற்கும் ஏற்பட்ட ஸாதநங்களாகும். அஹிம்ஸை என்ற தர்மத்தைப் பரிபாலநம் செய்யாமல், மற்றைய தர்மங்களை அநுஷ்டித்தல் பிரயோஜநமற்றதாகி விடும். அஹிம்ஸை என்ற தர்மம் மற்றைய தர்மங்களின் அநுஷ்டாநமின்றி பூர்த்தி பெறாதாகையால் அவைகள் முக்கிய ஸாதநங்களுமாகும்.

ஸத்தியம்—பிறர் நன்மையின் பொருட்டு, ப்ராமாணங்களால் க்ரஹித்து மனத்தால் நினைத்தபடி வாக்கினால் சொல்லுதல். இதைக் கேட்கின்றவன் உள்ளவாறு க்ரஹிக்கும்படியாகச் சொல்ல வேண்டும். வஞ்சகமும், கபடமுள்ளதாயும், கேட்கின்றவன் உள்ளவாறு அறியாமலிருக்கும் படியாகவும் மொழிதல் ஸத்யமாகாது. உண்மையயிருப்பினும் ப்ராணிகளுக்கு நன்மை பயக்கக் கூடிய மொழி மாத்திரம் ஸத்யமாகும். உண்மையாயிருப்பினும் தீமை பயக்கக் கூடியவை அஸத்தியமேயாகும்.

மநுவின் வசனமும் இதுவே யாகும்—

"ஸ்த்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸ்த்யமப்ரியம்.
ப்ரியம் ச நாந்ருதம் ப்ரூயாத் ஏஷ தர்ம: ஸ்நாதந:" இதி.

இதன் பொருள் —"உண்மை பேசு. அது பிரியமாக இருத்தல் வேண்டும். உண்மையான வார்த்தையாயினும், பிரியமின்றேல் இதைச் சொல்லுதலைத் தவிர். பிரியமானதென்று பொய்யைப் பேசாதே. இதுவே ஶாச்வதமான தர்மமாகும்" என்பது.

நியமங்களை ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லுகிறார்—

"ஶௌசஸம்தோஷதப:ஸ்வாத்யாயேச்வரப்ரணிதாநாநி நியமா:" இதி.[1]

"—பிறவிக்குக் காரணமாயுள்ள காம்ய தர்மங்களிலிருந்து மனதைத் திருப்பி, மோக்ஷத்திற்குக் காரணமாயுள்ள நிஷ்காம தர்மத்தில் நியமநம் செய்கின்ற காரணத்தால் (பிரேரணை) அவை நியமங்கள் எனச் சொல்லப் பெற்றன." என்றவாறு.

---

அஸ்தேயம்—களவின்மை—

பலாத்காரமாகவாவது, ரஹஸ்யமாகவாவது பிறர் பொருளை அபஹரிக்காமல் இருத்தலும், அத்தன்மையான சிந்தனையைத் தவிர்த்தலும் என்ற இவை களவின்மையாம்.

இந்த்ரியநிக்ரஹம் அல்லது ப்ரஹ்மசர்யம்—

ப்ரஹ்ம—வேதத்தை யுத்தேசித்து, சர்யம்—நியமங்களை அநுஷ்டாநம் செய்வது. வேதாத்யயநம் செய்தலுக்கு இந்த்ரியநிக்ரஹம் முக்கியமானதால் ப்ரஹ்மசர்யம் என்ற பெயர் இந்த்ரிய நிக்ரஹத்திற்குத் தோன்றியதாகும்.

அபரிக்ரஹம் அல்லது திரவியாபேக்ஷை இன்மை—

சரீரயாத்திரைக்கு இன்றியமையாதவைகளைத் தவிர, மற்ற விஷயங்களில் ப்ரவிருத்தியில்லாமல் இருத்தல் என்பது இதன் கருத்து. வேண்டாத சொத்தை விரும்பி அவச்யமின்றி ஸம்பாதித்தல், பிறரைக் கேட்டுப் பெறுதல், அதைப் பேணுதல், அதற்காகப் பிறரை ஹிம்ஸித்தல் இவைகளைத் தவிர்க்க வேண்டும்.

(1) ஶௌசம் பரிசுத்தம் செய்து கொள்ளுதல், ஸம்தோஷம், தபஸ், த்வந்த்வங்களைப் பொறுத்தல், ஸ்வாத்யாயம்—வேதம் முதலிய சாஸ்திரங்களை அப்யாஸம் செய்தல், ஈச்வரப்ரணிதாநம்—எல்லாக் கர்மங்களையும் ஈச்வனிடம் அர்பணம் செய்தல் என்பன யமங்கள் எனப் பெறும்.

பரிசுத்தம் இருவகைத்து—ஒன்று பாஹ்யசௌசம், ஜலம் முதலியவைகளால் ஸ்தூல சரீரத்தைச் சுத்தி செய்தல். இரண்டாவது ஆந்தர சௌசம்—மைத்ரீ, முதிதா முதலிய ஸத்பாவனைகளைக் கொண்டு மனத்திலேயுள்ள மலத்தை நீக்குதல்.

இந்த மைத்ரீ, கருணை முதலியவைகளுடைய இலக்கணங்கள் யோக ஸூத்ரம் முதல் பாதம் 33வது ஸூத்திரத்தில் விஸ்தாரமாகச் சொல்லப் பெற்றுள்ளன. அவைகளை அங்கு கண்டு தெளிதற்பாலது.

மற்றும் யமம், நியமம் இவைகளுடைய அநுஷ்டாநத்தில் தோன்றும் வைலக்ஷண்யமும் ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது.—

''யமாந் குர்வீத ஸததம் ந குர்யாந் நியமாந் புத:.
யமாந் பதத்யகுர்வாணோ நியமாந் கேவலாந் பஜந்.''

''பததி நியமவாந் யமேஷ்வஸக்தோ
ந து யமவாந் நியமாலஸோடவஸீதேத்.
இதி யமநியமௌ ஸமீக்ஷ்ய புத்யா
யமபஹுலேஷ்வநுஸம்தநீத புத்திம்'' இதி.

''—பண்டிதன் எப்பொழுதும் யமங்களைச் செய்ய வேண்டும். நியமங்களைச் செய்வது கூடாது. யமங்களைச் செய்யாதவன், கேவலம் நியமங்களை செய்வானேயாகில் அவன் தனது நிலையிலிருந்து நழுவியவன்''

''—யமங்களில் பற்றில்லாது நியமங்களைச் செய்பவன் நழுவுகின்றான். நியமத்தில் பற்றற்று யமத்தைச் செய்கின்றவனோவெனில் அழிவதில்லை. இவ்வாறு யமம், நியமம் இவ்விரண்டையும் நன்கு புத்தியினால் பரிசீலநம் செய்து, பெரும்பாலும் யமத்தையே அநுஸம்தாநம் செய்வதற்கு புத்தியைத் தூண்ட வேண்டும்'' என்றவாறு.

இப்பொழுது யமநியமங்களுடைய பலன்களை ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லுகிறார்—

''அஹிம்ஸாப்ரதிஷ்டாயாம் தத்ஸம்நிதௌ வைரத்யாக:'' இதி.

''—அஹிம்ஸை நிலைத்துள்ள பொழுது அந்த யோகியினுடைய முன்னிலையில் பகைமை போய் விடும்'' என்றவாறு.

அதாவது அந்த தர்மத்தை அநுஷ்டிக்கின்றவன் முன்னிலையில், ஒன்றுக்கொன்று பகைமை பாராட்டிக் கொண்டுள்ள ஜீவராசிகளும் கூட பகைமையை விட்டு ஒன்றுக்கொன்று அன்பு பாராட்டுமென்பது. உதாஹரணம்— பசு, புலி, பாம்பு, கீரி, எலி, பூனை முதலியனவாம்.

'' ஸத்யுப்ரதிஷ்டாயாம் க்ரியாபலாஶ்ரயத்வம் '' இதி.

''—ஸத்யவ்ரதம் நிலேத்துள்ள பொழுது யோகியினுடைய வார்த்தையானது கர்மபலத்தைத் தோன்றச் செய்யும் தன்மையை யுடையதாயிருக்கின்றது.

அதாவது ஸத்யம் என்ற தர்மம் கைவரப்பெற்றுள்ள பொழுது, யோகியினுடைய சொற்கள் பலிக்கக் கூடியதாயமை வனவாம். அவன் விளையாட்டாகச் சொன்னுலும் அது பலிக்கும். நன்மை, தீமை என்ற இருவகையாயுள்ள பலன்களை அளிக்கு மென்பது. அவனுடைய வார்த்தை தவருது எனவுமாம்.

''அஸ்தேய ப்ரதிஷ்டாயாம் ஸர்வரத்நோபஸ்தாநம்'' இதி.

''—களவின்மையானது கைவரப் பெற்றுள்ள பொழுது, எல்லாவிடத்திலும், எல்லாக் காலத்திலும் ரத்நனங்கள் முதலிய எல்லாப் பொருள்களும் அவனை வந்தடையும்.

''ப்ரஹ்மசர்யப்ரதிஷ்டாயாம் வீர்யலாப'': இதி.

''—ப்ரஹ்மசர்யம் கைவரப் பெற்றுள்ள பொழுது வீர்யலாப முண்டாகும்'' என்றவாறு.

அதாவது—வீர்யத்தை வ்ரயம் பண்ணுமல் உள்ளே அடக்கும் பொழுது மனத்தெளிவு, மதிநுட்பம், தைர்யம், பலம், ஶௌர்யம் என்ற இவையுண்டாகும்

''அபரிக்ரஹஸ்தைர்யே ஜந்மகதந்தாஸம்போத:
(ஜநநாதிபயாபாவ:)'' இதி.

''—அபரிக்ரஹம் கைவரப்பெற்ற பொழுது பிறப்பின் காரணம் தெளிவு பெறும்'' என்றவாறு.

அதாவது—பிறரிடம் யாதொன்றும் வாங்காமலும், விரும்பா மலும் இருத்தல் கைவரப்பெற்ருல், யோகியானவன் ப்ருகிருத ஜந்மம் தோன்றுவதற்கு, ஸங்கத்தினுல் ப்ரதிக்ரஹம் செய்தது காரணமென்றும், முன் ஜன்மங்களில் தான் செய்த ப்ரதிக்ரஹ கர்மங்கள் இன்னவை யென்றும், இவை இனி எத்தனை ஜந்மங்களை யுண்டுப்பண்ணு மென்றும், தான் கைவல்யம் பெறும் வரை ஏற்படும் ஜந்மங்கள் இன்னவை யென்றும் அறிவான்.

பிறருடைய உதவியை நாடான் என்பதினுல், தான் தனித்து நிற்கும் தகைமையை யுடையவனுவான். பிறவியைத் தோற்று

விக்கின்ற குணத்தை இனிச் செய்யான், அதனுல் அவன் மனம் தூய்மை பெறுகின்றது. அந்நிலையின் பயனுய்ப் பிறப்பு இன்ன தென்பதையும், அதன் வழியையும் (மக்கள், தேவர், நரகர் முதலியவைகள்) பிறப்பின் காரணங்களான க்லேசங்களையும், கர்மங்களையும், அதன் பயனுன துக்கத்தையும், முடிவான புருஷ ஸாக்ஷாத்காரத்தையும் குருவினுடைய உபதேசத்தால் அறிகின்ருன். மற்றும், பிறவி முதலியவைகளால் தோன்றுகின்ற அச்சமும் அகன்று விடும்.

"ஶௌசாத் ஸ்வாங்கஜுகுப்ஸா பரைரஸம்ஸர்க:" இதி.

"—ஶௌசம் (சுத்தம்) கைவரப் பெற்றபொழுது, தனது அவயவங்களில் அருவருப்பும், பிறருடன் சேராமலிருத்தலும் தோன்றுகின்றன:" என்றவாறு.

இனி நியமங்களின் ஸித்திகளைச் சொல்லுகிருர்— தனது ஶரீரத்தை அடிக்கடி உள்ளும் புறமும் சுத்திசெய்து வரவே, அதன் ஆராய்ச்சி தோன்றுகின்றது. அதன் தன்மை அஶுத்தமென உணருகின்ருன். அதனுல் ஶரீரத்தின் மேலுள்ள அபிமானம் விலகுகின்றது. பிறருடைய ஶரீரங்களைப் பற்றியும் அருவருப்புத் தோன்றுகின்றது.

"ஸத்வஶுத்திஸௌமநஸ்யைகாக்ர்ய: இந்த்ரியாத்மதர்சந-
யோக்யத்வாநி ச" இதி.

—"அதனுல் (ஶௌசத்தின் ஸித்தியினுல்) மனம் ஶுத்தம் பெறுதலும், அதனுல் மைத்ரபாவமும், அதனுல் மனம் ஒருமைப் படுத்தலும், அதனுல் இந்த்ரிய ஜயமும், முடிவில் ஆத்மஸாக்ஷாத்காரம் பெறுதலுக்குரிய தகைமையை அடைதலும் ஏற்படுகின்றன என்பது.

"ஸந்தோஷாத் அநுத்தம: ஸுகலாப:" இதி.

"—ஸம்தோஷம் கைவரப் பெற்ற பொழுது உயர்நலமுள்ள ஸுகம் தோன்றுவதாகும்.

அதாவது—எல்லா விஷயஸுகங்களையும் அநுபவித்தலால் தோன்றக் கூடிய ஸம்தோஷத்தைப் பார்க்கிலும், அவைகளில் விருப்பு, வெறுப்பு என்ற பற்றில்லாமல் இருத்தலினுல் தோன்றும் மனத்திருப்தி மிகவும் உயர்நலமுடையது. தைத்ரீயோபநிஷத்தில் ஆநந்தமீமாம்ஸையில் இந்தப் பற்றில்லாமை அகாம

ஹதத்வம் நடைமுறையில் ப்ரஹ்மாநந்தத்தைக் கொடுக்கும் என்ற உபதேசம் காணப் பெறுகின்றது.

''காயேந்திரியுபுத்தி ஶுத்திரஶுத்தி க்ஷயாத் தபஸ:'' இதி.

''—தபஸிலிருந்து தமோகுணகார்யமான ஆவரணம் முதலியன தேய்ந்தும், ஶரீரஸித்திகளாகிய அணிமாதிகளும், இந்த்ரியஸித்திகளாகிய தூரஶ்ரவணம், தூரதர்ஶநம் முதலியனவும் தோன்றுகின்றன'' என்றவாறு.

அதாவது தபஸினுல் அஶுத்தம் அழிகின்றது. அதன் பயனுக ஶரீரத்திற்கும், இந்த்ரியங்களுக்கும் ஸித்திகள் தோன்றுகின்றன என்பது.

(1) ஸித்திகள் என்றது—அணிமா முதலியவைகளான எட்டு ஸித்திகளும், இந்திரியங்களுக்கு லோகாந்தரத்திலும், தேசாந்தரத்திலும், காலாந்தரத்திலும், நேரிடுகின்ற விஷயங்களைப் பார்த்தல், கேட்டல் முதலிய ஸித்திகளும் உண்டாகும். என்பது.

'' ஸ்வாத்யாதிஷ்டதேவதாஸம்ப்ரயோக:'' இதி.

''—ஸ்வாத்யாயம் கைவரப்பெற்ற பொழுது, யஜநம் செய்கின்ற தேவதையினுடைய ஸாந்நித்யம் உண்டாகின்றது.

அதாவது மந்த்ரஜபத்தினுல் மந்த்ரத்திற்கு அதிஷ்டாநமாயுள்ள தேவர்கள், மந்த்ரத்தைக் கண்டறிந்த மஹர்ஷிகள், ஸித்தபுருஷர்கள் இவர்கள் இவனுக்கு தர்சநத்தைக் கொடுத்து அநுக்ரஹம் செய்கின்றனர் என்பது.

'' ஸமாதிஸித்திரீஶ்வரப்ரணிதாநாத்'' இதி.

''—ஈஶ்வரனுக்குத் தன்னை அர்பணம் செய்வதால் ஸமாதி ஸித்தியானது கைவரப் பெறுகின்றது'' என்றவாறு.

---

அணிமா என்றது—

(1) அணிமா—அணுவைப் போலாதால். (2) மஹிமா—மிகவும் பருத்தல். 3) கரிமா—மிக கனத்தல். (4) லகிமா—மிக லேசாயிருத்தல், (5) பராப்தி—வேண்டுவன வெல்லாமடைதல். (6) ப்ராகாம்யம்—குறைவின்றி இருத்தல். (7) ஈசித்வம் — யாவர்க்கும் தேவனுகுதல். (8) வசித்வம் — யாவரும் வணங்க நிற்றல்.

அதாவது ஈஸ்வரனைத் த்யாநம் செய்வதால் ஸமாதியானது நிறைவுற்றதா யிருக்கின்றது. இவ்வாறு யோகியினுடைய ப்ரஜ்ஞை, முடிவான விசாலத்தை யடைகின்றது. காலதேசங்களின் வரம்பின்றி எல்லாவற்றையும் உணர்ந்துகொள்ளும் தகைமையை அவன் பெறுகின்றான்.

இவ்விடத்தில் இது கவனிக்கத்தக்கது—ஈஸ்வரனுடைய த்யாநத்தால் ஸமாதி பூர்ணநிலையையடைகின்றது என்பதால், யமம் முதலியவை வேண்டுவதில்லை எனப் பொருளில்லை. யமம் முதலியவை மாத்திரம் இருந்து ஈஸ்வரத்யாநம் இல்லாவிடில் ஸித்தியும் உண்டாகாது என்பது தாத்பர்யம்.

இவ்வாறு, யமநியமங்களுடைய பலன்கள் சொல்லப் பெற்றன. ஆஸநம், ப்ராணயாமம் இவ்விரண்டும் முன்பு சொல்லப் பெற்றுள்ளன. இப்பொழுது ப்ரதயாஹாரத்தை ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லுகிறார்—

"ஸ்வவிஷயாஸம்ப்ரயோகே சித்தஸ்வரூபாநுகார இவேந்த்ரியாணாம் ப்ரத்யாஹார:" இதி.

"—ப்ரத்யாஹாரமென்பது இந்த்ரியங்கள் விஷயங்களோடு தொடர்பில்லாமல், சித்தத்தினுடைய தன்மையை அநுஸரிப்பது போல இருத்தலாம்" என்றவாறு.

அதாவது விஷயங்கள் என்றது—சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம் கந்தம் என்ற இவைகள். அவைகளிலிருந்து திருப்பப் பெற்ற செவி முதலியவைகள் சித்தத்தின் ரூபத்தைத் தொடர்ந்துள்ளன போல இருப்பன என்பது.

இதற்கு ஶ்ருதியும்—

"ஶப்தாதி விஷயாந் பஞ்ச மநஶ்சைவாதிசஞ்சலம்.
சிந்தயேதாத்மநோரஶ்மீந் ப்ரத்யாஹார: ஸ உச்யதே" இதி.

"—ஶப்தம் முதலிய விஷயங்கள் ஐந்தும், ஆறுவதான மனமுமாகிய இவைகள் மிகவும் சஞ்சலத்தன்மை வாய்ந்தவை, ஆத்மனுடைய ரச்மிகளைக் கொண்டு சிந்தனை செய்வது எதுவோ, அதுவே ப்ரத்யாஹாரம் எனச் சொல்லப் பெறும்" என்றவாறு.

எந்தச் செவி முதலியவைகளுக்கு ஶப்தம் முதலியவைகள் விஷயங்களாக இருக்கின்றனவோ, அவை ஶ்ரோத்ரம் முதலிய

ஐந்து எனச் சொல்லப் பெறும். மனம் ஒன்று ஆறு. எனவே இவைகளுக்கு ஆத்மவடிவமல்லாத ஶப்தங்களுடைய நிலையிலிருந்து திருப்புவது என்பது யாதொன்று உண்டோ, அது ஆத்மனுடைய ரஶ்மியினால் சிந்தனை செய்யப் பெறுவதே ப்ரத்யாஹாரம் எனச் சொல்லப்பெறும்.

மற்றும், ப்ராணாயாமத்தின் அப்யாஸத்தினால் ஆவரணம் பொய்த்துப் போய், மனம் வைராக்யம் பெற்று, புருஷஸாக்ஷாத்காரத்தைக் குறித்து வளர்ச்சியுள்ளதாக அமைகின்றது. அந்நிலையில் இந்த்ரியங்கள் விஷயங்களோடு சேராமல் மனத்தையே தொடர்கின்றன. இதுவே ப்ரத்யாஹாரமென்பது.

ப்ரத்யாஹாரம் என்ற சொல்லின் விளக்கம் வருமாறு— ப்ரதி = எதிரிடையாக ஆஹாரம் = இழுத்துக்கொள்ளுதல், அதாவது இந்த்ரியங்களை விஷயங்களுடைய தொடர்பிலிருந்து பெயர்த்து, அதற்கு எதிரிடையாக மனத்தோடு பொருந்தும்படி செய்தல் என்பது.

இப்பொழுது ப்ரத்யாஹாரத்தினுடைய பலன் ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லப் பெறுகின்றது—

"தத: பரமா வச்யதேந்த்ரியாணாம்" இதி

"—அதனால் (ப்ரத்யாஹாரத்தினால்) இந்த்ரியங்கள் பூரணமாக வசப்பட்டு இருக்கின்ற தன்மை தோன்றுவதாகும்." என்றவாறு.

இப்பொழுது தாரணை, த்யாநம், ஸமாதி என்றவைகளுடைய இலக்கணம் மூன்று ஸூத்ரங்களினால் சொல்லப் பெறுகின்றது—

"தேசபந்த: சித்தஸ்ய தாரணா"—இதி,

—மூலாதாரம், ஸ்வாதிஷ்டாநம், மணிபூரகம், (நாபிசக்ரம்) ஹ்ருதய புண்டரீகம், ப்ரஹ்மரந்த்ரம், புருவத்தின் நடு என்ற சரீரத்திலுள்ள இவை போன்ற இடங்களிலாவது, அல்லது வெளியிலுள்ள விஷயங்களிலாவது மனத்தினுடைய வியாபாரங்களை (தடுத்து) நிறுத்துவது. தாரணை என்பது.

த்யாநம் சொல்லப் பெறுகின்றது—

"தத்ர ப்ரத்யைகதாநதா த்யாநம்"—இதி.

"—அதில் (மனம் ஓரிடத்தில் கட்டுண்டு இருப்பதில்) அவ்வாறு மனம் ஒரே நிவ்ருத்தி ரூபமாக இருத்தல் த்யாநம் எனச் சொல்லப் பெறும்" என்றவாறு.

ஸமாதி சொல்லப் பெறுகின்றது—

"ததேவார்த்த மாத்ரநிர்பாஸம் ஸ்வரூபஶூந்யமிவ ஸமாதி:" இதி.

"—அந்த த்யாநமே, வஸ்துஸ்வரூபமான அளவிலே தோன்றுவதாயும், தனது ஸ்வரூபம் இல்லாதது போலும், நிகழ்கின்ற மனத்தின் நிலை ஸமாதி எனப் பெயர்" என்றவாறு.

ஸ்வரூபஶூந்யமென்றது—ஸ்வரூபம் ஶூந்யம் போல த்யாநம், த்யாநம் செய்பவன் என்ற ஸ்வரூபங்கள் உள்ளன. அவை அழியவில்லை. ஆனால் த்யாநம் செய்பவனுடைய அறிவின் இன்மை என்பது கருத்து. எவ்வாறு நிர்மலமான ஸ்படிகம், அதன் அருகிலுள்ள செம்பருத்திமலரின் ரூபமாக — நிறமாக — தோன்றுவது போல, நிர்மலமான மனம் தனக்கு இலக்காகவுள்ள வஸ்துவின் வடிவமாகவே இருப்பதாகத் தோன்றலாம். ஆதாரம் முதலிய தேசங்கள் முன்பு சொல்லப் பெற்றன.

தேசாந்தரமானது இப்பொழுது சொல்லப் பெறுகின்றது—

" மந: ஸம்கல்பகம் த்யாத்வா ஸம்க்ஷிப்யாத்மநி புத்திமாந்.
தாரயித்வா ததாத்மாநம் தாரணா பரிகீர்திதா" இதி.

"—யோகீ ஸம்கல்பத்தோடு கூடிய மனதை ஸம்கோசம் செய்து சிந்தனை செய்யவேண்டும். அவ்வாறு ஆத்மாவை தாரணம் செய்வது தாரணை எனச் சொல்லப் பெறும் என அம்ருதநாதோபநிஷத் சொல்லும்.

" யத் ஸர்வஸ்துஸம்கல்பகம் மந:,
தத் ஆத்மாநமேவ ஸம்கல்பயது
ந த்வந்யத்" இதி. ஏவம்வித: ப்ரயத்ந:
ஆத்மநி ஸம்க்ஷேப:; ப்ரத்யயஸ்ய
ஏகதாநதா தத்வைகவிஷய: ப்ரவாஹ;" இதி.

"எல்லா வஸ்துக்களின் ஸம்கல்பவடிவாயமைந்த மநம் யாதொன்று இருக்கின்றதோ, அது ஆத்மனையே ஸம்கல்பம் செய்யட்டும். வேறு ஒன்றையும் ஸம்கல்பம் செய்ய வேண்டாம்." என இவ்வாறுள்ள ப்ரயத்நமானது (முயற்சி) ஆத்மாவினிடத்திலுள்ள ஸம்கோசம் எனப் பெறும். ப்ரத்யத்தினுடைய (உறுதி) ஏகாந்ததா என்றது— தத்வத்தை முக்யமாகக் கொண்ட விஷயமாகும். அது ப்ரவாஹம் எனப் பெறும்.

அதுவும் இருவகையாகும். விட்டு விட்டுத் தோன்றுவது, இடைவிடாது தோன்றுவது என்பது. இவையிரண்டும் முறையே த்யாநம், ஸமாதி என்பனவாக இருக்கின்றன. இவ்விரண்டையும் குறித்து ஸர்வாநுபவயோகி என்பவரால் காண்பிக்கப் பெற்றுள்ளது—

" சித்தைகாக்ர்யாத்யதோ ஞாநமுக்தம் ஸமுபஜாயதே.

தத்ஸாதநமதோ த்யாநம் யதாவதுபஜாயதே.

விலாப்ய விக்ருதிம் க்ருத்ஸ்நாம் ஸம்பவவ்யத்யக்ரமாத்.

பரிஶிஷ்டம் ச தந்மாத்ரம் சிதாநந்தம் விசிந்தயேத்." இதி.

"— எக்கரணத்தால் சித்தத்தினுடைய ஏகாக்ரதையிலிருந்து ஞாநம் தோன்றுகின்றது எனச் சொல்லப் பெற்றதோ, அக்காரணத்தினல் அது த்யாநம் என்று உள்ளவாறு உபதேசம் செய்யப் பெற்றது."

"தோற்றத்தின் மாறுதலால் எல்லா வ்ருத்திகளையும் விலாபநம் செய்து. எஞ்சியுள்ளதும், ஸந்மாத்ரமாயுள்ளதுமான சிதாநந்தத்தை விசேஷமாகச் சிந்தனை செய்யவேண்டும்.' என்றவாறு.

"ப்ரஹ்மாகாரமநோவ்ருத்திப்ரவாஹோऽஹம்க்ருதிம் விநா.

ஸம்ப்ரஜ்ஞாதஸமாதி: ஸ்யாத் த்யாநாப்யாஸப்ரகர்ஷஜ:" இதி ச.

"—அஹம்காரத்தை விட்டு ப்ரஹமத்தின் வடிவாயமைந்த மநோவ்ருத்தியின் ப்ரவாஹமானது, த்யாநத்தின் அப்யாஸத்தினுடைய மேன்மையிலிருந்து தோன்றிய ஸம்ப்ரஜ்ஞாதஸமாதி என்பது தோன்றச் செய்யும்." எனவும் சொல்லப் பெற்றுள்ளது

இதைக் குறித்து பகவத்பாதரும் உதாஹரணம் சொல்லுவர்—

“ த்ருசிஸ்வருபம் ககனோபமம் பரம்
ஸக்ருத்விபாதம் த்வஜமேகமக்ஷரம்.
அலேபகம் ஸர்வகதம் யுதத்வயம்
ததேவ சாஹம் ஸதத்ம் விமுக்த ஓம்.”
“ த்ருசிஸ்து ஶுத்தோऽஹமவிக்ரியாத்மகோ
ந மேऽஸ்தி கஶ்சித் விஷய: ஸ்வபாவத:.
புரஸ்திரஶ்சோர்த்வமதஶ்ச ஸர்வத:
ஸம்பூர்ணபூமா த்வஜ ஆத்மநி ஸ்தித:;
அஜோऽமரஶ்சைவ ததாஜரோऽம்ருத:
ஸ்வயம்ப்ரப: ஸர்வகதோऽஹமத்வய:.
ந காரணம் கார்யமதீவ நிர்மல:
ஸதைவ த்ருப்தஶ்ச ததோ விமுக்த ஓம்” இதி.

“ —த்ருசிஸ்வருபமாகவும், ஆகாயத்திற்கு உவமையாகவும், பரமாய் விளங்குவதும், எப்பொழுதும் ஒளியாய் விளங்குவதும். பிறப்பற்றதும், ஒன்ருயுள்ளதும், ஒன்றையும் பற்ருது இருப்பதும், எங்கும் நிறைந்துள்ளதாயும் இருக்கின்ற யாதொரு அழியாத ப்ரஹ்மம் உள்ளதோ, அதுவாகவே எப்பொழுதும் நானே ஆகின்றேன். விமுக்தனுகவும் இருக்கின்றேன் ஓம்,”

“ நானேவெனில், ஞானவடிவினன். நிர்மலவடிவினன். நான் இயல்பாகவே செயலற்றவன். எனக்கு ஒரு விஷயமும் கிடையாது, எதிரிலும் (முன்நிலே) குறுக்கிலும், மேலும், கீழும், எங்கும் நிறைந்து பரவியுள்ளவனுகவும், இருப்பதோடு பிறப்பற்ற ஆத்மனிடத்தில் இருப்பவனுகவும்;

“நான் பிறப்பற்றவனுகவும், அமரனுகவும், அவ்விதமே மூப் பற்றவனுகவும், அமுதமயமானவனுகவும், தன்னெளி கொண்ட வனுகவும், எங்கும் நிறைந்துள்ளவனுகவும், இரண்டற்றவனுகவும்; காரணமில்லாதவனுகவும், கார்யமில்லாதவனுகவும், நிர்மலனு கவும், எப்பொழுதும், நிறைவுள்ளவனுகவும், இருக்கிறேன். ஆதலால் விமுக்தனுகவும் இருக்கின்றேன் ஓம்” என்றவாறு.

சங்கை—

—ஸம்ப்ரஜ்ஞாதஸமாதியானது அங்கியாகும். அது எவ்வாறு த்யாநத்திற்குப் பிறகு வரப்போகின்ற எட்டாவது அங்கமாயுள்ள

ஸமாதிக்கு இருப்பிடமென்று சொல்லமுடியும்? என்றால், இது குற்றமாகாது. ஏனெனில்— அதிகமான பேதம் ஒன்றுமில்லை என்பதால் என்க.

எவ்வாறு வேதத்தைப் பயிலுகின்ற மாணவகன் அடிக்கடி தடங்கினாலும், மறுபடியும், மறுபடியும் நன்கு ஒப்புவிக்கின்றானோ' அத்யயநம் செய்துள்ளவன் நிதாநமுள்ளவனாயிருப்பதால் அவனுக்குத் தடங்கல் உண்டாவதில்லை. உபாத்தியாயனோ அவதாநமில்லாது நித்ரையின் மயக்கத்தோடு இருந்தாலும், அவன் தடுமாறுவதில்லை.

அவ்வாறே விஷயத்தினுடைய ஒன்றிய நிலையிலும் (ஐக்யம்) பரிபாகத்தினுடைய (அநுபவம்) தாரதம்யத்தினால், த்யாநம், ஸமாதி, ஸம்பரஜ்ஞாதம் என்ற இவைகளுடைய அவாந்தர பேதமும் உணர்ந்து கொள்ளத் தக்கதாகும். தாரணை முதலிய மூன்றும் மநத்தைச் சார்ந்த விஷயமாகும். ஆதலால் அவை ஸம்பரஜ்ஞாதஸமாதிக்கு அந்தரங்கமாகும். யமம் முதலிய ஐந்து மோவெனில் பஹிரங்கமாகும். (வெளிப்படை) இவைகளையும் ஸூத்திரத்தின்வாயிலாகச் சொல்லுகிறார்—

'' **த்ரயமந்தரங்கம் பூர்வேப்ய:'' இதி.**

''—முன்பு சொன்ன (யமம் முதலியவற்றைப் பார்க்கிலும் இவை மூன்றும் அந்தரங்க ஸாதநங்களாகும்.'' என்றவாறு,

யமம், நியமம், முதலிய ஐந்தும் சரீரம், ப்ராணன் இந்த்ரியம் மநம் இவைகளுடைய மலங்களை விலக்குகின்றன. தாரணை முதலிய மூன்றும் ஸ்வரூபஞாநத்திற்கு நேரடியாக உதவுகின்ற காரணத்தால் அந்தரங்கமெனச் சொல்லப் பெறுகின்றன என்பது தாத்பர்யம். பிறகு எதோ ஒரு புண்யவசத்தால் முதலில் அந்தரங்கமானது கிடைத்துள்ள பொழுது, பஹிரங்கத்தைப் பெறுவதின் பொருட்டு அதிகமான முயற்சி செய்ய வேண்டுவதில்லை.

ஆயினும், பதஞ்ஜலியினால்—பௌதிகம், பூததந்மாத்தரை, இந்த்ரியம், அஹம்காரம் முதலிய விஷயங்கள் ஸம்பரஜ்ஞாத ஸவிகல்பஸமாதிகள் போன்றவைகள் பலவாறு விஸ்தாரமாகச் சொல்லப் பெற்றுள்ளன. இருந்தபொழுதிலும் அவைகளுக்கு அந்தர்தாநம் (மறைவு) முதலிய ஸித்திகளுக்கு காரணமாயிருப்பதாலும், முக்திக்குக் காரணமாயுள்ள ஸமாதிக்கு விரோதம்

காணப் பெறுவதாலும் எங்களால் அவ்விஷயத்தில் ஆதரவானது கொடுக்கப் பெறவில்லை.

அவ்வாறே அவரும் ஸூத்ரத்தைச் செய்துள்ளார்—

"தே ஸமாதாவுபஸர்கா: வ்யுத்தானே ஸித்தய:"—இதி ச.

"—அவைகள் (முன் சொல்லியவை) ஸமாதிக்கு (அந்தர் முகமாக இருந்துகொண்டு புருஷஸாக்ஷாத்காரத்தைப் பெறுதலில்) தடைகளாகும். பஹிர்முகமாகச் செல்லுமிடத்து (உலகவியாபாரதசையில்) அவைகள் ஸித்திகளாகும்." என்றவாறு.

அதாவது—ஸமாதிஎன்பது அஸம்பரஜ்ஞாதஸமாதியென்று உணரத்தக்கது. இந்நிலையில் இருப்பவனுக்கு ப்ராதிபாஸிக ஸித்திகள் இடையூறுகளாக அமைவனவாம். கைவலயத்தைக் காண விரும்புகின்றவன் எந்த ஸித்திகளையும் விரும்பான். எவ்வளவு உயர்ந்த ஸித்திகளை யடைந்தாலும், இவன் க்ருதக்ருத்யனாகமாட்டான். அதாவது செய்யவேண்டிய காரியத்தைச் செய்தவனாகமாட்டான். அவன் செய்ய வேண்டிய காரியங்கள் பலவாறுள்ளன என்பது தாத்பர்யம்.

மற்றும்—

"ஸ்தாந்யுபநிமந்த்ரணே ஸங்கஸ்மயாகரணம் புநரநிஷ்டப்ரஸங்காத்" இதி.

"—தேவர்களால் (தங்கள் ஸ்தாநங்களுக்கு) பற்றுதலையும், கர்வத்தையும் கொள்ளற்க. திரும்பவும் அநிஷ்டங்கள் தோன்றுகின்றமையால்" என்றவாறு.

மற்றும்—

உத்தாலகன் என்பவன் தேவர்களினால் அழைக்கப் பெற்றும், அவர்களுடைய அழைப்பை அவமதித்து (அவன்) நிர்விகல்ப ஸமாதியையே செய்தான் என்று வரலாறு சொல்லுகிறது, அதுவும் கேள்வி, பதில் என்ற இவைகளினால் அறியப் பெறுகின்றது. ஸ்ரீராமன்—

"ஜீவந்முக்தஶரீராணும் கதமாத்மவிதாம் வர.
ஶக்தயோ நேஹ த்ருஶ்யந்தே ஆகாஶகமநாதிகா:

வஸிஷ்ட:—

''அநாத்மவிதமுக்தோऽபி நபோவிஹரணாதிகம்.
த்ரவ்யமந்த்ரக்ரியாகால ஶக்த்யாப்நோத்யேவ ராகவ.
நாத்மஜ்ஞஸ்யைஷ விஷய ஆத்மஜ்ஞோ ஹ்யாத்மமாத்ரத்ருக்.
ஆத்மநாத்மநி ஸம்த்ருப்தோ நாவித்யாமநுதாவதி.
யே கேசந ஜகத்பாவா: தாநவித்யாமயாந் விது:.
கதம் தேஷு கிலாத்மஜ்ஞஸ்த்யக்தாவித்யோ நிமஜ்ஜதி.
த்ரவ்யமந்த்ர க்ரியாகால ஶக்தய: ஸாது ஸித்திதா:
பரமாத்மபதப்ராப்தெள நோபகுர்வந்தி காஶ்சந.
ஸர்வேச்சாஜாலஸம்ஶாந்தாவாத்மலாபோதயோ ஹி ய:
ஸ கதம் ஸித்திவாஞ்ச்சாயாம் மக்நசித்தேந லப்யதே.
ந கேசந ஜகத்பாவாஸ்தத்வஜ்ஞம் ரஞ்ஜயந்த்யமீ.
நாகரம் நாகரீகாந்தம் குக்ராமலலநா இவ'' இதி.
அபி ஶீதருசாவர்கோ ஸுதீக்ஷ்ணேऽபீந்துமண்டலே.
அப்யத: ப்ரஸரத்யக்நௌ ஜீவன்முக்தோ ந விஸ்மயீ.
சிதாத்மந இமா இத்தம் ப்ரஸ்புரந்தீஹ ஶக்தய:
இத்யஸ்யாஶ்சர்ய ஜாலேஷு நாப்யுதேதி குதூஹலம்.
யஸ்து வா பாவிதாத்மாபி ஸித்திஜாலாநி வாஞ்ச்சதி.
ஸ ஸித்திஸாதநைர்த்ரவ்யைஸ்தாநி ஸாதயதி க்ரமாத்.'' இதி ச;

ஸ்ரீராமன்—

''—ஆத்மாவையுணர்ந்தவருள் தலைசிறந்து விளங்குகின்ற மஹர்ஷே! ஜீவன்முக்தர்களுடைய சரீரங்களுக்கு ஆகாசஶகமநம் முதலிய ஶக்திகள் இவ்விடம் காணப்பெறவில்லையே'';

வஸிஷ்டர்—

''ஓ ராகவ! ஆத்மாவை யுணராதவனும், விடுதலைபெறாதவனுமாக இருந்தபொழுதிலும், ஆகாஶகமநம் முதலியவை, ரஸாயநம், த்ரிபுராவைச் சார்ந்த மந்த்ரம், உறுதியாயுள்ள அப்யாஸம், அப்யாஸத்தைச் செய்கின்ற நீண்டகாலம், இவைகளுடைய ஶக்தியினால் அடைகின்றவனாகவே அவன் காணப்பெறுவன்,''

'' இந்த விஷயம் ஆத்மனை யுணர்ந்தவனுக்கன்று. ஏனெனில், ஆத்மனை யுணர்ந்தவன் ஆத்மனுடைய அளவிலேயே ஞாநத்தைக் கடைப்பிடிப்பவன் அன்றோ! அவன் ஆத்மனோடு ஆத்மனைப்

பொருத்தி, திருப்தி யடைகின்றவன். அவித்யையை அவன் பின் தொடருவதில்லை.'' என்றவாறு.

" உலகைப் பற்றிய பாவனைகள் சிலது எவைகள் இருக்கின்றனவோ, அவைகள் அவித்யாமயங்கள் என அவர்கள் உணருகின்றனர். அவ்வாறுள்ள நிலையில் (அவர்கள்) அந்த ஆத்மாவையுணர்ந்தவனும், விடப்பெற்ற அவித்யையையுடையவனுமாகிய அவன் எவ்வாறு அவைகளில் மூழ்கி யிருக்கமுடியும்? முடியாதென்பது!'

" த்ரவ்யம், மந்த்ரம், க்ரியை, காலம், ஶக்தி, என்ற இவைகள் ஸித்திகளைக் கொடுக்கவல்ல திறமை வாய்ந்தவைகளே ஆயினும், பரமாத்மபதத்தை அடைவதில் ஒருபொழுதும் உபகாரமாயிருப்பவை அன்று''

" எல்லா இச்சைகளுடைய (விருப்பம்) ஸமூஹங்களும் நன்கு அடங்கியுள்ளபொழுது, எவன் ஆத்மலாபத்தின் உதயத்தைக் காண்கின்றானே, அவன் ஸித்தியிலுள்ள விருப்பத்தில் மூழ்கிய சித்தத்தையுடையவனாக எவ்வாறு இருக்கமுடியும்?''

" இந்த சில உலகபாவனைகள், தத்வத்தையுணர்ந்தவனை மகிழ்விக்காது. அது பட்டணத்திலுள்ள காந்தனை, குக்கிராமத்திலுள்ள பெண் (விம்புவது) போல் ஆவது''

" குளிர்ச்சியான கிரணங்களையுடைய சந்த்ரமண்டலத்தில் ஸூர்யன் கொடியதாக நன்கு எரித்தாலும், அக்நியானது கீழே பரவினாலும், ஜீவந்முக்தன் வியப்பை யடையமாட்டான்."

" இவ்வாறு சிதாத்மனுடைய இந்த சக்திகள், இவ்விடத்தில் நன்கு ஒளிருகின்றனவாயினும், இவ்விஷயத்கில் ஜீவந்முக்தனுக்கு வியப்பின் ஸமூஹங்களில் மகிழ்ச்சியானது தோன்றமாட்டாது."

" எவன் வருங்காலத்திலுள்ள ஆத்மாவாயினும், ஸித்திகளுடைய ஸமூஹங்களை விரும்பியவனாயினும், அவன், ஸித்திக்கு உதவியாயுள்ள த்ரவ்யங்களினால், அவைகளை முறையே ஸாதித்துக் கொள்ளுகின்றான்.'' என்றவாறு.

ஆத்மவிஷயமாயுள்ள ஸம்ப்ரஜ்ஞாதஸமாதியோ வெனில், வாஸநாக்ஷயத்திற்கும், நிரோதஸமாதிக்கும் காரணமாயிருப்பது. ஆனகயினால் அவ்விஷயத்தில் ஆதரவு செய்யப் பெற்றது.

இப்பொழுது—பஞ்சபூமிகையின் வடிவாயுள்ள நிரோதஸமாதி யானது நிரூபணம் செய்யப் பெறுகின்றது. அந்த நிரோதமும் ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லப் பெறுகின்றது—

"வ்யுத்தாந நிரோதஸம்ஸ்காரயோ; அபிபவப்ராதுர்பாவௌ
நிரோதக்ஷணசித்தாந்வயோ நிரோதபரிணாம:" இதி.

"—பஹிர்முகமான வாஸனைகள், அவைகளைத் தடுக்கின்ற வாஸனைகள், இவைகள் முறையே குறைதலும், வளர்ச்சி பெறுதலும் (தோன்றும் காலத்தில்) நிரோதம் என்ற பூமியின் கண் மநம் இடையறாது நிற்கும். அது நிரோதபரிணாமம் (நிரோதத்தின் வ்ருத்தியாக மநம் மாற்றம் பெறுதல்) எனப் பெயர் பெறும்." என்றவாறு.

புருஷன் அசலன்; குணம், குணகார்யம் யாவும் சலநமுள்ளவை. குணகார்யமான மநமும், சலநமுள்ளதால் அஸம்ப்ரஜ்ஞாதஸமாதியில் கூட மநம் சலநமுற்றிருக்கும். அதாவது பரிணாமம் பெற்று நிகழும் என்பது. அந்நிலையிலுள்ள பரிணாமம் எத்தன்மையது என்பதை இந்த ஸூத்ரம் விளக்குவது.

'வயுத்தாநம்' என்பது மநம் பஹிர்முகமாக இருக்கும் நிலை. இவ்விடத்தில் அஸம்பரஜ்ஞாத ஸமாதியை நோக்க, ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியானது பஹிர்முகமாக இருத்தலால் வ்யுத்தாநம் என்பது ஸம்பரஜ்ஞாதஸமாதியைக் குறிப்பது. நிரோதம் என்பது பரவைராக்யம். இஃது ஏற்படுதல் அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதி நிலையாம் என்பது அந்த ஸூத்ரத்தின் தாத்பர்யமாகும்.

வ்யுத்தாந ஸம்ஸ்காரங்கள் ஸமாதி விரோதிகளாவன. அவைகளும் உத்தாலகனுடைய ஸமாதியில் உதாஹரணங்களாகச் சொல்லப் பெற்றுள்ளன—

" கதாஹம் த்யக்தமநநே பதே பரமபாவநே.
சிரம் விஶ்ராந்திமேஷ்யாமி மேருஶ்ருங்க இவாம்புத:.
இதி சிந்தாபரவஶோ பலாதுத்தாலகோ த்விஜ:.
புந: புநஸ்தூபவிஶ்ய த்யாநாப்யாஸம் சகார ஹ.
விஷயைர் நீயமாநே து சித்தே மர்கடசஞ்சலே.
ந ஸ லேபே ஸமாதாநே ப்ரதிஷ்டாம் ப்ரீதிதாயிநீம்.
கதாசித் பாஹ்யஸம்ஸ்பர்ஶ பரித்யாகாதநந்தரம்.
தஸ்யாகச்சச்சித்தகபிராந்தரஸ்பர்ஶஸம்சயாந்,

கதாசிதாந்தரஸ்பர்ஶாத் பாஹ்யம் விஷயமாததே.
தஸ்யோட்டீய மனோ யாதி கதாசித் த்ரஸ்தபக்ஷிவத்.
கதாசிதுதிதார்காபம் தேஜ: பஶ்யதி விஸ்த்ருதம்.
கதாசித் கேவலம் வ்யோம கதாசின்னிபிடம் தம:
ஆகச்சதோ யதாகாமம் ப்ரதிபாஸாந் புந: புந:.
அச்சசின்னமனஸா ஶூர: கட்கேனேவ ரணே ரிபூந்.
விகல்பௌகே ஸமாலூநே ஸோ஽பஶ்யத் ஹ்ருதயாம்பரே.
தமஶ்சன்னவிவேகார்கம் லோலகஜ்ஜலமேசகம்.
ததப்யுத்ஸாதயாமாஸ ஸம்யக் ஞானவிவஸ்வதா.
தமஸ்யுபரதே ஸ்வாந்தே தேஜ: புஞ்ஜம் ததர்ஶ ஸ:.
தல்லுலாவ ஸ்தலாப்ஜாநாம் வனம் பால இவ த்விப:
தேஜஸ்யுபரதே தஸ்ய கூர்ணமானம் மனோ முனே:.
நிஶாப்ஜவதகாந்நித்ராம் தமப்யாஶு லுலாவ ஸ:.
நித்ராவ்யபகமே தஸ்ய வயோமஸம்வித் ஸமுத்யயௌ.
வ்யோமஸம்விதி நஷ்டாயாம் மூடம் தஸ்யாபவன் மன:.
மோஹமப்யேஷ மனஸஸ்தம் மமார்ஜ மஹாஶய:
ததஸ்தேஜஸ்தமோநித்ராமோஹாதிபரிவர்ஜிதாம்.
காமப்யுவஸ்தாமாஸாத்ய விஶஶ்ராம மன: க்ஷணம்'' இதி.

*''—நான் பரமபாவனமான இடத்தில் விடப்பெற்ற மனத்தில், எப்பொழுது நீண்டகாலம் மேருமலையைத் தழுவிய மேகம் போல் விஶ்ராந்தியை அடையப் போகிறேனே.''*

*''என்ற சிந்தனையினால் பரவஶமடைந்த உத்தாலகன் என்ற த்விஜன், திரும்பத் திரும்ப வனத்தில் உட்கார்ந்து கொண்டு த்யானத்தினுடைய அப்யாஸத்தைச் செய்தான் அன்றோ!''*

*''குரங்கைப் போல் சஞ்சலமுள்ள சித்தமானது விஷயங்களினால் இழுத்துக் கொண்டுள்ள பொழுது, அவனுக்கு ப்ரீதியைக் கொடுக்கின்ற ஸமாதானத்தினால் நிலைத்துள்ளதை அடைய முடியவில்லை.''*

*''சில பொழுது பாஹ்யவிஷய பரித்யாகத்திலிருந்து, ஆந்தரமாயுள்ள விஷயஸமூஹங்களான மனோரதத்தினால் பரிகல்பனம் செய்யப் பெற்ற விஷயத் தொகுதியை, சித்தமென்னும் குரங்கானது அவனை அடையச் செய்யும்.''*

*''சில பொழுது ஆப்யந்தர விஷயங்களிலிருந்து பாஹ்யமான விஷயத்தை எடுத்துக் கொள்ளுகின்றது. அப்பொழுது*

அவனுடைய மநது பயத்தையடைந்த பக்ஷிபோல் செல்லு கின்றது."

"சில ஸமயம் ரஜஸ் அதிகமாகும் பொழுது, உதயத்தை யடைந்த ஸூர்யனுடைய காந்தி போன்ற விஸ்தாரமான ஒளியைக் காண்கின்றான். ஸத்வத்தினுடைய வளர்ச்சியிலோ வெனில், கேவலம் நிர்மலமான ஆகாஶத்தைப் போல் பார்க் கின்றான். தமஸினுடைய வளர்ச்சியிலோ வெனில், கேவலம் நெருக்கமுற்ற இருளைக் காண்கின்றான்"

"விரும்பியவாறு திரும்பத் திரும்ப வருகின்ற ப்ரதி பாஸங்களை, எவ்வாறு ஶூரனானவன் போரில் பகைவர்களைச் சிதைத்து விடுகின்றானோ, அது போல மநத்தால் இவைகளைச் சிதைத்து விடுகிறான்."

"விகல்பங்களுடைய தொகுதிகள் நன்கு சிதைந்துள்ள பொழுது, ஹ்ருதயாகாஶத்தில் தமஸினால் மறைக்கப் பெற்ற விவேகமென்னும் ஸூர்யனை, அசைகின்ற கரியதாகப் பூசப் பெற்ற, மசியைப் போன்றுள்ள மேகத்தைக் காண்கின்றான்"

"அவன் அந்த:கரணத்திலுள்ள ஸூர்யனால் அதையும் சிதைத்து விடுகின்றான். அச்சமயம் தமஸ் விலகிய பொழுது, மனத்தைக் கவருகின்ற ஒளிகளின் தொகுதிகளைக் காண்கின்றான். அதையும், தலத்தாமரைகளுடைய வனத்தை யழிக்கின்ற யானைக் குட்டி போல் சிதைத்து விடுகின்றான்"

"தேஜஸ்ஸானது ஶமம்மடையும் பொழுது (மறைவு) அவனுடைய மநம் விஶ்ராந்தியையடைய முடியாமல், மறுபடியும் தமஸினுடைய விருத்தியை அடைகின்றது. இரவிலுள்ள தாமரை மலர் போல் துயிலையடைகின்றது. அதையும் அவன் விரைவில் சிதைத்து விடுகின்றான்"

"அவனுக்கு துயில் நீங்கிய பொழுது ஆகாயத்தில் ஸம்வித்தானது நன்கு உதயமாகின்றது. ஆகாஶஸம்வித்தும் மறையும் பொழுது அவனுடைய மநம் மூடமாகின்றது"

"இந்த மஹாஶயன் (பெருமை பொருந்திய மநம்) மநத்தி னுடைய அந்த மூடத்தையும் அகற்றி விடுகின்றான். பிறகு தமஸ், மோஹம் நித்ரை முதலியவைகள் அகன்ற நிலையில் மநஸி னுடைய மோஹத்தையும் அகற்றி விடுகின்றான். பிறகு தேஜஸ், தமஸ், நித்ரா, மோஹம் இவைகளை அகற்றியுள்ள நிலையையுடைய

ஏதோ ஒரு நிலையையடைந்து க்ஷணகாலம் மநமானது நிலைபெறு கின்றது'' என்றவாறு.

அந்த வ்யுத்தாநஸம்ஸ்காரங்களான இவை, நிரோதத்தி னுடைய காரணத்திஞலே யோகியினுடைய முயற்சியினல் தினந் தோறும் ஒவ்வொரு க்ஷணமும் சுற்றி வருகின்றன. அதனுடைய விரோதிகளுக்கும் நிரோத ஸம்ஸ்காரங்கள் தோன்றுவன. அப்படி யுள்ள பொழுது, நிரோதமானது ஒவ்வொரு க்ஷணத்திலும் சித்தத் தைப் பின்தொடருகின்றது. இத்தகைய அந்த சித்தத்தி னுடைய நிரோத பரிணமமானது இருக்கின்றது.

சங்கை—

'' ப்ரதிக்ஷணபரிணமிநோ ஹி பாவா: ருதே சிதிஶக்தே:''
இதி ந்யாயேந;

''—ஒவ்வொரு க்ஷணமும் க்ஷணபரிணமிகளான பாவனைகள் சிதிஶக்தியினிடமிருந்து இல்லாமலே தோன்றுவன'' என்ற நியாயத்தை யநுஸரித்து சித்தத்திற்கு எப்பொழுதும் பரிண மத்தின் ப்ரவாஹமானது சொல்ல வேண்டுமே என்றுல்? ஆம்,

சித்தத்திற்கு (அவ்விடத்தில் வ்யுத்திதமான எழுச்சி) விருத்தி ப்ரவாஹமானது தெளிவு, நிருத்த சித்தத்திற்கோ வெனில், எவ்வாறு என்ற ஐயம் கொண்டு அடுத்த ஸூத்ரத்தைச் செய்கிறுர்—

'' தஸ்ய ப்ரஶாந்தவாஹிதா ஸம்ஸ்காராத்'' இதி.

''—அதற்கு (அந்நிலையிலுள்ள மநத்திற்கு) மேற்படி நிரோத ஸம்ஸ்காரத்தின் அப்யாஸத்தால் ஶாந்தநிலை ப்ரவாஹமாக ஏற் படுகின்றது. ப்ரவாஹம்=இடையருமல் இருத்தல். வ்யுத்தாநஸம் ஸ்காரம் குறைவுபடவும், நிரோதஸம்ஸ்காரம் ஸ்திரமாகும்.

எவ்வாறு—ஸமித், ஆஜ்யம் (நெய்) இவைகளுடைய ஆஹுதி யின் ப்ரக்ஷேபத்திஞல் (அக்நியில் போடுவது) அக்நியானது மேல் மேலும் வளர்ச்சியடைந்து ஜ்வலிக்கின்றதோ, ஸமித் முதலிய வைகளுடைய க்ஷயத்தில் ஶமநமானது வளர்ச்சியடைகின்றதோ, அது போல நிருத்தமான சித்தத்திற்கு மேல் மேலும் அதிகமா யுள்ள ஶமநமானது பெருகுகின்றது. அவ்விடத்தில் முன்னுக்கு முன்னுள்ள ஶமநத்திலிருந்து தோன்றிய ஸம்ஸ்காரமும், அடுத் தடுத்துள்ள ஶமநத்திற்குக் காரணமாகின்றது.

இந்த ப்ரஶாந்த வாஹிதையைக் குறித்து (விக்ஷேபவாஸனை, யற்ற நிரோத ஸம்ஸ்காரப்ரஹத்தையுடைய தன்மை) பகவான் மிகத் தெளிவாகச் சொல்லியுள்ளார்—

"யதா விநயதம் சித்தமாத்மந்யேவாவதிஷ்டதே.
நி:ஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா.
யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா.
யோகிநோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மந:.
யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா.
யத்ரசைவாத்மநாத்மாநம் பஶ்யந்நாத்மநி துஷ்யதி.
ஸுகமாத்யந்திகம் யத் தத் புத்திக்ராஹ்யமதீந்த்ரியம்.
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதஶ்சலதி தத்வத:.
யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத:.
யஸ்மிந் ஸ்திதோ ந து:கேந குருணாபி விசால்யதே.
தம் வித்யாத் து:கஸம்யோகவியோகம் யோகஸம்ஜ்ஞிதம்.
ஸ நிஶ்சயேந யோக்தவ்யோ யோகோऽநிர்விண்ணசேதஸா" இதி.

"—எப்பொழுது மநம் வஶப்பட்டு ப்ரஹ்மத்யாநத்தில் தானே நிறுத்தப் பெற்றிருக்குமோ, எப்பொழுது எல்லா விஷயங்களி லிருந்து முண்டாகும் ஆசையை யகற்றி யிருப்பானோ, அப்பொழுது யோகஸித்தியை அடைந்தவன் என்று சொல்லப் பெறும்."

"பயிற்சியினால் விஷயங்களிலிருந்து (புலன்கள் புகும் பொருள்கள்) இழுக்கப் பெற்ற மநம், எந்த யோகத்தினால் ஆன்மாவைப் பார்த்துத் தன்னிடத்திலேயே மகிழ்ச்சியடை கின்றதோ;"

"எந்த யோகத்தில் உறுதியாயிருக்கின்ற யோகியானவன், புலன்களுக்குப் புலனாகாது, புத்தியினால் உணரத்தக்க அளவு கடந்த முடிவற்ற பேரின்பத்தை அநுபவிக்கின்றானோ, எந்த ஸுகத்தை அநுபவிப்பதிலிருந்து பிரிகின்றதில்லையோ;"

"எதை அடைந்த பிறகு, அதைக் காட்டிலும் வேறு ஒன்றை அதிகமான பயனுள்ளதாகக் கருதுகின்றதில்லையோ, எந்த யோகத்திலிருப்பவன் பெரும் துயரத்தினால் கூட அசைக்கப் பெறுவதில்லையோ;

"அதை எல்லாத் துயரத்தின் தொடர்பைப் போக்குகின்ற அந்த யோகநிஷ்டையின் நிலையை யோகமென்ற பெயர் கொண்ட

தாக அறிய வேண்டும். உறுதியுடன் அசைவற்ற மநத்தின் நிலையையுடையவனே அத்தகைய யோகத்தை யடையத் தக்கவன்.'' என்றவாறு.

இப்பொழுது நிரோதஸமாதியினுடைய ஸாதநமானது ஸூத்ரத்தின் வாயிலாக சொல்லப் பெறுகின்றது.—

''விராமப்ரத்யயாப்யாஸபூர்வக: ஸம்ஸ்காரஶேஷோऽந்ய:''

''—விராமம் என்பது வ்ருத்தியினுடைய உபரமம் (ஒழிவு) அதனுடைய ப்ரத்யயம் காரணம் விருத்தியின் உபரமார்த்தம். அது புருஷப்ரயத்நம் என்பது. அதனுடைய அப்யாஸம், அதாவது திரும்பத் திரும்ப ஸம்பாதிக்கவேண்டிய நிலை. அதை முன்னிட்டு அதனுடைய வெற்றியாகும். அடுத்ததும், கடந்ததுமான ஸூத்ரத்தில் ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதி சொல்லப் பெற்றதால், அதையபேக்ஷித்து வேறானது அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியாகும். அவ்விடத்தில், வ்ருத்தியில்லாத சித்த ஸ்வரூபத் திற்குக் காணமுடியாமையால் ஸம்ஸ்காரரூபத்தோடு சித்தம் எஞ்சி நிற்பது.

விராமத்தினுடைய காரணத்திலிருந்து தோன்றுகின்ற தன்மையை பகவான் மிகத் தெளிவாகச் சொல்லுகிறார்—

ஸம்கல்ப்ரபவாந் காமாந் த்யக்த்வா ஸர்வாநஶேஷத :
மநஸைவேந்த்ரியக்ராமம் விநியம்ய ஸமந்தத:
ஶநை: ஶநைருபரமேத் புத்யா த்ருதிக்ருஹீதயா.
ஆத்மஸம்ஸ்தம் மந: க்ருத்வா ந கிம்சிதபி சிந்தயேத்.
யதோ யதோ நிஶ்சரதி மநஶ்சஞ்சலமஸ்திரம்.
ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மந்யேவ வஶம் நயேத்.'' இதி.

''—ஸங்கல்பத்தினல் உண்டாகின்ற எல்லா விஷய ஸம்பந்த மான ஆசைகளை அறவே யொழித்து, மநத்தினுல் எல்லாப் புலன் களிலுமிருக்கின்ற விஷயங்களைத் திருப்பி, தைர்யத்தினுல் தன் வயமாகச் செய்யப் பெற்ற புத்தியினுல், மனதை ஆத்மாவினிடம் நிலைக்கச் செய்து, மெள்ள மெள்ள மநத்தைக் கட்டுப்படுத்தி நிறுத்த வேண்டும். அப்படி நிறுத்திய பிறகு, ப்ரஹ்மத்தைத் தவிர வேறு ஒன்றையும் பற்றி நினைக்காமல் இருக்க வேண்டும்.''

"நிலையற்றதும், சஞ்சலமாயுளதுமான இயல்பைப் பெற்ற மனம், எந்த எந்த விஷயங்களில் புகுமோ, அந்த அந்த விஷயங்களிலிருந்து இம் மனத்தைத் திருப்பி, பரமாத்மாவினிடம் நிலைத்து நிற்கச் செய்ய வேண்டும்." என்றவாறு.

மற்றும், விரும்பப் பெறுகின்றவைகளான மாலை, சந்தனம், மங்கை, புத்திரன், நண்பன், வீடு, க்ஷேத்ரம், முதலிய இவைகள், மோக்ஷசாஸ்திரத்தில் திறமை வாய்ந்துள்ள விவேகிகளான ஜனங்களினால், ப்ரஸித்தமாயுள்ள பலவகையான தோஷங்களினால் கூடியதாயிருப்பினும், அவித்யையின் காரணமாக அந்த தோஷங்களை மறைத்து, அந்த விஷயங்களில் நன்கு பதிந்திருக்குமாறு மனம் ஸம்கல்பம் செய்கின்றது. அந்த ஸங்கல்பத்திலிருந்து இது, எனது, இருப்பதாக என்ற வடிவாயுள்ள காமனைகள் நன்கு தோன்றுகின்றன.

அவ்வாறே ஸ்மரணமும் செய்யப் பெறுகின்றது—

"ஸம்கல்பமூல: காமோ வை யஜ்ஞா: ஸம்கல்பஸம்பவா:.
காம ஜானாமி தே மூலம் ஸம்கல்பாத் கில ஜாயதே.
ந த்வாம் ஸம்கல்பயிஷ்யாமி ஸமூலஸ்த்வம் விநங்க்ஷ்யஸி" இதி.

"—காமனை ஸங்கல்பத்தின் வழியாகவே தோன்றுகின்றது. யாகங்கள் (வேள்வி) ஸங்கல்பத்திலிருந்து தோன்றுகின்றன. ஓ காம! உன்னுடைய வழியை நான் அறிவேன். (நீ) ஸங்கல்பத்திலிருந்து அல்லவா தோன்றுகின்றாய். ஆகவே நான் உன்னை ஸங்கல்பம் செய்யமாட்டேன். ஆதலால் அடியோடு நீ நாஶமடையப் போகிறாய்" என்றவாறு.

மற்றும்—

அவ்விஷயத்தில், விவேகத்தோடு விஷய தோஷங்களில் ஸாக்ஷாத்தாக (நேரிடையாக) செய்யப் பெற்ற பொழுதிலும், சுணங்கனால் வமனம் செய்யப் பெற்ற பாயஸம் போல் காமனைகள் விடப் பெறுகின்றன.

"ஸ்ரக்சந்தனாதிஷ்விவ" என்றது—மாலை, சந்தனம் முதலியவைகளில் போல, ப்ரஹ்மலோகம் முதலியவைகளில் அணிமா முதலிய எண்வகையான ஐச்வர்களிலும் காமனைகளை விடவேண்டும்" என்ற அபிப்பிராயத்தோடு அச் சொல் சொல்லப் பெற்றது.

'அஶேஷத:' என்றது— மாஸோபவாஸம் இருக்கின்ற வ்ரத முடையவனுல் அந்த மாஸத்தில் அன்னமானது விடப்பெற்ற பொழுதிலும், ஆசையானது திரும்பத் திரும்பத் தோன்றுவது மாகும். அது போல இருப்பது கூடாது என்ற காரணத்தால் அச்சொல் சொல்லப் பெற்றது.

மற்றும்,—

ஆசையைத் தியாகம் செய்வதில் மநத்தை முன்னிட்ட ப்ரவ்ருத்தியில்லாமல் போனுலும், கண் முதலியவைகளுக்கு உருவங்களில் இயல்பாயுள்ள யாதொரு ப்ரவ்ருத்தியுண்டோ, அதுவும் முயற்சியோடு கூடிய மநத்திஞலேயே நியமநம் செய்யப் பெறவேண்டும். தேவதைகளுடைய தர்ஶநங்களிலும் அநுஸரணையின் இன்மை பொருட்டு ஸமந்தத: என்று சொல்லப் பெற்றது.

அந்த பூமிகைகள் நான்கும் கடவல்லிகளில் காணப் பெறுகின்றன—

"யச்சேத் வாங் மநஸீ ப்ராஜ்ஞ:
தத்யச்சேத் ஜ்ஞாந ஆத்மநி.
ஞாநமாத்மநி மஹதி நியச்சேத்.
தத்யச்சேச் சாந்த ஆத்மநி."

"—விவேகியானவன் வாக் முதலிய இந்திரியங்களை மனத்தில் அடக்க வேண்டியது. மநத்தைப் புத்தி, ஆத்மா இவைகளிடத்தில் அடக்க வேண்டியது. அந்தப் புத்தியையும் ஆத்மாவை மஹத்தாயிருக்கின்ற ஆத்மாவில் (மஹத்தத்வம்—ஈஶ்வரதத்வம் சேர்ந்த விஜ்ஞாநம்) அடக்க வேண்டியது. அந்த மஹத்தும் ஆத்மனைச் சார்ந்த ஆத்மாவில் (பரமாத்மாவில்) அடக்க வேண்டியது" என்றவாறு

மற்றும்—

இவ்விடத்தில் வாக்கின் வியாபாரம் (செயல்) இருவகையாகும். அவை—லௌகிகம், வைதிகம் என்பன. ஜல்பம் முதலிய வடிவாயுள்ளவை லௌகிகமாகும். ஜபம் முதலிய வடிவாய மைந்தது வைதிகமாகும். அவ்விடத்தில் லௌகிகத்திற்குப் பலவகையாயுள்ள விக்ஷேபங்களைச் செய்கின்ற காரணத்தால்

வ்யுத்தாந (எழுச்சி) காலத்தில் யோகியானவன் அதைப் பரித்யாகம் செய்ய வேண்டும்.

அக் காரணத்தினாலேயே ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது.—

"மௌநம் யோகாஸநம் யோகஸ்திதிக்ஷைகாந்தசீலதா.
நி:ஸ்ப்ருஹத்வம் ஸமத்வம் ச ஸப்தைதாந்யேகதண்டிந:" இதி.

"—மௌநம், யோகாஸநம், யோகம், திதிக்ஷா, ஏகாந்தசீலதா, நிஸப்ருஹத்வம், (பற்றற்ற நிலை) ஸமத்வம் என்ற இந்த ஏழும் ஏகதண்டீ என்பவனுக்கு உரியவைகள்" என்றவாறு.

ஜபம் முதலியவைகளை நிரோதஸமாதியில் பரித்யாகம் செய்ய வேண்டும். இது வாக்பூமி என்ற முதலாவதாகும். அந்த பூமியை முயற்சியின் அளவிலே சில தினங்களாலோ, சில மாஸங்களாலோ, வருஷங்களிலாவது உறுதியாக ஜயித்துப் பிறகு இரண்டாவது பூமியாகிய மநோபூமியில் முயற்சி எடுக்க வேண்டும். அப்படி எடுக்காவிடில் பலவகையாயுள்ள பூமிகையின் ப்ராஸாதம் (படி) போல் முதல் பூமியினுடைய வீழ்ச்சியைப் போலவே மேலேயுள்ள யோக பூமிகள் யாவும் நாசமடைவன.

இருந்தாலும், கண் முதலியவைகள் தடுக்கப் பெற வேண்டுவன. ஆயினும் அவைகளுக்கு வாக்பூமியிலாவது, மநோபூமியிலாவது அந்தர்பாவமானது (உள்ளடங்கல்), இருப்பது என்பதையும் உணர வேண்டும்.

சங்கை—

வாக்கை மநத்தில் சேர்க்க வேண்டுமென்று சொல்லியது ஒவ்வாதது. ஏனெனில் இந்த்ரியத்திற்கு வேறு இந்திரியத்தில் ப்ரவேசம் இருக்க முடியாததால் என்க. அவ்வாறு சொல்ல வேண்டாம்.

ஏனெனில்? ப்ரவேஶமானது விவக்ஷிதமில்லாத காரணத்தால் என்க. பலவகையாயுள்ள விக்ஷேபங்களைச் செய்கின்ற வாக், மநஸ் இவைகளுடைய நடுவில், முதலாவதான வாக்கின் வியாபாரமானது நியமநம் செய்துள்ளதால், மநோ வியாபாரத்தின் அளவிலே எஞ்சி நிற்பது இவ்விடத்தில் விவக்ஷிதமாகக் கொள்ளவேண்டும். பசு, எருமை குதிரை முதலியவைகளுடையது போல, வாக்கின் நியமமானது இயல்பாகவே

கிடைக்கும் பொழுது, பிறகு ஞானாத்மனிடத்தில் மனத்தைச் சேர்க்க வேண்டும்.

அந்த ஆத்மா மூவகையாகும்; ஞானாத்மா, மஹாத்மா, ஶாந்தாத்மா, என்பன அவை. இவ்விடத்திலிருக்கின்ற ஆத்மா அறிகின்றான். என ஞாத்ருதவத்தின் உபாதியாயுள்ள அஹம்கார மானது, இவ்விடத்தில் ஞானஶப்தத்தினால் விவக்ஷிக்கப் பெற்றுள்ளது. கரணவடிவாயமைந்த மனத்திற்கு நியமனத் தன்மையினால் தனியாக எடுத்துக் கொள்ளப் பெற்றதால் என்க.

அஹம்காரம் இரு வகையாகும்—விசேஷரூபம்; ஸாமாந்யரூபம் என்பன அவை. "இந்த நான் இவனுடைய புத்திரன்," என்று இவ்வாறுள்ள வெளிப்படையாகச் சொல்லப் பெறுவது விசேஷரூபம் எனப் பெறும். 'இருக்கிறேன்' என்ற அளவோடு கூடியதாகச் சொல்லப் பெறுவது ஸாமாந்யரூபம் எனப் பெறும்.

அதுவும், எல்லா வ்யக்திகளுள்ளும் பரவியிருப்பதால் மஹான் எனச் சொல்லப் பெறுகின்றது. இந்த இருவகையாயுள்ள அஹங்காரங்களினால் உபஹிதமாயுள்ளது இரண்டு ஆத்மாக்கள். உபாதியற்ற நிலையிலிருப்பது ஶாந்தாத்மா, இவை யாவும் அந்த:, பஹி: என்ற பாவனைகளோடு இருப்பதுமாகும்.

ஶாந்த ஆத்மாவானது எல்லா விடத்திலும் நிறைந்துள்ள சித் என்னும் தனிப்பட்ட ரஸமாகும். அந்த சிதேகரஸத்தை ஆஶ்ரயித்துள்ள ஜடஶக்தி வடிவாயுள்ள அவ்யக்தமானது, மூலப்ரகருதி எனச் சொல்லப் பெறும். அந்த ப்ரக்ருதியும் முதலில் ஸாமாந்யாஹம்கார வடிவம் கொண்டு 'மஹத்தத்வம்' என்ற பெயரோடு வெளிவருவது, பிறகு வெளியேயுள்ள விசேஷாஹம்கார வடிவத்தோடும், பிறகு வெளியேயுள்ள மனோரூபத்தோடும், பிறகு வெளியேயுள்ள வாக் முதலிய இந்த்ரியங்களோடும் வ்யக்தமாயிருப்பதுமாகும்.

இக் கருத்தைக் கொண்டே உத்தரோத்தரம் (மேல்மேலும்) உள்ள ஆந்தரத் தன்மையைக் குறித்து ஶ்ருதியும் வ்யக்தமாகச் சொல்லுகின்றது—

"இந்த்ரியேப்ய: பரா ஹ்யர்த்தா அர்த்தேப்யஶ்ச பரம் மந:.
மநஸஸ்து பரா புத்தி: புத்தேராத்மா மஹாந் பர:"
மஹத: பரமவ்யக்தம் அவ்யக்தாத் புருஷ: பர:.
புருஷாந்ந பரம் கிம்சித் ஸா காஷ்டா ஸா பராகதி:" இதி.

"—இந்திரியங்களைக் காட்டிலும் அவைகளின் அர்த்தங்கள் (விஷயங்கள்) உயர்ந்தன; அர்த்தங்களைக் காட்டிலும் உயர்ந்தது மநம்; இதைக் காட்டிலும் உயர்ந்தது புத்தி; இதைக் காட்டிலும் உயர்ந்தது மஹானுயிருக்கின்ற ஆத்மா. (மஹத்ததத்வம், ஈஶ்வர தத்வம், ஸூத்ராத்மா).

" மஹத்ததத்வத்தைக் காட்டிலும் உயர்ந்தது அவ்யக்ததத்வம். (மாயை, ப்ரக்ருதி); இதைக் காட்டிலும் உயர்ந்தது பரமபுருஷன். (பரமாத்மா); புருஷனைக் காட்டிலும் உயர்ந்தது ஒன்றுமில்லை. இதுவே அடைய வேண்டிய எல்லை; இது தான் பரமானகதி (மோக்ஷம்) என்றவாறு.

இவ்வாறுள்ள பொழுது, இவ்விடத்தில் பலவகையாயுள்ள ஸம்கல்பம், விகல்பம் இவைகளுடைய ஸாதந வடிவாயுள்ள கரண ரூபமான மநம், அஹம்காரமென்னும் கர்த்தாவினிடத்தில் நியமநம் செய்யப் பெறுகின்றது. மனத்தின் வ்யாபாரங்களை பரித்யாகம் செய்து, அஹங்காரத்தை மாத்திரம் எஞ்சியுள்ளதாகச் செய்ய வேண்டும். இது முடியாது என்று சொல்லுவது கூடாது.

" தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்"

"—அந்த மநத்தைக் கட்டுப் படுத்துவது காற்றைக் கட்டு வதைப் போல் மிகவும் கஷ்டமான செய்கை என்று நான் நினைக் கிறேன்" எனச் சொல்லுகின்ற அர்ஜுனனைக் குறித்து பகவானல் பதில் சொல்லப் பெற்றுள்ளது வருமாறு—

"அஸம்ஶயம் மஹாபாஹோ மநோ துர்நிக்ரஹம் சலம்.
அப்யாஸேந து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே.
அஸம்யதாத்மநா யோகோ துஷ்ப்ராப இதி மே மதி:.
வஶ்யாத்மநா து யததா ஶக்யோऽவாப்துமுபாயத:" இதி.

"—ஓ பெருந்தோளாய்! மநம் கட்டுதற்கு அரிதுதான். அது சலநமுடையதுதான். ஐயமில்லை. ஆனல் குந்தியின் மகனே! அதைப் பழக்கத்தாலும், விருப்பின்மையாலும் கட்டி விடலாம்"

" தன்னைக் கட்டாதவன் யோகமெய்துதல் அரிதென நான் நினைக்கிறேன். தன்னைக் கட்டியவன் முயற்சியினுலும், உபாயத்தி னுலும், அதனை எய்தவல்லான்" என்றவாறு.

இவ்விடத்தில் அப்யாஸம், வைராக்யம், இவ்விரண்டும் பதஞ்ஜலிஸூத்ரத்தினுடைய உதாஹரணத்திலே வியாக்கியானம் செய்யப் பெறுவன—

மூன்னுக்கு முன்னேயுள்ள பூமிகையினுடைய உறுதியற்ற நிலையானது அஸம்யதாத்மா. அதனோடு கூடியது வஶ்யாத்மா, உபாயத்தினால் அடையப் பெறுகின்ற நிலையை கௌடபாதாசார்ய்ர் உதாஹரணத்தோடு சொல்லுகிறார்—

"உத்ஸேக உததேர் யத்வத் குசாக்ரேணைக பிந்துநா.
மநஸோ நிக்ரஹஸ்தத்வத் பவேதபரிகேதத: இதி;

பஹுபிர் ந விரோத்தவ்யம் ஏகேநாபி பலீயஸா.
ஸ பராபாவமாப்நோதி ஸமுத்ர இவ டிட்டிபாத்"

"—மனோநிக்ரஹம் எவ்வாறெனில், அது இவனுடைய முயற்சியினால் ஸாதிக்கத் தக்கதல்ல. கடல் நீரை குசாக்ரத்தினால் (தர்பையின் நுனி) ஒரு பிந்து எடுத்து ஶோஷிப்பிக்கச் (வற்றச் செய்வது) செய்வது போல் ஆகும். ஆனதால் எவ்வாறாயினும் ப்ரஹ்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்க வேணுமென்ற நிறைவையுடையவனாயிருந்தால், அவனுக்கு எளிதில் உண்டாவதாகும்." என்றவாறு.

"பலசாலியான ஒருவனாயினும், பல பேர்களோடு பகைத்துக் கொள்வது கூடாது. அப்படிச் செய்தால் அவன் அபஜயத்தை அடைகின்றான். அது எவ்வாறெனில் குருவியினிடமிருந்து கடல் போல்வாதாகும்" என்றவாறு.

அத்ர ஸம்ப்ரதாயவித: ஆக்யாயிகாம் ஆசக்ஷதே—"கஸ்யசித் கில பக்ஷிண: அண்டாநி தீரஸ்தாநி உததிஃ உத்ஸேகேந அபஜஹார. தம் ச ஸமுத்ரம் ஶோஷயாமி இதி ப்ரவருத்த:, ஸ ச பக்ஷீ ஸ்வமுகாக்ரேண ஏகைகம் ஜலபிந்தும் பஹி: ப்ரக்ஷிபதி ஸ்ம. ததா பஹுபி: பக்ஷிபி: பந்துவர்கை: வார்யமாணோऽபி அநுபரத:; ப்ரத்யுத தாநபி ஸஹகாரிணோ வவ்ரே. தாம்ஶ்ச பதநோத்பதநாப்யாம் பஹுதா க்லிஶ்யத: ஸர்வாந் அவலோக்ய க்ருபாலு: நாரத: கருடம் ஸமீபே ப்ரேஷயாமாஸ. தத: கருடபக்ஷவாதேந ஶோஷ்யந் ஸமுத்ர: பீத:, தாநி அண்டாநி ஆநீய பக்ஷிணே ததௌ" இதி.

இவ்விடத்தில் ஸம்ப்ரதாயத்தை யுணர்ந்துள்ளவர்களுடைய கதை சொல்லப் பெறுகின்றது—

"ஒரு கடற்கரையில், ஒரு பறவையானது தான் இட்ட முட்டைகளை, கடலின் அலைகளினால் அடித்துச் செல்லப் பெற்ற பொழுது, அதைக் கண்ட பறவையானது கோபம் கொண்டு, தன்னுடைய மூக்கினால் கடலை வற்ற வைக்கிறேன் என்று ஸங்கல்பம் செய்து, அவ்வாறே மூக்கின் நுனியினால் திவலை திவலையாகத் தண்ணீரை எடுக்கத் தொடங்கியது.

அச் சமயம் அச் செய்கையைக் கண்ட மற்ற பறவைகளும் அவ்விடம் வந்து தடுத்துப் பார்த்தன. ஆனால் அப் பறவை ஸம்மதிக்கவில்லை. ஆயினும் அவைகளையும் தனக்கு உதவி செய்யமாறு வேண்டிக்கொண்டது. பிறகு எல்லாப் பறவைகளும் சேர்ந்து ஓயாது செய்யவே, அவைகள் களைத்துப் போய்விட்டன. அவ் வழியே வந்த நாரதர் இதைக் கண்டு தனக்கு இவைகளிடத்திலுள்ள தயையினால் இவ் விஷயத்தைக் கருடனிடம் சொல்ல, கருடனே தனது இரண்டு இறக்கைகளினால் பலம் பொருந்திய வாயுவைத் தோன்றத் செய்து, கடலை வற்றவைக்கத் தொடங்கியது. இதைக் கண்ட கடலரசன் பயத்தையடைந்து, தான் முன்பு அபஹரித்த முட்டைகளைத் திரும்பவும் பறவையினிடம் கொடுத்துச் சென்றான். கருடனும் தனது இருப்பிடம் சென்றது. பறவைகளும் மகிழ்ச்சியடைந்தன" என்பது அந்த ஸம்ப்ரதாயத்தைத் தழுவிய கதையாகும்.

இவ்வாறு, எளிமையான வழியிலே சிறந்த தர்மமான மனோநிக்ரஹத்தில் ப்ரவிருத்திக்கின்ற யோகியை, ஈஶ்வரன் அநுக்ரஹம் செய்கின்றான். எளிமையானது நடுவே நடுவே அதற்கு அநுகூலமாயுள்ள செயல்களுடைய கலப்பினால் உண்டாகின்றது. எவ்வாறு உணவை அருந்துகின்றவன் அவைகளை விழுங்கும் பொழுது, ஒவ்வொரு கவளத்தினிடையே கறி, குழம்பு, ரஸம், முதலியவைகளைச் சேர்த்துக் கொண்டு அருந்துகின்றானோ அது போல என்றது.

இதைக் கருத்தில் கொண்டே வஸிஷ்டரும் சொல்லுகிறார்—

"சித்தஸ்ய போகைர்த்வௌ பாகௌ ஶாஸ்த்ரேணைகம் ப்ரபூரயெத்.
குருஶுஶ்ருஷயா பாகம் வ்யுத்பந்நஸ்ய ஸத்க்ரமே.
கிம்சித் வ்யுத்பத்தியுக்தஸ்ய பாகம் போகை: ப்ரபூரயேத்.
குருஶுஶ்ருஷயா பாகௌ பாகம் ஶாஸ்தார்த்தசிந்தயா.

வ்யுத்பத்திமநுயாதஸ்ய பூரயேத் சேதஸோடஙவஹம்.
த்வௌ பாகௌ ஶாஸ்தரவைராக்யைர் த்வௌ த்யாநகுருபூஜயா."
இதி.

"—சிக்ஷையில்லாதவன் சித்தத்தினுடைய வ்யவஹார காலத்தை நான்காகப் பிரித்து நேர்மையாகிய முறையில் சித்தத்தினுடைய முதலில் (போகத்தை) விஷயபோகங்களினுலும் இரண்டு பாகங்களைப் பூர்த்தி செய்ய வேண்டும். அத்யாத்ம ஶாஸ்த்ரத்தினுல் ஒரு பாகத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும். குருஶுஶ்ரூஷயினுல் நான்காவது பாகத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும்"

"சிறிது வ்யுத்பத்தியுள்ளவனுக்கு போகத்தினுல் ஒரு காலத்தையும், குருஶுஶ்ருஷயினுல் இரண்டு காலத்தையும், சாஸ்தார்த்த விசாரத்தினுல் நான்காவத காலத்தையும் பூர்த்தி செய்ய வேண்டும்." என்றவாறு.

இவ்விடத்தில், 'போகம்' என்ற சொல் ஜீவநத்திற்குக் காரணமாயுள்ள பிக்ஷையெடுத்தல் முதலிய செயல்களும், வர்ணுஶ்ரமத்திற்கு உசிதமாயுள்ள செயல்களும் சொல்லப் பெறுவன, ஒரு நாழிகையோ, ஒரு முஹூர்தமோ இயன்ற அளவு யோகத்தை அப்யாஸம் செய்து, பிறகு ஒரு முஹூர்த்தம் ஶாஸ்திரஶ்ரவணத்தோடும், பரிசர்யையினுலுமாவது குருவைப் பின் தொடர்ந்து, முஹூர்தகாலம் தனது தேஹத்தை யநுஸரித்து, யோக சாஸ்த்ரத்தைப் பர்யாலோசனை செய்து, மறுபடியும் முஹூர்த காலம் யோகத்தை அப்யாஸம் செய்ய வேண்டும்.

இவ்வாறு, யோகத்தை முக்கியமாகக் கொண்டு குருஸேவை, ஶாஸ்த்ரஶ்ரவணம் முதலிய செயல்களையும் நடுவில் கலந்து கொண்டு, த்யாநத்தை அப்யாஸம் செய்யும் பொழுது, நித்திரைக்கு முன்பு இந்த தினத்தில் இவ்வளவு முஹூர்தம் வரையில் த்யாநம் முதலியன நடந்தது என எண்ணிக் கணக்குச் செய்ய வேண்டும். பிறகு, அதற்கு மறுதினத்திலாவது அடுத்த பக்ஷத்திலாவது, அடுத்த மாஸத்திலாவது யோக முஹூர்தங்களை வளர்ச்சியடையச் செய்ய வேண்டும். ஆகவே, இவ்வாறு ஒவ்வொரு முஹூர்தத்திலும், ஒவ்வொரு க்ஷணத்தின் யோகத்திலும் வருஷத்தின் அளவில் அதிகமாயுள்ள யோககாலமானது உண்டாகின்றது.

இவ்வாறு, யோகத்தையே ஶரணமடைந்து முக்கியமாகக் கொண்டுள்ள காலங்களில் மற்ற செயல்களுக்குக் குந்தகம் (லோபம்) வருமே என்று ஐயம் கொள்ள வேண்டாம். ஏனெனில்— எல்லாச் செயல்களும் இல்லாதவனுக்கே யோகத்தில் அதிகார மிருப்பதால் என்க. அக்காரணத்தினாலேயே வித்வத்ஸம்ந்யாஸ மானது அபேக்ஷிக்கப் பெறுகின்றது. ஆகவே அந்த யோகத்தில் திளைத்துள்ள புருஷன் அத்யேத்ரு (படிப்பவன்), வணிகர் முதலியவர்களைப் போல க்ரமமாக யோகாரூடனாக ஆகின்றான்.

எவ்வாறு, அத்யயநம் செய்கின்ற மாணவகன் கால்பகுதி, அரைப் பகுதி, முழுப் பகுதி, இரண்டு ரிக், வர்கம் இவைகளை க்ரம மாக படித்துக் கொண்டு, பத்து, பன்னிரண்டு ஆண்டுகளோடு அத்யாபகனாக இருக்கின்றானோ, எவ்வாறு வ்யாபாரம் செய்பவன் ஒரு நிஷ்கம், இரண்டு நிஷ்கம் முதலியவைக் கவனமாகக் கணக்குச் செய்து, கிரமமாக லக்ஷாதிபதியாகவும், கோடிக்கு அதிபதியாகவும் இருக்கின்றானோ, அவ்வாறே அந்த் வ்யாபாரி, அத்யேதா இவர் களோடு கூடவே தொடங்கி மத்ஸரத்தினால் விழுங்கப் பெற்றவன் போல சேர்ந்து கொண்டு அவ்வளவு காலம் வரையில் ஏன் யோகத்தை ஆரோஹம் செய்யமாட்டான். (செய்வான் என்றவாறு).

ஆகையினால், திரும்பத் திரும்ப அடையப் பெறுகின்ற ஸம் கல்பம், விகல்பம் எல்லாவற்றையும் உத்தாலகன் போல, புருஷ முயற்சியினால் பரித்யாகம் செய்து, அஹம்கர்தாவான ஞாநாத்மா வினிடத்தில் மநத்தைச் சேர்க்க வேண்டும். இந்த இரண் டாவது பூமிகையை ஜயித்து, பாலன், போலவும், மூகன் (ஊமை) போலவும் மநத்தைச் சூந்யமாக வைத்துக் கொண்டு இயல்பாக இருக்கும் பொழுது, பிறகு, விசேஷாஹங்காரவடிவாகவும், தெளிவாயுள்ளதுமான ஞாநாத்மாவை, தெளிவற்ற ஸாமாந்ய மாயுள்ள அஹங்காரமாகிய மஹத்தத்வத்தில் சேர்க்க வேண்டு ம்

எவ்வாறு, சிறிது மயக்கத்தையடைந்த விசேஷாஹம்கார மானது தானாகவே ஸங்கோசத்தை யடைகின்றதோ, (ஸம்கோசம் சுருக்கம்) அவ்வாறே, மயக்கமில்லாமலேயே அவ்வாறு மறதியில் முயற்சி செய்கின்றவனுடைய அஹங்காரத்திற்கு ஸம்கோசம் உண்டாகின்றது.

இது உலகப்ரஸித்தமாயுள்ள மயக்கத்தோடும், தார்க்கி கர்களுக்குச் சம்மதாமாயுள்ள நிர்விகல்பகஞாநததோடும் ஸமாநமா

யுள்ளதும், மஹத்தத்வமாத்திரமாக எஞ்சியுள்ளதுமான நிலை யானது மூன்ருவது பூமியாகும். இந்த பூமியிலும் அப்யாஸத் தினுடைய திறமையினுல் வஶீகாரம் செய்யப்பெற்ற ப்ரஸித்த மாயுள்ள இந்த ஸாமாந்யாஹம்காரரூபமாகிய மஹத்தான ஆத்மாவை உபாதிகளற்றதான ஶாந்தமாயுள்ள சிதேகரஸத் தன்மையில் சேர்க்க வேண்டும்.

" மஹத்தத்வம் திரஸ்க்ருத்ய சிந்மாத்ரம் பரிஶோதயேத்" இதி.

"—மஹத்தத்வத்தை ஒதுக்கி, சிந்மாத்ரத்தை எஞ்சியதாக ஶோதநம் செய்யவேண்டும்" என்றவாறு.

இவ்விடத்திலும், முன்பு சொல்லப்பெற்ற மறதியினுடைய முயற்சியே அதைக் காட்டிலும் வியக்கதக்க உபாயத்தன்மையை யடைகின்றது. எவ்வாறு ஶாஸ்த்ரத்தைப் பயிலத் தொடங்கிய புருஷனுக்கு வ்யுத்பத்திக்கு முன்பு (விளக்கம்) ஒவ்வொரு நூலுக்கும் வியாக்யாநம் அபேக்ஷையாயிருக்கும் பொழுதும், வ்யுத்பத்தியுள்ளவைனுக்குத் தானுகவே அடுத்த க்ரந்தத்தி னுடைய உபாயமானது தோன்றுகின்றதோ, அவ்வாறு நன்கு வஶ்யம் செய்யப் பெற்ற பூர்வபூமியிலிருந்து யோகிக்கு உத்தர பூமியினுடைய உபாயமானது தானுகவே தோன்றுகின்றது.

இது விஷயமாக யோகபாஷ்யகாரர் சொல்லுகிருர்—

"யோகேந யோகோ ஞாதவ்யோ
யோகோ யோகாத் ப்ரவர்ததே.
யோ஽ப்ரமத்தஸ்து யோகேந
ஸ யோகீ ரமதே சிரம்," இதி.

"—(ஒரு பூமியின்) யோகாப்யாஸத்தால் அதனுடைய அடுத்த (மேல்) பூமியானது அறியப் பெறுகின்றது. பூர்வ (முன்) பூமியை வெற்றி கொள்வதால், மேலான பூமியில் பிரவேசம் உண்டா கின்றது. எந்த யோகியானவன் யோகாப்யாஸத்திஞல் தோன்று கின்ற ஸித்திகளில் மயக்கமுற்று மோசம் போகாஞே, அவன் யோகத்தினுடைய ஸுகத்தை நீண்டகாலம் அநுபவிக்கின்ருன்" என்றவாறு.

**சங்கை—**

மஹத்தத்வம், ஶாந்தாத்மா இவைகளுடைய நடுவில், மஹத் தத்வத்தை எடுத்துக் கொண்ட அவ்யக்தம் என்ற பெயரை யுடைய தத்வமானது ஶ்ருதியினுல் உதாஹரிக்கப் பெற்றுள்ளது

அவ்விஷயத்தில் நியமநமானது ஏன் சொல்லப் பெறவில்லை. என்றால்? அவ்வாறன்று? ஏனெனில் லயத்தின் ப்ரஸங்கத்தால் என்று சொல்லுவோம்.

எவ்வாறு குடமானது எடுக்க முடியாத ஜலத்தில் தடுக்கப் பெற்றபொழுதிலும் அது மறைவதில்லை. எடுக்கப்பெற்ற நிலையிலுள்ள மண்ணிலோ வெனில் மறைந்து விடுகின்றது. அவ்வாறே மஹத்தத்வம் ஆத்மாவினிடத்தில் மறைவதில்லை. அவ்யக்த்தத்தில் மறைகின்றது. ஸ்வரூபலயமானது புருஷார்த்தமாகாது. ஆத்ம தர்ஶநத்திற்கு அது உபயோகமின்மையால் என்க.

த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மதர்ஶிபி'' இதி:

''—ஸூக்ஷ்மதர்ஶிகளினால் (விவேகிகளினால்) ஸூக்ஷ்மமாயும். ஏகாக்ரதையாயுமிருக்கின்ற புத்தியைக் கொண்டு (அது) காணப் பெறுகின்றது'' என்ற முன் வாக்யத்தில் ஆத்மதர்ஶநத்தை விதித்து, ஸூக்ஷ்மத் தன்மையின் ஸித்தியின் பொருட்டு நிரோதத்தினுடைய நிலையானது சொல்லப் பெற்றதாலும், லயத்திற்கு தினந்தோறும் ஸுஷுப்தியில் இயல்பாகவே ஸித்தியுள்ளதாலும் முயற்சியானது வீணாகவும் ஆகின்றது.

சங்கை—

தாரணை, த்யாநம், ஸமாதி என்ற இவைகளினால் ஸாத்யமாயுள்ள ஸம்ப்ரஜ்ஞாதனுக்கு ஏகாக்ர விருத்தியானது ஸ்வரூபத் தன்மையினால் தர்ஶநத்திற்குக் காரணமாயினும், ஶாந்தாத்மாவினிடத்தில் தடுக்கப் பெற்ற அஸம்பரஜ்ஞாத ஸமாதியை அடைந்த சித்தத்தினுடைய வ்ருத்தியின்மையால், ஸுஷுப்தியைப் போல தர்ஶநத்திற்குக் காரணமென்று சொன்னால், அவ்விதமில்லை, ஏனெனில்? இயல்பாகவே ஸித்தமாயுள்ள தர்ஶநத்திற்குத் தடுத்தல் என்பது முடியாது. ஆகையினாலே ஶ்ரேயோ மார்கத்தில் சொல்லப் பெற்றுள்ளதும் வருமாறு—

'' ஆத்மாநாத்மாகாரம்
ஸ்வபாவதோऽவஸ்திதம் ஸதா சித்தம்.
ஆத்மைகாகாரதயா
திரஸ்க்ருதாநாத்மத்ருஷ்டிம் விததீத,'' இதி;

''—மநதானது எப்பொழுதும் ஆத்மவடிவாகவும், அநாத்ம வடிவாகவும் (ஆத்மவடிவமற்றது) இருப்பது. ஆத்மாவினுடைய

ஒன்றிய நிலேயோடு திரஸ்காரம் செய்யப் பெற்ற ஆத்மாவல்லாத த்ருஷ்டியைச் (ஞானம்) செய்ய வேண்டும்'' என்றவாறு.

மற்றும், எவ்வாறு குடமானது தோன்றும் பொழுது இயல் பாகவே ஆகாயமானது நிறைந்துள்ளதாகக் காணப் பெறு கின்றதோ, பிறகு புருஷனுடைய முயற்சியினுல் ஜலம், அரிசி முதலியவைகள் நிரப்பப் பெறுகின்றனவோ. பிறகு அந்த குடத்தி னுள்ளே இருக்கின்ற அரிசி, ஜலம் முதலியவைகளே வெளியே எடுத்து விட்டாலும், ஆகாயத்தை வெளியே தள்ளமுடியாது. குடத்தினுடைய வாயை மூடினுலும் அதனுள்ளேயே ஆகாயம் இருக்கவே செய்கின்றது.

அது போல மநம் தோன்றும் பொழுது, ஆத்மசைதந்யமும் நிறைந்து காணப் பெறுகின்றது. அவ்வாறு தோன்றிய சித்த மானது பிறகு உலேக்களத்தில் வைக்கப் பெற்ற உருக்கிய தாமிரம் போல குடம், வஸ்த்ரம், ரூபம், ரஸம், ஸுகம், துக்கம் முதலிய செயல்களின் வடிவாயுள்ள தன்மையை, போகத்திற்குக் காரணமாயுள்ள தர்மாதர்மத்தினுல் தோற்றுவிப்பதாகும்.

அவ்விடத்தில் ரூபம், ரஸம் முதலிய ஆத்ம வடிவமற்ற நிலே யானது தடுக்கப் பெற்ருலும், நிமித்தமாயுள்ள சிதாகாரமானது, தடுக்கப் பெறுவதற்கு முடியாது. பிறகு நிரோதஸமாதியினுல் வ்ருத்தியின்மையின் காரணமாக ஸம்ஸ்காரத்தின் அளவிலே எஞ்சியுள்ள ஸூக்ஷ்மத்தோடு சிதாத்மத்தின் அளவிலே நேரிடை யாயுள்ள ஏகாக்ரத்தோடுகூடிய சித்தத்தினுல் இடையூறற்ற ஆத்மாவானது அநுபவிக்கப் பெறுகின்றது.

இந்த அபிப்பிராயத்தோடு கூட வார்த்திககாரரும், ஸர்வாநு பவயோகியும் சொல்லுகின்றனர்—

'' ஸுகது:காதி ரூபித்வம் தியோ தர்மாதி ஹேதுத:
நிர்ஹேதுத்வாத்மஸம்போதரூபத்வம் வஸ்துவ்ருத்தித:
ப்ரஶாந்த வ்ருத்திகம் சித்தம் பரமாநந்ததீபகம்.
அஸம்ப்ரஜ்ஞாதநாமாயம் ஸமாதிர் யோகிநாம் ப்ரிய:'' இதி.

''—ஸுகம், துக்கம் என்ற இவைகளுடைய உருவத்தின் தன்மையானது தர்மாதர்மத்திற்குக் காரணமாயுள்ள புத்தி யிலிருந்து தோன்றுவது. காரணமற்ற தன்மையான ஆத்மஸம் போதரூபத்தன்மையானது, வஸ்துவினுடைய வ்ருத்தியி

லிருந்தும் தோன்றுவது ப்ரஶாந்தமாயுள்ள வ்ருத்தியை யுடையதும், பரமாநந்தத்தை ஒளிரச் செய்வதுமான சித்த மானது அஸம்ப்ரஜ்ஞாத என்ற பெயருள்ள ஸமாதியாகும். அது யோகிகளுக்கு பிரியமாயுள்ளதாகும்'' என்றவ

மற்றும்—

ஆத்மதர்ஶநத்திற்கு இயல்பாகவே நிறைவு இருந்தாலும், அநாத்மதர்ஶநத்தைத் தடுப்பதின் பொருட்டு, நிரோதமானது அப்யாஸம் செய்யப் பெற வேண்டும். அக் காரணத்தாலேயே சொல்லப் பெற்றுள்ளது வருமாறு—

'' ஆத்மஸம்ஸ்தம் மந: கருத்வா ந கிம்சிதபி சிந்தயேத்'' இதி.

''—மனத்தை ஆத்மாவிடம் நிலைக்கச் செய்து (ப்ரஹ்மத்தைத் தவிர) வேறு ஒன்றையும் சிந்தனை செய்யாதிருக்க வேண்டும்'' என்றவாறு.

யோகதர்ஶநத்திற்கு சித்தத்திற்குரிய சிகித்ஸையான ஸமாதியின் அளவிலே ப்ருவ்ருத்தியுள்ளதால் நிரோதம் ஸமாதி இவைகளில் ஆத்மதர்ஶநமானது நேரிடையாகச் சொல்லப் பெறவில்லை. ஆனால் சுற்றி வளைத்து ஒப்புக் கொள்ளப் பெற்றுள்ளது—

'' யோக: சித்தவ்ருத்திநிரோத:'' இதி.

''—மநத்தினுடைய மாறுதலை அடக்குதல், அதாவது— மாறுதல் இல்லாமல் செய்வது யோகம் எனப் பெறும் என்பது தாத்பர்யம்.'' என்ற ஸூத்ரத்தைச் செய்து;

''தத்ரத்ஷ்டு: ஸ்வரூபே அவஸ்தாநம்'' இதி.

''—எல்லா வ்ருத்திகளுடைய நிரோத காலத்தில் சைதந்ய மாத்ர வடிவாயுள்ள புருஷனுக்கு, தனது ஸ்வரூபத்தில் இருப்பானது தோன்றுகின்றது.'' என்று ஸூத்ரம் செய்யப் பெற்றுள்ளதாலும் என்க.

ஆனபொழுதிலும், நிர்விகாரமான த்ரஷ்டா (பார்ப்பவன்) எப்பொழுதும் ஸ்வரூபத்திலேயே இருப்பவன், இருந்த பொழுதிலும், வ்ருத்திகளானது தோன்றும் பொழுது அவ்

விடத்தில் சித்தின் சாயையில் ப்ரதிபலித்துள்ள பொழுது, அதனுடைய விவேகமின்மையின் காரணமாக அஸ்வஸ்தன் (நிலையற்ற) போல த்ரஷ்டா (புருஷன்) இருக்கின்ருன்.

அதுவும் அடுத்த ஸூத்ரத்தினுல் சொல்லப் பெற்றுள்ளது—

"வ்ருத்திஸாரூப்யம் இதரத்ர"— இதி.

"—யோகமில்லாத காலத்தில், புருஷனுக்கு ஸாத்விகம். ராஜஸம், தாமஸம் முதலிய வ்ருத்திகளோடு ஒன்ருயிருக்கின்ற தன்மையானது உண்டாகின்றது." என்றவாறு.

வேருெரு இடத்திலும் ஸூத்ரம் செய்யப் பெற்றுள்ளது—

"ஸத்வபுருஷயோ: அத்யந்தாஸம்கீர்ணயோ: ப்ரத்யயாவிசேஷ போக: பரார்த்தத்வாத் ஸ்வார்த்தஸ்ம்யமாத புருஷஞாநம்" இதி

"—மிகவும் வேறு வேருனவைகளான, புத்தி, ஆத்மா இவ்விரண்டினுடையவும், உண்மையில் வேறு என்ற ஞான மில்லாமையானது போகம் எனப் பெறும். புருஷனுக்காக ஏற்பட்ட அந்த போகத்தைக் காட்டிலும், வேருயுள்ள சித்ஸ்வரூப ப்ரதிபிம்ப விஷயமான ஸம்யமாத்தினுல் ஜீவஸ்வ ரூப ஞானமானது தோன்றுவதாகும்" என்றவாறு.

மற்றும்—

"—சிதேரப்ரதிஸம்க்ரமாயா: ததாகாராபத்தௌ ஸ்வபுத்திஸம் வேதநம்" இதி.

"—விஷயத்தினுடைய செயலை முன்னிட்டுத் தோன்று கின்ற தொடர்பற்ற புருஷனுடைய ஸந்நிதி பலத்தால் புத்தி வ்ருத்தியானது, புருஷனுடைய ப்ரதிபிம்பமுள்ளதாய்த் தோன்றும் பொழுது, புருஷனுக்கு அவனுல் போக்யமான சித்த வ்ருத்தியினுடைய அநுபவமானது உண்டாகின்றது" என்றவாறு.

மற்றும்—

நிரோதஸமாதியினுல் ஶோதிக்கப் பெற்ற த்வம் பதார்த்தமானது ஸாக்ஷாத்காரம் செய்யும் பொழுது, அதற்கு ப்ரஹ்மத்தின் தன்மையானது புலனுவதற்கு மஹாவாக்யத்தோடு

ப்ரஹ்மவித்யா என்ற பெயரையுடைய வேறு வ்ருத்தியானது உண்டாகின்றது. ஶுத்தமாயுள்ள த்வம்பதார்த்தத்தினுடைய ஸாக்ஷாத்காரத்தில் நிரோதஸமாதி ஒன்றே உபாயமென்று சொல்ல முடியாது, ஆனால் சித், ஜடம் இவைகளுடைய விவேகத்தினாலும் தனியாகச் செய்யப் பெறும் பொழுது, அவ் விடத்தில் ஸாக்ஷாத்காரமானது தோன்றக் கூடும்.

ஆகையினாலே வஸிஷ்டரும் சொல்லுகிறார்—

'' த்வௌ க்ரமௌ சித்தநாஶஸ்ய யோகோ ஞானம் ச ராகவ.
யோகஸ்தத் வ்ருத்திரோதோ ஹி ஞானம் ஸம்யகவேக்ஷணம். இதி.

அஸாத்ய: கஸ்யசித் யோக: கஸ்யசித் ஞாநநிஶ்சய:
ப்ரகாரௌ த்வௌ ததோ தேவ: ஜகாத பரமேஶ்வர:'' இதி. ச.

''-சித்தநாஶத்திற்கு இரண்டு வழிகளுண்டு. அவை யோகம். ஞானம் என்பவை. யோகமென்பது அதனுடைய வ்ருத்தியைத் தடுத்தலன்றோ, ஞானமானது அதனால் நன்கு பார்ப்பதாகும்' எனவும்;

''ஒரு சிலருக்கு யோகமானது ஸாதிக்க முடியாததாயிருக்கும் ஒரு சிலருக்கு ஞானத்தினுடைய உறுதியை யுடையதாயிருக்கும். ஆகையினால் இந்த இரண்டு வழிகளையும் பரமேஶ்வரன் சொன்னார்'' எனவும் சொல்லப் பெற்றுள்ளது.

**சங்கை—**

விவேகமும் யோகத்திலே முடிவையடைகின்றது. (சித்தம், ஜடம் இவைகளின் விவேகம்) அநுபவகாலத்தில் ஆத்மாவுக்குப் புலனாகின்ற ஏகாக்ரவ்ருத்திரூபமாகும்படியினாலே அந்த விவேக மானது க்ஷணகாலமுள்ள ஸம்ப்ரஜ்ஞாதரூபமாயும் இருக்கலாமே. ஆம். அப்படியிருந்த பொழுதிலும் ஸம்ப்ரஜ்ஞாதம், அஸம்ப்ரஜ் ஞாதம் இவைகளுடைய ஸ்வரூபத்தாலும், ஸாதநத்தாலும் பெரிய வைலக்ஷண்யம் (வேறுபாடு) இருக்கின்றது.

மற்றும், வ்ருத்தி, அவ்ருத்தி இவைகளினாலும் ஸ்வரூபபேத மானது தெளிவாகவே காணப் பெறுகின்றது. ஸாதநமோ வெனில்? ஸம்ப்ரஜ்ஞாதஸமாதிக்கு ஸஜாதீயம் இருப்பது கொண்டு தாரணை முதலிய மூன்றும் அந்தரங்கங்களாகும். அஸம்பரஜ்ஞாத ஸமாதிக்கோ வெனில் விஜாதீயமாயிருப்பதால் பஹிரங்கமாகும்.

இதைக் குறித்து ஸூத்ரமும் காணப் பெறுகின்றது—

"ததபி பஹிரங்கம் நிர்பீஜஸ்ய "இதி.—

"அதுவும், இவை மூன்றும் கூட நிர்பீஜ ஸமாதிக்கு (அஸம்ப்ரஜ்ஞாதஸமாதிக்கு) வெளிப்படையான ஸாதநங்களாகும்" என்றவாறு.

அதாவது—தாரணை முதலியவை ஓய்வடைந்த நிலையே அஸம்பரஜ்ஞாத ஸமாதியாகும். இந் நிலையில் தாரணை முதலியவை இல்லாமற் போகின்றது. அதனால் இவை வெளிப்படையான ஸாதநங்கள் எனச் சொல்லப் பெறுகின்றன.

தாரணை முதலியவை யாதேனும் ஒரு வ்ருத்தியுடன் நிகழ்வதாகும். இவை மூன்றின் அப்யாஸத்தினால் ஸம்பரஜ்ஞாத ஸமாதியினுடைய மேன்மையை யோகி அடைகின்றான். பர வைராக்யம் என்ற ப்ரஜ்ஞாப்ரஸாதத்தைப் பெறுகின்றான். இதனால் அஸம்பரஜ்ஞாத ஸமாதிக்குத் தகுதியுள்ளவனாகின்றான். தாரணை முதலியவை ப்ரஜ்ஞாப்ரஸாதத்தை உண்டுபண்ணுகின்றதே தவிர, ஸாக்ஷாத்தாக அஸம்பரஜ்ஞாத ஸமாதியைத் தோற்றுவிப்பதில்லை என்பது தாத்பர்யம்.

மற்றும், விஜாதீயமாயிருந்த பொழுதிலும், பலவகையாயுள்ள அநாத்மவ்ருத்திகளைக் களைந்து உபகாரம் செய்கின்ற காரணத்தால் வெளிப்படையாயுள்ள தன்மைக்கு விரோதமாகாது. இந்த உபகாரத்தையே விஸதாரமாகச் சொல்லுவதற்கு ஸூத்ரத்தையும் செய்கிறார்—

" ஶ்ரத்தா–வீர்ய-ஸ்ம்ருதி-ஸமாதி-ப்ரஜ்ஞாபூர்வக இதரேஷாம்" இதி.

"—ஶரீரத்தை விட்டு ப்ரக்ருதியில் லயமடையாத மற்ற யோகிகளுக்கு, அதாவது உபாயப்ரயத்நத்தைக் கைக்கொண்டவர்களுக்கு ஶ்ரத்தை, வீர்யம், ஸ்ம்ருதி, ஸமாதி ப்ரஜ்ஞை, என்ற உபாயங்களின் வழியாக (புருஷனிடத்தில், தோற்ற முண்டாகும் என்பது.

இவ்விடத்தில் சில தேவதை முதலியவர்களுக்கு முன் ஸூத்திரத்தில், பிறவியிலேயே ஸமாதியைச் சொல்லி, மனிதர்களைக் குறித்து இது சொல்லப் பெறுகின்றது. 'எனக்கு இந்த

யோகமே சிறந்த புருஷார்தத்த ஸாதநம் என்ற நம்பிக்கையே ஸ்ரத்தை யென்பதாகும். அந்த ஸ்ரத்தையும் உயர்ந்த பெருமைகளைக் கேட்பதிஞலேயே தோன்றுவது. அந்த உத்கர்ஷமும் ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது—

"தபஸ்விப்யோऽதிகோ யோகீ ஞாநிப்யோऽபி மதோऽதிக:.

கர்மிப்யஸ்சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுந" இதி

"ஓ அர்ஜுந! தவம் செய்பவர்கள், சாஸ்த்ரங்களில் அறிவு பெற்றவர்கள் கர்மங்களைச் செய்வோர் ஆகியோரைக்காட்டிலும், த்யாநம் செய்கின்ற யோகியானவன் மேலானவன் என்பது என்னுடைய துணிவு. ஆகையினுல் நீ யோகியாக இருக்கக் கடவாய்" என்றவாறு.

உத்தமலோகத்திற்குத் துணையாயிருப்பதால் க்ருச்ரசாந்த்ராயணம் முதலிய தவத்தைக் காட்டிலும், ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மங்களைக் காட்டிலும் யோகம் சிறந்தது. ஞாநத்தைக் குறித்து அங்கமாயிருப்பதால் சித்தத்தினுடைய விஸ்ராந்திக்குக் காரணமாயிருப்பதாலும் ஞாநத்தைக் காட்டிலும் சிறந்தது (என) இவ்வாறு உணர்ந்து கொள்ளுகிறவனுக்கு, யோகத்தில் ஸ்ரத்தையும் தோன்றுகின்றது. அந்த ஸ்ரத்தையிலும் வாஸிதமாயிருக்கின்ற நிலேயில் வீர்யமான உத்ஸாஹமானது தோன்றுகின்றது. அதாவது—எப்படியாவது யோகத்தை ஸம்பாதிப்பேன்" என்ற உத்ஸாஹமென்பது.

இத்தகைய உத்ஸாஹத்தினுல் அவ்வப்பொழுது அநுஷ்டாநம் செய்ய வேண்டிய யோகத்தினுடைய அங்கங்கள் ஸ்மரணம் (சிந்தை) செய்யப் பெறுகின்றன. அந்த ஸ்மரணத்திஞலும் நன்கு அநுஷ்டிக்கப் பெற்ற ஸமாதியிலிருந்து ஆத்யாத்மத்தின் தெளிவும் தோன்றுகின்றது. அப்பொழுது 'ருதம்பரா' என்ற ப்ரஜ்ஞையானது தோன்றுவதாகும். அந்த ப்ரஜ்ஞைக்குக் காரணமான அஸம்ப்ரஜ்ஞாதஸமாதியானது தேவதைகளைக் காட்டிலும், மற்றவர்களான மனிதர்களுக்குக் கைவரப் பெறுகின்றது.

அந்த ப்ரஜ்ஞையையும் ஸூத்ரத்தின் வடிவாகச் சொல்லுகிருர்—

"ருதம்பரா தத்ர ப்ரஜ்ஞா" இதி.

"—ருதம் ஸத்யம், வஸ்துவினுடைய உண்மை நிலையினைத் தரிப்பது (தாங்குவது) ப்ரகாசிக்கச் செய்வது என்பதே ருதம்பரா என்பது. அவ்விடத்தில் ஸமாதியினுடைய உத்கர்ஷத்தினுல் தோன்றிய அத்யாத்ம ப்ரஸாதமானது இருக்கும் பொழுது" என்பது பொருள்.

இப்பொழுது ருதம்பரத் தன்மையின் உபபத்தி (நிரூபணம்) யானது ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லப் பெறுகின்றது—

"ஶ்ருதாநுமாநப்ரஜ்ஞாப்யாம் அந்யவிஷயா
விசேஷார்தத்வாத்" இதி.

"—(ருதம்பரா என்ற ப்ரஜ்ஞையானது) ஶ்ருதி, அநுமாநம் இவைகளினுல் தோன்றுகின்ற ப்ரஜ்ஞையைவிட வேருனது. அது வஸ்துக்களின் விசேஷ ஸ்வரூபத்தைத் தெரிவிக்கின்றது என்பது அந்த ஸூத்ரத்தினுடைய தாத்பர்யம்.

அதாவது—ஶ்ருதி, அநுமானம் இவைகளால் கிடைக்கின்ற ஞாநம் ஸாமாந்யமாகும். வஸ்துக்களுடைய விசேஷ ஸ்வரூபத்தைக் காட்டும் தன்மையது அல்ல. 'ருதம்பரா' என்ற ப்ரஜ்ஞையானது மேற்கண்ட இரண்டு ப்ரமாணங்களும் பிரவேசிக்க வியலாத ப்ரஜ்ஞா பூமியாகும்.

"இதில் உள்ளவாறு யதார்த்தத ஜ்ஞாநம் தோன்றுவது ஸூக்ஷ்மமான பரமாணுக்கள், மறைவுள்ள வஸ்துக்கள், தூரத்திலுள்ள வஸ்துக்கள், இந்த ப்ரபஞ்ச நிலையில் ப்ரதயக்ஷமாகின்றன. இவைகள் லௌகிகப்ரத்யக்ஷம், ஶப்தம், அநுமாநங்களான பிரமாணங்களுக்குப் புறம்பானவை என்பது.

மற்றும் ஸூக்ஷ்மம், வ்யவஹிதம், விப்ரக்ருஷ்டம் என்ற வஸ்துக்களில் அயோகிப்ரத்யக்ஷமானது ப்ரவேசிப்பதில்லை. ஆகமம், அநுமாநம் இவைகளினுல் அந்த வஸ்துக்கள் யோகிகளினுல் உணரப் பெறுகின்றன. அவைகளும் ஶாஸ்த்ரம், அநுமாநம் இவைகளிலிருந்து தோன்றுவனவாம்.

இவை வஸ்துவின் ஸாமாந்ய நிலையையே புலனுகச் சய்வன. இந்த யோகிப்ரத்யக்ஷமோவெனில்? வஸ்துவினுடைய விசேஷமாயுள்ள கோசத்தினுல் (புலப்படுவது) ருதம்பரா என்றது.

அதற்கும் யோகிப்ரதயக்ஷத்தினுடைய அஸம்ப்ரஜ்ஞாத ஸ்மாதியில் வெளிப்படையான அங்கத் தன்மையினுடைய நிறைவின் பொருட்டு உபாகாரியயுள்ள நிலையானது ஸூத்ரத்தினால் சொல்லப் பெறுகின்றது—

"தஜ்ஜ: ஸம்ஸ்கார: அந்யஸம்ஸ்காரப்ரதிபந்தீ" இதி.

"—மேலே சொன்ன (ருதம்பரா) ப்ரஜ்ஞாநிலையினால் தோன்றுகின்ற ஸம்ஸ்காரமானது, மற்ற வெளி விஷயங்களால் தோன்றுகின்ற ஸம்ஸ்காரங்கள் தோன்றாவண்ணம் தடுக்கும் தன்மையது" என்றவாறு.

இந்நிலையிலுள்ள யோகியானவன் வெளிவிஷயங்கள் தனது மநத்தில் தங்குவதற்கு இடம் கொடான். அத்தன்மையான பூர்வவாஸனைகள் இருப்பினும், அவைகள் தன்னை மேற்கொள்ளவும் இடம் கொடான். ஸமாதியினால் ப்ரஜ்ஜையானது உறுதியாகின்றது. அதன் காரணமாக ஸமாதிவடிவாயமைந்த ஸமஸ்காரமானது மேன்மேலும் வளர்ச்சியடைகின்றது.

ஸாதாரணமாயுள்ள விஷயாநுபவத்தில் மநம் அதன் கண்ணே நிற்பதுபோல, ஸமாதிநிலை உறுதி பெற்ற மநம் அந்நிலையில் இருப்பதாகும் இரண்டிற்கும் வித்யாஸமில்லை என்றாலோ, வித்யாஸமுண்டு. ஸமாதிநிலையால் தோன்றும் ஒன்றிய தன்மையானது (ஐகாக்ரியம்) மநத்தின் விஷயவாஸனைகளைக் களைந்து அதைத் தூய்மை செய்கின்ற இயல்பினையுடையது; புருஷஸாக்ஷாத்காரம் தோன்றுமாறும் செய்கின்றது. புருஷஸாக்ஷாத்காரம் தோன்றவே மநம் வ்ருத்தியில்லாமல் ஓய்வைப் பெறுகின்றது. அதாவது மநோநாஶம் தோன்றுவது என்பது. விஷயாநுபவத்தினுடைய ஒன்றிய நிலையானது விஷயாநுபவங்களை வளர்ச்சி செய்வதாகும்.

இப்பொழுது, அஸம்ப்ரஜ்ஞாதஸமாதியினுடைய வெளிப்படையான ஸாதநத்தைச் சொல்லி, அதனுடைய நிரோதப்ரயத்நத்திற்கு அந்தரங்கஸாதநத் தன்மையை ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லுகிறார்—

"தஸ்யாபி நிரோதே ஸர்வநிரோதாத் நிர்பீஜ: ஸமாதி:' இதி.

"—முன்பு சொல்லப் பெற்ற ('ருதம்பரா') ப்ரஜ்ஞையினால் தோன்றுகிற) ஸம்ஸ்காரப்ரவாஹத்திற்குத் தடைதோன்றும்

பொழுது, எல்லா ஸம்ஸ்காரங்களுக்கும் தடைதோன்றுகின்றது. அங்கிலே 'நிர்பீஜம்' என்ற ஸமாதியாகும்.'' என்றவாறு.

இந்த ஸமாதியும் ஸுஷுப்திக்கு ஸமாநமாயுள்ள ஸாக்ஷி சைதன்யத்தோடு அநுபவிப்பதற்கு முடியும். இது எல்லா புத்திகளுடைய வ்ருத்தி (செயல்) இல்லாமமையால் ஸுஷுப்தியே யாகும் என்று ஐயம் கொள்ள வேண்டாம். ஏனெனில்? மநத்தின் ஸ்வரூபத்திற்கு ஸத், அஸத் இவைகளினுல் வேஶேஷமாயிருப்பதால் என்க.

இதைக் குறித்து கௌடபாதாசார்யரினுல் சொல்லப்பெற்றுள்ளது வருமாறு—

''நிக்ருஹீதஸ்ய மநஸோ நிர்விகல்பஸ்ய தீமத:
ப்ரசார; ஸ து விஜ்ஞேய; ஸுஷுப்தேऽந்யோ ந தத்ஸம:
லீயதே ஹி ஸுஷுப்தௌ தத் நிக்ருஹீதம் ந லீயதே.
ததேவ நிர்பயம் ப்ரஹ்ம ஞாநாலோகம் ஸமந்தத:.'' இதி.
த்வைதஸ்யாக்ரஹணம் துல்யமுபயோ: ப்ராஜ்ஞதுர்யயோ:.
பீஜநித்ராயுத: ப்ராஜ்ஞ: ஸா ச துர்யே ந வித்யதே.
ஸ்வப்நநித்ராயுதாவாத்யௌ ப்ராஜ்ஞஸ்த்வஸ்வப்நநித்ரயா.
ந நித்ராம் நைவ ச ஸ்வப்நம் துர்யே பஶ்யந்தி நிஶ்சிதா;
அந்யதாக்ருஹ்ணத: ஸ்வப்னோ நித்ரா தத்வமஜாநத:.
விபர்யாஸே தயோ: க்ஷீணே துரீயம் பதமஶ்நுதே.'' இதிச.

''—முன் ஶ்லோகங்களில் மநத்தினுல் இந்த பேதப்ரபஞ்சம் தோற்றுகின்றது என்றும், இந்த மநம் ஒழிந்த பிறகு இவைகளும் ஒழியுமென்றும், அதற்கு ஸத்யமாயுள்ள ஸத்ப்ரகாஶ வடிவான ஶுத்தப்ரஹ்மத்தோடு ஒன்றிய ஞாநம் காரணம் எனவும் சொல்லப் பெற்றது. இவ்வாறு மநம் ஒழிந்த பிறகு இந்த ஆத்ம வடிவம் இருக்கின்ற க்ரமமானது முமுக்ஷுக்களால் அறியத் தக்கது.

அப்பொழுது ஞாநரூபியாய், நிர்விகல்பனுய் (அவன்) விளங்குகின்ருன் அன்ருே! நித்யமும் ஸுஷுபதி தஶையில் நிர்விகல்பக ஞாநஸ்வரூபியாயிருப்பது ஸ்வப்ரகாஶனுயிருக்கின்ற ஆத்மனுக்கு ப்ரத்யக்ஷமாயிருக்கையில், இதை விட மநம் அழிந்த பிறகு, இந்த ஆத்மஸ்வரூபம் இருக்கின்ற நிலே வேறில்லாமையால் அறிய வேண்டியதில்லே என்பது தாத்பர்யம்.

ஸுஷுப்திக்கும் மநம் முதலியவை யொழிந்த நிர்விசேஷ தசைக்கும் மிகவும் பேதமுண்டு. ஸுஷுப்தியில் க்லேஶ கர்மா வித்தைகள் முதலிய துக்க பீஜங்களோடு கூடியிருக்கின்றான். ப்ரஹ்மஜ்ஞாநம் வந்த நிலையில் அவைகள் நீங்கி, ஶுத்தமாய், ஶாந்தமாய் க்லேஶமொழிந்து ஸ்வதந்த்ரமாயிருக்கின்ற வடிவத்தோடு விளங்குகின்றான். ஆதலால் இதற்கும், அதற்கும் பேதமுண்டாகையால் அந்த நிலையில் ஸ்வரூபமானது அறியத் தக்கதாம்.''

'' ஸுஷுப்தியிலும், மோக்ஷத்திலும் ஸ்வரூபத்திற்கு பேத முண்டென்று சொல்லியது இப்பொழுது நிருபணம் செய்யப் பெறுகின்றது. ஸுஷுப்தியில் வாஸனை, பீஜம் முதலியவற்றோடு எல்லா அவித்யைகளோடும் கூடியே லயிக்கின்றானே யன்றி, இவைகள் ஶுத்தமாய் நீங்குவதில்லை. ஆகையால் இந்த ஸுஷுப்தியை விட மோக்ஷத்திற்கு மிகவும் பேதமுண்டு.''

''க்ராஹ்யம், க்ராஹகம் என்ற பேதங்கள் யாவும் நீங்கி ஶுத்த மானாலொழிய, ஶுத்தமாயும், பயமில்லாததாயும், ஶாந்தமாயும், கேவலஜ்ஞாநஸ்வரூபமாயும் விளங்குகின்ற ப்ரஹ்மஸ்வரூபத்தோடு, ஜீவஸ்வரூபம் அபேதத்தை யடைய மாட்டாது. ஆனதால் இந்த பேதங்கள் நீங்குவது மோக்ஷத்திலேயாமன்றி, மற்ற ஸுஷுப்தி முதலிவைகளில் தோன்றாது. ஆனதால் அந்த விலக்ஷணஸ்வரூபம் அறியத் தக்கது. அது ஆகாயம் போல் வ்யாபகாமாயு முள்ளது'' என்றவாறு.

ப்ராஜ்ஞன், துர்யன் இவர்களுக்கு பேதப்ரபஞ்ச ஜ்ஞாந மில்லாமையால், பேதம் யாது? என்ற ஐயத்தை நீக்குவதற்கு இந்த ஶ்லோகம் சொல்லப் பெறுகின்றது—

''—ப்ராஜ்ஞன் துர்யன் இவ்விருவருக்கும் பேதஜ்ஞாநமில்லா திருப்பது ஸமாநமேயாகும். ப்ராஜ்ஞன் பீஜநித்ரையோடு கூடியவன். துர்யனிடத்தில் அந்த நித்ரையில்லை''—அதாவது அந்யதா ஜ்ஞாநத்திற்குக் (வேறுவகையான) காரணமாயுள்ள அஜ்ஞாநத்தின் தொடர்பு ப்ராஜ்ஞனிடத்தில் இருக்கின்றது. துர்யனிடத்தில் அந்த ஸம்பந்தமில்லை என்பது தாத்பர்யம்.''

'' முதலில் சொல்லப் பெற்ற விஶ்வதைஜஸர்கள், ஸ்வப்நம், நித்ரை இவைகளோடு கூடியவர்கள். ப்ராஜ்ஞனே ஸ்வப்நமின்றி

நித்ரையோடு கூடியவன். துர்யனிடத்தில் நித்ரை, ஸ்வப்நம் இவையிரண்டையும் தத்வஜ்ஞாநிகள் காண்பதில்லை.'' என்ற வாறு.

''—அதாவது ஸ்வப்நமென்பது அந்யதாஞாநம். நித்ரை யென்பது அஜ்ஞாநமாகும். ஜாக்ரத் தசையிலும் அந்யதா-ஜ்ஞாநம், அஜ்ஞாநம் இவை யிரண்டும் உண்டு. துரியனுக்கு இவை யில்லை.''

'' அந்யதாஞாநமுள்ளவனுக்கு ஸ்வப்நம் உண்டாகின்றது. உண்மையை யுணராதவனுக்கு நித்ரையுண்டாகின்றது. அந்த ஸ்வப்ந நித்ரைகள் மாறி வருவது ஒழிந்தால் துரியபதத்தை யடைகின்றான்''

''—அதாவது கயிற்றைப் பாம்பு என்று மயக்கமடைவது போல, உலகைக் கண்டு மயக்கமடைவது தத்வத்தை யுணராமல் இருப்பது. இவைகள் விலகி தத்வநிலை பெற்றால், துரியஸ் தாநத்தை யடைகின்றான். அப்பொழுது இந்த ஸ்வப்நமும், நித்ரையும் விலகுகின்றது'' என்றவாறு.

இவ்விடத்தில் 'ஆத்யௌ' என்றது விஶ்வன், தைஜஸன் என்ற இவ்விருவரையும் குறிப்பது. அத்வைதத்தினுடைய வஸ்துவினது அந்யதாக்ரஹணம் என்பது த்வைதரூபத்தினால் ப்ரதிபாஸிப்பதாகும். அதுவும் விஶ்வதைஜஸர்களிடத்திலுள்ள ஸ்வப்நம் எனச்சொல்லப் பெறும். உண்மை நிலையினையுணராமலிருப்பது நித்ரையென்பது. அதுவும் விஶ்வதைஜப்ராஜ்ஞர்களிடத்தி லுள்ளது.

அந்த ஸ்வப்நம், நித்ரை இவைகளுக்கு ஸ்வரூபமாயமைந் துள்ள விபர்யாஸமானது மித்யாஜ்ஞாநம் எனச் சொல்லப் பெறும். அந்த மித்யாஜ்ஞாநமானது வித்யையினால் க்ஷீண மடையும் பொழுது, துரீயபதமான சிறந்த அத்வைதமென்ற வஸ்துவானது அடையப் பெறுகின்றது. அதாவது அநுப விக்கப் பெறுகின்றது என்பது தாத்பர்யம்.

சங்கை—

இவ்வாறு நிர்விகல்ப ஸமாதிக்கும், ஸுஷுப்திக்கும் பெரு கிய பேதம் இருக்கட்டும். ஆயினும் அவ்விடத்தில் தத்வத்தை

யுணர்ந்து கொள்ள விரும்புகின்ற ஜிஜ்ஞாஸுவுக்கு ஞாநஸாதநமான ஸமாதிவேண்டியிருந்தாலும், தத்வத்தையுணர்ந்துள்ள ஜீவந்முக்தனுக்கு, அந்த அபேக்ஷை கிடையாது. ராகம், த்வேஷம் க்லேஶம், பந்தம் என்ற இவைகளுக்கு ஸுஷுப்தியினாலும் நிவ்ருத்தியுண்டாகின்றது, என்றால்; அவ்வாறு சொல்ல வேண்டாம்,

உத்தரம்—

ஏனெனில், தினந்தோறும் தனக்குத் தானே எப்பொழுதாகிலும் வரப்பெற்ற ஸுஷுப்தியானது பந்தத்தை நிவ்ருத்தி செய்கின்றதா? அல்லது அப்யாஸத்தினால் நிரந்தரமாக நிவ்ருத்தி செய்கின்றதா? முதலில் சொல்லியதிலும் ஸுஷுப்திகாலத்தி லுள்ள க்லேஶபந்தத்தினுடைய நிவிருத்தியா என்ன? அல்லது—காலாந்தரத்தில் இருக்கின்றதா? முதலில் சொல்லியது இல்லை. அதற்கு அவகாசமில்லாததால் என்க.

மூடர்களுக்குக்கூட ஸுஷுபதியில் க்லேஶபந்தமானது இல்லையன்றோ! வேறாக இருந்தால் ஆயாஸம் தோன்றுவதுமாகும். இரண்டாவதுமில்லை. அதுவும் ஸம்பவிப்பதில்லை, வேறு காலத்தைச்சார்ந்த ஸுஷுபதியினால், காலாந்தரத்தில் இருக்கின்ற க்லேஶத்திற்கு க்ஷயமானது, தோன்றாதன்றோ! அப்படியிருந்தால் மூடர்களுக்கும் ஜாகரணம், ஸ்வப்நம் இவைகளில் க்லேஶத்திற்கு க்ஷயமானது தோன்றக்கூடும்.

மற்றும், ஸுஷுப்தியில் நிரந்தரமாக அப்யாஸம் செய்வதற்கும் முடியாது. அதற்கு கர்மக்ஷயம் நிமித்தமாய் இருப்பதால் என்க. ஆகையினால் தத்வத்தை யுணர்ந்தவனுக்கும், க்லேஶத்தின் க்ஷயதற்கு அஸம்பரஜ்ஞாத ஸமாதியினுடைய அபேக்ஷையானது வேண்டியதாகும்.

அந்த ஸமாதிக்கும், பசு, குதிரை முதலியவைகளிடத்தில் போல் வாக்கினுடைய நிரோதமானது (தடுத்தல்) முதல் பூமிகையாகும், பாலன், மூடன் முதலியவர்களிடத்தில் போல் நிர்மநஸ்தவம் (ஶூந்மாயுள்ள மனப்பான்மை) இரண்டாவது பூமிகையாகும். மயக்கத்தைப் போல் அஹம்காரமில்லாமை மூன்றாவது பூமிகையாகும். ஸுஷுப்தியில் போல் மஹத்தத்வம் இல்லாமலிருப்பது நான்காவது பூமிகையாகும். இத்தகைய இந்த நான்கு

பூமிகைகளையும் குறித்து "சனை: சனை: உபரமேத்"— மெல்ல மெல்ல உபரமேத்" ( ஓய்வு ) எனச் சொல்லப் பெற்றது.

அவ்விடத்தில் உபரமத்திலும் தைர்யத்தோடு (உறுதியோடு) கொள்ளப் பெற்ற புத்தியானது ஸாதநமாகும். மஹத், அஹம் காரம், மநம், வாக் முதலியவைகளுக்குத் தானகவே தீவ்ரமா யுள்ள வேகத்தோடு, வெளியே கரைபுரண்டு ஓடுகின்ற நதியைப் போல, நிரோதத்தில் தைர்யமானது பெரிதும் வேண்டப் பெற்றது.

புத்தி என்பது விவேகமாகும். முன்னேயுள்ள பூமியானது ஜயிக்கப் பெற்றதா? இல்லையா? என்று பரிக்ஷை செய்து, ஜயிக்கப் பெற்றால், அடுத்த பூமியினுடைய தொடக்கம் செய்ய வேண்டும். ஜயிக்கப் பெறுவிடிலோ, மறுபடியும் அப்யாஸம் செய்ய வேண்டும் என்று அவ்வப் பொழுது விவேசநம் செய்ய வேண்டும்.

மற்றும், "ஆத்மஸம்ஸ்தம்" — 'ஆத்மாவினிடத்தில் நன்கு நிலைத்து' என்பது முதலியவைகளைக் கொண்டு, பகுதியோடு கூடிய ஸ்லோகத்தினால் நான்காவது பூமியினுடைய அப்யாஸ மானது சொல்லப் பெற்றதுமாகும்.

கௌடபாதாசாரியரும் சொல்லுகிறார்—

" உபாயேந நிக்ருஹ்ணீயாத் விக்ஷிப்தம் காமபோகயோ:.
ஸுப்ரஸந்நம் லயே சைவ யதா காமோ லயுஸ்ததா.
து:கம் ஸர்வமநுஸ்ம்ருத்ய காமபோகாந்நிவர்தயேத்.
அஜம் ஸர்வமநும்ருத்ய ஜாதம் நைவது பஸ்யதி.
லயே ஸம்போதயேத் சித்தம் விக்ஷிபதம் சமயேத் புந:.
ஸகஷாயம் விஜாநீயாத் ஸமப்ராப்தம் ந சாலயேத்.
நாஸ்வாதயேத் ஸுகம் தத்ர நி:ஸங்க: ப்ரஜயா பவேத்.
நிஸ்சலம் நிஸ்சரத் சித்தம் ஏகீகுர்யாத் ப்ரயத்நத:
யதா ந லீயதே சித்தம் நச விக்ஷிப்யதே புந:.
அநிங்கநமநாபாஸம் நிஷ்பந்நம் ப்ரஹ்ம தத்ததா" இதி.

—"அந்த உறுதியோடு மேலே கூறப் பெறுகின்ற உபாயங்களால் மநத்தை வசமாகச் செய்யவேண்டும். ஸுஷுப்தியிலும், காம போகங்களிலும் செல்லுகின்ற மநத்தை அவைகளில் செல்ல வொட்டாமல் தடுத்து வெற்றி பெற வேண்டும். ஸுஷுப்தியிலே

மநம் தெளிவடைந்துள்ள பொழுதிலும் மோஹம் (காமம்) போன்றே அதுவும் விரோதியாகும். இது குற்றமுடையதன்று என முன்பு சொல்லப் பெற்றது. ஆதலால் இவற்றில் ஒன்றிலும் மநம் செல்லாமல் வெற்றி கொள்ள வேண்டும்.''

'' இந்த உலகம் யாவும் கல்பனை செய்யப் பெற்றதென்று கண்டுகொண்டு, துயரத்திற்கு இது இருப்பிடமென்றும், தனது அநுபவத்தினுல் சிந்தனை செய்து, காமபோகங்களால் வருவது துன்பமேயாகும். இன்பமல்ல என உணர்ந்து, சிந்தனை செய்வதால் காமங்களில் வைராக்யத்தைக் கொள்ளக் காரணமாகவும் அமையும்.

''இவ்வுலகம் யாவும் பிறப்பற்ற ப்ரஹ்மமே யாகுமென்று ஆசாரியனுடைய உபதேசத்தாலும், ஶ்ருதி வாக்யங்களினுலும் உணர்ந்து கொண்டு த்வைதம் என்னும் வேற்றுமையைக் காணுமல் இருக்க வேண்டும். உண்மையில் த்வைதம் என்பது இல்லையன்றோ! காமபோகங்களிலிருந்து மநத்தைத் திருப்புவதற்கும் இவை வழிவகுக்கும்.''

'' இவ்வாறு ஞாநம், வைராக்யம், இவ்விரண்டையும் கைக்கொண்டு, இவ்வுபாயத்தால் ஸுஷுபதியில் சேருகின்ற மநத்தை எழுப்ப வேண்டும். ஆத்மாவில் ஏகத்தை (ப்ரஹ்மத்தை) அறிய வேண்டும் என்பதாகும். அப்பொழுது விஷயங்களை மநம் பற்றுமாயின், முன்பு சொல்லப் பெற்ற உபாயத்தால் அவற்றில் செல்ல விடாது அடக்க வேண்டும்.''

இவ்வாறு அப்யாஸத்தினுல் விஷயங்களில் செல்லாமலும், ஸுஷுப்தியை யடையாமலும் நடு நிலையிலிருக்கின்ற மநத்தை, ராகபீஜத்தோடு கூடியதென்று நினைக்க வேண்டும். அந்நிலையிலிருந்து தோன்றும் முயற்சியினுல் ஸாம்யத்தை யடைய வேண்டும். எப்பொழுது ஸமாநமாயுள்ள நிலைக்கு (மநம்) வருகின்றதோ, அப்பொழுது சலியாமல் விஷயங்களை விலக்குவதற்கு முயற்சி செய்ய வேண்டும்.''

'' அந்த அப்யாஸத்தினுல் யோகம் வந்துள்ள பொழுது, ஆத்மாவுக்கு ஒருவகையான ஸுகம் தோன்றுகின்றது அன்றோ! அந்த ஸுகத்தையும் அநுபவிப்பது கூடாது. கேவலம் ஞாநத்தில் உறுதியாய் நின்று, சிதாத்ம வடிவத்தில் ஒன்றாக இணைக்க

வேண்டும். அச்சமயமுண்டாகின்ற ஸுகமும் கல்பிதமாகை யால் அதையும் பொய்யென்றே நினைக்க வேண்டும்''

''இத்தகைய உபாயத்தினுல் அடக்கப் பெற்ற மநமானது, எப்பொழுது ஸுஷுப்தியில் லயத்தை யடைகின்றதோ, விஷயங் களிலும் செல்லாதோ, காற்றில்லா விடத்தில் வைத்த தீபம் போல் அசைவற்றிருக்கின்றதோ, அந்நிலையில் ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபஸாக்ஷத்காரம் தோன்றுகின்றது'' என்றவாறு.

சித்தத்தினுடைய நிலைகள்—லயம், விக்ஷேபம், கஷாயம், ஸம்ப்ராப்தம் என நால்வகையாவன. அவ்விடத்தில் தடுக்கப் பெற்ற சித்தமானது விஷயங்களிலிருந்து திரும்பும் பொழுது, முன்பு செய்த அப்யாஸவசத்தால் லயத்தில் நிலைக்குமே யாகில், அப்பொழுது ஸுஷுப்தியின் பொருட்டு எதிர்நோக்கியிருக்கும். அப்பொழுது உத்தாபநத்தின் (எழுச்சி) முயற்சியினுலோ, லயத் திற்குக் காரணமாகிய நிவாரணத்தினுலோ அந்த சித்தம் நன்கு உணர்வைப் பெறும். லயத்திற்குக் காரணங்கள் நித்ரை (துயில்) யில் எஞ்சிய நிலை, அஜீர்ணம், அதிக உணவு, அலைச்சல் முதலியன. ஆகையினுலேயே இதைக் குறித்துச் சொல்லுகின்றனர்—

'' ஸமாபய்ய நிதராம் ஸுஜீர்ணல்பபோஜீ
ஶ்ரமத்யாஜ்யபாதே விவிக்தே ப்ரதேஶே.
ஸதாஸீத நிஸ்த்ருஷ்ண ஏவாப்ரயத்நோ-
ऽதவா ப்ராணரோதீ நிஜாப்யாஸமார்காத்'' இதி.

''—நித்ரையை முடித்துக்கொண்டு நன்கு ஜீர்ணமாகின்ற அல்ப ஆஹாரத்தைப் புசிப்பவனும், ஶ்ரமத்தை த்யாகம் செய்ப வனும், இடையூறு இல்லாத ஜனசந்தடியற்ற பிரதேசத்தில் எப் பொழுதும் அமர்ந்து கொண்டும், ஆசையை யகற்றியவனுகவும், முயற்சியை விட்டவனுகவும் இருக்க வேண்டும். அல்லது தனது அப்யாஸத்தின் வழியினுல் ப்ராணுயாமமாவது செய்து வர வேண்டும்'' என்றவாறு.

மற்றும், லயத்திலிருந்து எழுச்சியடைந்த சித்தமானது தினந்தோறும் ஜாக்ரத் நிலையில் அப்யாஸத்தின் காரணமாக காம போகங்கள் விக்ஷேபமடைந்ததே யாகில், அப்பொழுது விவேக முள்ள ஜனங்களுடைய ப்ரஸித்தமாயுள்ள போக்ய வஸ்துக்களை யடைந்த எல்லாத் துயரங்களையும் அநுஸந்தாநம் செய்வதால்,

ஶாஸ்த்ரப் பிரஸித்தமான பிறவி முதலியவை யற்றதும், இரண்டற்றதுமாயுள்ளதுமான ப்ரஹ்மதத்வத்தின் அநுஸம்தாநத்தை முன்னிட்டுள்ள காரணத்தால், போக்ய வஸ்துக்களுடைய தர்ஶந மின்மையினாலும், அடிக்கடி விக்ஷேபமுண்டாவதால் சித்தம் ஶமநத்தையடையும்.

கஷாயமென்பது—தீவ்ரமாயுள்ள சித்தத்தினுடைய தோஷமாகும். தீவ்ரமாயுள்ள ராகம், த்வேஷம் முதலிய வாஸனைகளினாலே விழுங்கப் பெற்ற சித்தமானது, சில பொழுது ஸமாஹிதம் போல லயவிக்ஷேபமில்லாமல் தூக்கத்தின் ஒன்றிய நிலையில் நிற்கும். அத்தகையது அந்த சித்தமென்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

அதாவது ஸமாஹித சித்தத்திலிருந்து விவேகத்தோடு உணர்ந்து கொள்ளவேண்டுமென்பது.

இது அஸாமஹிதமென்று உணர்ந்து, லயம், விக்ஷேபம் போல கஷாயத்திற்கு பரிஹாரம் செய்ய வேண்டும். இவ்விடத்தில் 'ஸம' என்ற சொல்லால் ப்ரஹ்மம் சொல்லப் பெற்றது.

"ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேஶ்வரம்" இதி.

—"எல்லா பூதங்களிலும் ஸமமாக நிற்பவன் பரமேஶ்வரன்" என ஸ்ம்ருதியும் சொல்லுகின்றது.

மற்றும், லயம், விக்ஷேபம், கஷாயம், என்ற இவைகள் பரிஹாரம் செய்யப் பெற்றுள்ள பொழுது, எஞ்சிய நிலையில் சித்தத்தோடு ஸமமாக ப்ரஹ்மம் இருப்பதாகும். ஸமத்தினால் அடையப் பெற்ற அந்த சித்தமும் லயம், கஷாயம் இவைகளுடைய மயக்கத்தினால் சலநம் அடைவதும் கூடாது.

ஸூக்ஷ்மமாயுள்ள புத்தியினால் லயகஷாயங்களுடைய அடைவுகளை விவேசநம் செய்து, அந்த ப்ரஹ்மத்தினிடத்தில் நீண்ட காலம், அந்த ஸமப்ராப்தியில் முயற்சியோடு கூட நிறுத்த வேண்டும். அவ்வாறு நிலை நிறுத்திய அந்த ப்ரஹ்மத்தினிடத்தில் ப்ரஹ்மஸ்வரூபமாய் அமைந்த பரமாநந்தமானது நன்கு தோன்றுவதுமாகும்.

அவ்வாறே உதாஹரணமும் சொல்லப் பெற்றுள்ளது—

"ஸுகமாத்யந்திகம் யத்தத் புத்திக்ராஹ்யமதீந்த்ரியம்" இதி.

"—புத்தியினால் தீண்டத்தக்கதும் புலன்களைக் கடந்து நிற்பதுமாகிய பேரின்பத்தை எங்கு காண்பானோ, எங்கே நிலைபெறுவதால் இவன் உண்மையினின்றும் நழுவுவதில்லையோ" என்பதாகும்.

இதற்குச் சான்றாக ஶ்ருதியும் காணப் பெறுகின்றது—

"ஸமாதிநிர்தூத மலஸ்ய சேதஸோ
நிவேஶிதஸ்யாத்மநி யத் ஸுகம் பவேத்.
ந ஶக்யதே வர்ணயிதும் கிரா ததா
ஸ்வயம் ததந்த: கரணேந க்ருஹ்யதே." இதி.

"—நிர்விகல்ப ஸமாதியினால் களையப் பெற்ற மலத்தையுடைய சித்தத்தில் வைக்கப் பெற்ற ஆத்மனிடத்தில், யாதொரு ஸுகம் இருக்கின்றதோ, அந்த ஸுகமானது வார்த்தைகளினால் வர்ணிக்கவும் இயலாது. அப்பொழுது தானாகவே அது அந்த:கரணத்தினால் எடுத்துக் கொள்ளப் பெறுகின்றது." என்றவாறு.

சங்கை—

ஸமாதியில் தோன்றிய ப்ரஹ்மாநந்தத்திற்கு புத்தியினால் எடுத்துக் கொள்ளுகின்ற நிலையானது, ஶ்ருதிஸ்ம்ருதிகளினால் சொல்லப் பெற்றது. ஆசிரியரோ (கௌடபாதர்) எனில்—

—"நாஸ்வாதயேத் ஸுகம் தத்ர" இதி.

"—அவ்விடத்தில் ஸுகமானது பருகப் பெறுவதில்லை"—என்று புத்தியினால் எடுத்துக்கொள்ளும் தன்மையின் நிலையினைத் தடுத்துள்ளாரே" என்றால், இது குற்றமாகாது—

—அவ்விடத்தில் நிரோத ஸுகமானது (நிர்விகல்பஸமாதி) மநத்தால் அநுபவிக்கத் தக்கதான ப்ரஹமாநந்தத்தை அநுபவிக்கக் கூடாதெனத் தடுக்கவில்லை. பின் என்னையோவெனில்; அந்த ஸமாதிக்கு விரோதமாயுள்ள ஸவிகல்பமாயுள்ள ஆநந்தத்தையே தடுத்துள்ளார் என்க.

அது எவ்வாறெனில்—வேனில் காலத்தில் நண்பகலில் கங்கையின் நடுவில் அமிழ்ந்துள்ள மனிதனால் அநுபவிக்கப் பெற்ற

ஸைத்ய (தன்மை) ஸுகமானது, அச்சமயம் சொல்ல முடியாத பொழுதிலும், அவன் அந்த ஜலத்திலிருந்து வெளியே வந்ததும் அந்த ஸைத்யஸுகமானது இத்தகையது எனச் சொல்லப் பெறுகின்றது.

அல்லது—ஸுஷுப்தியில் மிகவும் நுண்ணியவைகளான அவித்தைகளுடைய விருத்திகளினுல் ஸ்வரூபஸுகமானது அநுப விக்கப் பெற்ற பொழுதிலும், அப்பொழுது ஸவிகல்பமாயுள்ள அந்த:கரணத்தினுடைய வ்ருத்தியின் ஞானத்தால், அது எடுத்துக் கொள்ள முடியாது. உணர்வைப் பெற்றுள்ள பொழுதிலோ வெனில் நினைவினுல் தெளிவாக பராமர்ஸம் செய்யப் பெறு கின்றது.

அவ்விதமே ஸமாதியில் வ்ருத்தியில்லாத ஸம்ஸ்காரத்தின் அளவிலே எஞ்சியுள்ளதும், ஸூக்ஷ்மத்தோடு கூடியதுமான சித் தத்தினுல் ஸுகாநுபவமானது ஶ்ருதிஸ்ம்ருதி இவைகளில் விவிக்ஷிதம் (சொல்லப்) பெற்றும் காணப் பெறுகின்றது.

இவ்விடத்தில் ஆஸ்வாதம்—(பருகுதல்) என்ற சொல் லானது—

''மஹதிதம் ஸமாதிஸுகம் அந்வபூவம்'' இதி.

''—இந்த மஹத்தான ஸமாதிஸுகத்தை அநுபவித்தேன்'' என்ற இத்தகையதான எழுச்சியடைந்தவனுக்கு, ஸவிகல்ப மாயுள்ள பராமர்ஸம் என்பதே அவ்விடத்தில் ஆஸ்வாதமாகும். இந்த நிலையினையே ஆசார்யர் தடுத்துள்ளார்.

இதையே தனது அபிப்பிராயமுமாகும் என்பதை வெளியிடு வதற்கு—

''நி:ஸங்க: ப்ரஜ்ஞையா பவேத்'' இதி.

''—ப்ரஜ்ஞையினுல் ஸங்கத்தை விட்டவனுக இருக்க வேண்டும்'' எனச் சொல்லப் பெற்றதுமாகும். ப்ரக்ருஷ்டமா யுள்ள (மிகவும் சிறந்ததான) ஸவிகல்பகமான ஞானம் 'ப்ரஜ்ஞா' எனப்பெறும். அந்த ப்ரஜ்ஞையோடு கூடிய ஸங்கத்தைப் பரித்யாகம் செய்ய வேண்டும்.

அல்லது—முன்பு சொன்ன, ''த்ருதி க்ருஹீதா புத்தி: ப்ரஜ்ஞா''—உறுதியினுல் கொள்ளப் பெற்ற புத்தியானது ப்ரஜ்ஞை, எனச் சொல்லப் பெறும். அதனுடைய வடிவாயமைந்த ஸாதநத்தினுடைய ஆஸ்வாதம், அதனுடைய வர்ணனை முதலிய வடிவாயமைந்த ஆஸக்தியை (பற்று) விட வேண்டுமென்பது.

ஸமாதியிலே ப்ரஹ்மாநந்தத்தில் மூழ்கிய (திளைத்த) சித்தமானது, சில பொழுது ஸுகத்தைப் பருகுவதின் பொருட்டு, ஒருக்கால் சீதம் (தண்மை) வாதம் (காற்று) மஶகம் (கொசு) இவைகளுடைய உபத்ரவத்திலிருந்து வெளியே ஸஞ்சரித்தால், அப்பொழுது வெளியே சென்ற சித்தமானது, மறுபடியும், மறுபடியும் (திரும்பத் திரும்ப) சலிக்காமல் இருப்பதற்கு எவ்வாறு இருக்க வேண்டுமோ. அவ்வாறு ப்ரஹ்மத்தோடு கூட ஒன்றியதாகச் செய்யவேண்டும்.

அவ்விடத்திலும், நிரோதத்தினுடைய முயற்சியே ஸாதநமாகும். ஒன்றிய நிலையையே, '' யதாநலீயதே சித்தம் ''— எப்பொழுது சித்தமானது ஒடுங்குவதில்லையோ' என்ற ஶ்லோகத்தினுல் விளக்கம் செய்யப் பெற்றுள்ளது.

''அநிங்கநமநாபாஸம்'' ''—காற்றில்லாமலும், மாறுதல் இல்லாமலுமாக ப்ரஹ்மமானது அப்பொழுது தோன்றுவதாகும்' என்ற இந்த இரண்டு பதங்களினுல் கஷாயம், ஸுகாஸ்வாதம் என்ற இரண்டும் தடுக்கப் பெற்றுள்ளன. லயம், விக்ஷேபம், கஷாயம், ஸுகர்ஸ்வர்த என்ற இவைகளிலிருந்து விடுதலையடைந்த சித்தமானது இடைவிடாத தொடர்போடு ப்ரஹ்மத்தினிடத்தில் நிலைத்துள்ளதுமாகும்.

இந்த அபிப்ராயத்தையே கடவல்லிகளில் படிக்கப் பெற்றுள்ளது—

'' யதா பஞ்சாவதிஷ்டந்தே ஞாநாநி மநஸா ஸஹ.
புத்திஶ்ச ந விசேஷ்டந்தி தாமாஹு: பரமாம் கதிம்.
தாம் யோகமிதி மந்யந்தே ஸ்திராமிந்த்ரியதாரணும்.
அப்ரமத்தஸ்ததா பவதி யோகோ ஹி ப்ரபவாப்யயௌ''
இதி.

''—எப்பொழுது ஐந்து ஞாநேந்திரியங்களும், மநதோடு ஒழிவடைந்து நிற்கின்றதோ, புத்தியும் தனது செயல்களைத்

தொடர்ந்து நடத்தாமல் இருக்கின்றதோ, அப்பொழுது அந்த நிலையைச் சிறந்துள்ள கதி என்று (பெரியோர்கள்) சொல்லுகின்றனர்.''

"உறுதியாயும், புலன்களுடைய தாரணையுள்ளதாயும் இருக்கின்ற இந்த நிலையை யோகமெனக் கருதுகின்றனர். அப்பொழுது யோகியானவன் ப்ரமாதத்தை (நழுவுதல்) அடையாதவனாக இருக்கின்றான். ஏனெனில் யோகமென்பது தோற்றம், அழிவு அல்லவா? அதாவது புலன்கள் தங்கள் தொழிலைச் செய்யத் தொடங்கும் பொழுது, உடனே அவைகளை அடக்கி விடுகின்றது மன்றோ!'' என்றவாறு.

மற்றும், யோகமானது உபேக்ஷை செய்யப் பெறும்பொழுது புலன்களில் செயல்களுடைய தோற்றமுண்டாகின்றது. யோகத்தை அநுஷ்டானம் செய்யும் பொழுதோ அவைகளுடைய லயத்திற்குக் காரணமாயமைவதுமாகும். அக்காரணத்தால் யோகத்தினுடைய ஸ்வரூப லக்ஷணத்தையும் ஸூத்ரமாகச் சொல்லியுள்ளார்—

**"யோக: சித்தவ்ருத்திநிரோத!'' இதி.**

—"யோகமென்பது சித்தத்தினுடைய வியாபாரங்களை (செயல்கள்) தடுத்து நிறுத்தல்'' என்றவாறு.

வ்ருத்திகள் எல்லையற்றனவாய் இருப்பதால் அவைகளைத் தடுப்பதற்கு முடியாது என்ற ஐயத்தைக் களைவதற்கு, வ்ருத்திகள் இவ்வளவுதான் என்பதை அறுதியிட்டுச் சொல்லும் வகையான் இந்த ஸூத்ரம் படிக்கப் பெற்றுள்ளது—

**"வ்ருத்தய: பஞ்சதய்ய: க்லிஷ்டா அக்லிஷ்டா'' இதி.**

—"வ்ருத்திகள் ஐவகை. சில துக்கத் தன்மை வாய்ந்தவை, சில துக்கத்தன்மையற்றவை. அவைகளும் முறையே—**ராகம்**, **த்வேஷம்** முதலிய துயர வடிவாயமைந்த ஆஸுரவிருத்திகள் **க்லிஷ்டம்** எனப்பெறும். ராகம் முதலியவை இல்லாதவை தைவ ஸம்பந்தமானவைகள் (தைவத்தைத் தொடர்ந்த) **அக்லிஷ்டம்** எனப் பெறும்!

ஆன பொழுதிலும், ஐந்து அவயவங்களும் க்லிஷ்டங்கள், அக்லிஷ்டங்கள் என்பவைகளில் அடங்கியவையே யாகும்.

ஆயினும் க்லிஷ்டங்களையே தடுக்க வேண்டும். என்றுள்ள மந்த புத்தியுள்ளவர்களைத் தடுப்பதற்கு, அவைகளோடு அக்லிஷ்டா: என்பதையும் உதாஹரணமாகச் சொல்லப் பெற்றுள்ளன.

மற்றும், பெயர், இலக்கணம் இவைகளினாலே அந்த வ்ருத்திகளை விஸ்தாரமாகச் சொல்லுவதற்கு ஆறு ஸூத்ரங்களையும் சொல்லுகிறார்—

"ப்ரமாணவிபர்யயவிகல்பநித்ரா ஸ்ம்ருதய:" இதி.

"—ப்ரமாணம், விபர்யயம், விகல்பம், நித்ரை, ஸ்மரணம் என்பன ஐவகை வ்ருத்திகளாகும். என்றவாறு.

"ப்ரத்யக்ஷாநுமாநாகமா: ப்ரமாணாநி" இதி.

"—ப்ரத்யக்ஷம், அநுமாநம், ஆகமம், என்பன ப்ரமாணங்களாகும் என்றவாறு.

உபமாநம், அர்த்தாபத்தி, அநுபலப்தி என்ற இம் மூன்றையும் சேர்த்து சிலர் ஆறு ப்ரமாணங்கள் எனச் சொல்லுவர். ஆனால் இவை மூன்றும் அநுமாநத்தில் அடங்கும். ஆகமம்=அப்தவாக்யமாகும். ஶப்தம்=ஸர்வஜ்ஞனையும், கருணையுள்ளவனையுமிருக்கின்ற புருஷனுடைய வாக்யமாகும்.

மற்றும், இம் மூன்று ப்ரமாணங்களிலும் தாரதம்யமுண்டு. (ஏற்றத் தாழ்வு). ஸாதாரண மனிதன் ப்ரத்யக்ஷத்தையும், அறிவில் மிகுந்துள்ளவன் ப்ரத்யக்ஷம், அநுமாநம் இவ்விரண்டையும், இன்னும் விஶாலமாயுள்ள அறிவைப் பெற்றவன், ஶப்தத்தையும் ப்ரமாணமாகக் கொள்ளுவான். ஆத்மஸ்மவித் என்னும் நிலையைப் பெற்ற மஹாபுருஷனுக்குத் தனது ஸாக்ஷாத்காரமேயன்றி மற்றவை ப்ரமாணங்களாகா. அந்த உயர்ந்த நிலையைப் பெறுவதற்கே இந்தப் ப்ரமாணங்கள், படிகள் போல் அமைந்துள்ள ஸாதங்களாகும்.

"விபர்யயோ மித்யாஜ்ஞாநமதத்ரூபப்ரதிஷ்டம்" இதி.

"—விபர்யயம் என்பது ஒரு வஸ்துவுக்குரிய வடிவம் தோன்றும் பொழுது பொய்யான வேறொரு வடிவத்தின் தோற்றமாம்" என்றவாறு.

ஐயம் என்பது விபர்யயத்தில் சேர்ந்ததாக ஸூத்ரகாரருடைய அபிப்பிராயமாகும். ஆதலால் அதைக் குறித்து வேறுகச் சொல்லப் பெறவில்லை.

''ஶப்தஜ்ஞாநாநுபாதீ வஸ்துஶூந்யோ விகல்ப:'' இதி.

''—விகல்பம் என்பது வஸ்து உண்மையில் இன்றி, வார்த்தையை மாத்திரம் அநுஸரித்துத் தோன்றுகின்ற மனோவிருத்தியாகும்'' என்றவாறு.

முயற்கொம்பு, வந்த்யாபுத்ரன் (மலடியின் மகன்) சைதந்யம்; (அறிவு) புருஷனுடைய ஸ்வரூபம் (இதில் சைதன்யம், புருஷன் என்ற சொற்களினுல் வேற்றுமை காணப் பெறினும், அவைகளால் குறிக்கும் பொருள் ஒன்றேயன்றி இரண்டல்ல. இதற்கு ராஹுவின் தலை (ராஹோ:ஶிர:) என்பது உதாஹரணம்.

''அபாவப்ரத்யயாலம்பநா வ்ருத்திர் நித்ரா'' இதி.

''—நித்ரை யென்பது உள்ளும், புறமும் விஷயத்தினுடைய ப்ரஜ்ஞையில்லாத மனோவிருத்தியாகும்'' என்றவாறு.

ஸாதாரணமாயுள்ள மக்களின் அபிப்பிராயத்தில் நித்திரையில் வ்ருத்தி ஶூந்யமாம். தூங்கி விழித்த பிறகு ''ஸுகமாய்த் தூங்கினேன்'' என்ற நினைவு இருக்கின்றமையால், உண்மையில் அது தூக்கத்தில் அபாவரூபமான (இன்மை) ஒரு வ்ருத்தியாக இருக்கின்றது.

''அநுபூதவிஷயாஸம்ப்ரமோஷ: ஸ்ம்ருதி : இதி.

''—ஸ்ம்ருதி யென்பது அநுபவித்த விஷயமானது மனத்தை விட்டு நழுவாமல் இருத்தல் என்பது.'' என்றவாறு

ப்ரமாணம் முதலிய இவ்வைந்து வ்ருத்திகளும், ஸுகம், துக்கம், மோஹம் இவைகளுக்குட்பட்டவை. இந்த வ்ருத்திகளில், ப்ரமாணம், விபர்யயம், விகல்பம் இவை மூன்றும் ஜாக்ரத்தின் அவஸ்தையில் (நிலை) அநுபவிக்கப் பெறுவன. இம் மூன்று வ்ருத்திகளும், உண்மையில்லாது ஸ்வப்நாவஸ்தையில் அநுபவிக்கப் பெறுகின்றன. ஸுஷுப்தியினது அவஸ்தையில் நித்ரை மாத்திரம் உள்ளது. ஸ்ம்ருதியானது, மற்ற இரண்டு அவஸ்தைகளிலும் உள்ளது. நித்ரையில் அது இல்லை.

மற்றும்—

எவ்விடத்தில் வஸ்துவின் இன்மையானது தோன்றுகின்றதோ, (அவ்விடத்தில்) தமஸினுடைய ஆவரகமானது (மறைவு) உண்டாகும் பொழுது, அந்த தமஸின் இன்மையினது தோற்றமாகும். தமோகுணத்தை விஷயமாகக் கொள்ளுகின்ற வ்ருத்தியே நித்ரையாகும். அநுபவிக்கப் பெற்ற விஷயங்களுடைய நாஶமின்மையை யுடையதான அநுபவத்திலிருந்து தோன்றிய தொடர்பு ஸ்ம்ருதி எனச் சொல்லப் பெறும்,

இப்பொழுது ஐவகையாயுள்ள வ்ருத்திகளுடைய நிரோதத்திற்குரிய ஸாதநத்தை ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லுகிறார்—

'' அப்யாஸவைராக்யாப்யாம் தந்நிரோத: '' இதி.

''—அப்யாஸம், வைராக்யம் என்றவைகளினால் (என்ற உபாயங்களால்) வ்ருத்திகளின் நிரோதம் தோன்றுகின்றது. என்றவாறு.

மநோவிருத்திகள் என்னும் ப்ரவாஹமானது ஸத்வம் எழுச்சி பெற்றுள்ள நிலையில் நல்ல வழியிலும், ரஜஸ் எழுச்சி பெற்றுள்ள நிலையிலும், தமஸ் எழுச்சி பெற்றுள்ள நிலையிலும் தீய வழியிலும் செல்லுகின்றது.

நல்வழியானது அந்தர்முகமாகயுள்ள கைவலயத்திற்குக் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கும். தீயவழியானது விஷய நுகர்ச்சி என்ற ஸம்ஸாரத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும். வைராக்ய ஸாதநத்தால் விஷயப்ரவாஹத்தைத் தடுத்து நிறுத்தியும், அப்யாஸத்தினுடைய துணையால் நல்ல வழி என்றதனை அகற்றி விட்டும், அதில் மநோவிருத்திகளைச் செல்லும்படி செய்தலுமாம். வைராக்யம் ப்ரதிபந்தமாகிய அநிஷ்ட (விருமபத்தகாத) நிவ்ருத்தியையும், அப்யாஸம் இஷ்டப்ராப்தியையும் கொடுக்கும்.

எவ்வாறு, மிகவும் வேகமாயுள்ள நதியின் ப்ரவாஹத்தை அணையினால் தடுத்து, வாய்க்காலின் வழியாக வயல்களின் எதிரே குறுக்கு நெடுக்காக வேறு ஒரு ப்ரவாஹமானது தோற்றுவிக்கப் பெறுகின்றதோ, அவ்வாறு வைராக்யத்தினால் சித்தமென்னும் நதியினுடைய விஷயங்கள் என்ற ப்ரவாஹத்தைத் தடுத்து, ஸமாதியினுடைய அப்யாஸத்தினால் மிகவும் ஶாந்தமடைந்த ப்ரவாஹமானது தோன்றுவதுமாகும்.

அப்யாஸமென்பது—மந்த்ரஜபம், தேவதாத்யாநம் முதலியவைகளுடைய செயல் வடிவாயமைந்த வ்ருத்தியின் இலக்கணத்தைக் கொண்டது. எல்லாச் செயல்களுடைய ஓய்வின் வடிவாயுள்ள ஸமாதிக்கு, ஸாதகன் எந்த வகையில் அப்யாஸம் செய்ய முடியும்? என்ற ஐயத்தைப் போக்குவதற்காக இந்த ஸூத்ரம் செய்யப் பெறுகின்றது—

"தத்ர ஸ்திதோ யத்ந: அப்யாஸ:" இதி.

—"இந்தப் ப்ரகரணத்தில் மநத்தை உறுதியாக (நிலை) நிறுத்துவதின் முயற்சியே அப்யாஸம் எனப் பெறும்." என்றவாறு.

பஹிர்முகமாகிய (வெளிப்படை) வ்ருத்திகள் போய் அந்தர் முகமான (உள்நோக்கு) வ்ருத்திகள் நடைபெறல் ஸ்திதி (நிலைத்தல்) எனப் பெறும். அந்த நிலையை அடைவதற்காக பாஹ்யம், ஆந்தரம் இவைகளை அனுஷ்டித்தல் அப்யாஸம் எனப்பெறும்.

ஸ்திதி என்பது அசைவற்ற நிலை. அது நிரோதம் எனப் பெறும். யத்ந: என்பது மநத்தைச் சார்ந்த உத்ஸாஹம். தானாகவே வெளியே செல்லுகின்ற இயல்பையுடைய சித்தத்தை எப்படியாவது தடுக்கப் போகிறேன், என்ற இத்தகைய உத்ஸாஹத்தில் ஆவர்தநம் (திரும்பத் திரும்பச் செய்வது) செய்வதை அப்யாஸம் எனச் சொல்லப் பெறுகின்றது.

மற்றும்—

இந்த அப்யாஸத்தில் இப்பொழுது தொடங்குகின்றவன் உறுதியில்லாதவனாக இருந்து கொண்டால் அநாதியாக வந்துள்ள எழுச்சியிலிருந்து தோன்றிய வாஸனைகள் எவ்வாறு விலகுகின்றன என்ற ஐயத்தை யகற்றுவதற்காக இந்த ஸூத்ரம் செய்யப் பெறுகின்றது—

"ஸ து தீர்ககாலநைரந்தர்யஸத்காரஸேவித: த்ருடபூமி;" இதி.

"—நீண்ட காலம் இடையறாமல் தோன்றிய ஸாதநங்களோடு அந்த அப்யாஸம் நிகழுமே யாகில், அது உறுதியானதாகும். இங்கு ஸாதநங்கள் என்றது—தபஸ், ப்ரஹ்மசர்யம் வித்தை, ஶ்ரத்தை என்பனவற்றைக் குறிப்பதாகும்.

மக்களோ வெனில்—மூடனுடைய வசநத்தை உதாஹரண மாகக் காட்டுகின்றனர்—

" வித்யுமாநா: சத்வார ஏவ வேதா:; தாங் அத்யேதும் கதஸ்ய
மாணவகஸ்ய பஞ்சதிவஸா அதீதா:; அத்யாப்யஸௌ நாகத:" இதி.

—"நான்கு வேதங்களே காண்கின்றன. அவைகளை அத்யயநம் செய்வதற்குச் சென்ற மாணவனுக்கு, ஐந்து தினங்கள் சென்றன. இதுவரையில் அவன் வரக்காணோம்." என்றவாறு.

—"அப்படிப் போலவே இந்த யோகியானவன் எப்பொழுது நாட்களினுலோ, மாஸங்களினுலோ யோகஸித்தியை (நிறைவு) விரும்புகின்ருனே, அப்பொழுது அவ்வாறு இருப்பவனுவன். ஆகையினுல் நாட்களினுலோ, மாஸங்களினுலோ நீண்டகாலம் யோகமானது நன்கு ஸேவிக்கப் பெறவேண்டும்.

இவ்விஷயத்தைக் குறித்து ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது—

" அநேக ஜந்மஸம்ஸித்தஸ்ததோ யாதி பராம் கதிம்" இதி.

—"பல பிறவிகளின் வெற்றிப் பயனுகிய பர (சிறந்த) கதியை யடைகின்ருன்" என்றவாறு.

நீண்டகாலம் நன்கு ஸேவித்த பொழுதிலும் விட்டு விட்டு ஸேவித்தானேயாகில், அப்பொழுது தோன்றுகின்ற யோக ஸம்ஸ்காரங்களுக்கு. அடுத்து வரப்போகின்றவைகளான விச்சேதத்தைச் (பிரிவு) செய்கின்ற வ்யுத்தாந (எழுச்சி) காலங்களைச் சார்ந்த ஸம்ஸ்காரங்களினுல் நாஶமுண்டாகும் பொழுது கண்டநகாரர் சொன்ன ந்யாயமானது வந்துசேரும்—

" அக்ரே தாவங் பஶ்சால்லுப்யமாநோ விஸ்மரண ஶீலஶ்ருதவத்
கிமாலம்பேத" இதி.

—"மறதியையே இயல்பாகக் கொண்ட மந்த புத்தியுள்ள ஒருவன், வேதாத்யயநம் முதலியவைகளில் விரைவாக அப்யாஸம் செய்ய வேண்டுமென்று மேன்மேலும் ஓடும்பொழுது கீழே செய்த அத்யயநம் எப்படி மறந்து போகுமோ" அவ்வாறு விட்டு விட்டு அப்யாஸம் செய்பவனுக்கு ஸமாதியை விட்டு வெளியே வந்துள்ள காலத்தில் தோன்றுகின்ற அநாத்மவாஸநைகளினுல் ஸமாதி காலத்தில் (ஸ பேத ப்ரவாஹ) பேதத்தோடு கூடத் தோன்றிய பரவாஹவடிவான ஆத்மவாஸநை மறந்து

போய்விடுமென்று சொல்லியிருக்கிறார். ஆகையினால் இடையறாது நன்கு ஸேவிக்க வேண்டும் என்பது வலியுறுத்தப் பெற்றது. ஸத்காரம் என்ற சொல் ஆதரவு என்ற பொருளில் வந்தது.

ஆதரவற்ற நிலையிலே ஸேவிக்கும் பொழுது வஸிஷ்டர் சொன்ன ந்யாயம் வந்துசேரும்—

''அகர்த்ரு குர்வதப்யேதச் சேதஸ் சேத் க்ஷீணவாஸநம்.
தூரம் கதமநா ஜந்து: கதாஸம்ஸ்வரணே யதா'' இதி.

—''எவ்வாறு புராணத்தைக் (கதை) கேட்பதில் அதில் ஆதரவு இல்லாமல் தன்னுடைய மநம் எங்கேயாகிலும் சென்று விடும் பொழுது, அவன் கதையைக் கேட்கின்றவன் போல் பிறருக்குத் தோன்றினாலும், கதையைக் கேட்டும் கேட்காமலும் போன்ற. ல்லவோ ஆவான்'' என்றவாறு.

அநாதரவு என்பது— லயம், விக்ஷேபம், கஷாயம், ஸுகாஸ்வாதம் என்ற இவைகளுக்குப் பரிஹாரம் காணாதநிலையாகும் ஆகையினால் ஆதரவோடு ஸேவிக்க வேண்டுமென்று சொல்லப் பெற்றது. நீண்டகாலம் முதலிய மூன்று வகையினால் ஸேவிக்கப் பெற்ற ஸமாதியினுடைய உறுதியாயுள்ள பூமிகையின் தன்மை என்பது விஷயஸுகவாஸனையினாலாவது, துக்கவாஸனையிலாவது அசைப்பதற்கும் முடியாத நிலையாகும்.

தச்ச பகவதா தர்ஶிதம்— இதுவும் பகவானால் காண்பிக்கப் பெற்றுள்ளது—

'' யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத:.
யஸ்மிந் ஸ்திதோ ந து:கேந குருணாபி விசால்யதே.'' இதி.

''—எதனை எய்திய பின் அதைக் காட்டிலும் பெரிய லாபம் வேறு இருப்பதாகக் கருதமாட்டானோ'' எங்கு நிலை பெறுவதாய் துக்கத்தாலும் சலிப்பை அடையமாட்டானோ'' என்றவாறு.

வேறு லாபத்தினுடைய ஆதிக்கமற்ற நிலையானது கசனுடைய கதையினால் வஸிஷ்டர் உதாஹரணமாகக் காட்டுகிறார்.—

'' கச: கதாசிதுத்தாய ஸமாதே: ப்ரீதமாநஸ:.
ஏகாந்தே ஸமுவாசேதமேவம் கத்கதயா கிரா'',

"—ஒரு ஸமயம், பிரீதியையடைந்துள்ள மநத்தையுடைய கசன் ஸமாதியிலிருந்து எழுந்திருந்து, தனிமையில் தழுதழுத்த வார்த்தையினுல் இந்த ஒன்றைச் சொன்னுன்."

"கிம் கரோமி க்வ கச்ச்சாமி கிம் க்ருஹ்ணுமி த்யஜாமி கிம்.
ஆத்மநா பூரிதம் விஶ்வம் மஹாகல்பாம்புநா யதா".

"நான் என்ன செய்வேன். எங்கே செல்வேன். எதை எடுப்பேன். எதை விடுவேன். இவ்வுலகம், பெருகிய ப்ரளயகாலத்திலுள்ள ஜலம் போல ஆத்மாவினுல் நிரம்பியுள்ளது"

"ஸபாஹ்யாப்யந்தரே தேஹே ஹ்யத ஊர்த்வம் ச திக்ஷு ச.
இத ஆத்மா ததேஹாத்மா நாஸ்த்யாத்மமயம் க்வசித்".

"வெளியிலும், உள்ளிலும், ஒன்ருகவே தேஹத்திலும், கீழும், மேலும், திக்குகளிலும். இவ்விடத்திலும், அவ்விடத்திலும், ஆத்மா நிறைந்துள்ளது. ஓரிடத்திலும் ஆத்மா இல்லாத வஸ்துவே கிடையாது.

"ந ததஸ்தி ந யத்ராஹம் ந ததஸ்தி ந யந்மயி.
கிமந்யதபிவாஞ்சாமி ஸர்வே ஸம்விந்மயம் ததம்"

"எந்த வஸ்துவினிடத்தில் நான் இல்லையோ, அதுவும் இல்லை எந்த வஸ்துவானது என்னிடத்தில் இல்லையோ, அதுவும் இல்லை யாவும் ஸம்விந்மயமாகவே விரிந்துள்ளது. நான் வேறு எதை விரும்பியவனுக இருக்கமுடியும்?"

"ஸ்பார ப்ரஹ்மாமலாம்போதே: பேநா: ஸர்வே குலாசலா:.
சிதாதித்ய மஹாதேஜோ ம்ருகத்ருஷ்ணு ஜகச்ச்ரிய:" இதி.

"உலகத்தின் சோபைகள், சித் என்னும் ஸூர்யனுடைய யாதொரு பெருகிய ஒளியுண்டோ, (ஆதபம்) அவ்விடத்தில் ஒளிறுகின்ற கானல் ஜலம் மரீசிகைகள் (திவலை). அதாவது உலகம் யாவும் சித்விலாஸத்தின் அளவிலே கல்பனை செய்யப் பெற்றவை என்பது தாத்பர்யம்" என்றவாறு.

மற்றும், பெருகிய துக்கத்திஞலும், அசைவற்ற தன்மையையுடைய சிகித்வஜனுடைய மூன்றுவருஷ ஸமாதியின் அநுபவவ்ருத்தாந்தத்திஞலே உதாஹரணமாகச் சொல்லப் பெறுகின்றது—

'' நிர்விகல்பஸமாதிஸ்தம் தத்ராபஶ்யந் மஹீபதிம்.
ராஜாநம் தாவதேதஸ்மாத் போதயாமி பராத்பதம்''

*''—நிர்விகல்ப ஸமாதியில் இருக்கின்ற அரசனை அவ்விடத்தில் பார்த்தாள். இந்த ஸமாதியிலிருந்து அவ்வளவு வரையில் அரசனை ஒவ்வொரு செய்கையினுலும் உணர்வு பெறச் செய்வேன்''*

''இதி ஸம்சிந்த்ய சூடாலா ஸிம்ஹநாதம் சகார ஸா.
பூயோ பூயோ ப்ரபோரக்ரே வநேசரபயப்ரதம்''.

*''என்று நினைத்து அந்த சூடாலையானவன் ஸிம்ஹத்தைப் போல் கர்ஜனை செய்தாள். அந்த கர்ஜனையானது அவ்வனத்தில் வாழ்கின்றவர்களுக்கும் அடிக்கடி அச்சத்தைக் கொடுத்தது.''*

''ந சசால ததா ராம யதா நாதேந தேந ஸ:.
பூயோ பூய: க்ருதேநாபி ததா ஸா தம் வ்யசாலயத்.
சாலித: பாதிதோऽப்யேஷ ததா நோ புபுதே புத:'' இதி.

*''இவ்வாறு மறுபடியும் மறுபடியும் செய்துள்ள பொழுதிலும், அப்பொழுதும் அந்த அரசனை அசைக்க முடியவில்லை. அசைத்தும், வீழ்த்தியும் கூட அப்பொழுது பண்டிதனுகிய இவன் உணர்வைப் பெறவில்லை.'' என்றவாறு.*

*மற்றும் ப்ரஹ்லாதனுடைய வ்ருத்தாந்தத்திலும் அதையே உதாஹரணமாகக் காட்டுகிறுர்—*

'' இதி ஸம்சிந்தயந்நேவ ப்ரஹ்லாத: பரவீரஹா.
நிர்விகல்பபராநந்தஸமாதிம் ஸமுபாயயௌ.''.

*''—பகைவர்களையழிக்கும் திறமையைப் பெற்ற ப்ரஹ்லாதன், இவ்வாறு சிந்தனை செய்து கொண்டே நிர்விகல்பமும், சிறந்த ஆநந்தமும் கொண்ட ஸமாதியை அடைந்தான்''*

'' நிர்விகல்ப ஸமாதிஸ்தஶ்சித்ரார்பித இவாபபௌ.
பஞ்ச வர்ஷஸஹஸ்ராணி பீநாங்கோऽதிஷ்டதேகத்ருக்''.

*''நிர்விகல்பஸமாதியில் இருக்கின்ற அவன் சித்திரத்தில் வரைந்துள்ளவனைப் போல இருந்தான். ஐயாயிரம் வர்ஷங்கள் ஒரே முனைப்பாக பருத்த அவயத்தோடும் இருந்தான்''*

'' மஹாத்மந் ஸம்ப்ரபுத்யஸ்வேத்யேவம் விஷ்ணுருதாஹரத்.
பாஞ்சஜந்யம் ப்ரதத்மௌ ச த்வநயந் ககுபாம் கணம்''.

''ஓ மஹாத்மாவே ! விழித்துக்கொள் என்று விஷ்ணுவினுல் எழுப்பப் பெற்று, பாஞ்சஜந்யத்தை (சங்கு) எடுத்து திசைகளுடைய தொகுதிகளைக் குறித்து முழக்கமிட்டார்.

'' மஹதா தேந ஶப்தேந வைஷ்ணவப்ராணஜந்மநா.
பபூவ ஸம்ப்ரபுத்தாத்மா தாநவேஶ: ஶநை; ஶநை: இதி.

''அத்தகைய பெருகிய ஶப்தத்தினுல் (ஒலி) விஷ்ணு பக்தியை முக்ய ப்ராணனுகவும் கொண்ட அந்த தாநவத்தலைவன், மெல்ல மெல்ல விழித்துக் கொண்டவனுக இருந்தான்'' என்றவாறு. இவ்வாறே வீதஹவ்யர் முதலியவர்களுடைய ஸமாதியும் உதாஹரணமாகக் கொள்ள வேண்டும்.

வைராக்யம் இருவகையாகும். அப்ரம், பரம் என்பன அவை. த்மாநம், வ்யதிரேகம், ஏகேந்த்ரியம், வஶீகாரம். என அபரம் நால் வகையாகும். அவைகளில் முதல் மூன்றையும் தாத்பர்யத்தின் வாயிலாகச் சொல்லி, நான்காவதை ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லுகிறுர் —

''த்ருஷ்டாநுஶ்ரவிகவிஷயவித்ருஷ்ணஸ்ய வஶீகாரஸம்ஜ்ஞா
வைராக்யம்'' இதி.

''—வைராக்யம் என்பது ப்ரத்யக்ஷம் (சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிற) அப்ரத்யக்ஷ விஷயங்களில் அவாவின்றி இருப்பவன் தனது புலன், மனம் இவைகளை அடக்குதலாம்.'' என்றவாறு.

த்ருஷ்டம் — ப்ரத்யக்ஷம், — மாலை, சந்தநம், மங்கை, மக்கள் நண்பன், க்ஷேத்ரம், தநம் முதலியவைகள் த்ருஷ்டங்கள் என்பன. வேதங்களில் சொல்லப் பெற்ற ஸ்வர்கம் முதலியன ஆநுச்ரவிகம் என்பன.

'' தத்ர உபயத்ர ஸத்யாமபி த்ருஷ்ணுயாம்
விவேகதாரதம்யேந யதமாநாதிவைராக்ய-
த்ரயம் பவதி, அஸ்மிந் ஜகதி கிம் ஸாரம்?
கிமஸாரம் இதி குருஶாஸ்த்ராப்யாம் ஞாஸ்-
யாமி இத்யுத்யோகோ யதமாநத்வம்'' இதி.

"—அவ்விடத்தில் இரண்டு வகைகளிலுள்ள ஆசையானது இருக்கும் பொழுது, விவேகத்தின் ஏற்ற தாழ்வினால், யதமாநம் முதலிய வைராக்யம் மூன்றும் இருப்பது. இவ்வுலகில் எது ஸாரம்? எது அஸாரம்? என்று குரு, சாஸ்த்ரம் முதலியவை களினால் அறிந்து கொள்ளுகிறேன் என்ற முயற்சியானது யதமாநம் எனப் பெறும் என்றவாறு.

"ஸ்வசித்தே பூர்வம் வித்யமாநாநாம்
தோஷாணாம் மத்யே அப்யஸ்யமாநே
விவேகேந ஏதாவந்த: பக்வா:, ஏதாவந்த:
அவஶிஷ்டா இதி விவேசநம் வ்யதிரேக:" இதி:

"—தனது சித்தத்தில் முன்பு இருந்த தோஷங்களுடைய நடுவில் அப்யாஸம் செய்யப் பெறுகின்ற விவேகத்தினால் இவ்வளவே பக்குவமடைந்துள்ளன. இவ்வளவே எஞ்சியுள்ளன என்ற விவேசநம் வ்யதிரேகம் எனப்பெறும்." என்றவாறு.

"த்ருஷ்டாநுஶ்ரவிக விஷயப்ரவ்ருத்தே:
து:காத்மத்வபோதேந தாம் ப்ரவ்ருத்திம் பரித்ஜ்ய,
மநஸஶ்ச ஔத்ஸுக்யமாத்ரேண வித்ருஷ்ணாவ-
ஸ்தாநம் ஏகேந்த்ரியத்வம்" இதி.

—ப்ரத்யக்ஷம், அப்ரத்யக்ஷம் இவைகளுடைய விஷயங்களின் ப்ர விருத்தியில் துக்கவடிவாயுள்ளது ஆத்மத்தன்மையென உணர் வோடு, அந்த ப்ரவ்ருத்தியை விட்டு, மநத்திற்கும் உத்ஸாஹத்தின் அளவிலே ஆசையையகற்றிய சுற்றியுள்ள நிலையே ஏகேந்த்ரியத் தன்மையாகும். என்றவாறு.

"வித்ருஷ்ணத்வம் வஶீகார:" இதி.

"—இத்தகைய ஆசையை முற்றிலும் அகற்றுவது வசீகாரம் எனச் சொல்லப் பெறும்.

"ததிதம் அபரம் வைராக்யம் அஷ்டாங்க-
யோக ப்ரவர்தகத்வேந ஸம்ப்ரஜ்ஞாதஸ்ய
அந்தரங்கம், அஸம்பரஜ்ஞாதஸ்ய பஹிரங்கம். இதி.

"—அத்தகைய இந்த அபரம் என்ற வைராக்யமானது. அஷ்டாங்க யோகத்திலுள்ள ப்ரவிருத்தியின் காரணமாக ஸம்பரஜ்ஞாத ஸமாதிக்குக் காரணமாயுள்ள அந்தரங்கமாகும். அஸம்பஜ்ஞாத ஸமாதிக்கோ வெனில் பஹிரங்கமாகும். என்றவாறு.

தத்ர அந்தரங்கம பரம் வைராக்யம் ஸூத்ரயதி —

"—அவ்விடத்தில் அந்தரங்கமாயுள்ள பரம் என்ற வைராக்ய மானது ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லப் பெறுகின்றது—

"தத்பரம் புருஷக்யாதேர் குணவைத்ருஷ்ண்யம்" இதி.

"—பரவைராக்யமென்பது புருஷதர்ஶநம் நிகழ்வதால் (ஸத்வம்) ரஜஸ், தமஸ் என்ற குணங்களிலும் பற்றற்ற நிலையாம்" என்றவாறு

"ஸம்பரஜ்ஞாதஸமாதி பாடவேந குணத்ரயா-
த்மகாத் ப்ரதாநாத் விரக்தஸ்யு புருஷஸ்ய
க்யாதி ஸாக்ஷாத்கார உத்பத்யதே, தஸ்மாச்ச
ஸாக்ஷாத்காராத் அஶேஷகுணத்ரயவ்யவாஹாரே
யத் வைத்ருஷ்ண்யம் தத் பரம் வைராக்யம்" இதி.

—ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியினுடைய திறமையினால், முக்குண வடிவாயுள்ள ப்ரதாநத்திலிருந்து விரக்தியடைந்த புருஷனுக்கு, ஸாக்ஷாத்காரம் தோன்றுவதாகும். அந்த ஸாக்ஷாத்காரத்திலிருந்தும் முக்குணங்களைச் சார்ந்த எல்லா வ்யவஹாரங்களிலும் யாதொரு பற்றற்ற நிலை தோன்றுகின்றதோ, அதுவே பரம் என்ற வைராக்யமாகும். என்றவாறு.

"தஸ்ய தாரதம்யேந ஸமாதே: ஶீக்ரத்வதாரதம்யம் ஸூத்ரயதி—

—"அந்த வைராக்யத்தினுடைய ஏற்றத் தாழ்வினால் ஸமாதிக்கும் விரைவாயுள்ள தன்மையின் ஏற்றத் தாழ்வையும் இந்த ஸூத்ரத்தின் வாயிலாகச் சொல்லுகிறார்—

"தீவ்ரஸம்வேகாநாம் ஆஸந்ந: ஸ்மாதிலாப:" இதி.

"—தீவிரமாயுள்ள நல்ல வேகத்தையுள்ளவர்களுக்கு ஸமாதி நிலையானது ஸமீபத்திலுள்ளது என்றவாறு.

"அத்ர ஸம்வேக: வைராக்யம்.
தத்பேதாத் யோகிந: த்ரிவிதா:—ம்ருதுஸம்வேகா:,
மத்யஸம்வேகா:, தீவ்ரஸம்வேகாஶ்ச இதி.
" ஆஸந்ந:" அல்பேநைவ காலேந ஸமாதி:
லப்யத இத்யர்த்த:" இதி.

''—இவ்விடத்தில் ஸம்வேகம் என்ற சொல் வைராக்யத்தைச் சொல்லும். அந்த வைராக்யத்தினுடைய பேதத்தினால் யோகிகள் மூன்றுவகையாவர்; ம்ருதுஸம்வேகம், மத்யஸம்வேகம், தீவ்ரஸம்வேகம், என்பன அவை. ஆஸந்ந: என்ற சொல் சிறிது காலத்திலேயே ஸமாதியானது அடைய முடியும் என்ற பொருளைக் குறிப்பது.'' என்றவாறு.

இதாநீம் தீவ்ரஸம்வேகேஷ்வேவ ஸமாதி தாரதம்யம் ஸூத்ரயதி—

—இப்பொழுது தீவ்ரஸம்வேகங்களிலும் கூட ஸமாதிக்குள்ள தாரதம்யம் (ஏற்றத்தாழ்வு) இந்த ஸூத்ரத்தில் சொல்லப் பெறுகின்றது—

'' ம்ருதுமத்யாதிமாத்ரத்வாத் ததோऽபி விசேஷ:'' இதி.

—மேலும் அதிதீவ்ரமானது மூன்று படிகளையுடையது ம்ருது மத்யமம், அதிமாத்ரம என்பன அவை. அவைகளில் பின்னது முன்னதை விட விசேஷமாகும். என்றவாறு.

''தேஷ்வபி உத்தரோத்தரஸ்ய த்வரயா
ஸித்தி: த்ரஷ்ட்வ்யா:, உத்தமோத்தமா
ஜநகப்ரஹ்லாதாதய: அதிமாத்ர தீவ்ரா:,
முஹூர்தமாத்ர விசாரேண த்ருடஸ்மாதி-
லாபாத்; அதமாதமா உத்தாலகாதயோ
ம்ருதுஸம்வேகா:, சிரப்ரயாஸேந
தல்லாபாத், எவமந்யேऽபி யதா யோகம் உந்யோ:' இதி.

''—இந்த மூன்று படிகளிலும் மேன்மேலும் த்வரையின் (விரைவு) காரணமாக ஸித்தியானது காணப்பெற வேண்டும். உத்தமோத்தமர்களான ஜநகன், ப்ரஹ்லாதன் முதலியவர்கள் அதிமாத்ரதீவரத்தை யுடையவர்கள். முஹூர்த்தத்தின் அளவிலேயுள்ள விசாரத்தினாலே உறுதியாயுள்ள ஸமாதியின் லாபம் கிடைப்பதுமாகும். கீழுக்குக் கீழுள்ளவர்களான உத்தாலகன் முதலியவர்கள், ம்ருதுஸம்வேகர்கள், நீண்டநாள் முயற்சியினால் அவர்களுக்கு அந்த ஸமாதிலாபம் கிடைப்பதாகும். இவ்வாறு மற்றவைகளையும் உள்ளவாறு ஊஹித்துக் கொள்ளவேண்டும்.'' என்றவாறு.

"ததேவம் அதிமாத்ரதீவ்ரஸ்ய த்ருடபூமௌ
அஸம்ப்ரஞ்ஞாத ஸமாதௌ லப்தே ஸதி, புந:
வ்யுத்தாதும் அஶக்யம் ஸத் மனோ நஶ்யதி.
மனோநாஶேந ச வாஸநாக்ஷயோ ரக்ஷிதே ஸதி,
ஜீவன்முக்தி: ஸுப்ரதிஷ்டிதா பவதி.
ந ச மனோ நாஶேந விதேஹமுக்திரேவ,
ந து ஜீவன்முக்திரிதி ஶங்கநீயம்,
ப்ரஶ்னோத்தராப்யாம் தந்நிர்ணயாத் இதி."

"—இவ்வாறு அதிமாத்ர தீவ்ரமுள்ளவனுக்கு உறுதியாயுள்ள பூமிகையாகிய அஸம்பரஜ்ஞாத ஸமாதியானது கிடைத்துள்ள பொழுது, மறுபடியும் எழுந்திருப்பதற்கு முடியாத நிலையில் மநம் நாஶமடைகின்றது. மநத்தின் நாஶத்தினுல் வாஸநாக்ஷயமானது காப்பாற்றப் பெற்றுள்ள நிலையில், ஜீவன்முக்தியானது நன்கு நிலைத்துள்ளதாகவும் இருக்கின்றது. மனோநாஶத்தினுல் விதேஹ முக்தியே தவிர ஜீவன்முக்தியில்லை என்று ஐயம் கொள்வது கூடாது. ஏனெனில் கேள்வி பதில் இவைகளினுல் அது நிர்ணயம் செய்யப் பெற்றுள்ளதால்" என்க. என்றவாறு.*

ஸ்ரீராமர்—

"விவேகாப்யுதயாச்சித்தஸ்வரூபே஽ந்தர்ஹிதே முநே.
மைத்ர்யாதயோ குணு: குத்ர ஜாயந்தே யோகிநாம் வத." இதி.

"—ஓ முநிவரே! விவேகத்திலிருந்து தோன்றிய (தத்வஜ்ஞாநம்) சித்தத்தினுடைய ஸ்வ்ரூபம் நஶித்த பிறகு, யோகிகளுக்கு மைத்ரீ முதலிய குணங்கள் எவ்விடத்தில் இருக்கின்றன. யோகிகளில் தலைசிறந்தவராயுள்ள நீர் சொல்லுவீராக." என்றவாறு.

வஸிஷ்டர்—

"த்விவிதஶ்சித்தநாஶோ஽ஸ்தி ஸரூபோ஽ரூப ஏவ. ச.
ஜீவன்முக்தௌ ஸரூப: ஸ்யாத் அரூபோ஽தேஹ முக்திக;"

---

*ராமர், வஸிஷ்டர் இவ்விருவருடைய கேள்வி, பதில் இவைகளினுல் இரு வகை முக்தியும் நிர்ணயம் செய்யப் பெற்றுள்ளது. ஆதலால் ஐயத்திற்கு இடமில்லை என்பது கருத்து.

"—சித்தநாஶமானது இருவகையாக இருப்பதாகும். அவை ஸரூபம், அரூபம் என்பன. ஜீவன்முக்தியில் ஸரூபமும், விதேஹ முக்தியை யடைந்தவனிடம் அரூபமும் தோன்றுவதாகும்."

"ப்ராக்ருதம் குணஸம்பாரம் மமேதி பஹு மந்யதே.
ஸுகது:காத்யவஷ்டப்ய வித்யமாநம் மநோ விது:.

"ப்ராக்ருதமாயுள்ள (இயல்பாயுள்ள) குணத்தொகுதியானது, 'எனது' என்று வெகுவாக நினைக்கப் பெறுகின்றது. யாதொன்றோ வெனில்— தத்வத்தை யுணராத யாதொரு சித்தமுண்டோ, அது ஸுகதுக்கத்தையடைந்த ஜீவன் எனச் சொல்லப் பெறுகின்றது"

'சேதஸ: கதிதா ஸத்தா மயா ரகுகுலோத்வஹ.
அஸ்ய நாஶமிதாநீம் த்வம் ஶ்ருணு ப்ரஶ்நவிதாம் வர."

"ஓ ரகுகுலத்தைத் தாங்குகின்ற ராம! என்னால் மநத்திற்குரிய ஸத்தையானது சொல்லப் பெற்றது. இப்பொழுது அதனுடைய நாஶத்தை, கேள்வி கேட்பவர்களுள் சிறந்தோய்! நீ கேட்பாயாக

"ஸுகது:கதஶா தீரம் ஸாம்யாந்ந ப்ரோத்தரந்தி யம்.
நி:ஶ்வாஸா இவ சைலேந்த்ரம் தஸ்ய சித்தம் ம்ருதம் விது:"

"எந்தப் பண்டிதனை, ஸுகம் துக்கம் என்ற இவைகளுடைய நிலைகள் ஸாம்யமாயுள்ள பொழுது அசைப்பனவில்லையோ, மூச்சுக் காற்றுகள் எவ்வாறு மலையை அசைக்க முடியாதனவோ, அவ்வாறு அந்தப் பண்டிதனுடைய சித்தமானது மரித்துள்ளதாக உணருகின்றனர்."

"ஆபத்கார்பண்ய முத்ஸாஹோ மதோ மாந்த்யம் மஹோத்ஸவ:.
யம் நயந்தி ந வைரூப்யம் தஸ்ய நஷ்டம் மநோ விது:.

"மக்கள் முதலியவர்களுடைய விபத்தும், வறுமையும், புத்திரன் பிறந்ததற்குரிய மகிழ்ச்சியும், மதமும், திறமையற்ற நிலையும், விவாஹம் முதலிய மஹோத்ஸவமும் எவனை விகாரமடையச் செய்யாதனவோ, அவனுடைய மநம் நஷ்டம் என்பதை உணர்வாயாக."

"சித்தமாஶாநிதாநம் ஹி யதா நஶ்யதி ராகவ.
மைத்ரியாதிபிர் குணைர்யுக்தம் ததா ஸத்வமுதேத்யலம்.
பூயோ ஜந்மவிநிர்முக்தம் ஜீவந்முக்தஸ்ய தந்மந:
ஸரூபோSஸௌ மநோநாஶோ ஜீவந்முக்தஸ்ய வித்யதே.

"—ஓ ராகவ! ஆசைக்கு இருப்பிடமாயுள்ள சித்தமானது எப்பொழுது நாஶத்தை யடைகின்றதோ, அப்பொழுது மைத்ரீ முதலிய குணங்களோடு சேர்ந்த ஸத்வகுணமானது நிறைவுடன் தோன்றுவதாகும். அந்த ஸத்வகுணமே மைத்ரீ முதலியவைகளோடு சேர்ந்து விஶுத்தமாயுள்ள உத்தமமான வாஸனையையும் தோற்றுவிப்பதுமாகும். அந்த வாஸனையும், மறுபடியும் பிறவியிலிருந்து விடுதலை பெற்றுள்ள அந்த ஜீவன்முக்தனுடைய மனமானது ஆத்மாவாகவே ப்ரகாஶிப்பதுமாகும். ஸரூபமாயுள்ள இந்த மனோநாஶமானது ஜீவன்முக்தனுக்கு கிடப்பதுமாகும்."

"அரூபஸ்து மனோநாஶோ போ மயோக்தோ ரகூத்வஹ.
விதெஹமுக்தாவேவாஸௌ வித்யதே நிஷ்பலாத்மக:."

"ரகுவின் குலத்தை வஹிக்கின்ற ஓ ராம! யாதொரு அரூபமாயுள்ள மனோநாஶமானது என்னால் சொல்லப் பெற்றதோ, அது விதேஹ முக்தர்களிடத்தில் நிஷ்கலவடிவாக இருக்கின்றது"

"ஸமக்ராச்ர்ய குணாதாரமபி ஸத்வம் ப்ரலீயதே.
விதேஹமுக்தாவமலே பதே பரமபாவநே."

"எக்காரணத்தால் பரமபரிஶுத்தமான விதேஹமுக்தியில் முழுவதுமாயுள்ள மைத்ரீ முதலிய சிறந்த குணங்களுக்கு ஆதார வடிவாயமைந்த ஸத்வகுணமானது ஒடுங்குகின்றதோ"

"ஸம்ஶாந்தது:கமஜடாத்மகமேகரூப-
மாநந்தமந்தரமபேதரஜஸ்தமோ யத்.
ஆகாஶகோஶதநவோऽதநவோ மஹாந்த:
தஸ்மிந் பதே கலிதசித்தலவா வஸந்தி." இதி.

"—யாதொன்று நன்கு ஶமநமடைந்த ஸுகம், துக்கம், அஜடம், ஆத்மன் ஒரே ஸுஷுப்தி, ஆநந்தத்தின் நிறைவு, களையப் பெற்ற ரஜஸ், தமஸ் என்ற இவைகளை யுடையதாயும், ஆகாஶகோஶம் போல் நுண்ணியதாயும் (அதாவது ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூவகையான ஶரீரமின்மையென்பது) சரீரமற்றவர்களாகவும் இருக்கின்ற மஹான்கள் இந்த நிலையில் நழுவப் பெற்ற சித்தத்தினுடைய அம்ஶங்களைப் பெற்றவர்களாகவும் வஸிக்கின்றனர்" என்றவாறு.

''ஜீவன்முக்தா ந முஹ்யந்தி ஸுகது:கஸரஸ்வதி
ப்ராக்ருதோர்த்தகாரேண கிம்சித் குர்வந்தி வா ந வா.'' தஸ்மாத் ஸரூபோ மனோநாஶோ ஜீவன்முக்திஸாதநமிதி ஸ்திதம்.

'' ஜீவன்முக்தர்கள் ஸுகம், துக்கம் என்ற கடலில் மயக்க மடைய மாட்டார்கள். ப்ராக்ருதமான விஷயவிகாரத்தினுல் சிறிது செய்கின்றரோ, இல்லையோ'' என்றவாறு.

ஆகையினுல் ஸரூபநாஶமானது ஜீவன்முக்திக்கு ஸாதந மென்பதும் உறுதியாம் என்பதும் கைவரப்பெற்றது.

இவ்வாறு ஸ்ரீமத்வித்யாரண்யர் அருளிய
ஜீவன்முக்தி விவேகத்தில் மனோநாஶ-
நிரூபணம் என்ற மூன்ருவது
ப்ரகரணம் இவண் முற்றும்.



# ஸ்வரூபஸித்தி ப்ரயோஜநப்ரகரணம்.

''கேயம் ஜீவந்முக்தி:? கிம் வா தத்ர
ப்ரமாணம்? கதம் வா தத்ஸித்தி:? இதி-
யேதஸ்ய ப்ரஶ்நத்ரயஸ்ய உத்தரம்
நிரூபிதம். ஸித்யா வா கிம் ப்ரயோ
ஜநம்? இதயஸ்ய சதுர்த்தப்ரஶ்நஸ்ய
உத்தரம் இதாநீம் அபிதீயதே—

—இந்த ஜீவந்முக்தி என்பது யாது? அதற்கு ப்ரமாணம் தான் என்ன? அதனுடைய ஸித்தியானது (நிறைவு) எத்தகையது? என இவ்வாறுள்ள மூன்று கேள்விகளுக்கும் பதில் நிரூபணம் செய்யப் பெற்றது. அந்த ஜீவந்முக்தியினுடைய ஸித்தியினுல் பிர யோஜநம் தான் என்ன? என்ற இந்த நான்காவது கேள்விக்குப் பதில் இப்பொழுது சொல்லப் பெறுகின்றது.—

ஞாநரக்ஷாதபோவிஸம்வாதாபாவ-
து:க நாஶஸுகாவிர்பாவா : ஸந்தி
பஞ்ச ப்ரயோஜநாநி.

—ஞாநரக்ஷை, தபஸ், விஸம்வாதாபாவம், துக்கநாஶம், ஸுகாவிர் பாவம் என்று ஐந்து ப்ரயோஜநங்கள் இருக்கின்றன. இந்த ஐவகையாயுள்ள ப்ரயோஜநங்களை முறையே சொல்லுகிறேம் என்பது தாத்பர்யம்.

சங்கை—

''ப்ரமாணேத்பந்நஸ்ய தத்வஜ்ஞாநஸ்ய கோ நாம
பாத்ப்ரஸங்க:? யேந ரக்ஷா அபேக்ஷ்யத
இதி சேத்? உச்யதே—சித்தவிஶ்ராந்த்யபாவே
ஸம்ஶய விபர்யயௌ ப்ரஸஜ்யேயாதாம்'' இதி.

—ப்ரமாணத்தினுல் தோன்றியுள்ள தத்வஜ்ஞாநத்திற்கு இடையூறு நேரிடுமென்றுல் அது எவ்வாறு? எக்காரணத் தினுல் ரக்ஷையானது வேண்டப் பெறுகின்றதோ? என்று சொன்னுல் அதற்குப் பதில் சொல்லுகிறேம்—சித்தத்தினுடைய

விஶ்ராந்தி (ஓய்வு) இல்லாத நிலையில் ஸம்ஶயும், விபர்யயம் என்ற இவைகள் தோன்றக் கூடுமன்றோ! என்றவாறு.

ததா ஹி—தத்வவிதோ ராகவஸ்ய விஶ்ராந்தே:
பூர்வம் ஸம்ஶயம் விஶ்வாமித்ர: உதாஜஹார—

"—ஏனெனில் தத்வத்தையுணர்ந்துள்ள ராகவனுக்கு விஶ்ராந்திக்கு முன்புள்ள ஸம்ஶயத்தை விச்வாமித்திரர் உதாஹரணமாகச் சொல்லியுள்ளார்—

"ந ராகவ தவாஸ்த்யந்யத் ஜ்ஞேயம் ஜ்ஞாநவதாம் வர.
ஸ்வயைவ ஸூக்ஷ்மயா புத்யா ஸர்வம் விஜ்ஞாதவாநஸி.

"—ஞானம் நிரம்பியவர்களுள் சிறந்த ஓ ராகவ! உனக்கு மற்றொன்றும் அறிந்து கொள்ளுவதற்கு இருக்கின்றது. தானாகவே நுண்ணிய புத்தியினால் எல்லாவற்றையும் உணர்ந்துள்ளவனாகவும் நீ இருக்கின்றாய்"

பகவத்வ்யாஸபுத்ரஸ்ய ஶுகஸ்யேவ மதிஸ்தவ.
விஶ்ராந்திமாத்ரமேவாத்ர ஜ்ஞாதஜ்ஞேயாப்யபேக்ஷதே." இதி.

"உன்னுடைய மதியானது பகவானாகிய வ்யாஸருடைய புத்திரனாகிய ஶுகனுடையது போல் உள்ளது. இவ்விடத்தில் விஶ்ராந்தியின் அளவிலே ஜ்ஞாதா, ஜ்ஞேயம் என்ற இவைகள் வேண்டப் பெறுகின்றது" என்றவாறு.

ஶுகஸ்து ஸ்வயமேவாதௌ தத்வம் விதித்வா
தத்ர ஸம்ஶயாந: பிதரம் த்ருஷ்ட்வா, பித்ராபி
ததைவ அநுஶிஷ்ட:, தத்ராபி ஸம்ஶயாநோ
ஜநகமுபாஸ்ய, தேநாபி ததைவாநுஶிஷ்ட:;
தம் ப்ரதி ஏவமுவாச—

"—ஶுகரோவெனில் தானாகவே முதலில் தத்வத்தை யுணர்ந்து கொண்டு, அவ்விஷயத்தில் ஐயம் தோன்றியதும், தந்தையைக் கண்டு கேட்டார். தந்தையினாலும் அவ்வாறே உபதேசிக்கப் பெற்ற பொழுது, அப்பொழுதும் ஐயம் கொண்டு, ஜநகரை அடைந்து, அவராலும் அவ்வாறே உபதேசிக்கப் பெற்றார்." பிறகு அவரைக் குறித்துச் சொன்னார்—

ஸ்ரீஶுகர்—

" ஸ்வயமேவ மயா பூர்வம் ஏதஜ்ஜ்ஞாதம் விவேகத:.
ஏததேவ ஹி ப்ருஷ்டேந பித்ரா மே ஸமுதாஹ்ருதம்."

"பவதாப்யேஷ ஏவார்த்த: கதிதோ வாக்விதாம் வர.
ஏஷ ஏவ ச வாக்யார்த்த:ஶாஸ்த்ரேஷு பரித்ருஶ்யதே."

"—முன்பு என்ருல் தாஞகவே விவேகத்திலிருந்து இது உணர்ந்து கொள்ளப் பெற்றது. இதையே யன்ரோ கேட்கப் பெற்ற தந்தையினுல் எனக்குச் சொல்லப் பெற்றது. "வாக்விதாம் வர" வாய்மையுள்ளவர்களுள் சிறந்தவரே! உம்மாலும் இந்தப் பொருளே சொல்லப் பெற்றது. ஶாஸ்தரங்களிலும் இந்த வாக்யார்த்தமும் காணப் பெறுகின்றது."

"யதாயம் ஸ்வவிகல்போத்தத; ஸவிகல்ப பரிக்ஷயாத்.
க்ஷீயதே தக்தஸம்ஸாரோ நி:ஸார இதி நிஶ்சய:."

"எவ்வாறு தனது விகல்பத்திலிருந்து தோன்றியதோ அவ்வாறே தோன்றிய இந்த ஸம்ஸாரமும், தனது விகல்பத்தின் பெருகிய க்ஷயத்திஞல் பொசுக்கப் பெற்ற ஸம்ஸாரமானது நாசமடைகின்றது. ஆதலால் இவ்வாறுள்ள ஸம்ஸாரமானது ஸாரமற்றது என்பது எனது உறுதியுமாகும்"

"தத் கிமேதந் மஹாபாஹோ ஸத்யம் ப்ரூஹி மமாசலம்.
தவத்தோ விஶ்ராந்திமாப்நோதி சேதஸா ப்ராமிதம் ஜகத்." இதி.

" ஓ பெருந்தோளாய்! இது என்னவென்று உறுதியாயுள்ள உண்மையைச் சொல்லுவீராக! மநத்தால் மயக்கமடைந்த இந்த உலகிலிருந்து விஶ்ராந்தியை உம்மிடமிருந்து அடைகிறேன்' என்றவாறு.

ஜநகர்—

" நாத: பரதரம் கிம்சித் நிஶ்சயோ஽ஸ்த்யபரோ முநே.
ஸ்வயமேவ த்வயா ஜ்ஜ்ஞாதம் குருதஶ்ச புந: ஶ்ருதம்.

"—மோகத்தில் திளேத்துள்ள ஓ முனிவரே! இதைக் காட்டிலும் சிறந்துள்ளது வேறு ஒன்று உறுதியானது இல்லே

என்றும் உம்மால் தானாகவே உணரப் பெற்றது. மறுபடியும் குரு வினிடமிருந்தும் கேட்கப் பெற்றது.''

''அவ்யுச்ச்சிந்நஶ்சிதாத்மைக: புமாநஸ்தீஹ நேதர:
ஸ்வஸம்கல்பவஶாத் பத்தோ நி:ஸம்கல்பஸ்து முச்யுதே.''

'' அழிவற்றவனும், கூடஸ்தனும், நிலைத்தவனும், சிதாத்ம னும், தனித்தவனுமாகிய புமான் (புருஷன்) ஒருவனே யுண்டு. மற்றது ஒன்றுமில்லை. தனது ஸம்கல்பத்தின் வஶத்தால், அவன் கட்டுண்டவன். ஸம்கல்பமற்ற நிலையில் விடுதலை பெற்றவனுமா கின்றான்''

''தேந த்வயா ஸ்புடம் ஞாதம் ஜ்ஞேயம் ஸ்வஸ்ய மஹாத்மந:
போகேப்யோ விரதிர்ஜாதா த்ருச்யாத்வா ஸகலாதிஹ.''

''ஓ முனிவரே! அக்காரணத்தால் உம்மால் தெளிவாக ஞாதாம் ஜ்ஞேயம் இவ்விரண்டும் அறியப் பெற்றது. போகங்களினின்றும், அல்லது இங்கு காணப் பெறுகின்ற எல்லா வஸ்துக்களிட மிருந்தோ வைராக்ய முண்டாயிருக்கின்றது.''

''ப்ராப்தம் ப்ராப்தவ்யமகிலம் பவதா பூர்ணசேதஸா.
*''ந த்ருஶ்யே யதஸே ப்ரஹ்மந் முக்தஸ்த்வம் ப்ராந்திமுத்ஸ்ருஜ.''

''நிறைந்த மநத்தையுடைய உம்மால் அடையத்தக்கதா யுள்ள யாவும் அடையப் பெற்றது. ஓ ப்ரஹ்மந்! மேலும் முயற்சிக்காதீர். நீர் விடுதலை பெற்றவர். மயக்கத்தைக் களைவீராக''

''அநுஶிஷ்ட: ஸ இத்யேவம் ஜநகேந மஹாத்மநா.
விஶ்ராம ஶுகஸ்தூஷ்ணீம் ஸ்வஸ்தே பரமவஸ்துநி.''

'' என இவ்வாறு மஹாத்மாவாகிய ஜநகரால் உபதேஶிக்கப் பெற்ற, ஶுகரானவர் உறுதியுள்ள சிறந்த வஸ்துவினிடத்தில் மௌநமாக விஶ்ராந்தியைப் பெற்றார்.''

''வீதஶோகபயாயாஸோ நிரீஹஶ்ச்சிஹ்நஸம்ஶய:
ஜகாம ஶிகரம் மேரோ: ஸமாத்யர்த்தமநிந்திதம்.''

''பிறகு களையப் பெற்ற ஶோகம், அச்சம், ஆயாஸம் (அயர்வு) இவைகளோடும், ஆசையற்று களையப் பெற்ற ஐயத்தையும்

---

*ஸ்வரூபே பதஸி என்பது மஹோபநிஷத்பாடம்.

கொண்ட அந்த ஶுகரானவர், ஸமாதியின் பொருட்டு குற்றமற்ற தான மேருமலையினுடைய ஶிகரத்தை (உச்சி) குறித்துச் சென்றார்''

"தத்ர வர்ஷஸஹஸ்ராணி நிர்விகல்பஸமாதிநா.

தச ஸ்தித்வா ஶஶாமாஸாவாத்மந்யுஸ்நேஹதீபவத்'' இதி.

''—அவ்விடத்தில் பத்தாயிரம் வர்ஷங்கள் நிர்விகல்ப ஸமாதியோடு இருந்து, ஆத்மனிடத்தில், எண்ணெயற்ற தீபம் போல் இவர் ஶமனத்தையடைந்தார்'' என்றவாறு.

''தஸ்மாத் விதிதேபி தத்வே விஶ்ராந்தி-
ரஹிதஸ்ய ஶுகராகவயோரிவ ஸம்ஶய:
உபபத்யதே. ஸ ச அஜ்ஞாநமிவ மோக்ஷஸ்ய
ப்ரதிபந்தக:'' இதி.

''—ஆகையினால் தத்வத்தை யுணர்ந்துள்ள பொழுதிலும் விஶ்ராந்தியில்லாத ஶுகர், ராகவன் இவர்களைப் போல் ஐயம் தோன்றுகின்றது. அதுவும் அஜ்ஞாநம் போல் மோக்ஷத்திற்குத் தடையாக இருப்பது. என்றவாறு.

''—அத ஏவோக்தம் பகவதா— அக்காரணத்தாலேயே பகவானால் சொல்லப் பெற்றுள்ளது—

"அஜ்ஞஶ்சாஶ்ரத்ததாநஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி.
நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்ஶயாத்மந;'' இதி.

''—ஸ்ரீ குருவினால் உபதேஶிக்கப் பெற்றதை நன்கு உணர்ந்து கொள்ளாதவனும், அவ்வுபதேஶத்தில் நம்பிக்கையற்றவனும், அதனால் பயன் உண்டாகுமோ, உண்டாகாதோ என்ற ஐயம் கொண்டவனும் அழிவையடைவான். ஐயம் கொண்டவனுக்கு இவ்வுலகிலும், மேல் உலகிலும் ஸுகமும், ப்ரயோஜநமும் இல்லை.'' என்றவாறு.

''அஶ்ரத்தா விபர்யய:; ஸ ச உத்தரத்ர உதாஹரிஷ்யதே.
அஜ்ஞாநவிபர்யயௌ போகமோக்ஷயோ: உபயோரபி விரோதீ;
தஸ்ய பரஸ்பரவிரோதகோடித்வயாலம்பித்வாத்'' இதி.

"—இவ்விடத்தில் அச்ரத்தை என்பது—விபர்யயம். அதுவும், மேலே வரப்போகிற இடத்தில் உதாஹரணமாகச் சொல்லப் பெறும். அஜ்ஞானம் (அறியாமை) விபர்யயம் இவையிரண்டும் மோக்ஷத்தின் அளவிலே விரோதிகள். ஸம்சயமோ வெனில்(ஐயம்) போகம், மோக்ஷம் இவ்விரண்டிற்கும் விரோதிகள். ஏனெனில் அதனுடைய ஒன்றுக்கொன்றுள்ள விரோதமாயுள்ள இரண்டு கோடியையும் (பக்ஷங்களையும்) அவலம்பித்துள்ளதால் என்க.

"யதா ஸம்ஸாரஸுகாய ப்ரவ்ருத்தி:, ததா
மோக்ஷமார்கே புத்தி: தாம் நிருணத்தி; யதா ச
மோக்ஷமார்கே ப்ரவ்ருத்தி:, ததா ஸம்ஸாரபுத்தி:
தாம் ப்ரதிபத்நாதி; தஸ்மாத் ஸம்சயாத்மந:
ந கிம்சித் ஸுகமஸ்தி; இதி முமுக்ஷுணா ஸர்வதா
ஸம்சய: ச்சேத்தவ்ய: அத ஏவ ச்ரூயுதே—
"ச்சித்யந்தே ஸர்வஸம்சயா:," இதி.

"—எப்பொழுது ஸம்ஸாரத்தினுடைய ஸுகத்தின் பொருட்டு ப்ரவிருத்தியானது உண்டாகின்றதோ, அப்பொழுது மோக்ஷ மார்க்கத்தில் புத்தியானது அதைத் தடுத்து விடுகின்றது. எப்பொழுது மோக்ஷமார்கத்தில் ப்ரவிருத்தியானது உண்டா கின்றதோ, அப்பொழுது ஸம்ஸாரபுத்தியானது அதைத் தடுத்து விடுகின்றது.

"ஆகையினால் ஸம்சயமுள்ளவனுக்கு ஒரு சிறிதும் ஸுகம் இல்லை என்பதால், முமுக்ஷுவினால் உறுதியாக ஸம்சயத்தைக் களைய வேண்டுவது அவசியமாகும். ஆகையினாலேயே கேட்கப் பெறுகின்றது—ச்சித்யந்தே ஸர்வஸம்சயா:" "எல்லா ஐயங்களும் களையப்பெறுகின்றன" என்றவாறு.

"விபர்யயஸ்யாபி நிதாக உதாஹரணம்.–
'ரிபு:' பரமகருணயா நிதாகஸ்ய க்ருஹமேத்ய
பஹுதா தம் போதயித்வா நிர்ஜகாம. புத்தே ऽபி
ததுபதிஷ்டவஸ்துநி அச்ரத்ததாந: நிதாக:, கர்மணி
பரமபுருஷார்த்தஹேதுரிதி விபர்யயம் ப்ராப்ய,
கர்மாநுஷ்டாநே யதாபூர்வம் ப்ரவ்ருத்த:" இதி.

"—விபர்யயத்திற்கும் நிதாகனுடைய வரலாறு உதாஹரண மாகக் காட்டப் பெறுகின்றது—" ரிபு என்னும் மஹர்ஷி

பரமகருணையோடு நிதாகனுடைய வீட்டையடைந்து பல வழிகளிலும் அவனை யுணரச் செய்து வெளியே சென்றார். அவரால் உணர்த்தப் பெற்றும், அவரால் உபதேசிக்கப் பெற்ற வஸ்துவினிடத்தில் ஶ்ரத்தையில்லாத நிதாகன், கர்மங்களே சிறந்த புருஷார்த்தத்திற்குக் காரணமாக இருப்பது என்ற விபரீதத்தை யடைந்து, கர்மாவை அநுஷ்டானம் செய்வதிலேயே முன் போலவே ப்ரவிருத்தி செய்து கொண்டிருந்தான். என்றவாறு."

"ஸோऽபி ஶிஷ்யஸ்ய பரமபுருஷார்த்தப்ரம்ஶோ
மா பூத், இதி க்ருபயா குரு: புநராகத்ய போதயாமாஸ;
ததாபி விபர்யயம் பரித்யஜ்ய விஶ்ராந்திமலபத" இதி.

"—அவரும் சிஷ்யனுக்குச் சிறந்த புருஷார்த்தத்தினுடைய நழுவுதல் கூடாதென்று நினைத்துக் கருணையோடு கூட, அந்த குருவானவர் மறுபடியும் வந்து, உணர்த்தி உபதேஶம் செய்தார். அப்பொழுதும், அவன் அந்த விபரீதத்தை விடவில்லை. மூன்றாவது முறையிலோ வெனில் குருவினால் உணர்த்தப் பெற்று, உபதேஶம் பெற்ற பொழுது விபர்யயத்தை விட்டு விஶ்ராந்தியையும் பெற்றான்." என்றவாறு.

"ஸம்ஶயவிபர்யயாப்யாம் அஸம்பாவநாவிபரீதபாவநாரூபாப்யாம்
தத்வஜ்ஞாநஸ்ய பலம் ப்ரதிபத்யதே" இதி.

"—ஸம்ஶயத்திற்கு அஸம்பாவனையும், விபர்யயத்திற்கு விபரீதபாவனையும் ஆக இரண்டு பாவனைகளினாலும் தத்வஜ்ஞாநத்தினுடைய பயனும் தடுக்கப் பெறுகின்றது" என்றவாறு.

ததுக்தம் பராஶரேண— இதைக் குறித்துப் பராஶரரால் சொல்லப் பெற்றுள்ளது—

"மணிமந்த்ரௌஷதைர்வஹ்நி: ஸந்தீப்தோऽபி யதேந்தநம்.
ப்ரதக்தும் நைவ ஶக்த: ஸ்யாத் ப்ரதிபத்தஸ்ததைவ ச."

"—மணி, மந்த்ரம், ஔஷதம் இவைகளினால் கட்டுப் படுத்தப் பெற்று, நன்கு ஜ்வலிக்கின்ற அக்நியானது, எவ்வாறு கொளுத்துவதற்கு சக்தியற்று இருக்கின்றதோ, அவ்வாறே ப்ரதிபந்தகமும் இருப்பதாகும்." அவ்வாறே—.

"ஞாநாக்நிரபி ஸம்ஜாத: ஸுதீப்த: ஸுத்ருடோऽபி ச.
ப்ரதக்தும் நைவ ஶக்த: ஸ்யாத் ப்ரதிபத்தஸ்து கல்மஷம்".

"—மிகவும் சக்திவாய்ந்ததும், நன்கு ஒளிருகின்றதுமான ஞாநாக்நியும், ப்ரதிபந்தங்களினால் தடுக்கப்பெற்று பாபத்தை பொசிப்பதற்குத் தகுதியற்றதாக இருக்கின்றது"

பாவநா விபரீதா யா யா சாஸம்பாவநா ஶுக.
குருதே ப்ரதிபந்தம் ஸா தத்வஜ்ஞாநஸ்ய நாபரம்" இதி;

"—யாதொரு விபரீதபாவநா என்பது எதுவோ, யாதொரு அஸம்பாவநா என்பது எதுவோ ஓஶுக! ப்ரதிபந்தத்தை தடங்கல்) அதுவே செய்கின்றது. தத்வஜ்ஞாநத்திற்கு இதைக் காட்டிலும் வேறு ஒன்றுமில்லை" என்றவாறு.

"தஸ்மாத் அவிஶ்ராந்தஸ்ய ஸம்ஶயவிபர்யயப்ரஸங்கேந தத்வஜ்ஞாநஸ்ய பலப்ரதிபந்தலக்ஷணாத் பாதாத் ரக்ஷா அபேக்ஷ்யதே.
விஶ்ராந்த சித்தஸ்ய து மநோநாஶேந யதா ஜகதேவ ப்ரவிலீயதே, ததா ஸம்ஶயவிபர்யயோ: க: ப்ரஸங்க:
ஜகத்ப்ரதிபாஸரஹிதஸ்ய ப்ரஹ்மவித:
தேஹவ்யவஹாரோऽபி விநைவஸ்வப்ரயத்நம் பரமேஶ்வர ப்ரேரிதேந ப்ராணவாயுநா நிஷ்பாத்யதே" இதி.
அத ஏவ ச்சந்தோகா: ஆமநந்தி—

"—ஆகையினால் விஶ்ராந்தியடையாத சித்தத்தையுடையவனுக்கு ஸம்ஶயம், விபர்யயம், இவைகளுடைய தொடர்பினால் தத்வஜ்ஞாநத்தினுடைய பயனுக்கு இடையூறு தோன்றுவதால் ரக்ஷை வேண்டப் பெறுகின்றது.

"விஶ்ராந்தியடைந்த சித்தத்தை யுடையவனுக்கோ வெனில், மநோநாஶத்தினால் எப்பொழுது உலகமானது ஒடுங்குகின்றதோ அப்பொழுது ஸம்ஶயம், விபர்யயம் என்ற இவைகளுக்குத் தொடர்பு எவ்வாறு உண்டாகும்? (உண்டாகாது).

"உலகத்தினுடைய தோற்றமில்லாத ப்ரஹ்மவித்துக்கு ஶரீரவ்யவஹாரமும், தனது முயற்சியில்லாமலேயே பரமேஶ்வரனால் பிரேரணை செய்யப் பெற்ற ப்ராணவாயுவினாலே தோன்றுவதுமாகும். அக்காரணத்தாலேயே ச்சந்தோகர்கள் சொல்லுகின்றனர்—

**“நோபஜநம் ஸ்மரந்நிதம் ஶரீரம் ஸ யதா ப்ரயோக்ய ஆசரணே யுக்த ஏவமேவாயம் அஸ்மிந் ஶரீரே ப்ராணோ யுக்த:” இதி;**

“—அவன் மறு பிறவியையும், இந்த ஶரீரத்தையும் நினைப்பதில்லை. பிறப்பு, இறப்பு இவைகளுக்கு இடமில்லாமல் செய்து கொள்ளுகிறான். அதாவது அவை தோன்றாது என்பது. அத்தகையதான இந்த ஆத்மா ரதத்தில் இணைக்கப் பெற்ற குதிரை போல இந்த ஶரீரத்தை நடத்துவதற்காக ப்ராணன் பிணைக்கப் பெற்றுள்ளான்” என்றவாறு.

‘உபஜநம்’ என்றது மக்களுடைய அருகில் இருக்கின்ற இந்த ஶரீரத்தை நினைக்காது ப்ரஹ்மத்தையுணர்ந்தவனுக இருக்கிறான் என்பதைக் குறிப்பது. பக்கத்திலிருக்கின்ற மக்களே தத்வத்தையுணர்ந்தவனுடைய ஶ்ரீரத்தைப் பார்க்கின்றனர். தானோவெனில் மநத்தின் தன்மையை இழந்துள்ளதால் இந்த ஶரீரம் என்னுடையது என்று நினைப்பதில்லை. ‘ப்ரயோக்ய’ என்ற சொல்லானது—ரதம், வண்டி, இவைகளுடைய கால்களைச் சுமப்பதற்குத் தகுதியுள்ள சிக்ஷிக்கப் பெற்ற குதிரை, காளை முதலியவைகளைச் சொல்லும்.”

“அது எவ்வாறு ஸாரதியினால் வழியிலே செலுத்துவதற்கு தூண்டப் பெறுகின்றதோ, அடிக்கடி ஸாரதியினுடைய முயற்சியை எதிர்பாராமலும் தானாகவே ரதக்கால் முதலியவைகளை, எதிரேயுள்ள கிராமத்தைக் குறித்துக் கொண்டு போகின்றதோ, இவ்வாறே இந்த ப்ராணவாயுவானது பரமேஶ்வரனால் இந்த ஶரீரத்தில் நியமநம் செய்யப் பெற்று இருந்தாலும், இல்லாவிடினும் ஜீவனுடைய முயற்சியினால் வ்யவஹாரத்தை நிர்வாஹம் செய்கின்றது.” என்றவாறு.

இதைக் குறித்து பாகவதத்திலும் ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது—

**“தேஹம் விநஶ்வரமவஸ்திதமுத்திதம் வா**
**ஸித்தோ ந பஶ்யதி யதோऽத்யகமத் ஸ்வரூபம்.**
**தேஹாதுபேதமத தைவவஶாதபேதம்**
**வாஸோ யதா பரிக்ருதம் மதிராமதாந்த:” இதி;**

“—ஸித்தனானவன், ஆஸநத்திலிருந்து எழுந்தாலும், உட்கார்ந்தாலும் அவ்விடத்தில் இருந்தாலும், பிறகு சில பொழுது வெளியில் சென்றாலும் மறுபடியும் அந்த இடத்தை யடைந்தாலும் ஶரீரத்தை நினைப்பதில்லையோ, மற்றவை அவனுக்கு ஏது? ஏனெனில் எந்த ஶரீரத்தினால் (ப்ரஹ்ம) ஸ்வரூபத்தை உணர்ந்

தானே, அதை நினைக்காமலிருப்பதற்கும் உதாஹரணம் வருமாறு—கள்ளைப் பருகியவன் தனது இடுப்பிலுள்ள வஸ்த்ர மானது அவிழ்ந்தாலும், அப்படியே இருந்தாலும், அவன் எவ்வாறு கவனிப்பதில்லையோ அது போல" என்றவாறு.

வஸிஷ்டரும் சொல்லுகிறார்—

**"பார்ஸ்வஸ்தபோதிதா: ஸந்த: பூர்வாசாரக்ரமாகதம்.**

**ஆசாரமாசரந்த்யேவ ஸுப்தபுத்தவதக்ஷதா:" இதி;**

"—முன்னோர்களுடைய ஆசாரக்ரமத்திலிருந்து வந்துள்ளதைப் பக்கத்திலிருப்பவர்களால் உணர்த்தப் பெற்றவர்களாகக் கொண்டு, ஆசாரத்தை ஆசரிக்கின்றனர். (அநுஷ்டாநம் செய்கின்றனர்) தூங்கி விழித்தவன் போல் குறைவில்லாமல் செய்கின்றனர்" என்றவாறு.

**"ஸித்த; ந பஸ்யதி ஆசாரம் ஆசரதி இதி.**
**உபயோ: பரஸ் பரவிரோத இதி சேத், ந;**
**விஸ்ராந்தி தாரதம்யேந வ்யவஸ்தோபபத்தே:; இதி.**

மற்றும்,—

"ஸித்தன் ஆசாரத்தைப் பார்ப்பதில்லை, ஆசாரத்தை அநுஷ்டிக்கின்றான் என்ற இந்த இரண்டும் ஒன்றுக்கொன்று முரணாயிருக்கின்றதே என்றால், அவ்வாறு இல்லை, விஸ்ராந்தியினுடைய ஏற்றத் தாழ்வினால் வ்யவஸ்தையானது உபபாதநமாகும். (ஒப்புக்கொள்ளத் தக்கதாகும்). என்றவாறு.

**ததேவ தாரதம்யம் அபிப்ரேத்ய ஸ்ரூயதே**— அந்த ஏற்றத் தாழ்வைக் கருத்தில் கொண்டே கேட்கப் பெறுகின்றது—

**"ஆத்மக்ரீட ஆத்மரதி: க்ரியாவாநேஷ ப்ரஹ்மவிதாம் வரிஷ்ட:"இதி.**

"—ஆத்மாவினிடத்திலேயே விளையாடுகிறான். ஆத்மாவினிடத்திலேயே மகிழ்ச்சியைக் காண்கின்றான். இவன் தொழிலைச் செய்பவன். ப்ரஹ்மத்தையுணர்ந்துள்ளவர்களுள் மிகவும் சிறந்தவன்" என்றவாறு.

"அத்ர சத்வார: ப்ரதீயந்தே—ப்ரஹ்மவித் ப்ரதமம்,
ப்ரஹ்மவித் வரோ த்விதீய:, ப்ரஹ்மவித் வரீயாந்
த்ருதீய, ப்ரஹ்மவித் வரிஷ்ட; சதுர்த்த:; த ஏதே ஸப்தஸு
யோகபூமிஷு சதுர்த்தீம் யோகபூமிகாம் ஆரம்பக்ரமேண
பூமிசதுஷ்டயம் ப்ராப்தா: இத்யவகந்தவ்யம்" இதி.

"—இவ்விடத்தில் நான்கு நிலைகள் காணப் பெறுகின்றன—ப்ரஹ்மவித்; ப்ரஹ்மத்தை யுணர்ந்தவன் முதலாமவன், ப்ரஹ்மவித்வரன்; ப்ரஹ்மத்தை யுணர்ந்தவர்களுள் சிறந்தவன் இரண்டாமவன். ப்ரஹ்மவித்வரீயான்; (ப்ரஹ்மத்தை யுணர்ந்வர்களுள் மிகவும் சிறந்தவன்) மூன்றுமவன், ப்ரஹ்மவித்வரிஷ்டன்; ப்ரஹ்மத்தை யுணர்ந்தவர்களுள் தலைசிறந்தவன் நான்காமவன். இவர்கள் ஏழு பூமிகைகளில் நான்காவதாயுள்ள யோகபூமிகை தொடங்கி, முறையே நான்கு பூமிகைகளையும் அடைந்தவர்கள் என்று உணர்ந்து கொள்ள வேண்டும்." என்றவாறு.

பூமயஶ்ச வஸிஷ்டேந தர்ஶிதா:— —இந்த பூமிகைகளுடைய இலக்கணங்கள் மறுபடியும் வஸிஷ்டரால் காண்பிக்கப் பெற்றுள்ளன—

" ஞாநபூமி: சுபேச்சாக்யா ப்ரதமா ஸமுதாஹ்ருதா.
விசாரணா த்விதீயா ஸ்யாத் த்ருதீயா தநுமாநஸா.
ஸத்வாபத்திஶ்சதுர்த்தீ ஸ்யாத் ததோ஽ஸம்ஸக்திநாமிகா.
பதார்த்தபாவிநீ ஷஷ்டீ ஸப்தமீ துர்யகா ஸ்ம்ருதா" இதி.

"—சுபேச்சை என்ற பெயருள்ள ஞாநபூமியானது முதலாவது எனச் சொல்லப் பெற்றது. விசாரணா என்பது இரண்டாவதாகும். தநுமாநஸீ என்பது மூன்றுவதாகும். ஸத்வாபத்தி என்பது நான்காவதாகும். பிறகு அஸம்ஸக்தி என்ற பெயருள்ளது ஐந்தாவதாகும். பதார்த்தபாவிநீ என்பது ஆறுவதாகும், துர்யகா என்பது ஏழாவதாகும்." என்றவாறு.

" ஸ்தித: கிம் மூட ஏவாஸ்மி ப்ரேக்ஷே஽ஹம் சாஸ்த்ரஸஜ்ஜநை:.
வைராக்யபூர்வமிச்ச்சேதி ஶுபேச்ச்சேத்யுச்யதே புதை:."

"—நான் மூடனைப் போலவே ஏன் இருக்கிறேன், ஶாஸ்த்ரங்கள், ஸஜ்ஜநங்கள் என்ற உபாயங்களினால் ஆத்மதத்வத்தைக் காண்கிறேன் என்ற வைராக்யத்தைத் முன்னிட்டுத் தோன்றியுள்ள இச்சையானது ஶுபேச்சை எனப் பண்டிதர்களினால் சொல்லப் படுகின்றது"

" ஶாஸ்த்ரஸஜ்ஜநஸம்பர்கவைராக்யாப்யாஸபூர்வகம்.
ஸத்விசாரப்ரவ்ருத்திர்யா ப்ரோச்யதே ஸா விசாரணா."

"—ஶாஸ்த்ரம், ஸஜ்ஜநங்களுடைய இணக்கம், அப்யாஸ பூர்வமாயுள்ள வைராக்யம், அதனுடைய விசாரத்தில் ப்ரவ்ருத்தி என்ற யாதொன்றுஉண்டோ, அது விசாரணா என்று சொல்லப் பெறுகின்றது"

" விசாரணா ஶுபேச்சாப்யாம் இந்தரியார்த்தேஷ்வஸக்ததா.
யத்ர ஸா தநுதாமேதி பாரோச்யதே தநுமாநஸா

"—விசாரணா, ஶுபேச்சா என்ற இவைகளினால் இந்த்ரிய விஷயங்களில் பற்றற்ற நிலையானது எவ்விடத்தில் தோன்றுகின்றதோ, அது தாநவமாயிருக்கின்ற தன்மையை அடைகின்றதோ, அது தநுமாநஸா எனச்சொல்லப் பெறும்" (தநு என்ற சொல் ஶரீரத்தைக் குறிப்பது).

" பூமிகாத்ரிதயாப்யாப்யாஸாத் சித்தே஽ர்த்தவிரதேர்வஶாத்.
ஸ்த்வாத்மநி ஸ்திதி: ஶுத்தே ஸத்வாபத்திருதாஹ்ருதா."

"மூன்று பூமிகைகளுடைய அப்யாஸத்தினால் சித்தத்திலே தோன்றிய விஷயங்களுடைய விரக்தியின் வஶத்தினால் ஶுத்தமாயுள்ள ஆத்மனிடத்தில் யாதொரு நிலையானது இருக்கின்றதோ, அது ஸத்வாபத்தி எனச் சொல்லப்பெறும்"

" தஶாசதுஷ்டயாப்யாஸாத் அஸம்ஸர்கபலா து யா.
ரூடஸத்வசமத்காரா ப்ரோக்தா ஸம்ஸக்திநாமிகா."

"—நான்கு நிலைகளுடைய அப்யாஸத்திலிருந்து கிடைத்துள்ள உறுதியின் காரணமாகத் தோன்றிய தொடர்பற்ற பயன் என்பது யாதொன்று உண்டோ; அது சிறந்ததும், ஸத்தையாயுமுள்ள ப்ரஹ்மாநந்தத்தை க்ரஹிப்பதற்குத் திறமைவாய்ந்ததாக எந்த பூமிகையிலுள்ளதோ, அது ஸ்ம்ஸக்தி என்ற பெயரையுடைய பூமிகை எனப் பெறும்."

" பூமிகாபஞ்சகாப்யாஸாத் ஸ்வாத்மாராமதயா ப்ருஶம்.
ஆப்யந்தராணாம் பாஹ்யாநாம் பதார்த்தாநாமபாஸநாத்:.
பரப்ரயுக்தேந சிரம் ப்ரயத்நேநாவபோதநம்.
பதார்த்தபாவிநீ நாம ஷஷ்டீ பவதி பூமிகா"

"—இந்த ஐந்து பூமிகைகளுடைய அப்யாஸத்தினல் தனது ஆத்மனிடத்தில் திளைத்துள்ள நிலையிலே உறுதியாயுள்ளதும், உள்ளேயும், வெளியேயுமிருக்கின்ற பதார்த்தங்களுடைய ப்ரகாசமின்மையால் நீண்டகாலம் பிறரால் செய்யப்பெற்ற முயற்சியினல் உணர்வைப் பெற்றுள்ள ஸமாதியினுடைய நிலையானது எங்கே தோன்றுகின்றதோ, அது ஆரூவதாசிய பதார்த்தபாவிநீ பூமிகை எனச் சொல்லப்பெறும்"

"பூமிஷட்க சிராப்யாஸாத் பேதஸ்யாநுபலம்பநாத்.
யத் ஸ்வபாவைக நிஷ்டத்வம் ஸா ஜ்ஞேயா துர்யகா ஸ்திதி:" இதி.

"—இந்த ஆறு பூமிகைகளுடைய நீண்டகால அப்யாஸத்தினல் பேதத்தினுடைய வேற்றுமையைக் காணுததால் யாதொன்று இயல்பாகவே காண்கின்றதோ; அது துர்யகா என அழைக்கப் பெறும்." என்றவாறு.

"அத்ர பூமிகாத்ரிதயம் ப்ரஹ்மவித்யாயா; ஸாதநமேவ,
ந து வித்யாகோடௌ அந்தர்பவதி. பூமித்ரயே பேதஸத்யத்வ-
புத்தேரநிவார்யத்வாத். அத ஏவ எதத் ஜாகரணமிதி
வ்யபதிஶ்யதே" இதி.

"—இவ்விடத்தில் மூன்று பூமிகைகள் ப்ரஹ்மவித்தைக்கு ஸாதநமே யாகும். அவை வித்யாகோடியில் அடங்காதது. மூன்று பூமிகையிலும் பேதத்தினுடைய ஸத்யத்தன்மையுள்ள புத்திக்கு நிவ்ருத்தியின்மையால் என்க. ஆகையினலே இது ஜாகரணம் எனவும் சொல்லப் பெறுகின்றது.

ததுக்தம்—அதுவும் சொல்லப் பெற்றுள்ளது—

"பூமிகாத்ரிதயம் த்வேதத் ராம ஜாக்ரதிதி ஸ்திதம்.
யதாவத் பேதபுத்யேதம் ஜகஜ்ஜாக்ரதி த்ருச்யதே" இதி.

—ஓ ராம! இந்த மூன்று பூமிகைகளும் ஜாகரணம் (விழிப்பு) என்ற நிலையில் இருப்பன. உள்ளவாறு பேத புத்தியினல் இந்த உலகம் விழித்துள்ளதாகக் காணப்பெறுகின்றது" என்றவாறு.

"ததோ வேதாந்த வாக்யாத் நிர்விகல்பக:
ப்ரஹ்மாத்மைக்ய ஸாக்ஷாத்கார: சதுர்த்தீ-
பூமிகா ஸத்வாபத்தி:; சதுர்த்தபூமௌ ஸர்வ-
ஜகதுபாதாநஸ்ய ப்ரஹ்மண: வாஸ்தவம்

அத்விதீய ஸத்தாஸ்வபாவம் நிஸ்சித்ய, ப்ரஹ்மணி
ஆரோபிதயோ: ஜகச்சப்தாபிதேயயோ: நாம-
ரூபயோ: மித்யாத்வம் அவகச்சதி; மூமுக்ஷோ: பூர்வோக்த-
ஜாகரணமபேக்ஷ்ய இயம் பூமி: ஸ்வப்ந:'' இதி.

''—ஆகையினால் வேதாந்த வாக்யத்திலிருந்து தோன்றிய நிர்விகல்பமாயுள்ள ப்ரஹ்மத்தோடு ஆத்மைக்ய ஸாக்ஷாத்காரமானது நான்காவது பூமிகையாகிய ஸத்வாபத்தி யாகும்.

''நான்காவது பூமிகையில் எல்லா உலகத்திற்கும் உபாதானமாயுள்ள ப்ரஹ்மத்திற்கு உண்மையாயுள்ளதும், இரண்டற்றதும், ஸத்தையின் இயல்பாயமைந்துமான நிலையானது உறுதி செய்து, ப்ரஹ்மத்தினிடம் ஆரோபணம் செய்யப்பெற்ற உலகம் என்ற சொல்லோடு கூடிய பெயர், உருவம் இவைகளுக்கு மித்யாத்வமானது (பொய்யானதன்மை) அறியப் பெறுகின்றது. முமுக்ஷுவுக்கு முன்பு சொல்லப்பெற்ற ஜாகரணத்தையபேக்ஷித்து இந்த பூமியானது ஸ்வப்நமாகும்'' என்றவாறு.

ததாஹ —

'' அத்வைதே ஸ்தைர்யமாபந்நே த்வைதே சோபரதிம் கதே.
பஶ்யந்தி ஸ்வப்நவல்லோகம் சதுர்த்தீம் பூமிகாமிதா:
சித்தம் து ஶரதப்ராம்சவிலயம் ப்ரவிலீயதே.
ஸ்வஸ்வேதரம் ச ஸந்மாத்ரம் யத்ப்ரபோதாநுபாஸதே.
ஸத்தாவஶேஷ ஏவாஸ்தே சதுர்த்தீம் பூமிகாமித:''
யோகிந: ஸர்வபூதேஷு ஸத்ரூபம் நௌமி தம் ஹரிம். இதி.

அதையும் சொல்லுகிறார்—

''—அத்வைதமானது உறுதியைப் பெற்றபொழுதும், த்வைதமானது ஶாந்தியைப் பெற்றபொழுதும், நாகாவது பூமியையடைந்தவர்கள் உலகத்தை ஸவப்நம் போல் காண்கின்றனர்''

'' எக்காரணத்தால் அந்த பூமிகையில் சித்தமானது, சரத்காலத்திலே தோன்றும் மேகம் போல் சிதைவுற்று மறைகின்றதோ அப்பொழுது தன்னுடையதையும், தனக்கு வேறானவற்றையும் ஸத்தின் அளவிலேயுள்ள ப்ரஹ்மத்தை எந்த உணர்வினால் உபாஸிக்கின்றனரோ.''

"—நான்காவது பூமிகையையடைந்த யோகிகள் ஸத்தையை எஞ்சியுள்ள நிலையில் இருக்கின்றனர். எல்லா ப்ராணிகளிடத்திலும் ஸத்தையின் வடிவாயமைந்த அந்த ஹரியை நமஸ்காரம் செய்கிறேன்" என்றவாறு.

" ஸோऽயம் சதுர்த்தீம் பூமிகாம் ப்ராப்த: யோகீ
ப்ரஹ்மவித் இத்யுச்யதே; பஞ்சம்யாதய: திஸ்ர:
பூமய: ஜீவந்முக்தே: அவாந்தரபேத:; தே ச நிர்-
விகல்பஸமாத்யப்யாஸபலேந விஶ்ராந்திதாரதம்யேந
ஸம்பத்யந்தே" இதி.

"—நான்காவது பூமிகையையடைந்த இந்த யோகியானவன், ப்ரஹ்மவித் (ப்ரஹ்மததையுணர்ந்தவன்) எனச் சொல்லப்பெறுகின்றான். ஐந்து முதற்கொண்டு மூன்று பூமிகள் ஜீவந்முக்தியினுடைய அவாந்தர (இடையேயுண்டான) பேதங்கள். அவைகளும் நிர்விகல்பஸமாதியினுடைய அப்யாஸபலத்தினாலும், விஶ்ராந்தியினுடைய ஏற்றத்தாழ்வினாலும் அடையப் பெறுகின்றான்" என்றவாறு.

" பஞ்சமபூமௌ நிர்விகல்பகாத் ததா ஸ்வயமேவ
வ்யுத்திஷ்டதி, ஸோऽயம் யோகீ ப்ரஹ்மவித்வர:.
ஷஷ்டபூமௌ பார்ஶ்வஸ்தை: போதித: வ்யுத்திஷ்டதி,
ஸோऽயம் வித்வத்வரீயாந்; ததேத் பூமிகாத்வயம்
ஸுஷுப்தி: காடஸுஷுப்திரிதி சாபிதீயதே." இதி.

"—ஐந்தாவது பூமிகையில் நிர்விகல்பகஸமாதியிலிருந்து அப்பொழுது தானாகவே வெளியே வருகிறான். இந்த யோகியானவன் ப்ரஹ்மவித்வரன் ஆவான். ஆறாவது பூமியில் பக்கத்திலிருப்பவர்களால் உணரப்பெற்று எழுந்திருக்கிறான். இந்த யோகியானவன் வித்வத்வரீயான் எனப் பெறுவன். ஆகையால் இந்த பூமிகை இரண்டும் ஸுஷுபதி, ஆழ்ந்த ஸுஷுப்தி எனவும் சொல்லப் பெறுகின்றது." என்றவாறு.

ததாஹ—

"பஞ்சமீம் பூமிகாமேத்ய ஸுஷுபதிபதநாமிகாம்.
ஶாந்தாஶேஷவிஶேஷாம்ஶஸ்திஷ்டத்யுத்வைதமாத்ரகே.
அந்தர்முகதயா நித்யம் பஹிர்வ்ருத்திபரோऽபி தத்.
பரிஶ்ராந்ததயா நித்யம் நித்ராலுரிவ லக்ஷ்யதே.

குர்வந்நப்யாஸமேதஸ்யாம் பூமிகாயாம் விவாஸந:.
ஷஷ்டம் காடஸுஷுப்த்யாக்யாம் க்ரமாத் பத்தி பூமிகாம்.
யத்ர நாஸந்நஸத்ரூபோ நாஹம் நாப்யநஹம்க்ருதி:.
கேவலம் க்ஷீணமநந: ஆஸ்தே த்வைதைக்யவர்ஜி:.
(அத்வைதம் கேசிதிச்சந்தி த்வைதமிச்சந்தி கேசந.
ஸமம் ப்ரஹ்ம ந ஜாநந்தி த்வைதாத்வைதவிவர்ஜிதம்.)
அந்த: ஶூந்யோ பஹி: ஶூந்ய: ஶூந்ய: கும்ப இவாம்பரே.
அந்த: பூர்ணோ பஹி: பூர்ண: பூர்ண: கும்ப இவார்ணவே'' இதி.

அதைச் சொல்லுகிறார்—

''—ஸுஷுப்திபதம் என்ற பெயரையுடைய ஐந்தாவது பூமிகையையடைந்து ஶமநம் செய்யப் பெற்ற எல்லா விஶேஷமான அம்சத்தையுடைய அவன் அத்வைதத்தின் அளவிலே நிற்கிறான்''

''அந்நிலையில் அவன் வெளியேயுள்ள செயல்களில் இருந்த பொழுதிலும், அந்தர்முகத்தோடு எப்பொழுதும் காணப் பெறுகிறான். அவன் பரிஶ்ராந்தத்தோடு (களைப்படைந்த நிலை) எப்பொழுதும் உறக்கமுள்ளவனைப் போல் காணப் பெறுகின்றான்''

''வாஸனைகளைக் களைந்த அவன் இந்த பூமிகையில், அப்யாஸம் செய்து கொண்டு, ஆழ்ந்த ஸுஷுப்தி என்ற ஆறாவது பூமிகையில் முறையே செல்லுகிறான்''

''இந்த ஆறாவது பூமிகையில் இருக்கின்ற யோகியானவன் அஸத்தின் வடிவமில்லாமலும் ஸத்தின் வடிவமில்லாமலும், நான் என்ற நினைவில்லாமலும், அஹம்க்ருதியின்மையில்லாதவனும், பேதாபேதங்களிலிருந்து வெளியேறிய நிலையிலும் மறைந்த மநநத்தையும் உடையவனாக த்வைதத்தின் ஐக்யத்திலிருந்து வெளியேறியவனாக தனித்து இருக்கிறான்''

(''சிலர் அத்வைதத்தை விரும்புகின்றனர். சிலர் த்வைதத்தை விரும்புகின்றனர். த்வைதம், அத்வைதம் இவைகளினால் ஒதுக்கப்பெற்ற ஸமமாயுள்ள ப்ரஹ்மத்தை உணர்கின்றதில்லை'')

''உள்ளேயும் சூந்யம், வெளியேயும் சூந்யமாயுள்ள ஆகாயத்தையுடைய குடம் போலவும், உள்ளே நிறைந்தும் வெளியே நிறைந்தும், நிறைந்துள்ள கடலிலுள்ள குடம் போலவும அவன் இருக்கின்றான்'' என்றவாறு.

"காடம் நிர்விகல்ப ஸமாதிம் ப்ராப்தஸ்ய ஸம்ஸ்கார-
மாத்ரஶேஷஸ்ய சித்தஸ்ய மனோராஜ்யம் கர்த்தும்,
பாஹ்யபதார்த்தாந் க்ரஹீதும் வா ஸாமர்த்யாபாவாத்
ஆகாஶாவஸ்தித கும்பவத் அந்தர்பஹி: ஶூந்ய-
தவம். ஸ்வயம்ப்ரகாஶஸச்சிதாநந்தைகரஸே ப்ரஹ்மணி
நிமக்நத்வேந பஹிஶ்ச ஸர்வத்ர பாஹ்யத்ருஷ்ட்யா
ஸமுத்ரமத்யஸ்தாபித ஜலபூர்ண-
கும்பவத் அந்த: பூர்ணத்வம்" இதி.

"—ஆழ்ந்த நிர்விகல்ப ஸமாதியையடைந்துள்ளதும், ஸம்ஸ்காரத்தின் அளவிலே எழுச்சியுள்ளதுமான சித்தத்திற்கு, மனோராஜ்யம் செய்வதற்கும், வெளியேயுள்ள வஸ்துக்களை எடுத்துக்கொள்ளுவதற்கும், திறமையின்மையினாலேயே, ஆகாஶத்திலுள்ள கும்பம் (குடம்) போல் வெளியேயுள்ள ஶூந்யத்தன்மையானது இருப்பது எனச் சொல்லப் பெற்றது. மற்றும், ஸ்வயம்ப்ரகாசமாயும், (தன்னொளி), ஸச்சிதாநந்தத்தையே முக்கியமாகக் கொண்டு நிரம்பியுள்ளதுமான ப்ரஹ்மத்தினிடத்தில் திளைத்துள்ள காரணத்தினால், வெளியில் எல்லாவிடங்களிலும் ப்ரஹ்மத்தின் பார்வையோடு கூடியதால், ஸமுத்ரத்தினுடைய நடுவே வைக்கப்பெற்ற ஜலம் நிறைந்த குடம் போல் உள்ளேயும், வெளியேயும் பூரணத் தன்மையானது சொல்லப் பெற்றது" என்றவாறு.

"துரியாபிதாம் ஸப்தமீம் பூமிம் ப்ராப்தஸ்ய
யோகிந: ஸ்வத: பரதோ வா வ்யுத்தாநமேவ
நாஸ்தி. ஈத்ருஶமேவ உத்திஶ்ய—"தேஹம் விந-
ஶ்வரமவஸ்திதமுத்திதம் வா" இத்யாதி பாகவத-
வாக்யம் ப்ரவ்ருத்தம். அஸம்ப்ரஜ்ஞாதஸமாதிப்ரதிபாதகாநி
யோகஶாஸ்த்ராணி அத்ரைவ பர்யவஸிதாநி" இதி.

"—நான்காவது எனச் சொல்லப்பெற்ற ஏழாவது பூமியையடைந்த யோகிக்குத் தானாகவோ, பிறரிடத்திலிருந்தோ எழுச்சியென்பது இல்லை. இதைக் கருதியே—"சரீரமானது அழியுமியல்பைப் பெற்றது. இது இருந்தாலும், எழுச்சியடைந்தாலும்" என்பன போன்ற பாகவதவாக்கியம் ப்ரவ்ருத்தம். (தோன்றியது) அஸம்பரஜ்ஞாத ஸமாதியை வெளியிடுகின்ற யோகஶாஸ்த்ரங்களும் இவ்விடத்திலேயே முடிவை யடைகின்றன." என்றவாறு.

''ஸோऽயமீத்ருஶோ யோகீ பூர்வோதாஹ்ருதஸ்ருதௌ ப்ரஹ்மவித்வரிஷ்ட இத்யுச்யுதே. ததேவம் பார்ஸ்வஸ்த-போதித: ஸித்தோ ந பஶ்யதீதி அநயோர் பூமித்வயே வ்யவஸ்திதத்வாத் ந கோऽபி விரோத;'' இதி.

''—இத்தகைய அந்த யோகியானவன் உதாஹரணமாகச் சொல்லப் பெற்ற முந்தின ஸ்ருதியில் ப்ரஹ்மவித்வரிஷ்டன் எனச் சொல்லப் பெற்றது. இவ்வாறு பக்கத்திலிருப்பவனுல் உணரச் செய்த ஸித்தன் பார்ப்பதில்லை என்ற இந்த இரண்டு பூமிகை களில் வ்யவஸ்தை செய்ப்ப் பெற்றுள்ளதால் ஒரு விரோதமும் கிடையாது'' என்றவாறு.

''தத்ராயம் ஸம்க்ரஹ:—பஞ்சம்யாதி பூமித்ரயரூபாயாம் ஜீவந்முக்தௌ ஸம்பாத்யுமாநாயாம் த்வைதப்ரதிபாஸா-பாவேந ஸம்ஶயவிபர்யயப்ரஸங்காபாவாத் உத்பந்நம் தத்வ-ஜ்ஞாநமபாதேந ரக்ஷிதம் பவதி. ஸேயம் ஞாநரக்ஷா ஜீவந்முக்தே: ப்ரதமம் ப்ரயோஜநம்'' இதி.

''—இவ்விடத்தில் இது சுருக்கம் செய்யப்பெறுகின்றது—ஐந்து முதலுள்ள மூன்று பூமிகையின் வடிவாயுள்ள ஜீவந்முக்தி யானது ஸம்பாதிக்கப் பெற்றுள்ள பொழுது த்வைதத்தினுடைய ப்ரதிபாஸத்தின் இன்மையினுல், ஸம்ஶயம், விபர்யயம், இவை களுடைய தொடர்பு இல்லாதகாரணத்தினுல் தோன்றிய தத்வ ஜ்ஞாநத்தினுடைய தடங்கலற்ற நிலையானது ரக்ஷிக்கப் பெற்ற தாக இருக்கின்றது. இந்த ஞாநரக்ஷையானது ஜீவந்முக்திக்கு முதலாவது ப்ரயோஜநமாகும்''. என்றவாறு.

''தபோ த்விதீயம் ப்ரயோஜநம். யோகபூமீநாம்
தேவத்வாதிப்ராப்திஹேதுதயா தபஸ்தவம் த்ரஷ்டவ்யம்.
தத்தேதுத்வம் ச அர்ஜுநபகவதோ; ஶ்ரீராமவஸிஷ்டயோஶ்ச
ப்ரஸ்நோத்தராப்யாம் அவகம்யதே. அர்ஜுந உவாச—
''அயதி; ஶ்ரத்தயோபேத : யோகாச்சலிதமாநஸ;.
அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி.
கச்சிந்நோபயுவிப்ரஷ்ட: ச்சிந்நாப்ரமிவ நஶ்யதி
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி.
ஏதந்மே ஸம்ஶ்யம் க்ருஷ்ண ச்சேத்துமர்ஹஸ்யஶேஷத;.
த்வதந்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுபத்யதே'' இதி.

"—தவமானது இரண்டாவது ப்ரயோஜநமாகும். யோகபூமிகைகளுக்கு தேவதைகளுடைய தன்மையின் அடைவின் காரணத்தினால் தவத்தன்மையின் ப்ரயோஜநத்தைக் காணவேண்டும். அதற்குரிய காரணத்தன்மையும் அர்ஜுநன், பகவான் இவர்களுடையவும், ஸ்ரீராமன், வஸிஷ்டர் இவர்களுடையவும் கேள்வி, பதில் என்ற இவைகளினால் அறியப் பெறுகின்றது—

அர்ஜுநன் சொல்லுகிறான்—

"—நம்பிக்கையுடையோனெனினும், தன்னைக் கட்டாமல் யோகத்தினின்றும் மநம் நழுவியவன், யோகத்தில் தோற்றுப் போய் அப்பால் என்ன கதியடைகிறான் ஓ கண்ணா?"

"ஓ பெருந்தோளாய்! ஒரு வேளை அவன் இரண்டும் கெட்டவனாய் உடைந்த மேகம் போல் அழிகிறானோ? அல்லது உறுதியற்றவனாய் ப்ரஹ்ம நெறியிலே குழப்ப மெய்திய மூடன் யாதாகின்றான்".

"ஓ க்ருஷ்ண! எனக்குள்ள இந்த ஐயத்தை நீ அகற்றி விடுக. உன்னையன்றி இந்த ஐயத்தை அகற்றுவோர் வேறெவருமிலர்" என்றவாறு.

ஸ்ரீ பகவானுவாச—

"பார்த்த நைவேஹ நாமுத்ர விநாஶஸ்தஸ்ய வித்யதே.
ந ஹி கல்யாணக்ருத் கஶ்சித் துர்கதிம் தாத கச்சதி.
ப்ராப்ய புண்யக்ருதாங் லோகாங் உஷித்வா ஶாஶ்வதீ; ஸமா,:.
ஶுசீநாம் ஸ்ரீ மதாம் கேஹே யோகப்ரஷ்டோ ऽபிஜாயதே,
அதவா யோகிநாமேவ குலே பவதி தீமதாம்.
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜந்ம யதீத்ருஶம்.
தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதேஹிகம்.
யததே ச ததோ பூய: ஸம்ஸித்தௌ குருநந்தந" இதி

ஸ்ரீ பகவான் சொல்லுகிறார்—

"—ஓ பார்த்த! அவனுக்கு இவ்வுலகத்திலும், மேலுலகத்திலும் அழிவில்லை. மகனே! நன்மை செய்வோன் எவனும் கெட்டகதியடைய மாட்டான்".

"யோகத்தில் தவறியவன். புண்யம் செய்வோரின் உலகங்களை யெய்தி அங்கு கணக்கில்லாத வருஷங்கள் வாழ்ந்து தூய்மையுடைய செல்வர்களின் வீட்டில் பிறக்கிறான்"

"அல்லது புத்திமான்களாகிய யோகிகளுடைய குலத்திலேயே பிறக்கிறான். இவ்வுலகில் இது போன்ற பிறவி யெய்துதல் மிகவும் அரிது."

"அவ்விடத்தில் அவன் பூர்வஶரீரத்திற்குரிய புத்தியைப் பெறுகிறான். ஓ குருநந்த? அப்பால் அவன் மறுபடியும் வெற்றிக்கு முயற்சி செய்கிறான்" என்றவாறு.

ஸ்ரீ ராம உவாச—

"ஆத்யாமத த்விதீயாம் வா த்ருதீயாம் பூமிகாமுத.
ஆருடஸ்ய ம்ருதஸ்யாத கீத்ருஶீ பகவந் கதி:?.

ஸ்ரீ ராமன் சொல்லுகிறான்—

"—முதலாவது பூமிகை, பிறகு இரண்டாவது பூமிகை அல்லது மூன்றாவது பூமிகையையாவது அடைந்தும், மரித்தும் உள்ளவனுக்கு பிறகு எத்தகைய கதி உண்டாகின்றது. ஓ பகவன் சொல்லுவீராக"

வஸிஷ்ட உவாச—

"யோக பூமிகயோத்க்ராந்த ஜீவிதஸ்ய ஶரீரண:.
பூமிகாம்ஶாநுஸாரேண க்ஷீயதே பூர்வதுஷ்க்ருதம்.
தத: ஸுரவிமாநேஷு லோகபாலபுரேஷு ச.
மேருபவநகுஞ்ஜேஷு ரமதே ரமணீஸக:.
தத: ஸுக்ருதஸம்பாரே துஷ்க்ருதே ச புரா க்ருதே.
போகக்ஷய பரிக்ஷீணே ஜாயந்தே யோகிநோ புவி.
ஶுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே குப்தே குணவதாம் ஸதாம்.
தத்ர ப்ராக்பாவநாப்யஸ்தம் யோக பூமித்ரயம் புத:.
ஸ்ப்ருஷ்ட்வோபரிபதத்யுச்சைருத்தரம் பூமிகாத்ரயம்" இதி.

வஸிஷ்டர் சொல்லுகிறார்—

"யோகபூமிகையினால் வெளியேறிய ஜீவத்தன்மையுள்ள ஶரீரிக்கு பூமிகையினுடைய அம்ஶத்தைத் தழுவிய முன்வினைப் பயன் நாஶமடைகின்றது"

''பிறகு தேவவிமாநங்களிலும், லோகபாலர்களுடைய புரங்களிலும், மேருமலையினுடைய தாழ்வரையிலுள்ள உபவநங்களிலும், அழகிய பெண்களைத் தொடர்ந்து இரமிக்கின்றான். (ஆநந்தத்தோடு இருக்கிறான்)''

''முன் பிறவியில் செய்த வினைப்பயன்கள் ஒழிந்து, புண்யத் தொகுதிகள் அநுபவிக்கப் பெற்றும், போகம் நாசமடைந்ததும் உலகில் யோகிகளுடைய குலத்தில் அவன் தோன்றுகின்றான்''

''தூய்மை பெற்ற ஸ்ரீமான்களும், குணக்குன்றுகளுமாய் விளங்குகின்ற ஸாதுக்களால் நன்கு ரக்ஷிக்கப் பெற்ற வீட்டில் பிறந்து, யோகத்தினால் பயிற்சி செய்யப் பெற்ற யோக பூமிகைகளுடைய க்ரமத்தைத் தழுவியவர்களாய், பண்டிதர்கள் மேலே செல்லுகின்றனர். அடுத்துள்ளதான உயர்வாயுள்ள பூமிகைத் தழுவிக் கொண்டு முயற்சியும் செய்கின்றனர்'' என்றவாறு.

சங்கை—

''அஸ்த்வேவம் யோகபூமீநாம் தேவலோக ப்ராப்திஹேது-
த்வம் தாவதா தபஸ்தவம் குத இதி சேத்; ஶ்ருதேரிதி ப்ரூம:

—இவ்வாறு யோக பூமிக்குத் தேவலோகத்தை யடைவதற்குக் காரணத் தன்மை இருக்கட்டும் அந்த அளவிலே தவத் தன்மை எங்கேயுள்ளது? என்றால் ஶ்ருதியிலிருந்து எனச் சொல்லுவோம்.

ததா ச தைத்திரீயா ஆமநந்தி—

''தபஸா தேவா தேவதாமக்ர ஆயந், தபஸர்ஷய:
ஸு॒வரந்வவிந்தந்'' இதி.

அவ்விதமே தைத்திரியர்கள் சொல்லுகின்றனர்—

''தவத்தினால் தேவர்கள் தேவத்தன்மையின் முதன்மையைப் பெற்றனர். தவத்தினால் மஹர்ஷிகள் ஸ்வர்கலோகத்தை யடைந்தனர்'' என்றவாறு.

'' தத்வஜ்ஞாநாத் ப்ராசீநஸ்ய பூமிகாத்ரயஸ்ய
தபஸ்த்வே ஸதி, தத்வஜ்ஞாநஸ்யோத்தரகாலீநஸ்ய
நிர்விகல்ப ஸமாதிரூபஸ்ய பஞ்சம்யாதிபூமிகாத்ரயஸ்ய
தபஸ்த்வம் கைமுதிகந்யாய்ஸித்தம்.'' இதி.

''—தத்வஜ்ஞாநத்திற்கு முன்னேயுள்ள மூன்று பூமிகைகளும் தவத்தன்மையுள்ளதாயின், தத்வஜ்ஞாநத்திற்குப் பின்னேயிருக்கின்ற நிர்விகல்ப ஸமாதியின் வடிவாயுள்ள ஐந்து முதலான மூன்று பூமிகைகளுக்கும் தவத்தன்மையானது கைமுதிக நியாயத்தினுல் நிறைவையுடையதாயிருக்கின்றது'' என்றவாறு.

அத ஏவ ஸ்மர்யதே—

'' மநஸஶ்சேந்த்ரியாணும் ச ஐகாக்ர்யம் பரமம் தப:.
தஜ்ஜ்யாய: ஸர்வதர்மேப்ய: ஸ தர்ம: பர உச்யதே.''

ஆகையினுல் ஸ்மரணம் செய்யப் பெறுகின்து—

''—மநம், பொறிகள் என்ற இவைகளுடைய ஒன்றிய தன்மையே சிறந்த தவமாகும். எல்லா தர்மங்களிலும் இது மேன்மையுடையது. அதுவே சிறந்த தர்மமெனவும் சொல்லப்பெறும்'' என்றவாறு.

''யத்யபி அநேந ப்பாயேந தபஸா ப்ராப்யம்
ஜந்மாந்தரம் நாஸ்தி, ததாபி லோகஸம்க்ரஹாய
இதம் தப உச்யதே; அத ஏவ பகவாநாஹ—

' லோகஸம்க்ரஹமேவாபி ஸம்பஶ்யந்கர்துமர்ஹஸி'' இதி.

''—இருந்தபொழுதிலும், இந்த நியாயத்தினுல் சொல்லப் பெற்றுள்ள தவத்தினுல் அடையப்பெறுகின்ற மறுபிறவியில்லை. அவ்வாறுள்ள பொழுதிலும் உலகத்தின் உபகாரத்தின் பொருட்டு இந்தத் தவமானது சொல்லப் பெறுகின்றது. அக்காரணத்தினுலேயே பகவான் சொல்லுகிருர்— ''உலகத்தின் உபகாரத்தின் பொருட்டும் நீ தொழில் புரிதல் தகும்'' என்றவாறு.

''ஸம்க்ராஹ்யஶ்ச லோக: த்ரிவித:—ஶிஷ்ய:, பக்த:,
தடஸ்தஶ்சேதி, தத்ர ஶிஷ்யஸ்ய அந்தர்முகே யோகிநி
குரௌ ப்ராமாணிகபுத்யதிஶயோ ததுபதிஷ்டே தத்வே,
பரமம் விஶ்வாஸம் ப்ராப்ய சித்தம் ஸஹஸா விஶ்ராம்யதி,'' இதி.

''—அந்த ஸம்க்ராஹ்யமும் (உபகாரம் செய்யத்தக்க) என்ற உலகம் மூவகையாகும்— சிஷ்யன், பக்தன், தடஸ்தன் என்பன

அவை. அவைகளில் ஶிஷ்யனுக்கு அந்தர்முகமாயுள்ள விஷயத்தில் யோகியாகிய குருவினிடத்தில் ப்ரமாணிக்கத்தன்மையை (நம்பிக்கை) யடைந்து வியப்பிற்குரிய அவரால் உபதேஶம் செய்யப்பெற்ற தத்வத்திலே சிறந்த நம்பிக்கையைப் பெற்று, சித்தமானது விரைவில் விஶ்ராந்தியையடையும்" என்றவாறு.

அத ஏவ ஶ்ரூயதே—

" யஸ்ய தேவே பராபக்தி: யதா தேவே ததா குரௌ.
தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாஶந்தே மஹாத்மந:. இதி.

ஆகையினுலேயே கேட்கப் பெறுகின்யது—

"—எவனுக்கு ஈச்வரனிடம் மிகுந்த பக்தியுள்ளதோ, ஈசனிடத்துள்ளது போலவே குருவினிடத்திலும் பக்தியுள்ளதோ, அத்தகைய மஹாத்மாவினிடத்தில் இந்தப் பொருள்கள் கூறுமிடத்து ஒளியுடன் விளங்குகின்றன." என்றவாறு.

ஸ்மர்யதே ச—

"ஶ்ரத்தாவாந் லபதே ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்ரிய:.
ஞாநம் லப்த்வா பராம் ஶாந்திமசிரேணுதிகச்ச்சதி," இதி.

ஸம்ரணமும் செய்யப் பெறுகின்றது—

"—குருவினுல் எந்த ப்ரஹ்மஜ்ஞாநம் உபதேஶம் செய்யப்பெறுகின்றதோ, அவ்வுபதேஶத்தில் மிகுந்த நம்பிக்கையும், ஞாநத்தைப் பெறுவதிலேயே விடாமுயற்சியும் உள்ளவனுகப் புலன்களையடக்கியிருப்பவன், ஞாநம் கைவரப்பெற்று விரைவில் மோக்ஷத்தையடைகின்ருன்" என்றவாறு.

"அந்நப்ரதாந நிவாஸஸ்தாநகல்பநாதிநா
யோகிநம் ஸேவமாநோ பக்த: ததீயம் தப:
ஸ்வயமேவ ஆதத்தே—"தஸ்ய புத்ரா:
தாயமுபயந்தி ஸுஹ்ருத: ஸாதுக்ருத்யாம், த்விஷந்த:
பாபக்ருத்யாம்" இதி.

"—பக்தனுகிய அவன், அந்நம் கொடுத்தல், தங்குவதற்கு இடம் அமைத்துக் கொடுத்தல் முதலியவைகளினுல் யோகியை ஸேவித்தானேயாகில், அந்த பக்தன் அந்த யோகியினுடைய தவத்தின் பயனைத் தானுகவே எடுத்துக் கொள்ளுகிருன்.

"அவனுடைய புத்திரர்கள் உரிமையைப் பெறுகின்றனர். அதாவது உரிமையுள்ள தந்தையையும், ஸுஹ்ருத்துகளாய் (உபகாரீ) இருந்து கொண்டு புண்யத்தையும், தவேஷிப்பவர் களாய் இருந்து கொண்டு பாபச் செய்கையினையும் அடைகின்றனர்" என்றவாறு.

"தடஸ்தோऽபி த்விவித:— ஆஸ்திக:, நாஸ்திகஸ்சேதி.
தத்ர ஆஸ்திக: ஸந்மார்காசரணம் த்ருஷ்ட்வா ஸ்வய-

மபி ஸந்மார்கே ப்ரவர்ததே; ததா ச ஸ்ம்ருதி:—

"யத்யதாசரதி ச்ரேஷ்டஸ்தத்ததேவேதரோ ஜந:.
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததநுவர்த்தே" இதி.

"—தடஸ்தனும் இருவகையாகும். ஆஸ்திகன், நாஸ்திகன் என்பன அவை. அவைகளில் ஆஸ்திகன் யோகியினுடைய நல் வழியைப் பார்த்துத் தானும் அவ்வழியைப் பின் பற்றத் தொடங்குவான்". அவ்வாறே ஸ்ம்ருதியும் சொல்லுகிறது—

"—வயது, தகுதி, நடத்தை முதலியவைகளில் பெரியோன் எந்தக் கர்மாவைச் செய்கின்றானோ, அதையே மற்ற மக்களும் பின்பற்ற முற்படுவார்கள். உலகமக்களும் அதையே பின் பற்றும்," என்றவாறு.

நாஸ்திகோऽபி யோகிநா த்ருஷ்ட: பாபாத் முச்யதே,;
ததுக்தம்—

"யஸ்யாநுபவபர்யந்தா தத்வே புத்தி: ப்ரவர்ததே.
தத்த்ருஷ்டிகோசரா: ஸர்வே முச்யந்தே ஸர்பாதகை:" இதி.

"—நாஸ்திகனும் யோகியினால் பார்க்கப் பெற்றானேயாகில் அவன் பாபத்திலிருந்து விடுதலை பெறுகின்றான்" என்றவாறு. அதுவும் சொல்லப் பெற்றுள்ளது—

"—எவனுக்குத் தத்வத்தில் புத்தியானது அநுபவம் வரையில் ப்ரவ்ருத்திக்கின்றதோ, (செல்லுகின்றதோ) அவனுடைய பார்வைக்குத் தென்படுகின்றவர்கள் எல்லோரும் எல்லா பாதகங்களிலிருந்தும் (பாபம்) விடுதலை பெறுகின்றனர்" என்றவாறு.

அநேந ப்ரகாரேண ஸர்வப்ராண்யுபகாரித்வம் யோகிநோ
விவக்ஷித்வா பட்யுதே—

"ஸ்நாதம் தேந ஸமஸ்ததீர்த்தஸலிலே ஸர்வாபி தத்தாவநி:
யஜ்ஞாநாம் ச ஸஹஸ்ரமிஷ்டமகிலா தேவாஶ்ச ஸம்பூஜிதா:.
ஸம்ஸாராச்ச ஸமுத்ருதா: ஸ்வபிதரஸ்தரைலோக்ய-
பூஜ்யோऽப்யஸௌ
யஸ்ய ப்ரஹ்மவிசாரணே க்ஷணமபி ஸ்தைர்யம் மந:
ப்ராப்நுயாத்"

"குலம் பவித்ரம் ஜநநீ க்ருதார்த்தா
விஶ்வம்பரா புண்யவதீ ச தேந.
அபாரஸம்வித் ஸுகஸாகரேऽஸ்மிந்
லீநம் பரே ப்ரஹ்மணி யஸ்ய சேத:" இதி.

"—இந்த வகையினுலே எல்லா ஜீவராசிகளுடைய உபகாரத் தன்மையும் யோகிக்கு விவக்ஷை செய்து படிக்கப் பெறுகின்றது—

"—அவனுல் புண்யம் பயக்கும் எல்லா ஜலங்களிலும் ஸ்நாநம் செய்யப் பெற்றது. எல்லா பூமிகளும் தாநம் செய்யப் பெற்றது. ஆயிரம் தடவை யாகங்களும் செய்யப் பெற்றன. எல்லா தேவர் களும் நன்கு ஆராதிக்கப் பெற்றனர். தனது பித்ருக்களும் ஸம் ஸாரத்திலிருந்து மீட்கப் பெற்றனர், இவன் மூவுலகிலும் பூஜிக்கப் பெற்றவனுயினும், எவனுடைய மநமானது சிறந்த ப்ரஹ்ம விசாரத்தில் க்ஷணகாலமாயினும் உறுதியை யடைகின்றதோ, அவன் யாவற்றையும் அடைகிருன்."

"அவ்வாறு எவனுடைய சித்தமானது இந்தக் கரைகாணுத ஸம்வித் என்றும் ஸுகவடிவாயமைந்த கடலில் சிறந்ததாயுள்ள ப்ரஹ்மத்தினிடத்தில் ஒடுங்கியிருக்கின்றதோ, அவனுல் குலம் தூய்மையடையும். அன்னை புண்யவதியாயிருப்பவன். இப் பரந்த பூமியும் புண்யமுடைத்தாம்," என்றவாறு.

"ந கேவலம் யோகிந: ஶாஸ்த்ரீய வ்யவஹாரஸ்யைவ
தபஸ்த்வம்; கிம்து ஸர்வஸ்யைவ லௌகிகவ்யவஹாரஸ்யாபி.
ததா ச தைத்திரீயா: ஸ்வஶாகாயாம் நாராயுணஸ்ய
அந்திமேந அநுவாகேந விதுஷோऽபி மஹிமாநம் ஆமநந்தி,
அஸ்மிம்ஶ்ச அநுவாகே பூர்வபாகே யோகிநோ
அவயவா: யஜ்ஞாங்கத்ரவ்யத்வேந ஆம்நாதா:—

"—யோகிகளுக்கு மாத்திரமே ஶாஸ்த்ரத்தைத் தழுவிய வ்யவஹாரத்தன்மை என்பது இல்லை, ஆயினும் எல்லா லௌகிக

வ்யவஹாரத்திற்குமுண்டு. ஆகவே தைத்திரீயர்கள் தங்களுடைய ஶாகையிலுள்ள நாராயணோபநிஷத்தினுடைய கடைசி அநுவாகத்தினால் வித்வானுக்கும் மஹிமாநம் உண்டு என்பதைச் சொல்லுகின்றனர். இந்த அநுவாகத்தின் பூர்வபாகத்தில் (முதற்பகுதியில்) யோகியினுடைய அவயவங்கள் யாகத்திற்குரிய அங்கங்களுடைய த்ரவ்யத் தன்மையையடைந்துள்ளதையும், அவர்கள் சொல்லுகின்றனர்—

**"தஸ்யைவம் விதுஷோ யஜ்ஞஸ்யாத்மா யஜமாந:,**
**ஶ்ரத்தா பத்நீ, ஶரீரம் இத்மம், உரோ வேதி:, லோமாநி பர்ஹி:,**
**வேத: ஶிகா, ஹ்ருதயம் யூப:, காம: ஆஜ்யம், மத்யு: பஶு:,**
**தபோऽக்நி:, தம: ஶமயிதா, தக்ஷிணா, வாக்ஹோதா,**
**ப்ராண உத்காதா, சக்ஷுரத்வர்யு: மநோ ப்ரஹ்மா, ஶ்ரோத்ரமக்நீத்"**
**இதி.**

"—இத்தகைய வித்வானாகிய அந்த யோகியினுடைய வேள்விக்கு ஆத்மாவே தலைவன் (யஜமானன்), ஶ்ரத்தையே மனைவி, ஶரீரமே இத்மம் (ஸமித் விறகு), மார்பே வேதியாகும் (அக்நி குண்டம்), லோமங்களே பர்ஹி: (தர்பங்கள்), வேதமே ஶிகையாகும் (குடுமி), ஹ்ருதயமே யூபமாகும் (வேள்விக்குரிய ஸ்தம்பம்), காமமே (ஆசை) ஆஜ்யமாகும் (நெய்), கோபமே பஶுவாகும் (வேள்விக்குரியது), தவமே அக்நியாகும், தமமே (பொறிகளை யடக்குவது) சமநம் செய்வோன். (தாநமே) தக்ஷிணையாகும், வாக்கே ஹோதா (ரிக்வேத மந்த்ரங்களைச் சொல்லுவோன்), ப்ராணனே உத்காதா (ஸாமகாநம் செய்வோன்), சக்ஷு: அத்வர்யு: (கண்களே வேள்விக்குரிய தலைவன்), மநமே ப்ரஹ்மா (வேள்வியைக் கண்காணிப்பவன்), ஶ்ரோத்ரமே அக்நீத் ஆக்நீத்ரனாகும். (அக்நியைக் கவனிப்பவன்)" என்றவாறு.

**"அத்ர ச 'தாநம் தக்ஷிணா' இதி தாநபதம் அத்யாஹார்யும்,**
**"அத யத்போ தாநமார்ஜவமஹிம்ஸாஸத்யவசநம்"**
**இதி தா அஸ்ய தக்ஷிணா:" இதி ச்சந்தோகை: ஆம்நாதத்வாத்.**

"—இவ்விடத்திலும், தக்ஷிணா என்ற பதத்திற்கு முன் 'தாநம்' என்ற பதத்தையும் வருவித்துக்கொள்ளவேண்டும். ஏனெனில்—

"—பிறகு யாதொரு தவம், தாநம், ஆர்ஜவம், அஹிம்ஸை, ஸத்யவசநம் என்ற அவைகள் இந்த (யாகத்திற்கு) தக்ஷிணைக

ளாகும்'' என்று "ச்சந்தோகர்ளால் சொல்லப்பெற்றுள்ளதால் என்க.

''உக்தா துவாகே மத்யபாகே யோகிவ்யவஹாரா:
தஜ்ஜீவநகாலாஶ்ச, ஜ்யோதிஷ்டோமாவயவக்ரியாரூபத்வேந
உத்தரமார்கேண ஸர்வயஜ்ஞாவயவக்ரியாரூபத்வேந ச
ஆம்நாதா:—

''—சொல்லப் பெற்ற அநுவாகத்தில் (இருக்கின்ற) நடுப்பகுதியினாலே யோகியினுடைய வ்யவஹாரங்கள், ஜீவநகாலங்கள் என்றவைகளும், ஜ்யோதிஷ்டோமம் என்ற யாகத்தினுடைய அவயவங்களுடைய செயல்களின் வடிவங்களோடும், பிற்பகுதியினால் எல்லா யாகங்களுடைய செயல்களின் வடிவங்களோடும் சொல்லப் பெற்றுள்ளன—

'' யாவத் த்ரியதே ஸா தீக்ஷா, யதஶ்நாதி தத்தவி:, யத்
பிபதி தத்ஸ்ய ஸோமபாநம், யத் ரமதே ததுபஸத:,
யத்ஸம்சரத்யுபவிஶதி, உத்திஷ்டதே ச ஸ ப்ரவர்க்ய:,
யந்முகம் தாதஹவநீய:, யா வ்யாஹ்ருதி: ஆஹுதி:, யதஸ்ய
விஜ்ஞாதம் தஜ்ஜுஹோதி; யத் ஸாயம் ப்ராதரத்தி தத்
ஸமிதம், யத்ப்ராதர்மத்யந்திநம் ஸாயம் ச தாநி ஸவநாநி
யே அஹோராத்ரே தே தர்ஶபூர்ணமாஸௌ யே அர்த
மாஸாஶ்ச மாஸாஶ்ச தே சாதுர்மாஸ்யாநி, ய ருதவ:
தே பஶு பந்தா:, யே ஸம்வதஸராஶ்ச பரிவத்ஸராஶ்ச
தேடஹர்கணா:, ஸர்வவேதஸம் வா ஏதத்ஸத்ரம் யந்
மரணம் ததவப்ருத:'' இதி.

''—யாதொன்று தரிக்கப் பெறுகின்றதோ (தாங்குவது) அதுவே தீக்ஷையாகும். (அதாவது உயிர்தரித்தல் தீக்ஷையென்பது) யாதொன்று புசிக்கப் பெறுகின்றதோ (உண்பது) அதுவும், யாதொன்று குடிக்கப்பெறுகின்றதோ, அதுவும் இந்த யாகத்திற்குரிய ஸோமபாநம் எனச் சொல்லப் பெறும் (ஸோமபாநம் என்பது யாகத்தில் ஸோமரஸத்தை அருந்துவது), யாதொரு ரமணம் (விளையாடுதல்) உண்டோ அது உபஸதமென்பது (உபஸத் என்ற வேள்வி), யாதொரு ஸம்சாரம் (நடப்பது) உண்டோ, யாதொரு உட்காருதலுண்டோ, யாதொரு எழுந்திருத்தலுண்டோ இவைகள் யாவும் அந்த யாகத்திற்குரிய ப்ரவர்க்யமெனப் பெறும். (ப்ரவர்க்ய மென்ற யாகம்) யாதொரு முக

முண்டோ அது ஆஹவநீய மென்பதாகும். (ஆஹவநீய மென்ற அக்நி) யாதொரு இவனுடைய அறிவுண்டோ, அதை ஹோமம் செய்வது எனச் சொல்லப் பெறும்.

மாலையிலும், காலையிலும் எதைச் சாப்பிடுகிறனே என்பது யாதொன்று உண்டோ, அதுவே ஸமித்தாகும். (விறகுகள்) மாலை, காலை நண்பகல் என்பது யாதொன்று உண்டோ, அவைகள் யாகத்திற்குரிய மூன்று ஸவநங்களாவன. யாதொரு பகல் இரவு என்பவைகளுண்டோ அவை தர்ஶம், பூர்ணமாஸம் என்ற இஷ்டிகளாவன. யாதொரு அர்தமாஸ முண்டோ, (பக்ஷம்—பகுதி மாஸம்) மாஸங்கள் என்பன யாதொன்று உண்டோ அவைகள் சாதுர்மாஸ்யங்கள் எனச் சொல்லப் பெறுவன. (சாதுர்மாஸ்யம் என்ற வேள்வி) யாதொரு ருதுக்களுண்டோ அவைகள் பஶுபந்தங்கள். யாதொரு ஸம்வத்ஸரங்கள், (வருஷங்கள்) பரிவத்ஸரங்கள் (அவைகளின் உட்பிரிவுகள்) இருக்கின்றனவோ, அவைகள் அஹர்கண; (பகலின் கூட்டங்கள்) என்பவை. இந்த ஸத்ர மென்னும் யாகமானது கைப்பொருள்கள் யாவையும் தக்ஷிணையாகக் கொண்டதாகும். யாதொரு மரணமுண்டோ அதுவே அவப்ருத மென்பது" என்றவாறு.

" ஸர்வவேதஸம் ஸர்வஸ்வதக்ஷிணகம். அத்ர ஏதச்சப் தேந
ப்ரக்ருதாஹோராத்ராதி பரிவத்ஸராந்தம் ஸர்வ-
காலஸம்ஷ்ட்யுபலக்ஷிதம் யோகிந ஆயுர்விவக்ஷ்யதே,
யதாயு: தத் ஸர்வஸ்வதக்ஷிணேபேதம் ஸத்ரமித்யர்த்த:.'' இதி.

"—ஸர்வவேதஸம்—என்றது எல்லா ஸொத்துக்களையும் தக்ஷிணையாகக் கொண்ட யாகம். இது (ஆயுள்) ஸத்ரயாகமெனப் பெறும்), இதற்கு மரணமே அவப்ருதமாகும். (அவப்ருத மென்பது யாகத்தின் முடிவில் செய்கின்ற ஸ்நாநம்) அதாவது இவ்விடத்தில் ஏதத் (இது) என்ற சொல்லால் ப்ரக்ருதமாயுள்ள (நடைமுறை) அஹோராத்ரம் முதல் பரிவத்ஸரம் வரையிலுள்ள எல்லாக் காலங்களுடைய ஸ்மஷ்டியினல் (சேர்க்கை) சுட்டப் பெற்ற யோகியினுடைய ஆயுளைக் குறித்துச் சொல்லப் பெற்றது. யாதொரு ஆயுள் உண்டோ அது ஸர்வஸ்வம் என்ற தக்ஷிணையோடு கூடியதான ஸத்ரம் என்ற பொருளாகும்" என்றவாறு:

" உத்தாநுவாகே சரமாபகோ ஸர்வயஜ்ஞாத்மகம்
யோகிநம் உபாஸீநஸ்ய க்ரமமுக்திரூபம் ஸூர்யா சந்த்ரமஸோ:
கார்யகாரணப்ரஹ்மணே: தாதாத்ம்யலக்ஷணம்
பலமாம்நாயதே—

"—இப்பொழுது சொல்லப் பெற்ற அநுவாகத்தில் (இருக்கிற) கடைப்பகுதியினுல் எல்லா வேள்விகளின் வடிவாயமைந்த யோகியைக் குறித்தும், உபாஸிப்பவனுக்குரிய க்ரமமுக்தி வடிவாயமைந்த பலத்தைக் குறித்தும் ஸூர்யன், சந்த்ரன் இவர்களின் வடிவாயமைந்த கார்யகாரண ப்ரஹ்மங்களுடைய தாதாத்மய (ஒன்றிய) இலக்கணத்தின் பலத்தைக் குறித்தும் விளக்கப் பெறுகின்றது.—

"ஏதத் வை ஜராமர்யமக்நிஹோத்ரம் ஸத்ரம்
ய் ஏவம் வித்வாநுதகயநே ப்ரமீயதே தேவாநாமேவ
மஹிமாநம் கத்வா, ஆதித்யஸ்ய ஸாயுஜ்யம் கச்சதி,
அத யோ தக்ஷிணே ப்ரமீயதே, பித்ருணமேவ
மஹிமாநம் கத்வா, சந்த்ரமஸ: ஸாயுஜ்யம்
ஸலோகதாமாப்நோதி, ஏதெள வை ஸூர்யா-
சந்த்ரமஸோ: மஹிமாநெள ப்ராஹ்மணோ
வித்வாந் அபிஜயதி தஸ்மாத் ப்ரஹ்மணோ
மஹிமாநமாப்நோதி தஸ்மாத் ப்ரஹ்மணோ
மஹிமாநமித்யுபநிஷத்" இதி.

"—இது வயது முதிர்ந்த நிலையில் முடிவதாயுள்ள அக்நிஹோத்ரமாகும். எந்தப் பண்டிதன் இவ்வாறு சிந்தனை செய்கின்றானே, உத்தராயணத்தில் மரிக்கின்றானே, அவன் தேவர்களுடைய பெருமை பொருந்திய உலகத்தை அடைந்து, ஸூர்யனுடைய ஸாயுஜ்யதை அடைகின்றான். பிறகு எவன் தக்ஷிணாயநத்தில் மரிக்கின்றானே (அவன்) பித்ருக்களுடைய பெருமை பொருந்திய உலகத்தை அடைந்து, சந்த்ரனுடைய ஸாயுஜ்யத்தை அடைகின்றான்.

இந்த ஸூர்யன், சந்த்ரன், இவர்களுடைய பெருமை பொருந்திய உலகங்களை எந்த வித்வான் (பண்டிதன்) உணர்ந்தவனுகிய ப்ரஹ்மத்தைச் சிந்தனை செய்கின்றவன், சுற்றிலும் வெற்றி கொள்ளுகின்றான். அதிலிருந்தும் பெருமை பொருந்திய உலகத்தையடைகின்றான். ஆகையினுல் பெருமை பொருந்திய ப்ரஹ்மத்தின் உலகையடைகின்றான். இவ்வாறு உபநிஷத் சொல்லப் பெற்றது" என்றவாறு.

" ஜராமரணவதிகம் யத் யோகிசரிதம் அஸ்தி, தத்
வேதோக்தாக்நிஹோத்ராதிஸம்வத்ஸராந்தகர்மஸ்வரூபம்;
இத்யேவமுபாஸீந: பாவநாதிஶயேந ஸூர்யாசந்த்ரமஸோ:

ஸாயுஜ்யம் தாதாத்ம்யம் ச ப்ராப்நோதி; பாவநாமாந்த்யேந
ஸமாநலோகம் ப்ராப்ய, தஸ்மிந் லோகே;
ஸூர்யா சந்த்ரமஸோ: விபூதிமநுபூய, தத ஊர்த்வம் ஸத்ய லோகே
சதுர்முகஸ்ய ப்ரஹ்மண: மஹிமாநம் ஆப்நோதி.
தத்ர உத்பந்நதத்வஞாந: தத ஊர்த்வம் ஸத்யஞாநாநந்த-
ரூபஸ்ய பரப்ரஹ்மண: மஹிமாநம் கைவல்யம்
ப்ராப்நோதி. இத்யுபநிஷத் இத்யநேந யதோக்தவித்யாயா:
தத்ப்ரதிபாதகக்ரந்தஸ்ய ச உபஸம்ஹார: க்ரியதே'' இதி.

''—மற்றும், மூப்பு, மரணம் என்ற எல்லைவரையிலுள்ள யாதொரு யோகியினுடைய சரிதம் (வரலாறு) இருக்கின்றதோ, அது வேதத்தில் சொல்லப் பெற்ற அக்நிஹோத்ரம் முதல் ஸம்வத் ஸராந்தம் (வருஷத்தின் முடிவு) வரையிலுள்ள கர்மாக்களின் விஷயம் என்று இவ்வாறு உபாஸனை செய்கின்றவன் பாவனையினுடைய பெருமையினால் ஸூர்யன், சந்த்ரன் இவர் களுடைய ஸாயுஜ்யத்தின் (ஒன்றியுள்ள) நிலையையடைகின்றான்.

பாவனையினுடைய தாமதத்தினால் ஸமாநலோகத்தை யடைந்து, அந்த உலகத்தில் ஸூர்யன், சந்த்ரன் இவர்களுடைய விபூதியை (ஐஶ்வர்யம்) அநுபவித்து, அதற்கு மேல் ஸத்ய லோகத்தில் நான்முக ப்ரஹ்மனுடைய பெருமையைப் பெறு கின்றான்.

அவ்விடத்தில் தோன்றிய தத்வஞாநமுடையவனாகவும், அதற்கு மேல், ஸத்யம், ஞாநம், ஆநந்தம் என்ற இம்மூன்றின் வடிவாயமைந்த சிறந்த ப்ரஹ்மத்தினுடைய பெருமை வாய்ந்த கைவல்யத்தையும் அடைகின்றான்.

இவ்வாறு உபநிஷத் என்றதால், உள்ளவாறு சொல்லப் பெற்ற வித்யையினுடையவும், அதை வெளியிடுகின்ற நூலினு டையவும் முடிவும் செய்யப் பெறுகின்றது'' என்றவாறு.

'' ததேவம் ஜீவன்முக்தே: தபோரூபம் த்விதீயம்
ப்ரயோஜநம் ஸித்தம். விஸம்வாதாபாவ: த்ருதீயம்
ப்ரயோஜநம். ந கலு அந்தர்முகே பாஹ்யவ்யாபாரம்
அபஸ்யதி யோகீஶ்வரே, லௌகிக: தைர்த்திகோ
வா கஶ்சித் விஸம்வததே. லௌகிகவிஸம்வாத:
த்விவித:—கலஹரூப:, நிந்தாரூபஶ்ச; தத்ர

க்ரோதாதிரஹிதேந யோகிநா ஸஹ கதம் நாம
லௌகிக: கலஹாயதே? தத்ராஹித்யம் ச ஸ்மர்யதே—
"க்ருத்யந்தம் ந ப்ரதிக்ருத்யேத் ஆக்ருஷ்ட: குஶலம் வதேத்.
அதிவாதாம்ஸ்திதிக்ஷேத நாவமந்யேத கம்சந" இதி.

"—ஆகவே இவ்வாறு ஜீவந்முக்திக்கு தவத்தின் வடிவாயமைந்த இரண்டாவது ப்ரயோஜநமும் கைவரப் பெற்றுள்ளது. விஸம்வாதத்தின் இன்மை என்றது மூன்றாவது ப்ரயோஜநமாகும். அந்தர்முகத்தில் (உள்ளே திருப்பிய மநம்) வெளியேயுள்ள விஷயத்தைப் பார்க்காத நிலையிலுள்ள யோகீஸ்வரனிடத்தில், லௌகிகனோ, (உலகநடையைத் தழுவியவன்) தைர்த்திகனோ விதண்டாவாதம் செய்யமாட்டான் அன்றோ!

லௌகிகஸம்வாதம் இருவகையாகும்—அவை கலஹவடிவம், நிந்தையின் வடிவம் என்பன. அவ்விடத்தில் க்ரோதம் முதலியன இல்லாத யோகியோடு கூட எவ்வாறு லௌகிகள் கலஹத்தைச் செய்ய முடியும்? (முடியாதன்றோ) அதனுடைய இன்மையும் ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது.

"—கோபம் கொண்டவனைக் குறித்துக் கோபம் கொள்ளுவது கூடாது. கோபத்தையடைந்தவனைக் குறித்து க்ஷேமம் விசாரிக்க வேண்டும். அளவு மீறி வாதம் செய்பவனைக் குறித்து பொறையைக் கையாளவேண்டும். ஒருவனையும் அவமதிப்பது கூடாது" என்றவாறு."

"நநு ஜீவந்முக்தே: ப்ராசீநோ வித்வத்ஸம்ந்யாஸ:.
ததோபி ப்ராசீநம் தத்வஜ்ஞாநம். தஸ்மாதபி ப்ரா
சீந: விவிதிஷாஸம்ந்யாஸ:. தத்ர ஏதே க்ரோதாதி-
ராஹித்யாதயோ தர்மா: ஸ்மருதா இதி சேத், பாடம்;
அத ஏவ ஜீவந்முக்தஸ்ய க்ரோதாதய: ஶங்கிதுமபி அஶக்யா:"இதி.

சங்கை—

"—இருக்கட்டும், ஜீவந்முக்திக்கு முந்தியது வித்வத்ஸம்ந்யாஸம். அதற்கும் முந்தியது தத்வஞாநம். அதற்கும் முந்தியது விவிதிஷாஸம்ந்யாஸம். அவ்விடத்தில் இந்த க்ரோதம் இன்மை என்பன முதலியவைகளான தர்மங்கள் ஸ்மரணம் செய்யப் பெற்றவைகளாக இருக்கின்றதே என்றால்., வாஸ்தவமே (உண்மையே). அக்காரணத்தினாலேயே ஜீவந்முக்தனுக்கு கோபம் முதலியவைகள் ஐயம் கொள்ளுவதற்கு முடியாதவைகள்" என்றவாறு.

'' அத்யர்வாசீநே பதே விவிதிஷாஸம்ந்யாஸோऽபி
யதா க்ரோதாதயோ ந ஸந்தி, ததா உத்தமபதே
தத்வஜ்ஞாநே குதஸ்தே ஸ்யு:? குதஸ்தராம் ச வித்வத்
ஸம்ந்யாஸே, குதஸ்தமாம் ச ஜீவந்முக்தௌ?
அத: ந யோகிநா ஸஹ லௌகிகஸ்ய கலஹ:
ஸம்பவதி. நாபி நிந்தாரூப: விஸம்வாத: ஶங்கநீய:;
நிந்த்யத்வஸ்ய அநிஶ்சயத்வாத்,'' இதி.

''—மிகவும் முந்திய பதமாகிய (நிலை) விவிதிஷாஸம்ந்யாஸத்திலும் எப்பொழுது க்ரோதம் முதலியவைகள் இருக்கின்றதில்லையோ, அப்பொழுது உத்தமமான பதத்திலுள்ள தத்வஜ்ஞாநத்தில் அவைகள் எவ்வாறு இருக்க முடியும்? வித்வத் ஸம்ந்யாஸத்திலும் அவை எவ்வாறு இருக்க முடியும்? ஜீவந்முக்தனிடத்திலும் (எல்லாவற்றையும் விட) அவை எவ்வாறு இருக்க முடியும்? ஆதலால் யோகியோடு கூட லௌகிகனுக்கு கலஹமானது தோன்றாது. நிந்தையின் வடிவாகவும் இருக்க முடியாது. ஏனெனில் நிந்திக்கத் தக்கது உறுதிசெய்யமுடியாத நிலையில் இருப்பதால் என்க'' என்றவாறு.

ததாச ஸ்மர்யுதே—

யம் ந ஸந்தம் ந சாஸந்தம் நாஶ்ருதம் ந பஹுஶ்ருதம்.
ந ஸுவ்ருத்தம் ந துர்வ்ருத்தம் வேத கஶ்சித் ஸ வை யதி:' இதி

—அவ்விதமே ஸ்மரணமும் செய்யப் பெறுகின்றது—

''—எந்த ஸத்தையும் அறியானோ, எந்த அஸத்தையும் அறியானோ, கேட்பதையும் அறியானோ, பலவனவாகக் கேட்பதையும் அறியானோ, நல்ல நடத்தையையும் அறியானோ, தீய நடத்தையையும் அறியானோ, இவ்வாறு ஒன்றையும் அறியானோ, அவனே (உண்மையான) துறவியாவன்''. என்றவாறு

'' ஸதஸத்வே உத்தமாதமஜாதீ, தைர்த்திகோऽபி
கிம் ஶாஸ்தரப்ரமேயே விஸம்வததே? கிம் வா யோகிசரிதே?
ஆத்யே ந தாவத் யோகீ பரஶாஸ்த்ரப்ரமேயம் தூஷயதி—
'' தமேவைகம் ஜாநத ஆத்மாநமந்யா வாசோ விமுஞ்சத''
''நாநுத்யாயாத் பஹூந் ஶப்தாந் வாசோ விக்லாபநம் ஹி தத்''
இத்யாதி ஶ்ருத்யநுரோதாத் நாபி ஸ்வஶாஸ்த்ரப்ரமேயம் ப்ரதிவாதிநோ
ऽக்ரே ஸமர்த்தயதே—

" பலாலமிவ தாந்யார்த்தீ த்யஜேத் க்ரந்தமஶேஷத:."
இத்யாதி ஶ்ருத்யர்த்தபரத்வாத்." இதி.
" பரமம் ப்ரஹ்ம விஜ்ஞாய உல்காவத்தாந்யதோத்ஸ்ருஜேத்"

"—ஸத், அஸத் என்றவை, உத்தமம் அதமம் என்ற ஜாதிகள், ஶாஸ்த்ரமறிந்தவனும் ஶாஸ்த்ரத்தின் ப்ரமேயத்தில் விஸம்வாதம் செய்வானோ? அல்லது யோகியினுடைய சரிதத்தில் (நடத்தை) விஸம்வாதம் செய்வானோ? முதலாவதாயின் யோகியானவன் மற்ற ஶாஸ்த்ரத்தைத் தூஷிக்கமாட்டான். ஏனெனில்—

"—அந்த ஒன்றுயுள்ள ஆத்மாவையே உணருங்கள், மற்றவைகளாயுள்ள வார்த்தைகளை விடுங்கள்" என்றவாறு.

"—பலவகையாயுள்ள சப்தங்களை (வார்த்தை) சிந்தனை செய்ய வேண்டாம். அந்தப் பலவன வார்த்தைகள் பேசுவது வாக்கிற்கு ஶ்ரமமே தவிர வேறு ப்ரயோஜநம் ஒன்றுமில்லை" என்றவாறு.

மற்றும்—

தனது ஶாஸ்த்ர ப்ரமேயத்தை ப்ரதிவாதியின் முன்னிலையில் ஸமர்த்தநம் (சரிக்கட்டுவது) செய்ய மாட்டான்" ஏனெனில்,

"—தானியத்தைச் சேகரம் செய்பவன் வைக்கோலை விடுவது போல எல்லா ஶாஸ்த்ரங்களையும் அவன் தள்ளி விடுகிறான்".

"—சிறந்த ப்ரஹ்மத்தையுணர்ந்த பிறகு, அவைகளைக் கொள்ளிக்கட்டையைப் போல் விட்டு விடுகிறான்"

என்பன போன்ற ஶ்ருதிகளுடைய பொருளும் ப்ரயோஜநமாகச் சார்ந்துள்ளதால் என்க.

" யதா யோகீ ப்ரதிவாதிநமபி ஸ்வாத்மதயா
வீக்ஷதே, ததா விஜிகீஷாயா கா கதா? நாபி
லோகாயதிகவ்யதிரிக்த: ஸர்வோऽபி தைர்த்திகோ
மோக்ஷமங்கீகுர்வந் யோகிசரிதேऽபி விஸம்வதிதுமர்ஹதி.
ஆர்ஹதபௌத்தவைஶேஷிகநையாயிக-
வைஷ்ணவஶாக்தஸாங்க்யயோகாதிமோக்ஷஶாஸ்த்ரேஷு
ப்ரதிபாத்யப்ரமேயஸ்ய நாநாவிதத்வேऽபி

மோக்ஷஸாதநஸ்யு யமநியமாத்யஷ்டாங்கயோகஸ்ய ஏகவிதத்தாத்; தஸ்மாத் அவிஸம்வாதோ ஸர்வஸம்மதோ யோகீஸ்வர:'' இதி.

''—எப்பொழுது யோகியானவன் ப்ரதிவாதியையும் தன்னைப் போலவே காண்கின்றானோ, அப்பொழுது வெற்றி கொள்ள வேண்டுமென்ற விருப்பத்தைக் குறித்த வார்த்தை யாது இருக்கின்றது? இல்லையென்றவாறு. உலகாயதிகர்களைத் தவிர, ஶாஸ்த்ரங்களையுணர்ந்த மற்றவர்கள் மோக்ஷத்தை அங்கீகாரம் செய்து, யோகியினுடைய சரிதத்திலும் விஸம்வாதம் செய்வதற்கு தகுதியற்றவர்கள்.

ஆர்ஹதர் (ஜைநர்) பௌத்தர், வைஶேஷிகர்கள் நையாயிகர்கள், வைஷ்ணவர்கள், ஶாக்தர்கள், ஸாங்கியர்கள் யோகிகள் (பாதஞ்ஜலியோக ஸூத்ரமுணர்ந்தோர்) முதலானவர்களால் மோக்ஷ ஶாஸ்த்ரங்களில் வெளியிடப் பெற்ற ஶாஸ்த்ரங்கள் பலவாயிருப்பினும் மோக்ஷ ஸாதநத்திற்குரியதான யம நியமம் முதலிய அஷ்டாங்கயோகத்தினுடைய ஒன்றிய நிலையானது ஒரே விதமாக இருத்தலால், அக்காரணத்தாலேயே விஸம்வாதமில்லாமலே எல்லா மதத்தினரும் ஒப்புக் கொள்ளத் தக்க நிலையிலிருப்பவன் யோகீஸ்வரன்'' என்றவாறு.

ஏததேவ அபிப்ரேத்ய வஸிஷ்ட ஆஹ—

'' யஸ்யேதம் ஜந்ம பாஸ்சாத்யம் தமாஸ்வேவ மஹாமதே.
விஶந்தி வித்யா விமலா[1] முக்தா வேணுமிவோத்தமம்.
ஆர்யதா ஹ்ருத்யா மைத்ரீ ஸௌம்யதா முக்திதா ஜ்ஞதா.
ஸமாஶ்ரயந்தி தம் நித்யம் அந்த:புரமிவாங்கநா:.
பேஶலாசாரமதுரம் ஸர்வே வாஞ்ச்சந்தி தம் ஜநா:.
வேணும் மதுரநித்வாநம் வநே வநம்ருகா இவ.
ஸுஷுப்த்வத் ப்ரஶமித பாவவ்ருத்திநா
ஸ்தித: ஸதா ஜாக்ரதி யேந சேதஸா:.
கலாந்விதோ விதுரிவ ய: ஸதா புதை;
நிஷேவ்யதே முக்த இஹீஹ ஸ ஸம்ருத;'' இதி
மாதரீவ ஶமம் யாந்தி விஷமாணி ம்ருதூநி ச.
விஶ்வாஸமிஹ பூதாநி ஸர்வாணி ஶமஶாலிநி.
தபஸ்விஷு பஹுஜ்ஞேஷு யாஜகேஷு ந்ருபேஷு ச.
பலவத்ஸு குணாட்யேஷு ஶமவாநேவ ராஜதே.'' இதி.

---

1 விமலா—மலமொழிந்தது: பரிசுத்தமென்பது

இதைக் கருதியே வஸிஷ்டர் சொல்லுகிறூர்—

"—எவனுக்கு இப் பிறவி கடைசியாகவுள்ளதோ, ஓ பெருகிய மதியையுடையோய்! அவனைக் குறித்து, தூய்மையாயுள்ள வித்தைகள் ப்ரவேஸிக்கின்றன. எவ்வாறெனில்—உயர்ந்த மூங்கிலிலிருந்து வெளிப்படுகின்ற முத்துக்கள் போல்" எனவும்;

"ஆராதிக்கத்தக்க மேற்குலத் தன்மை, மநத்தைக் கவருகின்ற நேசிக்கும் தன்மை, மைத்ரீபாவம், (எல்லாப்ராணிகளிடத்திலும் தயையோடு இருப்பது) பார்ப்பதற்கு இனிமை பயக்கும் திருமேனி, முக்தத் தன்மை, யாவற்றையும் முணர்ந்துள்ள நிலை; என்ற இன்னோரன்ன பல நற்குணங்கள் என்ற இவை யாவும் எப்பொழுதும் அந்தபுரத்தை அழகு செய்கின்ற பெண்கள் போல அவனைத் தழுவி நிற்பனவுமாம்." எனவும்;

"அழகிய ஆசாரத்தினல் இனிமை கைவரப் பெற்ற அவனை, மக்கள் யாவரும் விரும்புகின்றனர். அது எவ்வாறெனில்— வனத்தில் வஸிக்கின்ற மான்கள், இனிய ஓசையையுடைய புல்லாங்குழலைக் கேட்பது போல் எனவும்;

"அந்த முமுக்ஷுவானவன் ஜாக்ரத் (விழிப்பு) தசையிலும், நன்கு ஶமநமடைந்த பாவனைகளுடைய செயல்களோடு எப்பொழுதும் ஸுஷுப்தியிலுள்ளவனைப் போல் மனத்தால் இருக்கின்றுனே, (அவன்) கலைகளோடு கூடிய சந்த்ரன் போல எப்பொழுதும் மகிழ்ச்சியோடு பண்டிதர்களினல் ஸேவிக்கப் பெறுகின்றுன். இவ்விடத்தில் அவன் முக்தன் எனவும் கருதப் பெறுகின்றுன்" எனவும்;

"விஷமங்களாயினும், மெல்லியவையாயினும் தாயினிடம் போல அவை ஶமநத்தையடைகின்றன. இவ்விடத்தில் எல்லா பூதங்களும் (சராசரங்கள்) ஶமம் நிரம்பப்பெற்றதாயிருந்து கொண்டு அவனிடம் நம்பிக்கையோடு இருக்கின்றன" எனவும்;

"தபஸ்விகளிடத்திலும், எல்லாவற்றையும் உணர்ந்தவர்களிடத்திலும், வேள்வி செய்கின்றவர்களிடத்திலும், அரசர்களிடத்திலும், பலஶாலிகளிடத்திலும், குணங்கள் நிரம்பியுள்ளவர்களிடத்திலும் பொறையுடையவனே நன்கு ப்ரகாஶிக்கின்றுன்" என்றவாறு.

" ததேவம் ஜீவந்முக்தே: விஸம்வாதாபாவரூபம்
த்ருதீயம் ப்ரயோஜநம் ஸித்தம் து:கநாஶஸுகா-
விர்பாவரூபே சதுர்த்தபஞ்சம ப்ரயோஜநே வித்யா-
நந்தாத்மகேந ப்ரஹ்மாநந்தகதேந ச்துர்த்தாத்யாயகதே
நிரூபிதே, ததுபயமத்ர ஸம்க்ஷிப்ய உச்யதே—

"—ஆகையால் இவ்வாறு தடங்கலற்ற ஜீவந்முக்தியினுடைய விஸம்வாதத்தின் இன்மை வடிவாயமைந்த மூன்ருவது ப்ரயோஜநம் கைவரப் பெற்றது. துன்பத்தின் அழிவு, ஸுகத்தின் தோற்றம் இவைகளின் வடிவாயமைந்த நான்காவது ஐந்தாவது ப்ரயோஜநங்கள் பஞ்சதசியிலுள்ள ப்ரஹ்மாநந்தப்ரகரணத்தில் வித்யாநந்த வடிவைச் சார்ந்த நான்காவது அத்யாயத்தில் நிரூபணம் செய்யப் பெற்றன. அந்த இரண்டும் இவ்விடத்தில் சுருக்கமாகச் சொல்லப் பெறுகின்றன—

" ஆத்மாநம் சேத் விஜாநீயாத் அயமஸ்மீதி பூருஷ:.
கிமிச்சந் கஸ்ய காமாய ஶரீரமநு ஸம்ஜ்வரேத்"
இத்யாதி ஶ்ருத்யா து:கஸ்ய ஐஹிகஸ்ய விநாஶ உக்த;
" ஏதம் ஹ வாவ ந தபதி; கிமஹம் ஸாது நாகரவம்,
கிமஹம் பாபமகரவம்" இத்யாதி ஶ்ருதய: ஆமுஷ்மிக-
ஹேதுபுண்யபாபசிந்தாரூபஸ்ய து:கஸ்ய நாஶமாஹு:" இதி.

"—எந்த புருஷன் தனது ஆத்மனை எல்லா ப்ராணிகளுடைய நம்பிக்கைக்கு ஸாக்ஷியாகவும் "இல்லை இல்லை" (நேதி நேதி) என்ற வாக்யத்தினுல் காண்பிக்கப் பெற்றவனுகவும், எல்லா சராசரங்களிலும் இருப்பவனுகவும், நிலைத்துள்ளவனும், தூய்மை பெற்றவனும், உணர்வுள்ளவனுகவும், விடுதலை [பெற்றவனுகவும் இருக்கின்ற பரமாத்வாக இருக்கிறேன்" என்று உணருகின்ருனே. அவன் எதை விரும்பி, எதனுடைய ப்ரயோஜநத்தின் பொருட்டுத் தனது ஶரீரத்தைத் துன்புறுத்திக் கொள்ள வேண்டும். அத்தகையவனுக்கு யாதொரு ஆசையுமில்லை என்பது தாத்பர்யம். அதாவது காயக்லேஶம் செய்ய வேண்டியதில்லை என்றவாறு" என்பன போன்ற ஶ்ருதியினுல் ஐஹிகமான (இம்மை) துன்பத்தின் விநாஶம் சொல்லப் பெற்றது.

மற்றும்—

"—அந்த ப்ரஹத்தையுணர்ந்த இத்தகைய வித்வானை புண்யம் செய்யாமையும், பாபம் செய்தலும் துயரத்திற்கு உட்படுத்த மாட்

டாது. ஏனெனில்; இவ்வாறுணர்ந்த வித்வான் புண்யம், பாபம் இவ் விரண்டையும் தனது ஆத்மனாகவே காண்கின்றான்' என்றவாறு.

அதாவது தான் மாத்திரம் எஞ்சி நின்று அந்த இரண்டையும் அழிக்கின்றான் என்பதுகருத்து. இவ்வாறுள்ளன போன்ற ஶ்ருதிகள் ஆமுஷ்மிகத்திற்கு (மேலுலகம்) காரணமாயுள்ள புண்யம், பாபம் இவைகளுடைய சிந்தனையின் வடிவாயமைந்த துன்பத்தின் அழிவையும் சொல்லுகின்றன.'' என்றவாறு.

''ஸுகாவிர்பாவ: த்ரேதா—ஸர்வகாமாவாப்தி:, க்ருதக்ருத்யத்வம், ப்ராப்தப்ராப்தவ்யத்வம் ச இதி.

'' ஹிரணயகர்பாதி ஸ்தாவராந்தேஷு தேஹேஷு அநுகதம் ஸாக்ஷிசைதந்யம் யத் ப்ரஹ்ம, ததேவாஹம் அஸ்மி' இதி ஜாநத: ஸ்வதேஹ இவ பரதேஹேஷ்வபி ஸர்வகாமஸாக்ஷித்வமஸ்தி.'' இதி

''—ஸுகத்தினுடைய தோற்றம் மூவகையாகும். எல்லா விருப்பங்களையும் அடைவது. க்ருதக்ருதயத்வம் (த்ருப்தியுள்ள நிலை) அடைய வேண்டியதை அடைவது என்பன ஹிரண்யகர்ப்ன் முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள தேஹத்தில் தொடர்ந்து வந்துள்ள ஸாக்ஷியாயுள்ள சைதந்யவடிவாயமைந்த யாதொரு ப்ரஹமம் இருக்கின்றதோ, அதுவே நானாகவே இருக்கிறேன் என்று உணர்ந்தவனுக்குத் தனது ஶரீரத்தைப் போல, பிறருடைய ஶரீரங்களிலும் எல்லாகாமனைகளையுமுடைய எல்லா ஸாக்ஷிசைதந்யத் தன்மையுமுள்ளது.

ததேதபிப்ரேத்ய ஶ்ரூயதே—

''ஸோ஽ஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ, ப்ரஹ்மணா விபஶ்சிதா'' இதி.

ஆகையால் இதைக் கருதியே கேட்கப் பெறுகின்றது.—

''—அவன் எல்லா காமனைகளையும், எல்லாவற்றையுமுணர்ந்த ப்ரஹ்மத்தோடு கூட அடைகின்றானே (அநுபவிக்கின்றான்)'' என்றவாறு.

லோகே புக்தேஷு போகேஷு அகாமஹதத்வம்
யத், தத் காமப்ராப்திரிதி உச்யதே; ததா ச ஸர்வ-
போகதோஷதர்ஸிந: தத்வவித: ஸர்வத்ர அகாம-
ஹதத்வாத் அஸ்தி ஸர்வகாமாவாப்தி:.
''அத ஏவ ஸார்வபௌமோபக்ரமேஷு ஹிரண்யகர்பாயுந் தேஷு
உத்தரோத்தரஸதகுணேஷு, ''ஶ்ரோத்ரி
யஸ்ய சாகாமாஹதஸ்ய'' இதி ஶ்ருதம்.
''ஸத்ருபேண, சித்ருபேண, ஆநந்த ரூபேண ச ஸர்வாவஸ்திதம்
ஸ்வாத்மாநம் அநுஸம்தத: ஸர்வபோக்தருத்வம்
அஸ்தீதி அபிப்ரேத்ய ஏவம் ஶ்ரூயதே—
''அஹமந்நமஹமந்நமஹமந்நம்; அஹமந்தோऽஹமந்நாத:
அஹபந்நாத:'' இதி.

''—உலகத்தில் அநுபவிக்கப்பெற்ற போகங்களில் காமத்தினால் தனக்குப் பெருமை எதுவோ, அதுவே காமப்ராப்தி எனச் சொல்லப் பெறும். ஆகவே எல்லா போகங்களிலும் குற்றத்தைக் காண்கின்ற தத்வஜ்ஞாநிக்கு எவ்விடத்திலும் காமத்தினால் தகைக்கப் பெருமை இருத்தலால் எல்லா காமனைகளுடைய அடைவும் உள்ளது'' எனச் சொல்லியது.

'' அக்காரணத்தினாலேயே ஸார்வபௌமன் (சக்ரவர்த்தி) தொடர்ந்துள்ள ஹிரண்யகர்பன் வரையிலுள்ள மேல் மேல் நூறுமடங்காகப் பெருகிய ஆநந்தங்களில், ''வேதமுணர்ந்த அந்தணன் காமபோகங்களில் ப்ரவேஸியாதவன்'' எனவும் கேட்கப் பெற்றது.

''மற்றும் ஸத்தின் வடிவாகவும், சித்தின் வடிவாகவும், ஆநந்தத்தின் வடிவாகவும் எங்கும் நிலைத்துள்ள தனது ஆத்மனைப் அநுஸம்தாநம் செய்பவனுக்கு எல்லா அநுபவத்தின் தன்மையும் இருக்கின்றது என்பதைக் கருதி இவ்வாறு சொல்லப் பெறுகின்றது— ''நான் அந்நம், நான் அந்நம், நான் அன்னம், நான் அந்நத்தையுண்பவன், நான் அந்நத்தை யுண்பவன், நான் அந்நத்தை யுண்பவ்ன்'' என்றவாறு.

க்ருதக்ருதயத்வம் து ஸ்மர்யதே—
'' ஞாநாம்ருதேந த்ருப்தஸ்ய க்ருதக்ருத்யஸ்ய யோகிந:.
நைவாஸ்தி கிம்சித்கர்தவ்யுமஸ்தி சேந்ந ஸ தத்வவித்,''

"யஸ்த்வாத்ம ரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஶ்ச மாநவ:.
ஆத்மந்யேவ ச ஸம்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே" இதி.

க்ருதக்ருத்யத் தன்மையும் ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது—

"—ஞாநமென்னும் அமுதத்தினுல் நிறைவைப் பெற்றுள்ள புண்யஶாலியான யோகிக்கு செய்யவேண்டி காரியம் ஒரு சிறிதும் கிடையாது. அவ்வாறு இருக்குமேயாகில் அவன் தத்வத்தை யுணர்ந்துள்ள யோகியாகான்" எனவும்.

"எவன் ஆத்மனிடத்திலேயே ப்ரியத்தை வைத்து நிறைவைக் கொண்ட மகிழ்ச்சியடைகின்ருனே, அவனுக்கு செயல் ஒன்றும் இல்லை" எனவும் சொல்லப் பெற்றுள்ளது.

ப்ராப்தப்ராப்தவ்யதாபி ஶ்ரூயதே—"அபயம் வை ஜநக," இதி, "தஸ்மாத் தத் ஸர்வமபவத்" இதி, "ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி" இதி ச.

"—அடைய வேண்டியதை அடைதல் என்பதைக் குறித்தும் கேட்கப் பெறுகின்றது— "ஓ ஜநக! அபயத்தை யன்ருே! (அடைக்கலம்) நீ அடைந்துள்ளாய்" எனவும்," அக்காரணத்தினுல் அது (ப்ரஹ்மம்) எல்லாமாகியது" எனவும், "ப்ரஹ்மத்தை யுணர்ந்தவன் ப்ரஹ்மமாகாவே இருக்கின்ருன் எனவும்" என்றவாறு.

நநு ஏதௌ த்வௌ து:கவிநாஶஸுகாவிர்பாவௌ
தத்வஜ்ஞாநேநைவ ஸித்தத்வாத்;
ந ஜீவந்முக்திப்ரயோஜநதாமர்ஹத:. நைவம்.;—
"ஸுரக்ஷிதயோ: தயோ: அத்ர விவக்ஷிதத்வாத்,
யதா தத்வஜ்ஞாநம் பூர்வமேவோத்பந்நமபி
ஜீவந்முக்த்யா ஸுரக்ஷிதம் பவதி; ஏவமேதாவபி
ஸுரக்ஷிதௌ பவத: இதி.

சங்கை—

துக்கவிநாஶம், ஸுகாவிர்பாவம் (துக்கத்தின் அழிவு, ஸுகத்தின் தோற்றம்) என்ற இவ்விரண்டும் தத்வஜ்ஞாநத்தினுலேயே கைவரப்பெறுவதால் அவை ஜீவந்முக்திக்கு ப்ரயோஜநமுள்ளதாக இருக்கத் தகுதியற்றவை என்ருல், அவ்வாறு சொல்ல வேண்டாம்.

"ஜீவந்முக்தியினால் நன்கு ரக்ஷிக்கப் பெற்ற அவைகளுக்கு இவ்விடத்தில் விவக்ஷையுள்ளதால் என்க. எவ்வாறு தத்வஜ்ஞானம் முன்பே தோன்றியிருந்தாலும் அவ்வாறே ஜீவந்முக்தியினால் இவ்விரண்டும் நன்கு ரக்ஷிக்கப் பெற்றதாகவே இருக்கின்றது" என்றவாறு.

நநு ஏவம் ஜீவந்முக்த: பஞ்சப்ரயோஜநத்வே ஸதி
ஸ்மாஹித: யோகீஸ்வர: லோகவ்யவஹாரம்
குர்வத: தத்வவிதோऽபி ஸ்ரேஷ்ட இதி வக்தவ்யம்,
தச்ச ராமவஸிஷ்டயோ: ப்ரஸ்னோத்தராப்யாம் நிராக்ருதம்.

சங்கை—

இவ்வாறு ஜீவந்முக்தன் ஐவகையாயுள்ள ப்ரயோஜநத்தன்மையோடு இருக்கும்பொழுது, ஸமாஹிதனாகிய (ஒன்றியுள்ள நிலை) யோகீஸ்வரன் உலகவ்யவஹாரத்தைச் செய்கின்ற தத்வஜ்ஞானியைக் காட்டிலும் சிறந்தவன் என்றே சொல்ல வேண்டும். அதுவும் ராமன் வஸிஷ்டர் இவ்விருவருக்கும் நிகழ்ந்த கேள்வி பதில் இவைகளினால் ஒதுக்கப் பெற்றுள்ளது—

"ராம:—

பகவந் பூதபவ்யேஸ கஸ்சிஜ்ஜாது ஸமாஹித:.
ப்ரபுத்த இவ விஸ்ராந்த: வ்யவஹாரபரோऽபி ஸந்.
கஸ்சிதேகாந்தமாஸ்ரித்ய ஸமாதிநியமே ஸ்தித:.
தயோஸ்து கதர: ஸ்ரேயாந் இதி மே பகவந் வத"
இதி.

"—ஓ பகவந்! பூதபவ்யேஸ! சென்றது, வரப்போகிறது என்ற இரண்டுக்கும் தலைவனே! ஒரு ஸமயம் ஒருவன் ஸமாதிநிலையையடைந்தவனாக ஸ்வப்நத்திலிருந்தும் விழிப்படைந்தவனைப் போலவும், வ்யவஹாரத்தைத் தழுவியவனாக இருந்துகொண்டும் விஸ்ராந்தியைப் பெற்றவனாகக் காண்கின்றான்"

"மற்றும் ஒருவன் ஏகாந்தத்தைத் தழுவி ஸமாதியினுடைய நியமத்தில் இருக்கின்றான். இவர்களில் எவன் மேலானவன் என்று எனக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டும். ஓ பகவந்" என்றவாறு

வஸிஷ்ட—

"இமம் குணஸமாஹாரம் அநாத்மத்வேந பஸ்யத:.
அந்த: ஸீதலதா யாஸௌ ஸமாதிரிதி கத்யதே.

"—இவ்விடத்தில் 'தம்' முதலிய மூன்று பதங்களிலுமுள்ள இரண்டாவது வேற்றுமையானது, முதல் வேற்றுமையில் பொருள் காண வேண்டும். யாதொரு பரமாத்மா கோபம் முதலிய கலக்கங்கள் இல்லாமல் ஶாந்தனோ, நடப்பது முதலிய செயல்கள் இல்லாது அசலனோ (அசைவற்றவன்), தன்னைச் சார்ந்துள்ள ஸஜாதீயம், விஜாதீயம் என்ற பேதங்களுடைய ஶூந்ய நிலையிலிருப்பவனோ, ஸத், சித், ஆநந்தம் என்ற இம் மூன்றினுடைய முக்கியமாயுள்ள ரஸத்தையுடையவனோ, (ஆநந்தம் நிறைந்த அந்த ப்ரஹ்மமாகவே நான் இருக்கிறேன். அந்த ப்ரஹ்மதத்வமே யோகியான எனக்குச் சிறந்த இருப்பிடமாகிய உண்மையான வடிவமாகும். இந்த கர்த்ருத்வத் தன்மை, (செயல் வடிவம்) போகத்ருத்வத் தன்மை (அநுபவிக்கும் தன்மை) முதலியவைகளோடு கூடியது அல்ல. ஏனெனில் இவைகளுக்கு மாயையினுடைய கல்பனை (தொடர்பு) யுள்ளதால் என்க" என்றவாறு.

நநு—ஆத்மந: பரப்ரஹ்மத்வே ஆநந்தாவாப்தி:
இதாநீம் குதோ ந? இத்யத்ர ஆநந்தவாப்தி: ஸ-
த்ருஷ்டாந்தமுக்தா அபியுக்தை:—

சங்கை—

ஆத்மனுக்கு பரப்ரஹ்மத் தன்மையில் ஆநந்தத்தினுடைய ப்ராப்தியானது (அடைதல்) இப்பொழுது ஏன் இல்லை என்றால், இவ்விடத்தில் அவாப்தியானது (அடைதல்) த்ருஷ்டாந்தத்தோடு (உதாஹரணம்) முன்னோர்களால் சொல்லப் பெற்றுள்ளது—

"கவாம் ஸர்பி: ஶரீரஸ்தம் ந கரோத்யங்கபோஷணம்.
ததேவ கர்மரசிதம் புநஸ்தஸ்யைவ பேஷஜம்.
ஏவம் ஸர்வஶரீரஸ்த: ஸர்பிவத் பரமேஶ்வர:.
விநா சோபாஸநம் தேவோ ந கரோதி ஹிதம் ந்ருஷு." இதி.

"—பசுக்களுடைய ஶரீரத்திலுள்ள நெய்யானது, அப் பசுக்களுடைய அவயவங்களை (உருப்புக்கள்) வளர்ச்சியடையச் செய்வதில்லை. அதுவே கர்மாவினால் செய்யப் பெறும் பொழுது (கறந்து கடைந்தெடுத்தல்) மறுபடியும் அப் பசுவுக்கே அருமருந்தாயமைகின்றது"

"இவ்வாறே எல்லா ஜீவராசிகளுடைய ஶரீரத்திலும், நெத்போல் பரமேஶ்வரனாகிய தேவன் ஊடுருவியிருக்கின்றான். அந்தத் தேவனும் உபாஸனையில்லாமல் மக்களிடத்தில் அநுகூலத்தை செய்வதில்லை" என்றவாறு.

யதி யோகிந: பூர்வாஶ்ரமப்ரஸித்தா ஆசார்ய-
பித்ருப்ராத்ராதய: கர்மிண: ஶ்ரத்தாஜடா: ஶிகா-
யஜ்ஞோபவீதஸம்த்யாவந்தநாதிராஹித்யேந
பாஷண்டித்வம் ஆரோப்ய வ்யாமோஹயேயு:, ததா வ்யா-
மோஹாநுத்பத்தயே யோகிந: வர்த்தமாநம் நிஶ்சயம்
தர்ஶயதி—

யோகிக்கு முன்புள்ள ஆஶ்ரமத்தில் ப்ரஸித்தமாயுள்ள ஆசாரியன், தந்தை, ஸஹோதரர்கள், கர்மாக்களில் ஶ்ரத்தையின் காரணமாகத் திளைத்துள்ள நிலையில், ஶிகை, யஜ்ஞோபவீதம், ஸம்த்யாவந்தநம் முதலியன இல்லாமலிருக்கும் பொழுது, யோகியினிடத்தில் பாஷண்டத் தன்மையை (நாஸ்திகம்) ஆரோபணம் (ஏற்றுவது-சுமத்துவது) செய்து மோஹமடையச் செய்வார்களே யாகில், அப்பொழுது அந்த மோஹத்தைக் களைவதற்குரிய உறுதியைக் காண்பிக்கின்றார்—

"ததேவ ச ஶிகா ததேவோபவீதம் ச பரமாத்மந:
ஏகத்வஜ்ஞாநேந தயோ: பேத ஏவ விபக்ந : ஸா
ஸம்த்யா" இதி.

"—அதுவே ஶிகையாகும். அதுவே யஜ்ஞோபவீதமுமாகும், (எது) பரமாத்மனுடைய ஒன்றிய தன்மையைப் பெற்ற ஞானத்தோடு அவைகளுடைய பேதமும் தகர்க்கப் பெற்றதோ, அதுவே ஸம்த்யா" என்றவாறு.

யத்வேதாந்தவேத்யஸ்ய பரப்ரஹ்மண: ஜ்ஞாநம்
ததேவ கர்மாங்கபூதபாஹ்ய ஶிகா,யஜ்ஞோபவீத-
ஸ்தாநீயம். அந்யே ச மந்த்ரத்ர்வ்யலக்ஷணே கர்மா-
ங்கபூதே சகாராப்யாம் ஸமுச்சீயேதே.

வேதாந்தத்தினால் உணரத் தக்க பரப்ரஹ்மத்தினுடைய யாதொரு ஞானம் இருக்கின்றதோ, அதுவே கர்மத்திற்கு (செயலுக்கு) அங்கமாயிருக்கின்ற வெளியேயுள்ள ஶிகை, யஜ்ஞோபவீதம் என்ற இவைகளுடைய இருப்பிடமாகும். மற்றவைகளான மந்த்ரம், த்ரவ்யம் (வஸ்து) இவைகளுக்கு இலக்காயுள்ள கர்மத்திற்கு அங்கமாயுள்ளவைகளையும் இரண்டு சகாரங்களினால் (ச என்ற சொல்) ஸமுச்சயம் செய்யப் பெறுகின்றன. (ஸமுச்சயம் இணைப்பு, சேர்ப்பது)

''ஶிகாத்யங்கஸாத்யை ; கர்மபி: உத்பந்நம்
யத் ஸ்வர்காதி ஸுகம், தத்ஸர்வம் ப்ரஹ்மஜ்ஞாநே-
நைவ லப்யதே, விஷயாநந்தஸ்ய ஸர்வஸ்ய ப்ரஹ்-
மாநந்தலேஶத்வாத்; ''ஏதஸ்யைவாநந்தஸ்ய அந்
யாநி பூதாநி மாத்ராமுபஜீவந்தி'' இதி ஶ்ருதி:

''—மற்றும், ஶிகை முதலிய அங்கங்களினால் கிடைக்கக் கூடிய கர்மாக்களிலே தோன்றியதான யாதொரு ஸ்வர்கம் முதலிய ஸுக முண்டோ, அவை யாவும் ப்ரஹ்மஜ்ஞாநத்தினாலேயே அடையத் தக்கதாகும். ஏனெனில் விஷயாநந்தமாயுள்ள யாவும், ப்ரஹ்மா நந்தத்தின் திவலையே யாவன என்ற காரணத்தால் என்க. இதற்குச் சான்று—''இந்த ஆநந்தத்தினுடைய லேஶத்தைப் பெற்ற அளவிலே, மற்றவைகளான சராசரங்கள் யாவும் ஜீவித் திருக்கின்றன (உயிர் வாழ்கின்றன)'' என்ற ஶ்ருதியின் ப்ரமாணத் தால் என்க.

''ஏததேவாபிப்ரேத்ய ஆதர்வணிகா : ஆமநந்தி''—இக் கருத்தைத் தழுவியே ஆதர்வணிகர்கள் ப்ரஹ்மோபநிஷத்தில் சொல்லு கின்றனர்—

''ஸஶிகம் வபநம் க்ருத்வா பஹி: ஸூத்ரம் த்யஜேத் புத:.
யதக்ஷரம் பரம் ப்ரஹ்ம தத்ஸூத்ரமிதி தாரயேத்''

''—கேஶத்தோடு கூடிய ஶிகையை வபநம் (மழித்தல்) செய்து கொண்டு, வெளியேயுள்ள ஸூத்ரத்தைக் (உபவீதம்) களைய வேண்டும். ப்ரஸித்தமாயுள்ளதும், அழிவற்றதுமான யாதொரு சிறந்த ப்ரஹ்மம் உள்ளதோ, அதை ஸூத்ரமென்று பாவனை (சிந்தனை) செய்து (மனத்தில்) தரித்துக் கொள்ளவேண்டும்.

[1] ''ஸூசநாத் ஸூத்ரமித்யாஹு: ஸூத்ரம் நாம பரம் பதம்.
தத்ஸூத்ரம் விதிதம் யேந ஸ விப்ரோ வேதபாரக:''

''—ஸூசனை செய்வதால் (குறிப்பாகச் சுட்டிக்காட்டுவது) ஸூத்ரம் எனச் சொல்லுகின்றனர். அந்த ஸூத்ரமானது சிறந்த இருப்பிடமாகும். அந்த ஸூத்ரமானது எவனால் விஶேஷமாக உணரப் பெறுகின்றதோ, வேதங்களுடைய கரையைக் கண்ட வனும், பரஹ்மத்தையுணர்ந்தவனில் சிறந்த விப்ரனுமாக அவன் இருக்கின்றான்''

---

1''ஸூசநாத்'' என்ற சொல் உலக ஸமூஹத்தினுடைய தோற்றத்தின் தொடக்கத்தைக் குறிப்பது என சங்கராநந்தர் சொல்லுவர்.

"யேந ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ.
தத்ஸூத்ரம் தாரயேத் யோகீ யோகவித் தத்வதர்ஶிவாந்"[1]

"—எக் காரணத்தால் இந்த உலகம் ஸூத்ரத்தில் (நூல்) கோர்க்கப் பெற்ற ரத்நங்களுடைய (மணிகள்) ஸமூஹம் போல் காணப் பெறுகின்றதோ, அந்த ஸூத்ரத்தை, யோக தத்வத்தை யும், தத்வத்தின் நிலையினையுமுணர்ந்துள்ளவனுமான யோகி யானவன் தரித்துக் கொள்ளவேண்டும்."

இப்பொழுது முன்பு சொல்லப்பெற்ற, ஶிகை, யஜ்ஞோப வீதம் இவைகளுடைய த்யாகத்தில் சொல்லப்பெற்ற யோகத்தின் சேர்க்கையைச் சொல்லுகிறார்—

"பஹி: ஸூத்ரம் த்யஜேத் வித்வாந் யோகமுத்தமமாஶ்ரித:.
ப்ரஹ்மபாவமிதம் ஸூத்ரம் தாரயேத் ய: ஸ சேதந:.
தாரணாத்தஸ்ய ஸூத்ரஸ்ய நோச்சிஷ்டோ நாஶுசிர்பவேத்".[2]

"—உத்தமமான யோகத்திலே திளைத்துள்ள பண்டிதன், வெளியேயுள்ள ஸூத்ரத்தை (உபவீதம்) விட வேண்டும். ஸத்தையின் தன்மையைப் பெற்றுள்ள இந்த ஸூத்ரத்தை ஞாநத்தை யுணர்ந்துள்ள எவன் தரித்துக் கொள்ளுகிறானோ, அவ்வாறு தரித்துக்கொள்ளுகின்ற அந்த ஞாநிக்கு 'உச்சிஷ்டம்' 'அஶுசி' என்ற இவைகள் கிடையாது[2]

இப்பொழுது வெளிப்படையாக பரமஹம்ஸன் யஜ்ஞோப வீதம் இல்லாதவனாயினும் அவன் யஜ்ஞோபவீதமுள்ளவனாகவே இருக்கின்றான் என்பது சொல்லப் பெறுகின்றது—

"ஸூத்ரமந்தர்கதம் யேஷாம் ஞாநயஜ்ஞோபவீதிநாம்.
தே வை ஸூத்ரவிதோ லோகே தே ச யஜ்ஞோபவீதிந:".

"—ஞாநமென்னும் யஜ்ஞோபவீதத்தையுடைய எவர்களுக்கு ஸூத்ரமானது அந்தர்கதமாக (உள்ளே) உள்ளதோ, அவர்களே ஸூத்ரத்தினுடைய உண்மை நிலையினை யுணர்ந்தவர்களாவர். அவர்களும் உலகில் யஜ்ஞோபவீதத்தைத் தரித்தவர்களுமாவர்".

---

1 "யோகீ=ஜீவன், ப்ரஹ்மன் என்ற இரண்டையும் ஒன்றிய நிலையில் காண்பவன், யோகவித்=அஷ்டாங்கத்தையோ (எட்டு அங்கங்கள்,) அல்லது ஷடங்கத்தையோ (ஆறு அங்கங்கள்) உணர்ந்துள்ளவன். தத்வவித்=நித்யா நித்யவஸ்துவையுணர்ந்தவன்.

2 "உச்சிஷ்டம்=எச்சில். அஶுசி=மனம், வாக்கு, காயம் இவைகளி லிருந்து தோன்றுகின்ற பாபமென்பது.

"ஞானஶிகா ஞானநிஷ்டா ஞானயஜ்ஞோபவீதிந:.

ஞானமேவ பரம் தேஷாம் பவித்ரம் ஞானமுச்யதே:"

"—நான் ப்ரஹ்மமாகவே இருக்கிறேன் என்ற உணர்வானது எவர்களுக்கு இருக்கின்றதோ, அவர்களே ஞானமென்னும் ஶிகையையுடையவர்கள், ஞானத்தில் நிலைத்துள்ளவர்களும் அவர்களே யாவர். அவர்களே ஞானமென்னும் யஜ்ஞோப வீதத்தைத் தரித்தவர்கள். அவர்களுக்கு ஞானமே சிறந்ததாக வும், ஞானமே பவித்ரமாகவும் (தூய்மை) இருப்பது எனச் சொல்லப் பெறுகின்றது."

"அக்னேரிவ ஶிகா நான்யா யஸ்ய ஞானமயீ ஶிகா.

ஸ ஶிகீத்யுச்யதே வித்வாந் நேதரே கேஶதாரிண:"

"—எவ்வாறு அக்நியினுடைய ஜ்வாலையானது அக்நியை விட்டுத் தனித்திருப்பதில்லையோ, அவ்வாறே ஸ்வயம் ப்ரகாஶ வடிவாயுள்ள எந்தப் பரமஹம்ஸனுக்கு 'நான் ஞான வடிவாகவே இருக்கிறேன், எனக்கும் ஞானத்திற்கும் வேற்றுமையென்பது கிடையாது, என்ற உணர்வு இருக்கின்றதோ, அதுவே சிகை, சைதந்யத்தின் ஒளியானது அச்சைதநயத்தைக் காட்டிலும் மாறு பட்ட தன்று. ஆகவே இத்தகைய ஞானசிகையையுடையவன் என்பது கருத்து. 'இதரே' என்றதால் ஞானமில்லாதவர்கள் கேஶத்தைச் சுமப்பவர்கள்" என்பது.

"கர்மண்யதிக்ருதா யே து வைதிகே ப்ராஹ்மணாதய:.

தை: ஸம்தார்யமிதம் ஸூத்ரம் க்ரியாங்கம் தத்தி வை ஸ்ம்ருதம்"

"—வைதிககர்மாவில் ப்ராஹ்மணர்கள் எவர்கள் நியமிக்கப் பெறுகின்றனரோ, அவர்களினால் இந்த ஸூத்ரம் தரிக்கத் தக்கது. ஏனெனில் அந்த ஸூத்ரம் க்ரியைக்கு (செயல்) அங்கமாயுள்ளதால் என்க. இதற்கு விதியும் (கட்டளை) ப்ரமாண மாகக் காட்டப் பெறுகின்றது— "தஸ்மாத் யஜ்ஞோபவீத்யேவ அதீயீத யாஜயேத் யஜேத வா யஜ்ஞஸ்ய" —"ஆகையினால் யஜ்ஞோப வீதத்தை யுடையவனாகவே இருந்து கொண்டு வேதமோ வேண்டும். வேள்வியைச் செய்விக்க வேண்டும். வேள்வியைச் செய்யவும் வேண்டும்" என்பது விதிவடிவாயுள்ள ஶ்ருதியின் தாத்பர்யம்."[1]

"ஶிகா ஜ்ஞானமயீ யஸ்ய உபவீதம் ச தந்மதம்.

ப்ராஹ்மண்யம் ஸகலம் தஸ்ய இதி. ப்ரஹ்மவிதோ விது:"

"—ஶிகை, யஜ்ஞோபவிதம் என்ற இவைகள் எவனுக்கு ஞாநமயமாயுள்ளதோ, அவனுக்கு யாவும் ப்ரஹ்மத்தைத் தொடர்ந்துள்ளதாய் அமைகின்றன. என்று ப்ரஹ்மத்தை யுணர்ந்தவர்கள் கருதுகின்றனர்."

"இதம் யஜ்ஞோபவீதம் து பரமம் யத் பராயணம்.
ஸ வித்வாந் யஜ்ஞோபவீதி ஸ்யாத் தஜ்ஞாஸ்தம் யஜ்விநம் விது:"
இதி.

"—இந்த யஜ்ஞோபவீதமோ வெனில், கார்யத்தோடு கூடிய அவித்யையினுடைய சிறந்த ஆஶ்ரயமாயுள்ளது. இவ்வாறு சொல்லப் பெற்ற பண்டிதன், இது நானாகவே இருக்கிறேன் (அதாவது இந்த யஜ்ஞோபவீதத்தோடு கூடியவனாகவே இருக்கிறேன் என்பது) என்ற ஞாநத்தையுடைய அந்த வித்வானை, தர்ஶபூர்ணமாஸம், ஜ்யோதிஷ்டோமம் முதலிய இலக்கணங்களைக் கொண்ட யாகம் செய்கின்ற கர்த்தாவாகவே (தலைவன்) உணருகின்றனர்" என்றவாறு.

"தஸ்மாத் யோகிந: ஶிகாயஜ்ஞோபவீதே யதா
வித்யேதே, ததைவ ஸம்த்யபி வித்யதே. ய:
ஶாஸ்தரகம்ய: பரமாத்மா, யஶ்ச அஹம்ப்ரத்-
யயகம்யோ ஜீவாத்மா, தயோ: ஏகத்வஜ்ஞாநே
மஹாவாக்யஜந்யே ப்ராந்திப்ரதீத: பேத:
விஶேஷேண பக்ந ஏவ புந: ப்ராந்த்யநுதயோ
பங்கஸ்ய விஶேஷ:" இதி.

"—ஆகையினால் யோகமுணர்ந்தவனுக்கு ஶிகை, யஜ்ஞோபவீதம் என்றவைகள் இருக்கின்றன. அவ்வாறே ஸம்த்யாவந்தநமும் இருக்கின்றது. ஶாஸ்த்ரத்திற்குப் புலனுவதாயுள்ள யாதொரு பரமாத்மா இருக்கின்றதோ, 'அஹம்' என்னும் ப்ரத்யயத்திற்கு இலக்காயுள்ள யாதொரு ஜீவாத்மா இருக்கின்றதோ அவைகளில் ஒன்றிய தன்மையையுடைய ஞாநத்தோடும், மஹாவாக்யத்திலிருந்து தோன்றிய ஞாநத்தோடும், மயக்கத்தின் தோற்றமாயுள்ள பேதமானது (வேற்றுமை) பெரும்பாலும் அகற்றப் பெற்றதாகவே யாகும். மறுபடியும் மயக்கத்தின் தோற்றமானது இல்லாமையே பங்கத்தின் (தகர்ப்பது) விஶேஷமாகும்" என்றவாறு.

''யேயம் ஏகத்வபுத்தி: ஸேயம் உபயோ:
ஆத்மனோ: ஸம்தௌ ஜாயமாநத்வாத் ஸம்தயா
இத்யுச்யதே. அஹோராத்ரயோ: ஸம்தௌ
அநுஷ்டேயா க்ரியா யதா ஸம்த்யா தத்வத்.
ஏவம் ச ஸதி யோகி ஶ்ரத்தாஜடை: ந
வ்யாமோஹயிதும் ஶக்ய:'' இதி.

''—இந்த ஏகத்வ (ஒன்றிய) புத்தியானது எவர்களுக்கு இருக்கின்றதோ, அத்தகைய இந்த புத்தியானது இருவகையாயுள்ள ஆத்மாக்களுடைய ஸம்யோகத்தினுல் தோன்றுகின்ற காரணத்தினுல், அது 'ஸம்த்யா' (சேர்க்கை இணைப்பு) எனச் சொல்லப் பெற்றது. அஹோராத்ரங்களுடைய (பகல், இரவு) ஸம்தியில் (இணைப்பில்) அநுஷ்டாநம் செய்யப் பெறுகின்ற க்ரியையானது (செயல்) எவ்வாறு 'ஸம்த்யா' எனச் சொல்லப் பெறுகின்றதோ' அது போலவே இதுவும் என்பது தாத்பர்யம். இவ்வாறுள்ள நிலையில் யோகியானவன் ஶ்ரத்தையினளவிலே திளைத்துள்ள மந்த புத்தியுடையவர்களினுல் மோஹமடையச் செய்ய முடியாது'' என்றவாறு.

''கோऽயம் மார்க:? இதி ப்ரஶ்நஸ்ய
''அஸௌ ஸ்வபுத்ர—'' இத்யாதிநா உத்தரமுக்தம்.
கா ஸ்திதி:? இத்யேதஸ்ய, 'மஹாபுருஷ:—இத்-
யாதிநா ஸம்க்ஷிப்ய உத்தரமுகத்வா, ''ஸம்ஶயவிபரீத''—'
இத்யாதிநா ததேவ ப்ரபஞ்ச்ய, இதாநீம் உபஸம்ஹரதி—

''—'இந்த வழி (மார்கம்) யாது' என்ற கேள்விக்கு—''இவன் தனது புத்ரன்—'' என்ற வாக்யத்தினுல் பதில் சொல்லப் பெற்றது. 'ஸ்திதியானது (நிலை) யாது? என்ற கேள்விக்கு 'மஹாபுருஷன், (சிறந்த புருஷன்) என்பது முதலியவையினுல் சுருக்கமாகப் பதில் சொல்லி, ''ஸம்ஶயம் (ஐயம்) விபரீதம் (மாறுதல்)'' என்பது முதலியவையினுல் அதையே விஸ்தாரமாகச் சொல்லி, இப்பொழுது (அவைகளை) முடித்துக் கொண்டு சொல்லுகிறார்—

''ஸர்வாந் காமாந் பரித்யஜ்ய அத்வைதே பரமா ஸ்திதி:'' இதி.

''—காமனைகள் யாவையும் பரித்யாகம் செய்து சிறந்த அத்வைதத்தில் நிலையானது (இருக்க வேண்டும்)'' என்றவாறு.

''க்ரோதலோபாதீநாம் காமபூர்வகத்வாத்
காமபரித்யாகேந சித்ததோஷா: ஸர்வேடபி
பரித்யஜ்யந்தே. ஏததேவாபிப்ரேத்ய வாஜஸநேயிபி:
ஆம்நாதம்—

"—மற்றும் க்ரோதம், லோபம், முதலியவைகளுடைய தோற்றத்திற்கு காமமே அடைப்படையான காரணமாயிருப்பதால், அந்தக் காமனையைக் களைவதாலேயே சித்தத்தைப் பற்றிய குற்றங்கள் (தோஷம்) யாவும் களையப் பெறுகின்றன. இதைக் கருத்தில் கொண்டே வாஜஸநேயிகளினுல் சொல்லப் பெற்றுள்ளதும் வருமாறு—

''அதோ கல்வாஹு: காமமய ஏவாயம்
புருஷ:'' இதி.
''அத: நிஷ்காமஸ்ய யோகிசித்தஸ்ய
அத்வைதே நிர்விக்நா ஸ்திதி: உபபத்யதே.'' இதி.

''—இந்த புருஷன் (ஜீவன்) காமம் நிறைந்தவனுகவே (காணப் பெறுகின்ருன்) என்றவாறு.

''—ஆகையினுலேயே நிஷ்காமனையாயுள்ள (காமனையை யகற்றிய) யோகியினுடைய சித்தத்திற்கு அத்வைதத்தில் இடையூறு தோன்ருத நிலையும் இவ்விடத்தில் உபபாதநம் (தெளிவு) செய்யப் பெற்றதும் உசிதமேயாகும்'' என்றவாறு.

நநு—த்ண்டக்ரஹணவிதிவாஸநயோபேதா விவிதிஷா-
ஸம்ந்யாஸிநோ யோகிநம் தண்டரஹிதம் பரமஹம்ஸம்
நாப்யுமகச்சந்தி இத்யாஶமக்யாஹ—

**சங்கை—**

தண்டக்ரஹண விதியானது (தண்டத்தை எடுத்துக் கொள்ளுகிற கட்டளையானது) வாஸனையோடு கூடிய விவிதிஷாஸம்ந்யாஸிகள், தண்டமில்லாத யோகியாகிய பரமஹம்ஸனை அங்கீகாரம் (ஒத்துக் கொள்ளுவது) செய்யமாட்டார்கள். என்று ஐயம் கொண்டு இவ்வாறு சொல்லுகிருர்—

''ஞானதண்டோ த்ருதோ யேந ஏகதண்டீ ஸ உச்யதே.
காஷ்டதண்டோ த்ருதோ யேந ஸர்வாஸீ ஞானவர்ஜித:

''—எவனால் ஞானமென்னும் தண்டமானது தரிக்கப் பெற்றுள்ளதோ, அவன் 'ஏகதண்டீ' எனச் சொல்லப் பெறுகின்றான். எவனால் காஷ்டதண்டமானது (மூங்கில் முதலிய) தரிக்கப் பெறுகின்றதோ, அவன் எல்லாவற்றையும் புசித்து வயிற்றை நிரப்புகின்ற ஞானசூன்யனுமானவன்.''

ஸ யாதி நரகாந் கோராந் மஹாரௌரவஸம்ஜ்ஞகாந்''
திதிக்ஷா ஞானவைராக்யசமாதி குணவர்ஜித:.
பிக்ஷாமாத்ரேண யோ ஜீவேத் ஸ பாபீ யதிவ்ருத்திஹா.''
இதமந்தரம் ஜ்ஞாத்வா ஸ பரமஹம்ஸ:'' இதி.

''—அத்தகைய அவன் 'மஹாரௌரவம்' என்ற பெயரையுடைய கொடிய நரகங்களையும் அடைகின்றான். மற்றும் திதிக்ஷை (பொறுமை) ஞானம், வைராக்யம், சமம் முதலிய குணங்களால் விடப் பெற்றவனும், பிக்ஷையின் (பிக்ஷையெடுப்பது) அளவிலே எவன் ஜீவனம் (பிழைப்பு) செய்கின்றானோ, அவன் பாபியாகின்றான். அவன் யதிகளுடைய ஜீவனத்தையும் கொன்றவனாகின்றான்'' என்றவாறு.

''பரமஹம்ஸஸ்ய யோऽயம் ஏகதண்ட:, ஸ த்விவித:—
ஞானதண்ட:, காஷ்டதண்டஶ்சேதி, யதாத்ரிதண்டிந:,
வாக்தண்ட:, மனோதண்ட:, கர்மதண்டஶ்சேதி த்ரைவித்யம்
தத்வத். வாக்தண்டாதயோ மநுனா ஸ்மர்யந்தே—

''—பரமஹம்ஸனுக்கு யாதொரு இந்த தண்டமானது இருக்கின்றதோ; அது இருவகையாகும். எவ்வாறு த்ரிதண்டிகளுக்கு வாக்தண்டம், மனோதண்டம், கர்மதண்டம், என்ற மூவகையான தண்டங்கள் இருக்கின்றவோ அதுபோல வாக்தண்டம் முதலியவைகள் மநுவினால் ஸ்மரணம் செய்யப் பெற்றுள்ளன—

''வாக்தண்டோऽத மனோதண்ட: கர்மதண்டஸ்ததைவ ச.[1]
யஸ்யைதே நியதா: புத்தௌ ஸ த்ரிதண்டீதி சோச்யதே.
த்ரிதண்டமேதத் நிக்ஷிப்ய ஸர்வபூதேஷு மாநவ:.
காமக்ரோதௌ து ஸம்யம்ய தத: ஸித்திம் நியச்சதி,'' இதி.

''—வாக்தண்டம், பிறகு மனோதண்டம், அவ்வாறே கர்ம (காய) தண்டமுமாகும். இவைகள் மூன்றும் எவனுடைய புத்தியில் உறுதியாயுள்ளதோ, அவனே 'த்ரிதண்டீ' எனச் சொல்லப் பெறுவன்.''

"அதாவது எவன், மனம், வாக்கு, கர்மம் (செயல்) காயம் (ஶரீரம்) — என்ற இந்த மூன்றையும் தீயனவாயுள்ள செயல் களில் செல்ல வொட்டாமல் தடுத்துத் தனது புத்தியிலே அடக்கு கின்ருனே, அவனே திரிதண்டீ என்பவன். அல்லது வெளியிலே த்ரிதண்டத்தைத் தரிப்பதால் மாத்திரம் (திரிதண்டம், ஸம்ந்யா ஸிகள் கையில் தரிக்கின்ற முக்கோல்) த்ரிதண்டியாகான். எனவே வெளியே தரிப்பது போல் உள்ளேயும் (மனத்திலும்) மனம் வாக்கு, காயம் என்ற இவைகளை அடக்கியாள வேண்டுமென்பது கருத்து, என அந்த ஸம்ருதி வாக்யத்தின் தாத்பர்யம்.

"இத்தகைய த்ரிதண்டத்தை எல்லா ப்ராணிகளுடைய முன்னிலையில் வைத்து, காமம், க்ரோதம் இவைகளை அடக்கி வந்தால், அந்த அடக்கத்தின் காரணமாக அவன் ஸித்தியையும் (நிறைவு) உறுதியாகப் பெறுகின்ருன்" என்றவாறு.[1]

தேஷாம் ஸ்வரூபம் தக்ஷ: ஸ்மரதி— அவைகளைக் குறித்து தக்ஷரும் ஸ்மரணம் செய்கிருர்—

"வாகதண்டோऽத மநோதண்ட: கர்மதண்டஸ்ததைவ ச.
யஸயைதே நியதா தணடாஸ்த்ரிதணடீதி ஸ உச்யதே.
(வாக்தண்டோமௌநமாதிஷ்சேத கர்மதண்டேத்வநீஹதர்ம
மாநஸஸ்ய து தண்டஸ்ய ப்ராணுயாமோ விதீயதே.)"

1 இவ்விடத்தில் கர்மதண்டம் என்ற பாடம் காணப் பெறுகின்றது. ஆயினும் விரிவுரையில் மேற்கோளாகக் காண்பிக்கப் பெற்ற மநுஸ்ம்ருதியில் —'கர்மதண்டஸ்ததைவச என்ற விடத்தில் 'காயதண்டஸ்ததைவ ச' என்ற பாடம் காணப்பெறுன்றது. மற்றும் வாக்தண்டத்தில் [மௌனத்தையும், காயதண்டத்தில், அல்பபோஜநமும் மநோதண்டத்தில், ப்ராணுயாமும் விதிக்கப் பெற்றுள்ளது.

ஆனல் இவ்விடத்தில் 'காயதண்டம்' என்ற சொல்லுக்கு 'ஆசையை யகற்ற வேண்டும் என' வேறு ஸ்ம்ருதிகளில் கணாப் பெறுகின்றது. கர்மதண்டம் என்ற சொல்லுக்கு, 'அல்போஜநம்' என்ற பொருள் விளக்கம் வேறு ஸம்ருதிகளிலும் கொடுக்கப் பெற்றுள்ளது. ஆயினும் பொதுவாக காயதண்டம் என்ற பாடமே சிறந்ததாகக் கருதலாமெனத் தோன்றுகின்றது

அப்பொழுது 'அல்போஜநம்' என்ற பொருளும் உசிதமாகவே காணப் பெறுகின்றது. ஆனல் 'கர்மதண்டம்' என்ற சொல்லுக்கு அல்போஜநம் என்ற பொருளைக் காட்டிலும் 'ஆசையை யகற்றல்' என்ற பொருளும் இசை வானதாகவே தோன்றுகின்றது. வாசகர்கள் எது உசிதமென்பதை நிர்ணயம் செய்து கொள்ளவும்,

[1]"வாக்தண்டோऽத மனோதண்ட: கர்மதண்டஸ்ததைவ ச.
யஸ்யைதே நியதா தண்டாஸ்த்ரிதண்டீதி ஸ உச்யதே," இதி.
("வாக்தண்டே மௌனமாதிஷ்டேத் கர்மதண்டே த்வநீஹதா.
மாநஸஸ்ய து தண்டஸ்ய ப்ராணாயாமோ விதீயதே" இதி.)[1]

"—வாக்தண்டம், பிறகு மனோதண்டம், அவ்வாறே கர்ம தண்டம் எனவுமாம். இத்தகைய தண்டங்கள் எவனுக்கு உறுதியாயுள்ளதோ, அவன் 'த்ரிதண்டீ' எனச் சொல்லப் பெறுவன்." என்றவாறு.

("—வாக்தண்டத்தில் மௌனத்தைக் கடைப் பிடிக்கவேண்டும் கர்ம (காய) தண்டத்திலோ வெனில், ஆசையை யகற்ற வேண்டும். மனத்தைச் சார்ந்த தண்டத்திலோ வெனில் ப்ராணாயாமமானது விதிக்கப் பெறுகின்றது" என்றவாறு.)

(காய) கர்மதண்டமென்பது அல்ப (சுருங்கிய) போஜநம் (உணவு) என்று வேறு ஸ்ம்ருதியினுடைய பாடமாகும்.

"ஈத்ருஶம் த்ரிதண்டித்வம் பரமஹம்ஸஸ்யாப்யஸ்தி" இதி.

"—இத்தகைய த்ரிதண்டத் தன்மையானது பரம ஹம்ஸனுக்கும் இருப்பதுமாகும்." என்றவாறு.

ததேததபிப்ரேத்ய பிதாமஹ: ஸ்மரதி—

இதைக் கருத்தில் கொண்டே பிதாமஹரும் பின் வருமாறு ஸ்மரணம் செய்கிறார்—

"யதி: பரமஹம்ஸஸ்து தூர்யாக்ய; ஶ்ருதிசோதித:.
யமைஶ் ச நியமைர்யுக்தோ விஷ்ணுரூபீ த்ரிதண்டப்ருத்" இதி.

"—யதியாகிய பரமஹம்ஸனே வெனில் தூர்யன் என்று ஶ்ருதி களினால் இலக்கணம் சொல்லப் பெற்றுள்ளது. யமங்களினாலும், நியமங்களினாலும் இணைந்த திரிதண்டியானவன் விஷ்ணுவின் வடிவமானவன்" என்றவாறு.

"ஏவம் ஸதி மௌனாதீநாம் வாகாதிதமநஹேதுத்வாத்
யதா தண்டத்வம், ததைவ அஜ்ஞாநதத்கார்யதமந-
ஹேதோர் ஜ்ஞாநஸ்ய தண்டத்வம்" இதி.

1 இச் செய்யுள் பதிப்பித்த தக்ஷஸ்ம்ருதியில் காணவில்லை.

“—இவ்வாறுள்ள பொழுது மௌநம் முதலியவைகளுக்கு ‘வாக்’ முதலியவைகள் தமநத்திற்கு (அடக்குவது) காரணமாயிருப்பதால் எவ்வாறு தண்டத் தன்மையோ, அவ்வாறே அஜ்ஞாநம், அதனுடைய கார்யமாகிய தமநம் காரணமாகையால் ஞாநத்திற்குத் தண்டத் தன்மையுமாகும்.” என்றவாறு.

“அயம் ஞாநதண்டோ யேந பரமஹம்ஸேந த்ருத;, ஸ ஏவ முக்ய: ஏகதண்டீ இத்யுச்சயதே” இதி.

“—இந்த ஞாநதண்டமானது எந்த பரமஹம்ஸனுல் தரிக்கப் பெறுகின்றதோ, அவனே முக்யமாயுள்ள ஏகதண்டீ எனச் சொல்லப் பெறுவன்” என்றவாறு.

“மாநஸஸ்ய ஜ்ஞாநதண்டஸ்ய கதாசித் சித்த-
விக்ஷேபேண விஸ்ம்ருதி: ப்ரஸஜ்யேத இதி தந்நி-
வாரணார்ததம் ஸ்மாரக: காஷ்டதண்டோ த்ரியதே,” இதி.

“—மனத்தைச் சார்ந்த ஞானதண்டத்திற்குச் சிலபொழுது சித்தத்தினுடைய விக்ஷேபத்தினுல் (கலக்கம்) விஸ்ம்ருதியானது (மறதி) தோன்றக் கூடும் என்று அதைத் தடுப்பதற்காக நினைவின் வடிவாயுள்ள ‘காஷ்டதண்டம்’ தரிக்கப் பெறுகின்றது” என்றவாறு.

“ததேதத் ஶாஸ்த்ரார்த்த ரஹஸ்யமபுத்வா
வேஷமாத்ரேண புருஷார்த்தஸித்திமபிப்ரேத்ய
காஷ்டதண்டோ யேந பரமஹம்ஸேந த்ருத:,
ஸ புருஷ: பஹுவித யாதநோபேதத்வாத்
கோராந் மஹாரௌரவஸம்ஜ்ஞகாந் நரகாந் ப்ராப்நோதி” இதி.

“—இந்த ஶாஸ்த்ரத்தினுடைய பொருளின் உண்மை நிலையினையுணராமல், வேஷத்தின் அளவிலே புருஷார்த்தத்தினுடைய நிறைவைக் கருதி காஷ்டதண்டமானது எந்தப் பரமஹம்ஸனுல் தரிக்கப் பெறுகின்றதோ, அந்த புருஷன் தீவரமாயுள்ள பல வகையான வேதனைகளோடு கூடியதும், பெருகியாதயுமுள்ள ரௌரவம் என்ற நரகங்களை அடைகின்றான்” என்றவாறு.

தத்ர ஹேதுருச்யதே—

அவ்விஷயத்தில் காரணமும் சொல்லப் பெறுகின்றது—

''பரமஹம்ஸவேஷம் த்ருஷ்ட்வா ஞாநித்வப்ராந்த்யா ஸர்வே ஜநா ஸ்வஸ்வக்ருஹே போஜயந்தி. ஸ்வயம் ச ஜிஹ்வா-
லம்பட: வர்ஜ்யாவர்ஜ்யவிவேகம் அக்ருத்வா
ஸர்வமந்நம் அஶ்நாதி. தேந ப்ரத்யவாயம்
ப்ராப்நோதி.

''—பரமஹம்ஸ வேஷத்தைக் கண்டு இவன் ஞாநத் தன்மை வாய்ந்தவன் என்ற ப்ரமத்தினால் (மயக்கம்) எல்லா மக்களும் தத்தம் வீடுகளில் அவனை பிக்ஷை (போஜநம்) செய்யுமாறு நியமிக்கின்றனர். இவனும் நாவின் ருசிக்கு ஆசை கொண்டு விதிவிலக்கு — (வர்ஜ்யா வர்ஜ்யம்—இது புசிக்கத் தக்கது. இது புசிக்கத் தகாதது) இல்லாமல் விவேகத்தை யிழந்து எல்லா வற்றையும் (அந்நம் முதலிய) புசிக்கின்றான். அக்காரணத்தால் தோஷத்தையும் (பாபம்) அடைகின்றான்.

யாநி து—எவைகளும்—

''நாந்நதோஷேண மஸ்கரீ'' இதி. ''சாதுர்வர்ண்யம் சரேத்
பைக்ஷம்'' இத்யாதி ஸ்ம்ருதி வசநாநி (தாநி)
ஞாநிவிஷயாணி, அயம் ச ஞாநவர்ஜித: இதி யுக்த:
அஸ்ய நரக:'' இதி.

''—மற்றும், அந்ந தோஷத்தினால் மஸ்கரீ (யதி) இல்லை'' அந்ந தோஷமென்பது யதிக்கு இல்லை) எனவும், ''நான்கு (வர்ணங்களிலும் பிக்ஷை எடுக்க வேண்டும்'' எனவும் இவ்வாறு ஸ்ம்ருதிவசநங்கள் எவைகள் உண்டோ, அவைகள் ஞாநியைப் பற்றிய விஷயங்கள். இவன் ஞாநமில்லாதவன் என்பதால் இவனுக்கு நரகமானது உசிதமேயாகும்'' என்றவாறு.

அத ஏவ ஞாநஹீநஸ்ய யதேர்பிக்ஷாநியமமாஹ மநு:—

ஆகையினாலேயே ஞாநமில்லாத யதிக்கு பிக்ஷை செய்வதில் நியமத்தை மநு சொல்லுகிறார்—

''ந சோத்பாதநிமித்தாப்யாம் ந நக்ஷத்ராங்கவித்யயா.
நாநுஶாஸநவாதாப்யாம பிக்ஷாம் லிப்ஸேத கர்ஹிசித்.
ஏககாலம் சரேத பைக்ஷம் ந ப்ரஸஜ்யேத விஸதரே.
பைக்ஷே ப்ரஸக்தோ ஹி யதிர் விஷயேஷ்வபி ஸஜ்ஜதி,'' இதி.

"—பூகம்பத்தைச் (நிலநடுக்கம்) சொல்லுகின்ற ஶாஸ்த்ரம், கண் துடித்தல் முதலியவற்றைச் சொல்லுகின்ற நிமித்த ஶாஸ்த்ரம், வைத்யம், ஜ்யோதிஷம், தர்க்கம் என்ற இவைகளைச் சொல்லி, ஆசையோடு கூட பிக்ஷை செய்வது கூடாது."

"—யதியானவன் ஒரே வேளை பிக்ஷை எடுக்க வேண்டும் அதை' யும் அதிகமாக எடுக்கக் கூடாது. அவன் அதிகமாக பிக்ஷை எடுத்துப் புசித்தால் விஷயபோகங்களிலும் தொடர்பு கொள்ள நேரிடும்." என்றவாறு.

ஞாநாப்யாஸிநம் ப்ரதி து ஏவம் ஸ்மர்யதே—

ஞாநத்தைப் பயிலுகின்ற யதியைக் குறித்து இவ்வாறு ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது—

"ஏகவாரம் த்விவாரம் வா புஞ்ஜீத பரஹம்ஸக:.

யேந கேந ப்ரகாரேண ஞாநாப்யாஸீ பவேத் ஸதா". இதி.

"—ஒரு தடவையோ, இரண்டு தடவையோ பரமஹம்ஸன் பிக்ஷை எடுத்து உண்ண வேண்டும். ஏதாவது ஒரு முறையோடு எப்பொழுதும் ஞாநத்தைப் பயின்று கொண்டிருக்க வேண்டும்" என்றவாறு.

"ஏவம் ச ஸதி ஞாநதண்டகாஷ்டதண்டயோ: யதந்தரம் உத்தமத்வாதமத்வரூபம் ததிதம் அவகத்ய உத்தமம் ஞாநதண்டம் ய: தாரயதி, ஸ ஏவ முக்ய: பரமஹம்ஸ: இதி அப்யுபகந்தவ்யம்" இதி.

"—இவ்வாறுள்ள நிலையில் ஞாநதண்டம், காஷ்டதண்டம் இவைகளுடைய இடையில் யாதொரு பேதமானது இருக்கின்றதோ, அது உத்தமத் தன்மை, அதமத் தன்மை (மேல் கீழ்) என்றவாறுள்ள அத்தகைய இந்த நிலையையுமுணர்ந்து உத்தமமான ஞாநதண்டத்தை எவன் தரிக்கின்றானோ, அவனே முக்கியமாயுள்ள பரமஹம்ஸன் என அங்கீகரிக்க வேண்டும்" என்றவாறு.

நநு—அஸ்து அபிஜ்ஞஸ்ய பரமஹம்ஸஸ்ய

ஞாநதண்ட: மாபூத் காஷ்டத்ண்டநிர்பந்த:,

இதரா து சர்யா ஸர்வா கீத்ருஶீத்யாஶங்க்யாஹ—

சங்கை—

பண்டிதனாகிய பரமஹம்ஸனுக்கு ஞானதண்டம் இருக்கட்டும். காஷ்டதண்டத்தினுடைய நிர்பந்தம் (கட்டாயம்) வேண்டாம். மற்றவைகளான எல்லா சர்யைகளோ வெனில் எவ்வாறு என்ற ஐயம் கொண்டு சொல்லுகிறார்—

''ஆஶாம்பர:, ந நமஸ்கார:, ந ஸ்வதாகார:
ந நிந்தா, ந ஸ்துதி:, யாத்ருச்சிக: பவேத் பிக்ஷு:.
நாவாஹநம், ந விஸர்ஜநம், ந மந்த்ரம், ந த்யாநம்,
நோபாஸநம், ந லக்ஷ்யம், ந ப்ருதங், நாப்ருதங், ந சாஹம்,
ந த்வம், ந ச ஸர்வம், ந சாநிகேதஸ்திதிரேவ ஸ பிக்ஷு:,
ஸௌவர்ணாதீந் நைவ பரிக்ரஹேத், ந லோகம், நாவலோகம்
ச'' இதி.

''—திசைகளே வஸ்த்ரமாகும். நமஸ்காரம் இல்லை, ஸ்வதாகாரம் (பித்ருக்களுக்கிரிய பிண்டம்) இல்லை. நிந்தை இல்லை, ஸ்துதியும் இல்லை பிக்ஷுவானவன் யாத்ருச்சிக: (ஒன்றையும் எதிர் பார்த்து நிற்பது கூடாது) இந் நிலையைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆவாஹநம் (அழைப்பு) இல்லை. விஸர்ஜநமும் (விடுதலை) இல்லை, மந்த்ரமில்லை. சிந்தையில்லை, உபாஸனை இல்லை. குறிக்கோள் இல்லை, தனிமை யில்லை, சேர்க்கையுமில்லை, நான் என்பதுமில்லை, நீ யென்பதுமில்லை, யாவுமில்லை, நிலைத்த இருப்பிடமென்பதுமில்லை, என்ற இவ்வாறுள்ள நிலையில் எவன் இருக்கின்றானோ, அந்த பிக்ஷுவானவன் ஸுவர்ணம் முதலியவை களைத் தொடர்ந்துள்ளவைகளை ஒருபொழுதும் எடுத்துக் கொள்வது கூடாது. அந்த உலகத்தைப் பார்ப்பதும் கூடாது'' என்றவாறு.

மற்றும், ஆஶா திக்குகள் (திசைகள்)

ஆஶா திஶ:, தா ஏவாம்பரம் வஸ்தர-மாச்சாதநம் யஸ்ய அஸௌ ஆசாம்பர: இதி.

அவைகளே வஸ்த்ரம் (மறைத்துக்கொள்வது) எவனுக்கு இருக்கின்றதோ, அவனே ஆஶாம்பரன் எனச் சொல்லப் பெறும்.

யத்து ஸ்ம்ருதிவசநம்—

இவ்வாறு யாதொரு ஸம்ருதிவசநம் இருந்த பொழுதிலும்,—

"ஜாநுவோரூர்த்வமதோ நாபே: பரிதாயைகமம்பரம்" இதி.

"த்விதீயமுத்தரம் வாஸ: பரிதாயு க்ருஹாநடேத்" இதி ச.
ததிதம் அயோகிவிஷயம். அத ஏவ பூர்வம்," தச்ச ந
முக்யோऽஸ்தி இத்யுக்தம்.

"—முழங்காலுக்குமேல் நாபிக்கு (தொப்பூழ்) கீழே ஒரு வஸ்த்ரத்தையும் உடுத்திக் கொண்டு, இரண்டாவதாக மேல் வஸத்ரத்தையும் உடுத்திக் கொண்டு க்ருஹங்களைக் குறித்து பிக்ஷையெடுக்கச் செல்ல வேண்டும்." என்றவாறு சொல்லியிருக்கின்றதே என்றால்,' அத்தகைய இந்த வசனமானது யோகிகள் அல்லாத விஷயம். ஆகையினாலேயே முன்பு, "அதுவும் முக்யமன்று" எனச் சொல்லப் பெற்றது.

யத்யபி ஸம்ருத்யுந்தரம்—

வேறு ஸ்ம்ருதிவசநங்கள் இருந்தபொழுதிலும்—

"யோ பவேத் பூர்வ ஸம்ந்யாஸீ துல்யோ வை தர்மதோ யதி.
தஸ்மை ப்ரணாம: கர்தவ்ய: நேதராய கதாசந" இதி.
ததாபி தஸ்ய அயோகிவிஷயத்வாத் நாஸ்ய நமஸ்கார:
கர்தவ்யோऽஸ்தி" இதி.

"—எவன் பூர்வஸம்ந்யாஸியாக இருக்கின்றானோ, அவன் தர்மத்தினுடைய ஆசரணத்தின் காரணமாக தனக்கு துல்யமாக (நிகராக) இருந்தால், அவன் பொருட்டு ப்ரணாமம் (நமஸ்காரம்) செய்ய வேண்டும். மற்றவர்களைக் குறித்து ஒருபொழுதும் செய்யக் கூடாது" என்றவாறு சொல்லியுள்ளதே என்றால், அவ்வாறுள்ள பொழுதிலும் அந்த வசநத்திற்கு அயோகி (யோகியல்லாத) விஷயமாதலால் நமஸ்காரம் செய்ய வேண்டியதில்லை.

"அத ஏவ ப்ராஹ்மணலக்ஷணே 'நிர்நமஸ்காரமஸ்துதிம்'
இத்யுதாஹ்ருதம், கயாப்ரயாகாதிதீர்த்தேஷு ஶ்ரத்தாஜாட்யாத்
ப்ராப்த: ஸ்வதாகாரோ நிஷித்யதே பூர்வத்ர, 'நிந்தாகர்வ'—இத்–
யாதிவாக்யேந பரக்ருதயா ஸ்வநிந்தயா க்லேஶோ நிவா-
ரித:, அத்ர து ஸ்வகர்த்ருகே அந்யவிஷயே நிந்தாஸ்துதீ.
நிஷித்யேதே. யாத்ருச்சிகத்வம் நிர்பந்தராஹித்யம்.
ந க்வசிதபி வ்யவஹாரே நிர்பந்தம் குர்யாத்" இதி.

"—ஆகையினாலேயே ப்ராஹ்மண லக்ஷணத்தில், நமஸ்காரம் இல்லாமலும், ஸ்துதியில்லாமலும்" என்று உதாஹரணமாகச் சொல்லப் பெற்றது. கயை, ப்ரயாகை முதலிய தீர்த்தங்களில் சிரத்தையின் மாந்த்யத் தன்மையினால் கிடைக்கப் பெற்ற ஸ்வதாகாரமானது தடுக்கப் பெற்றுள்ளது. முன்பு ஓரிடத்தில் "நிந்தை, கர்வம்—" என்பன போன்ற வாக்யத்தினால் பிறரால் தன்னைக் குறித்துச் செய்யப் பெற்ற நிந்தையின் காரணமாகத் தோன்றுகின்ற க்லேஶமானது களையப் பெற்றது. இவ்விடத்திலோ வெனில் 'தன்னால் மற்றவர்கள் மீது சொல்லப் பெற்ற நிந்தை, ஸ்துதி இவ்விரண்டும் தடுக்கப் பெறுகின்றது. 'யாத்ருச்சிக;'. (எதிர்பாராதது) என்ற சொல் எவ்விதத்திலும் நிர்பந்தமில்லாத (பிறரால் கட்டாயப் படுத்தல்) நிலையைக் குறிப்பதாகும். எத்தகைய வ்யவஹாரத்திலும் ஒருபொழுதும் நிர்பந்தம் செய்வது கூடாது "என்றவாறு.

யஸ்து தேவபூஜாயாம் நிர்பந்த: ஸ்மர்யதே—

யாதொன்று தேவ பூஜையில் நிர்பந்தமானது ஸ்மரணம் செய்யப் பெற்றுள்ளதே என்றால்—

"பிக்ஷாடநம் ஜப: ஶௌசம் ஸ்நாநம் த்யாநம் ஸுரார்சநம்.
கர்தவ்யாநி ஷடேதாநி ஸர்வதா ந்ருபதண்டவத்" இதி.

"—பிக்ஷையெடுத்தல், ஜபம் செய்தல், ஶௌசம் செய்தல் (காயசுத்தி முதலியன) ஸ்நாநம் செய்தல், த்யாநம் (சிந்தை) செய்தல், தேவதைகளுக்கு அர்சனை செய்தல் என்ற அறுவகையான காரியங்களையும் எப்பொழுதும் அரசனுடைய ஆணையைப் போல் செய்ய வேண்டியவைகள்" என்றவாறு.

"தஸ்யாபி அயோகி விஷயத்வமபிப்ரேத்ய நாவாஹநமிதி ஆம்நாதம்:" இதி.

"—அதுவும் யோகியல்லாத விஷயமாகும். இதைக் கருதியே ஆவாஹநம் முதலியன இன்மை எனவும் சொல்லப் பெற்றது. இதுவே இரண்டுக்கும் வேற்றுமையாகும்" என்றவாறு.

"ஸக்ருத் ஸ்மரணம் த்யாநம். நைரந்தர்யேண அநுஸ்மரணம் உபாஸநம் இதி தயோர் பேத:, யதா யோகிந: ஸ்துதிநிந்தாதி—

லௌகிவ்யவஹாராபாவ:, யதா வா தேவபூஜாதிதர்ம-ஶாஸ்த்ரவ்யவஹாராபாவ:, ததா லக்ஷ்யத்வாலக்ஷ்யத்வாதி-ஞானஶாஸ்த்ரவ்யவஹாரோऽபி நாஸ்தி'' இதி.

''—ஒரு தடவை ஸ்மரணம் (நினைப்பது) செய்வது த்யானம் எனச் சொல்லப் பெறும். இடைவிடாது தொடர்ந்து சிந்தனை செய்வது உபாஸனம் எனச் சொல்லப் பெறும். இதுவே அவை யிரண்டுக்கு முள்ள வேற்றுமை. மற்றும், எவ்வாறு யோகிக்கு ஸ்துதி, நிந்தை முதலிய லௌகிக வ்யவஹாரங்கள் இல்லையோ எவ்வாறு தேவதாராதனம் முதலிய தர்மஶாஸ்த்ரங்களைத் தழுவிய வ்யவஹாரங்கள் இல்லையோ அவ்விதமே[1] லக்ஷ்யத் தன்மை முதலிய ஞான ஶாஸ்த்ரவ்யவஹாரமும் இல்லை.

''யத் ஸாக்ஷிசைதந்யமஸ்தி ததிதம் 'தத்வமஸி' இதி. வாக்யே த்வம்பதேன லக்ஷ்யம், தேஹாதிவிஶிஷ்டம் சைத-ந்யம் லக்ஷ்யம் ந பவதி, கிம் து வாச்யம்; தச்ச வாச்யம் தத்பதார்த்தாத் ப்ருதக்'' இதி.

''—மற்றும், யாதொரு ஸாக்ஷிசைதந்யம் இருக்கின்றதோ, அத்தகைய இந்த ஸாக்ஷிசைதந்யமும் 'தத்வமஸி' தத் அதுவாக அஸி - நீ இருக்கிறாய்' என்ற வாக்யத்தில் 'த்வம்' (நீ) என்ற பதத்தோடு ஶரீரம் முதலியவைகளோடு கூடிய சைதந்யம் லக்ஷ்ய மாக மாட்டாது. ஆனால் வாச்யமாக அது இருப்பதாகும். அந்த வாக்யமும் 'தத்' என்ற பதத்தைக் காட்டிலும் வேறானது'' என்றவாறு.

'லக்ஷ்யம் து அப்ருதக்:; ஸ்வதேஹநிஷ்ட: வாச்யோऽர்த்தோऽஹமிதி வ்யவஹாரார்ஹ:, பரதேஹநிஷ்ட: த்வமிதி வ்யவஹாரார்ஹ:, லக்ஷ்யம் வாச்யம் இத்யுபயவிதம் சைதந்யோபேதம். அந்யஜ்ஜடம் ஜகத் ஸர்வமிதி வ்யவஹாரார்ஹம் இத்யேதாத்ருஶோ விகல்ப: ந கோऽபி யோகினோऽஸ்தி, ததீயசித்தஸ்ய ப்ரஹ்மணி விஶ்ராந்தத்வாத்,'' இதி.

''—லக்ஷியமோவெனில் வேறல்ல. தனது ஶரீரத்தைச் சார்ந்த வாச்யப் பொருளான (அஹம்) என்றது வ்யவஹாரத்திற்குத் தகுதி

1 லக்ஷ்யத் தன்மை, என்றது— ஒரு வஸ்துவைக் குறித்த குறிக்கோள், அலக்ஷ்யத் தன்மை என்பது—அது இல்லாமை அலக்ஷ்யத் தன்மை என்பது.

யுள்ளது. வேறு ஶரீரத்தைச் சார்ந்த 'த்வம்' என்பது வ்யவஹாரத்திற்குத் தகுதி வாய்ந்ததாகும். லக்ஷ்யம், வாச்யம் என்ற இரண்டும் சைதந்யத்தோடு கூடியது. மற்றது ஜடமாகும், அது உலகம் யாவுமாகிய வ்யவஹாரத்திற்குத் தகுதி பெற்றது என்ற இத்தகைய விகல்பமானது ஒன்றும் யோகிக்குக் கிடையாது. அவனுடைய சித்தத்திற்கு ப்ரஹ்மத்தினிடம் விஶ்ராந்தியானது (ஓய்வு) இருப்பதுமாகும். என்றவாறு.

"அத ஏவ ஸ பிக்ஷு: அநிகேதஸ்திதிரேவ, யதி
நியதநிவாஸார்த்தம் கம்சித் மடம் ஸம்பாதயேத்,
ததாநீம் தஸ்மிந் மமத்வே ஸதி ததீயஹாநிவ்ருத்யோ:
சித்தம் விக்ஷிப்யேத". இதி.

"—அக்காரணத்தினலேயே அந்த பிக்ஷுவானவன் நிலையற்ற இருப்பிடத்தையுடையவனே யாவன். நிலையான வாஸத்தின் பொருட்டு ஒரு மடத்தை ஸம்பாதிப்பானே யாகில், அப்பொழுது அந்த மடத்தின் மீது 'மமத்வம்' என்னுடையது என்ற அபிமானம் தோன்றும்பொழுது, அவனுடைய மடத்தின் குறைவு, நிறைவு இவைகளிடத்தில் சித்தமானது கலக்கமடையும்". என்றவாறு.

ஏதத் ஸர்வம் அபிப்ரேத்ய கௌடபாதாசார்யா ஆஹு:—

இவை யாவையும் கருத்தில் கொண்டே கொடபாதாசார்யரும் சொல்லுகிறுர்—

"நி:ஸ்துதிர் நிர்நமஸ்காரோ நி:ஸ்வதாகார ஏவ ச.
சலாசலநிகேதஶ்ச யதிர்யாத்ருச்சிகோ பவேத்" இதி.

—"துதியில்லை. நமஸ்காரமில்லை. ஸ்வதாகாரமில்லை (பித்ரு கர்ம) சலம் (அசைவது) அசலம் (அசையாதது) அல்லது நிலைத்தல், நிலைத்தல் இல்லாதது) என்ற இவைகளை யதியானவன் எதிர்பாராத நிலையில் இருக்க வேண்டும்." என்றவாறு.

அதாவது—தன்னைப் பிறர் துதிக்கவேண்டுமென்ற நினைவும், தன்னைப் பிறர் வணங்க வேண்டுமென்ற நினைவும் நீங்கியவனுக, தாரேஷணை, புத்ரேஷணை முதலியவைகள் இல்லாதவனுமாக ப்ரமஹம்ஸபரிவ்ராஜக ஸம்ந்யாஸத்தைப் பெற்று, ஶரீரதாரணை முதலிய காலம் தவிர, மற்றகாலங்களில் தனது ஶரீரத்தை மறந்

வனுக இருந்து கொண்டு அத்வைதத் தன்மையைப் பின்பற்றிய வனுக இருக்க வேண்டுமென்பது தாத்பர்யம்.

"யதா மட: ந பரிக்ருஹீதவ்ய: ததா ஸௌவர்ண-
ராஜததீநாம் பிக்ஷாசமநாதிபாத்ராணுமேகமபி
ந க்ருஹ்ணீயாத்," இதி

—"மற்றும், எவ்வாறு மடமானது எடுத்துக் கொள்வது தடுக்கப் பெற்றுள்ளதோ, அவ்வாறே பிக்ஷாபாத்ரம், ஆசமந பாத்ரம் முதலியவைகளுக்குத் தங்கத்தைச் சார்ந்ததும், வெள்ளியைச் சார்ந்ததுமானவைகளே பிக்ஷைக் குரியவைகளாக ஒரு பொழுதும் பயன் படுத்துவது கூடாது," என்றவாறு.

ததாஹ யம:—அதையும் யமன் சொல்லுகிருர்—

"ஹிரண்மயாநி பாத்ராணி கார்ஷ்ணுயஸமயாநி ச.
யதீநாம் தாந்யபவித்ராணி வர்ஜயேத் தாநி பிக்ஷுக": இதி.

"—ஸுவர்ணத்தைச் சார்ந்தது. கரும் பொன்னேச் சார்ந்தது என்ற இவைகளே யதிகள் ஒதுக்க வேண்டும். ஏனெனில் அவைகள் பரிசுத்தமற்றவைகள் என்பதால் என்க" என்றவாறு.

மநுரபி—மநுவும் சொல்லுகிருர்—

"அதைஜஸாநி பாத்ராணி தஸ்ய ஸ்யுர் நிர்வ்ரணுநி ச.
தேஷாம் ம்ருத்பி: ஸ்ம்ருதம் ஶௌசம் சமஸாநாமிவாத்வரே.
அலாபுதாருபாத்ரம் வா ம்ருந்மயம் வைணவம் ததா.
ஏதாநி யதிபாத்ராணி மநு: ஸ்வாயம்புவோऽப்ரவீத்" இதி.

"—அந்த பிக்ஷுவுக்கு வெள்ளி முதலியவைகள் அல்லாதனவாகிய பாத்ரங்கள் இருக்கின்றன. அவைகள் வ்ரணங்கள் (த்வாரம், விரிசல்) இல்லாதனவாகவும் இருக்க வேண்டுவதாகும். அவைகளுக்கு மண்ணுல் ஶுத்தியானது சொல்லப் பெற்றுள்ளது. அந்த ஶுத்தியும் யாகத்தில் சமஸங்களுடையது போல எனவுமாம்.[1] (ஆதலால்) சுரைக்காய், மரம், மண், மூங்கில் ஸம்பந்தமானது என்றவைகளான இவைகள் யதிகளுக்குரிய பாத்ரங்கள் என்று ஸ்வாயம்புவ மநுவானவர் சொல்லியிருக்கிருர்" என்றவாறு.

1. 'சமஸம், = என்பது யாகத்தில் ஸோமரஸத்தை வைக்கின்ற மரத்தாலான பாத்ரத்திற்குப் பெயர்

போதாயனோऽபி—போதாயனரும் சொல்லுகிறார்—

"ஸ்வயமாஹ்ருதபர்ணேஷு ஸ்வயம் ஶீர்ணேஷு வா புந:.
புஞ்ஜீத ந வடாஶ்வத்தகரஞ்ஜாநாம் ச பர்ணகே."

"—தன்னால் கொண்டுவரப்பெற்ற இலைகளிலாவது, அல்லது மரத்திலிருந்து தானாகப் பழுத்து விழுந்துள்ள இலைகளிலாவது பிக்ஷுவானவன் உண்ண வேண்டும். ஆல், அரசு, கரஞ்ஜம் (புன்னை) முதலியவைகளுடைய இலையில் உண்பது கூடாது"

ஆபத்யபி ந காம்ஸ்யேஷு மலாஶீ காம்ஸ்யபோஜந:.
ஸௌவர்ணே ராஜதே தாம்ரே ம்ருண்மயே த்ரபுஶீஸயோ:" இதி.

"—தனக்கு ஆபத்து வந்துள்ள பொழுதிலும், காம்ஸ்ய பாத்திரத்தில் (வெண்கலம்) புசிப்பது கூடாது. அவ்விதமே, ஸுவர்ணம், வெள்ளி, தாம்ரம், மண்கலம், பித்தளை, ஈயம் என்ற இவைகளிலும் புசிப்பது கூடாது. அப்படிப் புசித்தால் அந்த யதியானவன் மலத்தைப் புசித்தவனாவன்" என்றவாறு.

ததா லோகம் ஜநம் ஶிஷ்யவர்கம் ந க்ருஹ்ணீயாத். ததாஹ மநு:—

அவ்வாறே உலகம், மக்கள், சிஷ்யர்கள் கூட்டம் என்ற இவைகளையும் எடுத்துக் கொள்ளக் கூடாது. (சேர்த்து கொள்ளக் கூடாது) அதைக் குறித்து மநுவும் சொல்லுகிறார்—

"ஏக ஏவ சரேந்நித்யம் ஸித்யர்த்தமஸஹாயக:.
ஸித்திமேகஸ்ய பஶ்யந் ஹி தஜ்ஜஹாதி ந ஹீயதே" இதி.

"—ஒருவனாகவே (பிறருடைய உதவியின்றி தனியாகவே) எப்பொழுதும் (தினந்தோரும்) ஸஞ்சாரம் செய்ய வேண்டும். தனது ஸித்தியின் (நிறைவு) பொருட்டு உதவியை நாடுவது கூடாது. ஒருவனுடைய நிறைவைப் (ஸித்தி-மோக்ஷஸித்தி) பார்த்துக் கொண்டு அதை விட வேண்டும்" குறைவு தோன்றாது". என்றவாறு.

மேதாதிதிரபி—மேதாதியும் சொல்லுகிறார்.—

"ஆஸநம் பாத்ரலோபஶ்ச ஸம்சய: ஶிஷ்யஸம்க்ரஹ:.
திவாஸ்வாபோ வ்ருதாலாபோ யதேர் பந்தகராணி ஷட்."

"—ஆஸநம், (இருக்கை-பீடம்) பாத்ரலோபம், பொருள் சேர்க்கை, ஶிஷ்யர்களைச் சேர்ப்பது, பகலில் உறங்குவது, வீண் வார்த்தை பேசுவது என்ற இந்த ஆறும் துறவிக்கு பந்தத்தைச் செய்வனவாம்."

"ஏகாஹாத்பரதோ க்ராமே பஞ்சாஹாத் பரத: புரே.

வர்ஷாப்யோऽந்யத்ர யுத்ஸ்தாநமாஸநம் ததுஹாஹ்ருதம்.

"க்ராமத்தில் ஒரு நாளுக்கு மேல் தங்குவது கூடாது. ஐந்து நாட்களுக்கு மேல் நகரத்தில் தங்குவது கூடாது. வர்ஷாகாலங்களில் (மழை காலம்) சாதுர்மாஸ்யம் எந்த விடத்தில் நடக்கின்றதோ, அந்த இடமே ஆஸநம் எனச் சொல்லப் பெறும்"

"உத்தாலம்ப்வாதிபாத்ராணுமேகஸ்யாபி ந ஸம்க்ரஹ:.

பிக்ஷோர்பைக்ஷுபுஜஶ்சாபி பாத்ரலோப: ஸ உச்யதே,"

"சொல்லப் பெற்ற சுரைக்காய் முதலிய பாத்ரங்களை ஒன்றுக்கு மேல் வைத்துக் கொள்ளக் கூடாது. அதாவது பிக்ஷைக்கு வேண்டிய பாத்திரமென்பது கருத்து. பிக்ஷுவுக்கு பிக்ஷாந்நத்தை யுண்ணுவதற்கு மாத்திரமென்பது. அதற்கு மேல் வைத்துக் கொண்டால் அது 'பாத்ரலோபம்' எனச் சொல்லப் பெறும்.

"க்ருஹீதஸ்ய து தண்டாதேர் த்விதீயஸ்ய பரிக்ரஹ:.

காலாந்தரோபபோகார்த்தம் ஸம்சய: பரிகீர்த்தித:"

"ஒரு தண்டத்தை வைத்துக் கொண்ட பிறகு, இரண்டாவது தண்டத்தை வைத்துக் கொண்டால் அது காலாந்தரத்தில் (நாளடைவில்) அநுபவிப்பதற்குக் காரணமா யமையும்'. அதை 'ஸம்சயம்' (சேர்ப்பது) எனச் சொல்லுவர்.

"ஶுஶ்ருஷாலாபபூஜார்த்தம் யஶோऽர்த்தம் வர் பரிக்ரஹ:.

ஶிஷ்யாணும் ந து காருண்யாத் ஸ ஜ்ஞேய: ஶிஷ்யஸம்க்ரஹ:"

"ஶுஶ்ருஷை (பணிவிடை) லாபம் (அநுகூலம்) பூஜை இவைகளின் பொருட்டும், கீர்த்தியின் பொருட்டுமாவது பரிக்ரஹம் செய்து கொள்ளும் (எடுத்துக் கொள்வது) ஶிஷ்யர்களிடத்தில் கருணையில்லாதிருக்குமே யாகில் அது 'ஶிஷயஸம்க்ரஹம்' (சிஷ்யர்களைச் சேர்ப்பது) எனச் சொல்லப் பெறும்.

[1]"வித்யா திநம் ப்ரகாஶத்வாத் அவித்யா ராத்ரிருச்யதே-
வித்யாப்யாஸே ப்ரமாதோ ய: ஸ திவாஸ்வாப உச்யதே.

"—பகல் அவித்யை யென்பது. ஏனெனில் அது ஒளியைக் கொடுக்கும் தன்மையால் என்க. இரவு அவித்யை யென்பது. அது இருளைக் கொடுக்கும் தன்மையால் என்க. வித்யையைப் பயிலுவதில் நழுவுதல் தோன்றுமேயாகில் அது 'திவாஸ்வாபம் (பகலில் உறங்குவது) எனச் சொல்லப் பெறும்.

"ஆத்யாத்மிகீம் கதாம் முக்த்வா பைக்ஷசர்யாம் ஸுரஸ்துதிம்.
அநுக்ரஹ: பதிப்ரஶ்ந:[1] வ்ருதாலாப: ஸ உச்யதே". இதி

"அத்யாத்ம விஷயத்தைச் சார்ந்ததும் (வேதாந்த விஷயம்) தேவதாஸ்துதி போன்ற நாராயண ஸ்மரணமுள்ளதுமான வார்த்தையை விட்டு, பிக்ஷை யெடுப்பதற்காக ஶிஷ்யர்களுக்கு மந்த்ரோபதேஶம் செய்வது, அவர்களை அநுக்ரஹம் செய்வது, வழிப போக்கிற்குரிய கேள்விகள் போன்ற இவைகள் யாவும் வ்ருதா லாபம் (வீணான வார்த்தை) எனச் சொல்லப் பெறும் என்றவாறு.

"லோகம் ஶிஷ்யஜநரூபம் ந க்ருஹ்ணீயாத் இத்யேதா-
வதேவ ந பவதி, கிம் து தஸ்ய லோகஸ்ய அவலோகம்,
தர்ஶநமபி ந குர்யாத், தஸ்ய பந்தஹேதுத்வாக், 'நச' இத்ய-
நேநாபி ஸம்ருதிநிஷித்தம் ந குர்யாத் இத்யபிப்ரேதம்" இதி.

"—மற்றும், ஶிஷ்ய ஜநங்களுடைய வடிவாயமைந்த உலகத்தையும் அங்கீகாரம் செய்வது கூடாது என்பது மாத்ரமல்ல. ஆனால் அந்த ஜநங்களுடைய பார்வையும் கூடச் செய்யலாகாது. ஏனெனில்—அந்த பிக்ஷுகனுக்கு அது பந்தத்தையும் தோற்றுவிப்பதுமாகும் என்க. 'ந ச' என்ற சொல்லால் ஸ்ம்ருதிகளில் சொல்லியுள்ள மற்றவைகளான நிஷித்தங்களையும் (தடுத்தல்) செய்வது கூடாது என்பதும் கொள்ளத் தக்கனவாம் என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும்" என்றவாறு.

தச்ச நிஷித்தம் மேதாதிதிர் தர்ஶயதி—

1 "திநம்" என்ற விடத்தில் 'திவா' என்ற பாடம்காணப் பெறுகின்றது. இதுவே சிறந்தது எனத் தோன்றுகிறது.

"பதிப்ரஶ்நம்" என்ற விடத்தில் 'பரிப்ரஶ்ந:' என்ற பாடம் காணப் பெறுகின்றது. இதுவே சிறந்தது எனத் தோன்றுகின்றது. பரிப்ரஶ்நம் என்பது யோக க்ஷேம வார்த்தை.

—அந்த நிஷித்தத்தையும் மேதாதிதி காண்பிக்கின்றூர் —

"ஸ்தாவரம் ஜங்கமம் பீஜம் தைஜஸம் விஷமாயுதம்.
ஷடேதாநி ந க்ருஹ்ணீயாத் யதிர்மூத்ரபுரீஷவத்.
ரஸாயநம் க்ரியாவாதம் ஜ்யோதிஷம் க்ரயவிக்ரயம்.
விவிதாநி ச ஶில்பாநி வர்ஜயேத் பரதாரவத்" இதி.

—"ஸ்தாவரம் (அசைவற்றது) ஜங்கமம் (அசைவது) பீஜம் (விதை), தைஜஸம் (ஸுவர்ணம்) விஷம், ஆயுதம் என்ற இவ்வாறும் யதியினுல் கொள்ளத் தக்கதன்று. அவைகளை மலமூத்ரவிஜர் ஜநம் செய்வது போல் ஒதுக்க வேண்டும். என்றவாறு.

"—ரஸாயநம், க்ரியாவாதம், ஜ்யோதிஷம், க்ரயவிக்ரயம் (கொடுக்கல் வாங்கல்) பலவகையாயுள்ள ஶில்பங்கள் என்ற இவைகளை பரதாரம் (பிறருடைய மனைவி) போல் புறக்கணிக்க வேண்டும்" என்றவாறு.

"யோகிந: லௌகிகவைதிகவ்யவஹாரகதாநி யாநி பாதகாநி ஸந்தி தேஷாம் வர்ஜநம் அபிஹிதம்" இதி.

"—மற்றும் இதுவரையில் யோகியினுடைய லௌகிகம் வைதிகம் என்ற இவைகளுடைய வ்யவஹாரத்தைச் சார்ந்தவை களான எந்த பாதகங்கள் (இடையூறுகள்-உபத்ரவங்கள்) இருக் கின்றனவோ, அவைகளுடைய வர்ஜநமானது (ஒதுக்குதல்) சொல்லப் பெற்றது." என்றவாறு.

அத ப்ரஶ்னோத்தராப்யாம் அத்யந்தபாதகம் ப்ரதர்ஶ்ய தத் வர்ஜநமாஹ—

பிறகு கேள்வி, பதில் என்ற இவைகளினுல் மிகவும் அவஶ்யமாயுள்ள பாதகத்தையும் காண்பித்து, அதை விட வேண்டியதையும் சொல்லுகிறூர்—

"ஆபாதக: க இதி சேத்? ஆபாதகோऽஸ்த்யேவ, யஸ்மாத் பிக்ஷு: ஹிரண்யம் ரஸேந த்ருஷ்டம் சேத், ஸ ப்ரஹ்மஹா பவேத், யஸ்மாத் பிக்ஷு: ஹிரண்யம் ரஸேந ஸப்ருஷ்டம் சேத், ஸ பௌல்கஸோ பவேத், யஸ்மாத் பிக்ஷு; ஹிரண்யம் ரஸேந க்ராஹ்யம் சேத், ஸ ஆத்மஹா பவேத்; தஸ்மாத் பிக்ஷு: ஹிரண்யம் ரஸேந ந த்ருஷ்டம், ந ஸ்பருஷ்டம், ந க்ராஹ்யம் ச" இதி.

"—சுற்றிலுமுள்ள இடையூறு என்ன? என்றால் சுற்றிலுமுள்ள இடையூறு இருக்கின்றதாகவே காணப் பெறுகின்றது. ஏனெனில்—எக்காரணத்தால் பிக்ஷுவானவன் ஸுவர்ணத்தை ஆசையோடு பாத்தானே யாகில் அவன் ப்ரஹ்மஹத்தி செய்தவனுவன். எக் கார்ரணத்தால் பிக்ஷுவானவன் ஆவலோடு ஸுவர்ணத்தைத் தொட்டானே யாகில் அவன் சண்டாளனுவன். எக் காரணத்தால் பிக்ஷுவானவன் ஸுவர்ணத்தை எடுத்தானே யாகில் அவன் ஆத்மஹத்தி செய்தவனுவன். ஆகையினுல் பிக்ஷுவானவன் ஸுவர்ணத்தைப் பார்ப்பதும், தொடுவதும், எடுப்பதும் கூடாது" என்றவாறு.

ஆகார: அபிவ்யாப்த்யர்த்த:, "ஆவீஷதர்த்தே஽பி-
வ்யாப்தௌ" இதி அபிஹிதத்வாத்.

"—இவ்விடத்தில் ஆகாரமானது அபிவ்யாப்தி (சுற்றிலும் பரவுதல்) என்ற பொருளில் வந்தது. "ஆங்" என்ற சொல் சிறிது என்ற பொருளிலும், சுற்றிலும் பரவுதல் என்ற பொருளிலும் வருவது எனச் சொல்லியுள்ளதால் என்க.

அபிவ்யாப்தஃ பாதக: அத்யந்தபாதக:, தஸ்ய ஸத்பாவம்
ப்ரதிஜ்ஞாய ஹிரணயஸ்ய ததாவிதபாதகமுச்யதே.

அபிவ்யாப்த: பாதக:; சுற்றிலுமுள்ள பாதகமானது மிகவும் நெருக்கமாயுள்ள பாதகம் என்பதாகும். அதனுடைய நிலைத்த இருக்கை என்பது- அதை ப்ரதிஜ்ஞை செய்து ஹிரண்யத்தினுடைய அத்தகைய பாதகத்தைச் சொல்லியது.

ரஸேந அபிலாஷ யுக்தேந ஆதரேண ஹிரண்யம் யதி த்ருஷ்டம்
ஸ்யாத், ததாநீம் ஸ த்ரஷ்டா பிக்ஷுர் ப்ரஹ்மஹா பவேத்.

ரஸேந—அபிலாஷையோடு சேர்ந்த ஆதரவு என்பது. அந்த பிக்ஷு வானவன் ஸுவர்ணத்தைப் பார்ப்பானே யாகில் அப்பொழுது அதைப் பார்த்த அளவிலே ப்ரஹமஹத்தி செய்தவனுகின்றான். என்பது.

"ஹிரண்யாஸக்த்யா தத்ஸம்பாதநரக்ஷணயோ: ஸர்வதா
ப்ரயதமாந: தத்வையர்த்யபரிஹாராய ப்ரபஞ்சமித்யா-
த்வப்ரதிபாதகாந் வேதாந்தாந் தூஷயித்வா, தத்ஸத்ய-
த்வமவலம்பதே, தத: ஶாஸ்த்ரப்ரஸித்தம் அத்விதீயம்

ப்ரஹ்ம தோ பிக்ஷுணா ஹதமேவ பவதி, தஸ்மாத் அஸௌ
ப்ரஹ்மஹா பவேத்'' இதி.

''—மற்றும் ஸுவர்ணத்திலுள்ள ஆசையினால் அதை ஸம்பாதிப்பதும், அதைக் காப்பாற்றுவதுமான இவைகளில் எப்பொழுதும் முயற்சியுள்ளவனாக இருக்க நேரிடும். ஆதலால் அதனுடைய விபரீதத்தின் பரிஹாரத்திற்காக உலகம் பொய்த் தன்மைவாய்ந்தது என்று வெளியிடுகின்ற வேதாந்தங்களை தூஷணம் செய்து, அது உண்மை என்ற தன்மையை அவலம்பிக்கின்றான். (தழுவுகின்றான்). பிறகு ஶாஸ்த்ர ஸித்தாந்தமான அத்வீதியமாயுள்ள ப்ரஹ்மமானது அந்த பிக்ஷுவினால் அழிக்கப் பெற்றதாகவே இருக்கின்றது. ஆகையினால் இவன் ப்ரஹ்ம ஹத்தி செய்தவனாகின்றான்.'' என்றவாறு.

ததாச ஸ்மர்யதே—

அவ்வாறே ஸ்மரணம செய்யப் பெறுகின்றது—

''ப்ரஹ்ம நாஸ்தீதி யோ ப்ரூயாத் த்வேஷ்டி ப்ரஹ்மவிதம் ச ய:.
அபூதப்ரஹ்மவாதீ ச த்ரயஸ்தே ப்ரஹ்மகாதகா:'' இதி.

''—ப்ரஹ்மம் இல்லையென்று எவன் சொல்லுகின்றானோ, எவன் ப்ர்ஹ்மத்தை யுணர்ந்தவனைப் பகைக்கின்றானோ, திடீரென்று (கல்பனை செய்யப்பெற்ற) ப்ரஹ்மவாதியாக எவன் தோன்றுகின்றானோ இம் மூவரும் ப்ரஹ்மத்தைக் கொன்றவர்களாவர்'' என்றவாறு.

''ப்ரஹ்மஹா ஸ து விஜ்ஞேய: ஸர்வதர்மபஹிஷ்க்ருத:'' இதி ச.

''—அவனோ வெனில், எல்லா தர்மங்களிலிருந்தும் ஒதுக்கப் பெற்ற ப்ரஹ்மஹத்தி செய்தவனுமாவன்'' எனவும் என்றவாறு.

''அபிலாஷபுர:ஸரம் ஹிரண்யம் ச ஸ்ப்ருஷ்டம் சேத், ததா
தத் ஸ்ப்ரஷ்டா பிக்ஷு: பதிதத்வாத் பௌல்கஸோ
ம்லேச்ச்சஸத்ருஶோ பவேத்,'' இதி.

''—மற்றும் ஆவலை முன்னிட்டு ஸுவர்ணத்தைத் தொட்டானே யாகில், அப்பொழுது அதைத் தொட்ட பிக்ஷுவானவன் பாதித்யந்தையடைந்த காரணத்தால்-(தர்மத்திலிருந்து நழுவுதல்) அவன் ம்லேச்சனாகின்றான். (ம்லேசச்சன்-கீழ்ப்பிறப்பு)

பாதித்யம் ச ஸ்ர்யதே—

*இந்த பாதித்யமும் ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது—*

''பதத்யஸௌ த்ருவம் பிக்ஷுர்யஸ்ய பிக்ஷோர்த்வயம் பவேத்.
தீபூர்வம் ரேத உத்ஸர்கோ த்ரவயஸம்க்ரஹ ஏவ ச'' இதி.

*''—பின்வருகின்ற இரண்டு விஷயங்களில். பிக்ஷுவினுடைய மனம் சலனமடையுமே யாகில், அவன் பதிதனாகின்றான். அந்த இரண்டு விஷயங்கள் வருமாறு—புத்திபூர்வகமாக (மனமறிந்து) ரேதஸை விடுவது, பணத்தைச் சேகரிப்பது என்பவை யாகும்'' என்றவாறு.*

''அபிலாஷபுர: ஸரம் ஹிரண்யம் க்ராஹ்யம், சருஹீதம்
சேத், ததா ஸ பிக்ஷு: தேஹேந்த்ரியாதிஸாக்ஷிணம்
அஸங்கம் சிதாத்மாநம் ஹதவாந் பவேத், அஸங்க-
த்வமபோஹ்ய ஸ்வாத்மநோ ஹிரண்யாதித்ரவ்யம்
ப்ரதி போகத்ருத்வோ ப்ரதிபந்நத்வாத்'' இதி.

*''—மற்றும் ஆவலை முன்னிட்டு ஸுவர்ணத்தை எடுத்துக் கொள்வது கூடாது. அவ்வாறு எடுத்தானே யாகில் அப்பொழுது அந்த பிக்ஷுவானவன், ஶரீரம், புலன்கள் என்ற இவைகளுக்கு ஸாக்ஷியாகவும், அஸங்கநாயுமுள்ள (ஒன்றிலும் பற்றுதலில்லை) சிதாத்மனைக் கொன்றவனாவன். அஸங்கத்தன்மையையும், தனது ஆத்மனுக்கு ஸுவர்ணம் முதலிய த்ரவ்யத்தைக் குறித்து போகத்ருத்வத்தன்மையையும் (அநுபவிக்கும் தன்மை) தோன்றுவிப்பதால்'' என்றவாறு.*

தஸ்யாஶ்ச அந்யதாப்ரதிபத்தே: ஸர்வபாபத்வம் ஸ்மர்யதே—

*அதற்கு வேறுவகையாயுள்ள நம்பிக்கைக்குரிய (ப்ரதிபத்தி) எல்லாப் பாபங்களுடைய ஸ்வரூபத் தன்மையும் ஸ்மரணம் செய்யப் பெறுகின்றது—*

''யோऽந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே.
கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா,'' இதி.

*''—எவனொருவன் ஒரு வகையாயுள்ள ஆத்மனை, அதற்கு மாறாகப் பின் பற்றுகின்றானோ, அவன் தன்னையே திருடிக் கொண்டவனாவன். அத்தகைய திருடனால் செய்யாத பாபங்கள்*

தான் எவை இருக்கின்றன'' (எல்லாப் பாபங்களையும் சுமக்கின்ற வன் என்பது கருத்து) என்றவாறு.

கிம் ச ஆத்மகாதிந: ஸுகலேஸோநாபி ரஹிதா
பஹுவிதது:கோநாவ்ருதா லோகா: ஸ்ருயந்தே—

ஆத்மாவைக் கொன்றவனுக்கு ஸுகத்தின் திவலையளவும் கிடைக்காது. அவனும் பலவகையான துன்பங்களினுல் சூழப் பெற்றவனுக இருக்கின்ருன் எனவும் உலகத்தில் கேள்விப்படு கின்றன.

''அஸுர்யா நாம தே லோகா: அந்தேந தமஸாவ்ருதா.
தாம்ஸ்தே ப்ரேத்யாபிகச்சந்தி யே கேசாத்மஹநோ ஜநா:'' இதி.

''—அஸுரபாவனைகள் இருளினுல் மறைக்கப் பெற்றுள்ளன. எவர்கள், மனிதராயினும், தேவர்களாயினும், ப்ரஹ்மன் முதலானவராயினும, ஆத்மஞாநமில்லாமல் கேவலம் கர்மத்தி லேயே திளைத்துள்ளவர்களோ, அவர்கள் மரணத்திற்குப் பிறகு பூமி, ஆகாயம், ஸ்வர்கமென்ற நரகங்களை அடைகின்றனர்.'' என்றவாறு.

''த்ருஷ்டம் ச இத்யநேந சகாரேண, ஸ்ருதம் ச
ஸமுச்சீயதே. ஸ்ப்ருஷ்டம் ச இத்யநேந கதிதஸ்ய
ஸமுச்சய:. க்ராஹ்யம் ச இத்யநேந வ்யவஹ்ருதம்
சேதி ஸமுச்சீயதே'' இதி.

''—'தருஷ்டம்' ச' பார்க்கப் பெற்றதும் என்ற விடத்திலுள்ள சகாரமானது 'ஸ்ருதம்' கேட்கப் பெற்றதும் என்ற சொல்லோடு இணைக்க வேண்டும். 'ஸ்ருஷ்டம் ச' தொட்டும் என்றதால், சொல்லப் பெற்றதற்கு என்றதோடு இணைக்க வேண்டும். 'க்ராஹ்யம் ச' 'எடுத்துக் கொள்வதும்' என்றதனுல் வ்யவஹ்ருதம் ச வ்யவஹாரம் செய்யப் பெற்றது என்ற வாக்யத்தோடும்' இணைக்க வேண்டும்.'' என்றவாறு.

''தர்ஶநஸ்பர்ஶநக்ர ஹணவதபிலாஷபூர்வகா ஹிரண்யவ்ருத்தாந்த
ஸ்ரவணதத்குணகத்நதீயக்ரயாதி வ்யவஹாரா
அபி ப்ரத்யவாயஹேதவ: இத்யர்த்த:'' இதி.

''—அதாவது—தர்ஶநம், ஸ்பர்ஶநம், க்ரஹணம் இவைகளைப் போல அபிலாஷையை முன்னிட்டு ஸுவர்ணத்தினுடைய

வ்ருத்தாந்த ஶ்ரவணம், அதனுடைய குணங்களின் வர்ணநம், அதனுடைய க்ரயவிக்ரயம் முதலிய வ்யவஹாரங்களும் பாபத்திற்குக் காரணமாயமைவன என்பதும் திரண்ட பொருளாகும்.'' என்றவாறு.

''யஸ்மாத் ஸாபிலாஷஹிரன்யதர்ஶநாதயோ தோஷகாரிண:, தஸ்மாத் பிக்ஷுணா ஹிரண்யதர்ஶநாதய: வர்ஜநீயா இத்யர்த்த:'' இதி.

''—எக்காரணத்தால் ஆவலோடு கூடிய ஸுவர்ண தர்ஶநம் முதலியவைகள் தோஷத்தைச் செய்கின்றனவோ, அக்காரணத்தால் பிக்ஷுவினால் ஸுவர்ணதர்ஶநம் முதலியவைகள் ஒதுக்கப் பெற வேண்டுமென்பதும் சொல்லப் பெற்றது.'' என்றவாறு.

இதாநீம் ஹிரண்யவர்ஜநஸ்ய பலமாஹ –

''—இப்பொழுது ஹிரண்யம் முதலியவற்றை ஒதுக்கப் பெறுவதாலுண்டாகும் பயன் சொல்லப் பெறுகின்றது—

''ஸர்வே காமா மநோகதா வ்யாவர்தந்தே,
து:கே நோத்விக்ந:, ஸுகே நி:ஸ்ப்ருஹ:,
த்யாகோ ராகே, ஸர்வத்ர ஶுபாஶுபயோ:
அநபிஸ்நேஹ:, ந த்வேஷ்டி, ந மோததே, ந
ஸர்வேஷாம் இந்த்ரியாணாம் கதிருபரமதி,
ய: ஆத்மந்யேவாவதிஷ்டதே.'' இதி.

''—மனத்தைச் சார்ந்த எல்லாக் காமனைகளும், திரும்பத்திரும்பத் தோன்றுவன. (ஆதலால்) துயரம் வரும்பொழுது மனம் துவளுவது கூடாது. ஸுகம் தோன்றும் பொழுது மனத்தின் கண்ணுள்ள அவாவைக் களையவேண்டும். ஆசையினிடத்திலே த்யாகத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

எல்லா விடத்திலும் தோன்றுகின்ற நன்மை, தீமை இவைகளில் பற்றுள்ள நிலையைக் கடைப் பிடிக்க வேண்டும். ஒரு வஸ்துவையும் பகைப்பது கூடாது, அவ்வாறே ஒரு வஸ்துவைக் கண்டு மகிழ்ச்சியடைவதும் கூடாது. எல்லாப் புலன்களுடைய கதியானது (போக்கு) கண்டு மனத்தின் கண் சமநத்தைக் கடைப் பிடிக்க வேண்டும். எவன் இவ்வாறு இருக்கின்றானோ அவன் ஆத்மனிடத்திலேயே நிலைத்துள்ளவனுமாவன்'' என்றவாறு.

"புத்ரபார்யா க்ருஹக்ஷேத்ராதிகாமாநாம்
ஸர்வேஷாம் ஹிரண்ய மூலத்வாத், ஹிரண்யே
பரித்யக்தே ஸதி, தே காமா மநோகதா:
மநஸி அவஸ்தாநாத் வ்யாவர்தந்தே,
வ்யாவ்ருத்தா பவந்தி.'' இதி.

"—மக்கள், மனைவி, வீடு, நிலம் முதலியவைகளிடத்திலுள்ள எல்லா ஆசைகளுக்கும் ஸுவர்ணமே (தனம்) மூலகாரணமாயிருப்பதால் (அடிப்படை). அந்த ஸுவர்ணமானது த்யாகம் செய்துள்ள பொழுதும், மனத்தைச் சார்ந்துள்ள அந்த ஆசைகள் மனத்தில் நிலைத்திருப்பதன் காரணமாக சுழன்று கொண்டு மாறி மாறித் தோன்றுவனவாயிருக்கின்றன.'' என்றவாறு.

"காமநிவ்ருத்கௌ ஸத்யாம் கர்மப்ராப்தயோ:
து;கஸுகயோ : உத்வேகஸ்ப்ருஹே ந பவத:.
ஏதச்ச ஸ்திதப்ரஜ்ஞப்ரஸ்தாவே ப்ரபஞ்சிதம்'' இதி.

"—அந்த காமனையும் நிவ்ருத்தியாயிருக்கும் பொழுது (அகன்றுள்ள நிலை) கர்மவசத்தால் அடையப் பெற்ற ஸுகம், து:கம் இவைகளுடைய உத்வேகம் (கலக்கம்) ஆசை, (பற்று) இவைகள் இருப்பதில்லை. இதுவும் ஸ்திதப்ரஜ்ஞனுடைய ப்ரஸ்தாவத்தில் சொல்லப் பெற்றுள்ளது'' என்றவாறு.

ஐஹிகயோ: ஸுகது:கயோ: விக்ஷேபகத்வேந
ஆமுஷ்மிக விஷயராகேऽபி த்யாகோ பவதி, ஐஹிக-
ஸுகஸ்ப்ருஹாயுக்தோ ஹி தத்த்ருஷ்டாந்தேந
அநுமிதாமுஷ்மிகே ஸுகே ராகவாந் பவதி.
தஸ்மாத் ஐஹிகே நி:ஸ்ப்ருஹஸ்ய ஆமுஷ்மிகே
ராகபாவோ யுஜ்யதே,'' இதி.

"—ஐஹிகமாயுள்ள (உலகத் தொடர்பு) ஸுகதுக்கங்களுடைய விக்ஷேபத் தன்மையினால் (கலக்கம்) ஆமுஷ்மிகமாயுள்ள (மேலுலகம்) விஷயராகத்திலும் (விஷயங்களுடைய வேட்கை) த்யாகமானது தோன்றுகின்றது. ஐஹிகமாயுள்ள ஸுகத்தில் ஆசையோடு கூடியவனன்றோ அந்த த்ருஷ்டாந்தத்தினால் அநுமிதமான (ஊஹிக்கத்தக்கது) ஆமுஷ்மிகமாயுள்ள ஸுகத்திலும் ஆசையுள்ளவனாக இருக்கின்றான். ஆகையினால் ஐஹிகத்தில் ஆசையற்றவனுக்கு ஆமுஷ்மிகத்திலும் ஆசையற்ற நிலையானது இருப்பது உசிதமேயாகும்.'' என்றவாறு.

"ஏவம் ஸதி ஸர்வத்ர லோகத்வயேऽபி யௌ ஶுபா-
ஶுபௌ அநுகூலப்ரதிகூலவிஷயௌ தயோரநபிஸ்நேஹ:.
ஏதச்ச த்வேஷராஹித்யஸ்யாபி உபலக்ஷணம்". இதி.

"—இவ்வாறுள்ள நிலையில் எல்லா விடங்களிலும் இரண்டு லோகங்களிலும் நன்மை, தீமை, அநுகூலம், ப்ரதிகூலம் என்பவைகளுடைய யாதொரு விஷயங்கள் இருக்கின்றனவோ, அவைகளில் அநபிஸ்நேஹம் (பற்றற்ற நிலை) தோன்றுவதுமாகும். இதுவும் த்வேஷமில்லாமைக்கு உபலக்ஷணமாகும்". என்றவாறு

"தாத்ருஶோ வித்வாந் அஶுபகாரிணம் கம்சிதபி புருஷம்
ந த்வேஷ்டி ஶுபகாரிணம் ச த்ருஷ்ட்வா ந ச மோதம் ப்ராப்நோதி.
த்வேஷமோதரஹித: ய: புமாந் ஆத்மந்யேவ ஸர்வதா
அவதிஷ்டதே, தஸ்ய ஸர்வஸ்ய ஸர்வேஷாம் இந்த்ரியாணும்
கதி: உபரமதே இந்த்ரியோபரதௌ ந கதாசிதபி
நிர்விகல்பஸமாதே: விக்நோ பவதி," இதி.

"—அத்தகைய வித்வான் தீமை செய்கின்ற ஒரு மனிதனையும் பகைவனுகக் கருதமாட்டான். நன்மை செய்பவனையும் பார்த்து மகிழ்ச்சியையும் அடையமாட்டான். பகை, மகிழ்ச்சி இவையிரண்டும் இல்லாமல் யாதொரு மனிதன் இருக்கின்றானே, அவன் ஆத்மனிடத்திலேயே எப்பொழுதும் நிலைத்து நிற்பவன். அவனுடைய புலன்கள் யாவும் தத்தம் செயல்களிலிருந்து ஶமந்தகை யடைகின்றன. இவ்வாறு புலன்களுடைய ஶமநம் தோன்றும் பொழுது, நிர்விகல்பஸமாதிக்கு யாதொரு இடையூறும் ஒருபொழுதும் தோன்றாது" என்றவாறு.

"தேஷாம் கா ஸ்திதி:? இதி ப்ரஶ்நஸ்ய ஸம்-
க்ஷேபவிஸ்தராப்யாம் உத்தரம் பூர்வமுக்தம்.
ததேவாத்ர புநரபி ஹிரண்யநிஷேதப்ரஸங்கேந
ஸ்பஷ்டீக்ருதம்" இதி.

"—மற்றும் "அவர்களுடைய நிலை யாது?" என்ற கேள்விக்குச் சுருக்கமாகவும், விஸ்தாரமாகவும் முன்பு பதில் சொல்லப் பெற்றது. அதையே இவ்விடத்தில் மறுபடியும் ஸுவர்ணத்தி(னுடைய நிஷேத (தடுத்தல்) ப்ரஸங்கத்தினால் ஸ்பஷ்டமாக தெளிவாக) விளக்கப் பெற்றது" என்றவாறு,

அத வித்வத்ஸம்ந்யாஸம் உபஸம்ஹரதி—

பிறகு வித்வத் ஸம்ந்யாஸவிஷயமானது உபஸம்ஹாரம் (முடிவு) செய்யப் பெறுகின்றது—

"யத்பூர்ணாநந்தைகபோத: தத் ப்ரஹ்மாஹமஸ்மீதி
க்ருதக்ருத்யோ பவதி," இதி.

—"யாதொன்று பூர்ணமான (நிறைந்த) ஆநந்தத்தையுணர்த்து கின்றதோ, அந்த ப்ரஹ்மமாக நான் இருக்கிறேன். என்று கருதிய அவன் புண்யசாலியாக இருக்கிறான்" என்றவாறு.

"யத் ப்ரஹ்ம வேதாந்தேஷு பூர்ணாநந்தைகபோத: பரமாத்மா
இதி நிருபிதம், தத் ப்ரஹ்மாஹ்மஸ்மி இதி ஏவம் ஸர்வதா
அநுபவந் அயம் யோகீ க்ருதக்ருத்யோ பவதி, க்ருதக்ருத்யோ
பவதி" இதி.[1]

"—யாதொரு ப்ரஹ்மமானது வேதாந்தங்களில், பூர்ண மாயுள்ள ஆநந்தத்தையே முக்யமாகக் உணர்த்துகின்ற பரமாத்மா என்று நிரூபணம் செய்யப் பெற்றதோ, அந்த ப்ரஹ்மம் நானாகவே இருக்கிறேன் என இவ்வாறு எப்பொழுதும் அநுபவித்துக் கொண்டு இந்த ப்ரமஹம்ஸன் புண்யசாலியாக விளங்குகின்றான்" என்றவாறு.

ததா ச ஸ்மர்யதே—

"—அவ்வாறே ஸ்மரணமும் செய்யப் பெறுகின்றது—

"ஞாநாம்ருதேந த்ருப்தஸ்ய க்ருதக்ருத்யஸ்ய யோகிந:.
நைவாஸ்தி கிம்சித் கர்தவயமஸ்தி சேந் ந ஸ தத்வித்," இதி.

"—ஞானமென்னும் அமுதத்தினால் நிறைவைப் பெற்ற மநத்தையுடையவனும், புண்யசாலியுமான யோகமுணர்ந்த வனுக்குச் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. அவ்வாறு செய்ய வேண்டியது எதாவது ஒன்று இருக்குமேயாகில், அவன் உண்மை யில் தத்வத்தை யுணர்ந்தவனாக ஆகமாட்டான்" என்றவாறு.

---

1 "க்ருதக்ருதயோ பவதி, க்ருதக்ருதயோ பவதி" என இரண்டு தடவை சொன்னது நூலின் முடிவைக் குறிப்பது.

**ஜீவந்முக்திவிவேகோ தமோ ஹார்தம் நிவாரயந்.**
**புமர்த்தமகிலம் தேயாத் வித்யாதீர்த்தமஹேஶ்வர:.**

**இதி ஶ்ரீ வித்யாரண்யப்ரணீதே ஜீவந்முக்தி விவேகே**
**வித்வத்ஸம்ந்யாஸ நிரூபணம் நாம பஞ்சமம்**
**ப்ரகரணம் ஸம்பூர்ணம்.**



"—இவ்வாறு ஜீவந்முக்தியினுடைய விவேகத்தினால், ஹ்ருதயத்தைச் சார்ந்த இருளைக் களைந்து கொண்டுள்ள எனக்கு, எல்லா விதமான புருஷார்த்தங்களையும் வித்யாதீர்த்தமஹேஶ்வரன் கொடுத்தருள்வதாக. சிவம்.

இவ்வாறு ஸ்ரீமானாகிய ஸ்ரீவித்யாரண்ய முனிவரால்
இயற்றப் பெற்ற ஜீவந்முக்தி ப்ரகரணார்த்த-
ப்ரகாஶிகையில் வித்வத்ஸம்ந்யாஸ-
நிரூபணம் என்ற ஐந்தாவது ப்ரகரணம்
இவண் முற்றுப் பெற்றது
சிவம்.

ஜீவந்முக்திப்ரகரணார்த்தப்ரகாசிகை
நிறைவெய்தியது.



## அநுபந்தம் (1)

## மேற்கோளாகக்கொண்ட நூல்களுடைய அடிக்குறிப்பகராதி

| | |
|---|---|
| அமர. | அமரகோசம் 351 |
| அம்ரு. நா. உ. | அம்ருதநாதோபநிஷத் |
| அம்ரு. பி. உ. | அம்ருதபிந்தூபநிஷத் |
| ஆப. த. | ஆபஸதம்பதர்மஸூத்ரம் |
| ஆரு.உ. | ஆருணிகோபநிஷத் |
| ஆர்யா. | ஆர்யாபஞ்சாஶீதி: |
| ஈச. உ. | ஈஶாவாஸ்யோபநிஷத் |
| உப. ஸா. | உபதேஶஸாஹஸ்ரீ |
| ரிக்வேதம்.கட.உ. | கடோபநிஷத் |
| கண்டந. | கண்டநகாத்யம் |
| காவ.கீ. | காவஷேயகீதா |
| கைவ.உ. | கைவல்யோபநிஷத் |
| ஜாபா.உ. | ஜாபாலோபநிஷத் |
| ஞாந.அ. | ஞாநாங்குஶம் |
| தைத்.ஸம். | தைத்திரியஸம் ஹிதா |
| தைத்.உ. | தைத்திரீயோபநிஷத் |
| தைத்.ப்ரா. | தைததிரீயப்ராஹ்மணம் |
| நார.உ. | நாரதப்ரிவராஜகோபநிஷத் |
| நாராய.உ. | நாராயணோபநிஷத் |
| நைஷ்.ஸி. | நைஷ்கர்ம்யஸித்தி |
| பஞ்ச. | பஞ்சதசி |
| பரம.உ. | பரமஹம்ஸோபநிஷத் |
| பரமா.ஸா. | பரமார்த்தஸாரம் |
| பராஶர.உ. | பராசரோபபுராணம் |
| புருஷ.ஸூ. | புருஷஸூக்தம் |
| ப்ரமா. | ப்ரமாணமாலா |
| ப்ருஹ. உ. | ப்ருஹதாரண்யகோபநிஷத் |
| ப்ருஹ.வா. | ப்ருஹாதாரண்யவார்த்திகம் |
| ப்ருஹ.ஸ்ம். | ப்ருஹஸ்பதிஸ்ம்ருதி |
| ப்ர.உ. | பரஹ்மோபநிஷத் |
| ப்ர.ஸூ.பா. | ப்ரஹ்மஸூத்ரபாஷ்யம் |
| ப.கீ. | பகவத்கீதை |

| | |
|---|---|
| பாக. | பாகவதம் |
| மஹ.உ. | மஹோபநிஷத் |
| மா.பா.ஆநு. | மஹாபாரதம் |
| மாண்.உ. | மாண்டுக்யோபநிஷத் |
| மாண்.கா. | மாண்டுக்யகாரிகா |
| முக்தி.உ. | முக்திகோபநிஷத் |
| மைத்.உ. | மைத்ராயணீயோபநிஷத் |
| யதி.ஸ. | யதிதர்மஸமுச்சய: |
| யாஜ்ஞ.உ. | யாஜ்ஞிகோபநிஷத் |
| யோக.வா. | யோகவாஸிஷ்டம் |
| யோ.ஸூ. | யோகஸூத்ரம் |
| யோக.ஸூ.பா. | யோகஸூத்பாஷ்யம் |
| ராமா. | ராமாயணம் |
| ல.வா. | லகுயோகவாஸிஷ்டம் |
| லௌகி.ந்யா. | லௌகிகந்யாய ஸம்க்ரஹ |
| வரா. உ. | வராஹோபநிஷத் |
| வாக்ய. | வாக்யவ்ருத்தி |
| விஷ்ணு. | விஷ்ணுபுராணம் |
| வ்யா.ஸூ. | வ்யாஸஸூத்ரம் |
| ஶுக.அ. | ஶுகாஷ்டகம் |
| ஶ்வே.உ. | ஶ்வேதாஶ்வதரோபநிஷத் |
| ஸ.ஸி. | ஸர்வ வேதாந்த ஸித்தாந்தஸார : |
| ஸம்.உ. | ஸம்ந்யாஸோபநிஷத் |
| ஸர்வ.ஸா. | ஸர்வவேதாந்த ஸீத்தாந்தஸாரம் |
| ஸாம்க்ய | ஸாம்க்யஶாஸ்த்ரம் |
| ஸுபா. | ஸுபாஷிதாவலி |
| ஸூத.ஸ. | ஸூதஸம்ஹிதா |
| ஸௌபா,உ. | ஸௌபாக்யலக்ஷ்ம்யுபநிஷத் |

———o———

## மேற்கோளாக கொண்ட ஆசிரியர் அகராதி

## மேற்கோளாகக் கொண்ட நூல்களுடைய அகராதி

அநுபந்தம் (4)

## செய்யுட்களுடைய அகராதி (1)

### (அ)

| | |
|---|---|
| அகர்த்ரு குர்வதபயேதத் 241 | |
| அக்ஷுண்ணம் க்ஷீணகர்மாணம் 55 | ம. பா. ஆ. 237 |
| அக்நீஷோமீயம் பஶுமாலபேத 115 | தைத்.ஸம்1.6.2.4 |
| அக்நேரிவ ஶிகா நாந்யா 331 | ப்ர. 2.2.13 |
| அக்ரேதாவந் பஶ்சால்லுப்யமாந: 240 | கண்டந. 205 |
| அங்குஶேந விநாமத்த: 164 | ல. வா. 28.127 |
| அங்காந்யங்கை: ஸமாக்ரம்ய 162 | ,, ,, 15.18 |
| அச்சிந்நமநஸா ஶூர: 200 | ,, ,, 24.109 |
| அஜம் ஸர்வமநுஸ்ம்ருத்ய 228 | மாண். கா. 3.43. |
| அஜிஹ்வ: ஷண்டக: பங்கு: 160 | நா. ப. 2.3.62 |
| அஜோऽமரஶ்சைவ ததா 194 | உப. ஸா. 10.3 |
| அஜ்ஞஶ்சாஶ்ரத்ததாநஶ்ச 256 | ப. கீ. 4.40 |
| அஜ்ஞாநம் சாபிஜாதஸ்ய 79 | ,, ,, 16.4 |
| அஜ்ஞாநஸூகநாகாரம் 98 | ல. வா. 1.11 |
| அத ஏவ பகவாந் ப்ரஜாபதி: 304 | |
| அத ஏவ ப்ராஹ்மணலக்ஷணே 342 | |
| அத எவ ஸ பிக்ஷூரநிகேதஸ்திதி: 343 | |
| அத ஏவ ஸார்வபௌமம்: 209 | |
| அத ஏவ ஹி ஹே ராம 25 | ல. வா. 45 |
| அதிவர்ணாஶ்ரமீ தேऽபி 62 | ஸூ. ஸம்.3.5.9 |
| அதிவர்ணாஶ்ரமீப்ரோக்த: ,, | ,, ,, 3.5.14 |
| அதிவர்ணாஶ்ரமீஸாக்ஷாத் ,, | ,, ,, 3.5.15 |
| அதிவாதாம்ஸ்திதிக்ஷேத 282 | மநு.647 |
| அதைஜஸாநி பாத்ராணி 346 | ,, 6.43 |
| அதோ நிர்விஷயம் நித்யம் 81 | அம்ரு.பி.3.43 |
| அத்யந்தமலிநோ தேஹ: 116 | ஸா. ஸம். 2. !3. 19 |
| அத்யந்தாபாவஸம்பத்தௌ 78 | ல. வா 6.110 |
| அத்யர்வாசிநபதே 283 | |
| அத்யாஹாரமநாஹாரம் 172 | அம்ரு. நா. 27 |

அநுபந்தத்தில் கொடுக்கப் பெற்றுள்ள செய்யுட்களுடைய அகரவரிசை யானது ஸம்ஸ்க்ருதத்தை தழுவிக் கொடுக்கப் பெற்றுள்ளது என்பதை வாசகர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்,

(ஆ)

( इ )

## ( क )

(ग)

(च)

(ज)

(द)

(த)

(ப)

(भ)

(ர)

(श)

—o—

# ப்ரதாநபதாநுக்ரமணிகா *

(அரும்பத அகராதி)



* இந்த அரும்பத அகராதி ஸம்ஸ்க்ருதத்தைத் தழுவியது

